# முன்னுரை

தமிழக வரலாற்றின் பொற்காலம் என்பது சங்ககாலம் தான் என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்க முடியாது. அப்படிப்பட்ட பொற்கால வரலாற்றின் ஒரு பகுதியைத்தான் 'பாண்டிய முரசு' சித்தரிக்கிறது. இதன் கரு, சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த கதை. மூவேந்தரும் வல்லரசுகளில் ஒன்றான பாண்டியப் பேரரசில் சங்ககாலத்தில் ஆட்சி புரிந்த தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பற்றிய கதை. இந்த மாமன்னனின் பெயர் சிறுவர் முதல் பெரியவர்வரை அனைவரும் அறிந்த மிகவும் பிரசித்தமான பெயர். இதற்குக் காரணம் ஆரம்பக் கல்வி முதற்கொண்டே வரலாற்றுப் பகுதியில் கட்டாயமாக இப்பெயர் இடம் பெற்றிருப்பதுதான். இப்படி அனைவரும் அறிந்த ஒரு பேரரசனின் கதையை எழுத வேண்டிய அவசியம் என்ன என்று பலருக்குத் தோன்றலாம். அந்த அவசியத்தைத்தான் இக் கதையைப் படித்தபின் நீங்கள் உணருவீர்கள்.

சங்க இலக்கியங்களான புறநானூறு அகநானூறு, மதுரைக் காஞ்சி ஆகியவை பாண்டியன் நெடுஞ்செழியனின் தலையாலங்கானத்துப் போரைப் பற்றி விரிவாக விவரிக்கின்றன. பாண்டிய மன்னனைச் சிறுவன் என்று சேர மன்னன் இகழ்ந்ததால் அப்பாண்டிய மன்னன்

போரிட்டுச் சேர சோழரையும் அவர்களுக்கு உதவ வந்த வேளிர் ஐவரையும் புறமுதுகிட்டு ஓடச்செய்ததாகப் பெருமையுடன் கூறுகின்றன. இங்கே உண்டாகும் ஐயப்பாடுகள் இரண்டு.

1. பாண்டியன் சிறுவன் என்பது சேரமன்னனின் தீர்மானமானால் அவனை எதிர்க்கச் சோழனையும், வேளிர்குல மன்னர்கள் ஐவரையும் சேர்த்துக் கொண்டு மாபெரும் போர் அணியை சேரன் அமைக்க வேண்டிய அவசியமென்ன?

2. அதே போல் சேரமன்னன் இகழ்ந்த மாதிரி பாண்டியன் நெடுஞ்செழியன் சிறுவன்தான் என்றால் அவனால் எப்படி இத்தகைய மாபெரும் கூட்டணியைத் தோற்கடிக்க முடிந்தது?

இதற்கான விளக்கங்கள் சங்க இலக்கியங்களிலோ வரலாற்றுக் குறிப்புகளிலோ இல்லை. வெறும் வீரம் என்ற வார்த்தையையும் பகை என்ற சொல்லையும் இவ்விரு வினாக்களுக்கும் பதிலாகக் கொண்டுவிட எனக்கு மனமில்லை. அதனால் உண்டானதுதான் 'பாண்டிய முரசு.'

இதற்காக நான் இறங்கிய ஆராய்ச்சிப் பணி மிகவும் கடுமையானது. இதை இக்கதையைப் படிக்கும்போது நீங்களே தெரிந்துகொள்வீர்கள்.

இக்கதையில் வரும் மேகலை போன்ற ஒரிரு பாத்திரங்களைத் தவிர மற்ற அனைவருமே வரலாற்றில் வாழ்ந்தவர்கள். எனவே இக்கதை பலமான சரித்திர ஆதாரங்களைக் கொண்டிருக்கிறது.

குடும்ப வாழ்க்கையில் மிகவும் கடுமையான சோதனைகள் அலைக்கழித்துக் கொண்டிருந்த கால கட்டத்தில் உருவான நவீனம் இது. சோதனைகள் அகலவில்லையென்றாலும் இந்த நவீனம் புத்தகமாய் மலர்ந்தது என் சோதனைகளைக் குறைத்து விட்டமாதிரி இருக்கிறது. நல்லதொரு நூலைத் தந்துவிட்ட திருப்தியைத் தந்திருக்கிறது.

இதற்கு மூலகாரணமான பதிப்பகத்தாருக்கு என் நன்றி என்றுமிருக்கும்.

இந்நூலை அழகுற அச்சிட்டுள்ள அச்சகத்தாருக்கும் ஓவியங்களை நேர்த்தியாக அமைத்துத் தந்த ஓவியருக்கும் என் இதயம் கனிந்த நன்றி.

எல்லாவற்றுக்கும் மேலாக நான் கடமைப் பட்டிருப்பது வாசக அன்பர்களுக்குத்தான். அவர்களின்றி எழுத்து இல்லை. எழுத்தாளனில்லை.

இந்நூலை தெய்வத்திற்கும் மேலான என் தாய் தந்தையருக்குக் காணிக்கையாக்கித் தலைவணங்கு கிறேன்.

சென்னை - 61

**-உதயணன்**

# பதிப்புரை

சரித்திர நாவல் உலகில் சாண்டில்யன் ஒரு தலையாய எழுத்தாளர். அவரின் எழுத்துக்கள் சாகாவரம் பெற்றவை. அவரைப் பின்பற்றி பல எழுத்தாளர்கள் அன்னாரின் பாணியில் எழுத ஆரம்பித்துள்ளனர். அவர்களின் முயற்சி வெற்றி பெறுமா? இல்லையா? என்பது, அவர்களின் படைப்புகள் பெறும் புகழைப் பொறுத்துள்ளது. திரு.உதயணன் தனக்கென ஒரு பாணியை உருவாக்கி, இந்நாவலைத் திறம்பட எழுதியுள்ளார். சாண்டில்ய னுக்குப் பிறகு யார்? என்ற கேள்விக்குத் தக்க பதில்போல் இவரின் நாவல் இருக்கின்றது. இந்நாவலை உருவாக்க, ஆசிரியர் பல சிரமங்கள் எடுத்துக் கொண்டுள்ளார்.

இதற்காகப் பல நூல்களை ஆராய்ந்து, கஷ்டப்பட்டு இதை எழுதியுள்ளார். அவர் எடுத்துக்கொண்ட சிரமத்திற்காக சரித்திர நாவல் உலகம் இவருக்குக் கடமைப்பட்டு இருக்கிறது. இத்தகைய ஒரு நூலை வெளியிட்டு அதன் மூலம் தமிழ் நாவல் உலகுக்கு நாங்கள் செய்யும் பணி மிகவும் மகத்தானது. இதைத் தயாரிக்க நாங்கள் எடுத்துக் கொண்ட சிரமமும் மகத்தானது. வழக்கம் போல் எங்கள் நூல்களை வாங்கி ஆதரிக்கும் தமிழ் மக்கள் இதையும் ஆதரிப்பார்கள் என்று நம்புகின்றோம்.

- **பதிப்பகத்தார்**

முரசு ஒன்று

# பழையனின் பயணம்

**சேவல்களின் கூவல்களால்** நாவல்மரக் கிளைகளில் வாசம் செய்து கொண்டிருந்த உதயகாலப் பறவைகள் இதயராகம் பாடி கதிரவனை எழுப்பி கீழைத் திசையிலே கொண்டு வந்து நிறுத்தி இருளை விரட்டியடிக்க கூவலிட்டதைக் கண்டு சிரிப்பதுபோல் செந்தாமரைப் பூக்கள் பூக்கத் துவங்கிய ரம்மியமான அதிகாலை நேரத்தில் மதுரை மாநகரின் வடக்கே நீண்டிருந்த காட்டு வழியில் சென்று கொண்டிருந்த மாட்டு வண்டியில் பயணம் செய்து கொண்டிருந்த வாலிபனான பழையன் சிந்தனை வயப்பட்டவனாகக் காணப்பட்டான். அந்தச் சிந்தனையின் அடிப்படை வேதனையால் கட்டப் பட்டிருந்ததை அவனது வீரவதனத்தில் படிந்திருந்த துக்க ரேகைகள் புலப்படுத்தின. அதுமட்டுமின்றி அவனிடம் ஒருவித அசதியும் இருந்ததென்பதை வண்டியில் இருப்புக் கொள்ளாமல் அவன் அசைந்த விதத்தில் தெரிந்தது.

வண்டியில் பெண்ணைப் போல் அமர்ந்து பயணம் செய்ய அவன் சிறிதும் விரும்பவில்லை. ஆனால் விரும்பிய மாதிரி நடந்து கொள்ள முடியாத சூழ்நிலையை அவன் சுமக்க வேண்டியிருந்தது. அந்தச் சுமையை அவனுக்குக் கொண்டு வந்திருந்த பெண் அவனுடன் அவனுக்கு முன்னால் அதே வண்டியில் சங்கடத்துடன்

அமர்ந்திருந்தாள். அவளது சங்கடத்திற்குக் காரணம் வண்டியில் அமர்ந்திருந்தது அல்ல. அந்த வாலிபனோடு அமர வேண்டியிருந்ததால்தான்.

அவளுக்கு வயதொன்றும் அதிகமில்லை. அதே போல் அழகும் அந்தஸ்தும் கூட அதிகமாய் -சொல்லிக் கொள்ளும்படியாய் இல்லை. சாதாரண விவசாயியின் சிறிய நிலத்தில் விளைந்த சாதாரணப் பூஞ்செடிபோல் இருந்த அவள் வண்டியில் அமர்ந்தபின் வாலிபனோடு பேசவும் இல்லை.

வண்டிக்கு வரும் முன்புகூட அவள் அதிகம் பேசவில்லை என்பதும் உண்மைதான்.

முதல் நாள் இரவு மதுரைக்கு வந்து வாலிபனைச் சந்தித்து தன்னிடம் இருந்த பட்டுச்சீலையைக் கொடுத்தாள். அது வெறும் சீலையல்ல என்பதைப் புரிந்து கொண்ட அவன் அதிலிருந்த செய்தியை அறிந்தான். அந்த நிமிடமே அவனது மனத்தில் வேதனை வந்து புகுந்து கொண்டாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல், ''மிகவும் நன்றி பெண்ணே. நாளைக் காலையில் வருகிறேன். நீ போய் வா'' - என்றான்.

''தங்களைக் கையுடன் அழைத்து வரும்படி உத்தரவு'' - என்றாள்.

''ஏன், என் மீது நம்பிக்கையில்லையா உன் தலைவிக்கு?'' - சற்றே சினத்தோடு கேட்டான் வாலிபன்.

''ஐயா, தங்கள் மீது சந்தேகப்பட்டு தலைவி இவ்வாறு சொல்லவில்லை.''

''பின்?''-



''தன் மீதுள்ள சந்தேகத்தால்தான் அவ்வாறு கூறியிருக்கிறார்-''

எத்தனையோ நுட்பங்களை அறிந்தவனும் மர்மங்களைக் களைந்தவனுமான அவனுக்கு இத்தோழிப் பெண்ணின் பேச்சு புரியவில்லை. ''என்ன சொல்கிறாய் நீ?'' - என்று எரிந்து விழுந்தான்.

''ஐயா, தலைவி மிகவும் ஆபத்தான நிலையில் இருக்கிறார். தங்களை விரும்பும் விஷயம் அவரது பெற்றோருக்குத் தெரிந்த மறுகணமே இற்செறிக்கப்பட்டு விட்டார். நீங்கள் மட்டும் வராது போனால் ஒன்று, அவளுக்கு மறுமணம் உடனே நடக்கும்; இல்லையென்றால் அவள் மரணம் நடக்கும். ஆகவேதான் தங்களைக் கையோடு அழைத்து வரும்படி உத்தரவிட்டிருக்கிறார்-''

இதற்குப் பின் அவளிடம் விளக்கம் கேட்க வாலிபன் முற்படவில்லை. பொழுது விடியவிருந்த போது புறப்பட எத்தனித்து புரவியோடு வந்தபோது தன்னுடைய வண்டியிலேயே வந்துவிடும்படி கேட்டுக் கொண்டாள் தோழிப் பெண்.

வாலிபன் தயங்கினான்.

''ஐயா, செல்லும் வழி காட்டுவழி. கொள்ளையர் தாக்குதல் எப்போதும் நடக்கலாம். இங்கு வரும்போது என்னுடன் துணையாக வந்த வணிகர்கள் இங்கேயே தங்கி விட்டார்கள். ஆகவே நீங்கள் என்னுடனேயே வண்டியில் வருவது எனக்குப் பாதுகாப்பு. அதோடு தலைவியின் விருப்பமும் அதுதான். தாங்கள் புரவியில் ஏறிவிட்டால் புயலாகி விடுவீர்களாம். தலைவி சொன்னார்''-

இதற்குப் பின்தான் இருவரும் வண்டியில் பயணத்தைத் துவக்கினார்கள்.

தன்னுடன் வண்டியில் வரும்படி கேட்டுக்கொண்ட அவள் வண்டிக்குள் பயணம் செய்தபோது, அந்தஸ்து காரணமாகவோ என்னவோ, இருப்புக் கொள்ளாமல் சங்கடப்பட்டாள். வாலிபனோ பெண்பிள்ளை போல் பயணம் செய்ய நேர்ந்ததால் சங்கடத்திற்கு ஆளானான்.

ஆனால் இந்தச் சில்லறைச் சங்கடங்கள் விரைவிலேயே அழிந்து அவன் மனத்தில் கவலை இடம் பெற்றது.

தன் வாழ்நாளில் தன்னால் மறக்க முடியாத அளவிற்கு இதயத்திலே இடம் பிடித்துவிட்டவளும், போர்-பகை-போட்டி என்பவைகளைத் தவிர எதற்கும் இடமில்லை என்றிருந்தவனுக்குப் புதியதும் இனியதுமான வாழ்க்கைச் சுவையைக் காட்டியவளும், முட்களுக்கிடையில் பூ மலரும் விந்தையை உணர்த்தி அந்த மலராக மலர்ந்தவளும், உறவு என்றால் தன்னோடுதான் - பிரிவு என்றால் தன் உயிரோடுதான் என்று காதலின் ஜீவனை உடலின் மூலைமுடுக்கெல்லாம் ஓடும் ரத்தத்திலே சேர்த்துவிட்டவளும், பொதினியின் பெருவணிகர் பெருஞ்சாத்தனின் ஒரே மகளுமான மேகலை இற்செறிக்கப்பட்டுவிட்டாள்* என்ற செய்தியைப் பட்டுச் சீலை மூலம் அறிந்தகணம் அந்த வாலிபனுக்கு உலகம் நரகமாயிற்று.

* தன் மகள் ஒருவனை விரும்பி களவு வழியில் ஈடுபடுகிறாள் என்றறியும் பெற்றோர் அவனை அவள் சந்திக்காமல் இருக்கும் பொருட்டு தங்கள் இல்லத்திலேயே வைப்பதுண்டு. இற்செறிக்கப்படுதல் என்றால் இதுதான். இது சங்க கால வழக்கம்.



சீலை மூலம் அறிந்தகணம் அந்த வாலிபனுக்கு உலகம் நரகமாயிற்று.

தன் காதலி சிறைவைக்கப்பட்டதே நரகம் போல் தோன்றிய அவனுக்கு அவள் மறுமணத்தையோ மரணத்தையோ அடையலாம் என்று தோழிப் பெண் சொன்ன செய்தியானது நரகத்திலும் மோசமான இடம் கிடைத்து விட்டமாதிரி இருந்தது.

அவளது நிலையை யோசித்து ''தவறு என் மீதுதான். அவள் அடிக்கடி எச்சரித்திருக்கிறாள். நான்தான் பெரியதாக எண்ணாமல் விட்டு விட்டேன். ம்... என் நினைவு முழுவதும் போரில் அல்லவா இருக்கிறது? தன் கண்களைக் காட்டி அவள் மீன் என்றால் நானோ பாண்டிய மன்னரை நினைப்பேன். புருவத்தைக் காட்டி வில் என்றால் நானோ சேரனை நினைப்பேன். பார்வையால் தாக்குவாள். நானோ போர்க்களத்தில் வேல் தாக்குதலை நினைப்பேன். எனக்குப் போய் காதல் ஏன்? அதைத் துறந்து விடுவதுதான் நல்லது' - என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டபோது அவன் தோளில் வந்து அமர்ந்தது ஒரு காட்டுப்புறா.

அதைக் கண்டதும் ஏதோ நினைவு படுத்திக் கொண்டவனைப் போல், ''ஓகோ, உன்னை விட்டு விட்டு வந்து விட்டேனா? என்ன செய்வது? உன்னைப் போலத்தான் அவளும். அவளும் ஒரு புறாதான். உன்னைப் போல் என்னைக் கவர்ந்து என்னை விடாமல் துரத்துபவள்தான். ஆனால் உனக்கில்லாத சிறை அவளுக்கு வந்து விட்டதே எப்படி?'' - என்று சற்று வாய்விட்டே புலம்பியபோது எதிரே அமர்ந்திருந்த தோழிப் பெண்கூட சற்றே அனுதாபத்துடன் பார்த்தாள்.

அவனது நிலையை அறியமுடியாத காட்டுப் புறாவோ அவனது தோளிலிருந்து மடியில் விழுந்தது. சிறிது நேரம் படுத்தது. பின் தோளிலும் மார்பிலும் தொற்றியது. பிறகு வண்டியின் மீது அமர்ந்தது. பின் பறந்து போய் மரத்தில் ஊஞ்சலாடியது. பின் காட்டுக்குள் மறைந்தது.

வண்டியில் ஏறியதிலிருந்து வெளியுலகையே மறந்து விட்டிருந்த வாலிபன் மேகலையின் நினைவிலிருந்து விடுபட்டு சற்றே தெளிந்தபோது பகல் பொழுது முற்றி விட்டிருந்தது தெரிந்தது. அதே சமயம் தோழிப் பெண்ணும் அதை உணர்ந்து தன்னிடமிருந்த மூட்டையை அவிழ்த்தாள். உள்ளேயிருந்த அதிரசங்களில் சிலவற்றையும் புளியஞ்சோற்றையும் தாமரை இலையில் வைத்தாள் அவனுக்கு முன்னால்.

அவற்றைக் கண்டு மெல்லச் சிரித்த வாலிபன், ''சுகத்தையும் துக்கத்தையும் எங்களுக்கு இக்காதலில் ஆண்டவன் வைத்த மாதிரி இனிப்பையும் புளிப்பையும் இத்தாமரை இலையில் வைத்திருக்கிறாய் பெண்ணே. இதுவும் உன் தலைவியின் ஏற்பாடுதானா?'' என்று கேட்டான்.

அவள் பதிலேதும் சொல்லவில்லை. லேசாக சிரித்தாள்.

அவன் அவ்வுணவை உண்டு விட்டு மரக்குவளையில் இருந்த நீரை அருந்தினான். அவளும் அவ்வாறே செய்தாள். அதையடுத்து இருவருமே சற்று உறங்கினர்.

ஆனால் உறக்கம் நீங்கியபோது வாலிபன் அதிர்ச்சியடைய வேண்டியவனானான். உறக்கம்



விழித்ததுமே கண்களைக் கசக்கியபோது அவனது வண்டிக்கு முன்னும் பின்னும் புரவி வீரர்கள் இருந்தார்கள். வண்டிக்கு முன்பு எட்டுப் பேரும் பின்னே பத்துப் பேருமாய் பவனி வந்த அவ்வீரர்கள் பூரண கவசம் தரித்தவர்களாயும் சகலவிதமான ஆயுதம் கொண்டவர்களாயும் காணப்பட்டார்கள். அவர்கள் யார் என்பதும், ஏன் இவ்வண்டிக்கு முன்னும் பின்னுமாய் செல்கிறார்கள் என்பதும் அவனுக்குப் புரியவில்லைதான். ஆனால் அவர்கள் நிச்சயம் காவலுக்காக வந்திருக்க முடியாது என்பது திட்டவட்டமாகப் புரிந்தது. இருப்பினும் அதைப் பற்றி கவலைப்பட அப்போதைக்கு அவன் தயாராக இல்லை. வண்டியில் சற்றே சாய்ந்து வசதியாக அமர்ந்து கொண்டதுடன் கண்களையும் மூடிக் கொண்டான்.

அதுவரை வெறும் சிலைகள் போல் புரவிகளில் வந்து கொண்டிருந்த வீரர்கள் தற்போது அவனது செய்கையைக் கண்டு சற்றே வியந்தார்கள். அதையடுத்து தலைவனைப் போல் இருந்த பெருவுடல்கொண்ட ஒருவன் பின்புறம் திரும்பி ஏதோ சைகை செய்தவுடன் புரவி வீரர் இருவர் வண்டியின் இரு பக்கங்களுக்கும் வந்தார்கள்.

மேலும் ஒரு நாழிகை சென்றிருக்கலாம். வாலிபன் இரண்டாம் முறையாகக் கண் விழித்தான். கண் விழித்துச் சற்றே சுற்றும் முற்றும் பார்த்தபோது இரண்டாவது விபரீதமும் நடந்திருந்தது.

தான் செல்ல வேண்டிய இடமான பொதினிக்கு மதுரையிலிருந்து வடக்கே சென்று சற்றே மேற்கில் திரும்ப வேண்டும். அப்படி மேற்கே திரும்பும் போது

வரவேற்பது போல் வையாவி நாட்டின் பெருமலைகள் இரண்டு தென்படும். அவற்றின் ஊடே செல்லும் நீண்ட பாதையில் சென்றால் சில காத தூரத்தில் பொதினியின் மலைப்பாதையை அடையலாம்.

ஆனால் தற்போது வாலிபன் பார்த்தபோது வண்டி வேறு சாலையில் சென்று கொண்டிருந்தது. பொதினிக்கு வழி காட்டும் மலைகள் வண்டியின் பக்கங்களில் எங்கோ தெரிந்தன. வண்டி மேற்கே திரும்பாமல் வடக்கிலேயே செல்வதை உணர்ந்த வாலிபன் புரவி வீரர்களின் பக்கம் பார்வையைச் செலுத்தினான். அவர்களிடம் ஒருவிதச் சலனமும் இல்லை.

முருகப் பெருமானின் அறுபடை வீடுகளில் ஒன்றாகக் கருதப்படும் பழனி சங்க காலத்தில் பொதினி என்று வழங்கப்பட்டது. அப்பழனி மலை வட்டாரங்கள் வையாவி நாடு என்று பெயர் பெற்றிருந்தன. அந்த நாட்டை வேளிர்களும் இன்னும் பல சிற்றரசர்களும் ஆண்டார்கள். ஆவி நாட்டை ஆண்ட அக்கோமான்கள் 'ஆவிக் கோமான்' என்று தங்களை அழைத்துக் கொண்டார்கள். இதை ஆண்ட சிற்றரசர் பலர் சேர அரசர்களுடன் மணவினை கொண்டு நட்புற்றிருந்தார்கள். இப்படி ஆவி நாட்டின் ஊரான பொதினி, ஆவிநன்குடி என்றும் அழைக்கப்பட்டது. இந்தத் தெய்வச் சிற்றூரில்* பெருஞ் சாத்தனின் மகளான மேகலை இருந்தாள்.

* ''முருகன் நற்போர் நெடுவேள் ஆவி, அறுகோட்டு யானைப் பொதினி - அகநானூறு 1

'முழவுறழ் திணிதோள் நெடுவேள் ஆவி, பொன்னுடைய நெடுநகர் பொதினி' - அகம் 61



அவ்வூரில் அவள் இற்செறிக்கப்பட்டிருந்ததால் தன்னை வந்து விடுவிக்கும்படியும் மணம் புரிந்து கொள்ளும்படியும் சீலையில் செய்தியை வடித்துத் தோழிப் பெண்ணின் மூலம் மதுரையில் இருந்த தன் ஆருயிர்த் தலைவன் பழையனுக்கு அனுப்பினாள். அச்செய்தியால் மனமொடிந்து போய், தெம்பிழந்து, வண்டியிலே பயணப்பட்டு, வழக்கமான தன் கவனத்தைச் சற்றே தவற விட்டுவிட்ட பழையன், வண்டி தான் போக வேண்டிய பொதினிக்குப் போகாமல் பாதை மாறி வெகுதூரம் வந்து விட்டதையும், குதிர்களைப் போல் புரவியின் மீது புதிர்களாய் வீரர்கள் வந்து கொண்டிருந்ததையும் உணர்ந்த பின் இனியும் மௌனமாய் இருப்பதில் பயனில்லை என்று கருதி ''வண்டிக்காரரே'' - என்று அழைத்தான்.

வண்டிக்காரன் திரும்பவில்லை. ''என்ன?'' - என்று மட்டும் கேட்டான் முரட்டுத்தனமாக.

''வண்டி பொதினிக்குப் போவது போல் தெரியவில்லையே'' - என்றான் பழையன் விசாரிக்கும் தொனியில்

வண்டிக்காரன் அசரவில்லை. ''அதற்கென்ன?'' - என்று கேட்டான் அதே அலட்சியத்துடன்.

''வண்டி வேறெங்கே போகிறது?''

பழையன் இதைக் கேட்டதும் ''அதற்குப் பதில் நான் சொல்கிறேன்'' - என்றான் புரவி வீரர்களில் தலைவனைப் போல் இருந்தவன்.

''வண்டி எங்கே போகிறதென்று ஓட்டுபவருக்குத் தெரியாதா?'' - என்று கேட்டான் பழையன் புரவி வீரனிடம்.

''அதனாலென்ன? உமக்குத் தேவை பதில்தானே?'' என்று பேசிய புரவி மனிதன் ''வண்டி போக வேண்டிய இடத்திற்குப் போகிறது'' - என்றான்.

பழையன் இதைக் கேட்டுச் சற்றே சினந்தாலும் பொறுமையை இழக்காமல் ''அந்த இடம் எது என்றுதான் கேட்கிறேன்'' - என்றான்.

''போன பின்பு தெரிந்துவிடும்-''

''இந்தப் பதிலை மற்றவர்கள் சொல்லித்தான் தெரிய வேண்டுமா?''

''இல்லை''-

''பின்?''

வீரர் தலைவன் சற்றே தயங்கி யோசித்துவிட்டு ''நீங்கள் என்னைக் கேள்வி கேட்பதால் பயனில்லை. இதை நீங்கள் உணர்ந்து கொள்வது நல்லது'' - என்றான்.

''உம்மை யார் கேள்வி கேட்டது? நான் கேட்டது வண்டிக்காரனைத்தானே?- என்று வினவினான் பழையன்.

''யாரைக் கேட்டாலும் பயனில்லை''

''ஏன்?''

''உத்தரவு அப்படி''

''யார் உத்தரவு''



''இட்டவரது உத்தரவு''-

''விலாசம் தெரியாதவனின் உத்தரவுகளுக்கு நான் கட்டுப்படுவதில்லை''

''முடியாத காரியம்''

''சோதித்து விடுகிறேன்'' - என்ற பழையன் பேசிக் கொண்டிருக்கும் போதே இடையில் இருந்த குறுவாளை உருவி விட்டானாதலால் தற்போது அதை வண்டிக் காரனின் இடுப்பருகே அழுத்தி, ''வண்டியை நிறுத்தும்'' என்றான்.

''ஏன்? - வண்டிக்காரனின் குரல் வேதனையுடன் வெளிவந்தது.

''உம்முடன் பயணம் செய்ய எனக்கு விருப்ப மில்லை'' என்றான் பழையன்.

''உன் விருப்பத்தை நிறைவேற்றும் நிலையில் நான் இல்லை'' - என்றான் வண்டிக்காரன்.

''உன் உயிர் போய்விடும்''

''போகாது-''

''ஏன், இடுப்பில் குறுவாள் இறங்காதா?''-

''ஆம்''- என்று சொல்லி வண்டிக்காரன் திரும்பி தன் முகத்தைக் காட்டினான். அதே சமயம் புரவி வீரர்கள் அனைவரும் உரக்கச் சிரித்தார்கள். வண்டிக்காரனை இன்னாரென அறிந்து கொண்ட பழையன் பெரிதும் திகைத்துப் போனான்.

◈◈◈

முரசு இரண்டு

# கொள்ளைக்காரன் டைரியஸ்

தான் விரும்பாததும் தனக்குத் தேவையில்லாதது மான பயணத்திலிருந்து விடுதலையாகும் முயற்சியில் வண்டிக்காரனின் இடையில் தன் குறுவாளை அழுத்தி மிரட்டியபோது உயிருக்கு அஞ்ச வேண்டிய வண்டியோட்டி அதைப்பற்றிக் கவலைப்படாமல் அலட்சியமாகப் பேசி முகத்தை திருப்பியபோது பழையன் அதிர்ச்சியடைந்தானென்றால் அதில் வியப்பில்லைதான். அவனடைந்த அதிர்ச்சியைக் கண்டு கிண்டல் செய்வது போல் புரவி வீரர்கள் அனைவரும் ஒரு சேர சிரித்தபோது பழையன் ஒரு கணம் விழித்தான். சிரிப்பைக் குறைத்துக் கொண்ட வீரர் தலைவன் பழைய படி பழையனோடு பேசத் துவங்கி ''என்ன படைத் தலைவரே, குறுவாளை இடையில் பாய்ச்சுவதுதானே? வாள் கூராக இல்லையா?'' - என்று வேறு கேட்கவும் செய்தான்.

பழையனுக்கு வண்டிக்காரனைப் பற்றிய சிந்தனையே பெரிதாக இருந்ததால் வீரர் தலைவனின் வார்த்தைகள் காதில் விழவில்லை. தன் காதலியான மேகலையின் தந்தையான பெருஞ்சாத்தன் வண்டிக்காரனாய் இருந்ததைக் கண்டு அவனுக்குள் பற்பல கேள்விகள் எழுந்து குழப்பின. பெண்ணை இற்செறித்துவிட்டு வண்டியை ஓட்டிக்கொண்டு தந்தை மதுரைக்கு வரவேண்டிய அவசியம் என்ன? இவர்



வண்டிக்காரராய் வந்ததில் சூதிருக்கிறதா அல்லது மகளை இற்செறித்ததில் சூதிருக்கிறதா? இவருக்கும் புரவி வீரர்களுக்கும் என்ன தொடர்பு? யாருடைய ஏவலின் பேரில் இவர்கள் இப்படி நடந்து கொண்டிருக்கிறார்கள்? மேகலையின் தந்தையாய் இருக்கும் பட்சத்தில் இவர் ஏன் வண்டியை பொதினிக்குச் செலுத்தவில்லை? மகளுக்கு எதிராக எந்தக் காரியத்திலாவது இறங்கிவிட்டாரா? மேகலையின் கதி என்ன? என்றெல்லாம் எழுந்த கேள்விக் குவியல்களில் சிக்கித் தவித்த பழையன் திடீரென எதுவோ நினைவிற்கு வந்த மாதிரி மேகலையின் தோழிப் பெண்ணைக் கண்டான். இவ்வளவு நேரமாய் எந்த விதமாயும் குறுக்கிடாமல் அவள் எப்படி இருந்தாள் என அறியும் ஆவலில் அவளை நோக்கியபோது அவள் இன்னும் விழிக்கவே இல்லை என்பது தெரிந்தது. அப்படி என்ன நெடுந்தூக்கம் என்று கேட்டுக்கொண்ட பழையன் அவளை எழுப்ப முயன்றபோது வீரர் தலைவன் குறுக்கிட்டு ''அவளை எழுப்ப வேண்டாம். அவள் இப்போது விழிக்கமாட்டாள்''- என்று தெரிவித்தான்.

''ஏன்?''

''மயக்கப் புகை வேலை செய்கிறது?''-

''இவளுக்கு மயக்கம் கொடுத்து விட்டீர்களா?''-

''ஆம்''

''எனக்கு ஏன் தரவில்லை?'

''தரவேண்டாம் என உத்தரவு''

''ஏன்?''-

''அதைக் கேட்கும் உரிமை எனக்கில்லை. ஒரு வேளை தங்களைச் சுயநினைவோடு அழைத்து வருவதையே கௌரவமான காரியம் என்று எண்ணியிருப்பார்.''

''யார்?''

''எண்ணத்திற்கு உரியவர்''

பழையன் அத்துடன் பேச்சை நிறுத்திக் கொண்டான். வீரர் தலைவனுடன் பேசுவதால் எந்தவிதமான பயனும் இல்லை என்பதை உணர்ந்து தற்போது அவனிடம் உண்டாகியிருந்த அதிர்ச்சி மறைந்து எப்போதும் இருக்கும் அலட்சியம் வந்து குடியேறியது. அதனால் தெம்படைந்த அவன் வீரர் தலைவனை அழைத்து தன் குறுவாளை வலிய ஒப்படைத்தான். வண்டியின் நீளவாட்டத்தில் கால்களை நீட்டிப் படுத்தும் விட்டான். சில நிமிடங்களிலேயே பெருமூச்சும் வெளிப்பட லாயிற்று உறக்கம் துவங்கி விட்டதை உணர்த்துவது போல்.

பழையனது நடவடிக்கைகள் ஒவ்வொன்றும் வீரர் தலைவனுக்கு உள்ளூர வியப்பையும், பயத்தையும் அளித்தன. தனது நிலை அசாதாரணமாகவும் புதிராகவும் மாறிவிட்டதை உணர்ந்தும்கூட அதைப் பற்றிக் கவலைப்படாமல்-உண்மையிலேயே அதைப் பற்றி அறிந்தவுடன் முன்பை விட அதிக அலட்சியத்தைக் காட்டி கால்களை நீட்டி சுகவாசம் அனுபவிப்பது போல் உறக்கத்தையும் மேற்கொண்டுவிட்ட பழையனின் நெஞ்சுரம் அவனை அசர வைத்தது. எனினும் தன்னுடன் வந்திருந்த வீரர்கள் பலத்தையும் அவர்களின் ஆயுத



பலத்தையும், பழையனின் குறுவாள் அகன்று விட்ட நிலையையும் எண்ணி சற்றே தைரியப்படுத்திக் கொண்டான்.

கதிரவன் மேலைவாயிலில் விழும் நேரத்திற்குச் சற்று முன்னால் அவ்வண்டி வடக்கு திசையிலிருந்து சற்றே வட மேற்காகத் திரும்பியது. அப்படித் திரும்பிய பின் அதன் வேகமும் அதிகமாயிற்று. ஒரு நாழிகைப் பயணத்திற்குப் பின்னால் காட்டு வழியானது சற்றே விலகத் தொடங்கி ஏதோ ஒரு நகரப் பகுதி கண்களில் புலப்படலாயிற்று. அந்நகரப் பகுதியை நெருங்க நெருங்க மனிதர்களின் நடமாட்டம் அதிகப்படத் தொடங்கியது. அதிலும் புரவிக் காவலர் தொகையும் வணிகர் தொகையுமே அதிகமாய் இருந்தன. ஊருக்குள் சாரி சாரியாய் வண்டிகள் பல சென்றன. உள்ளே செல்லும் வண்டிகளின் தொகை அதிகமாயும் இடைவெளியின்றித் தொடர்ச்சியாயும் இருந்தது மட்டுமின்றி அவை வேகமாக நகர்ந்தன. ஆனால் நகரிலிருந்து வெளிவந்த வண்டிகளின் தொகை அவ்வளவாய் இல்லை. தொடர்ச்சியாயும் இல்லை. விட்டுவிட்டு ஓரிரு வண்டிகள் மட்டுமே வந்து கொண்டிருந்தன. அதற்கான காரணம் வீரர் தலைவனுக்கோ அவனது ஆட்களுக்கோ புதியனவல்ல வாதலால் அவர்கள் அதுபற்றிக் கலைப்படவில்லை.

இந்த நிலையில் கண்விழித்த பழையனும் இந்த நடை முறைகளைக் கவனித்தான். அதே சமயம் தோழிப் பெண்ணும் கண் விழித்தாள். வண்டிகளைக் கவனிக்கவும் செய்தாள். ஆனால் அது குறித்துக் குழம்பவோ ஆச்சரியப்படவோ இல்லை. ஏதோ சிலை போல் இருந்தாள். இதையும் கவனித்தான் பழையன்.

அவளோடு எதையும் பேசமுற்படவில்லை. ஊரின் எல்லையைத் தாண்டி நகருக்குள் நுழைய வேண்டிய சாவடித் திறப்பு வந்ததும் வீரர் தலைவன் சங்கொன்றை எடுத்து ஊதினான். அதையடுத்து நான்கைந்து பேர் புரவிகளின் மீது பூதங்கள் அமர்ந்தது போல் அமர்ந்து சாவடிக்கு வந்தார்கள். வீரர் தலைவனைக் கண்டு தலைவணங்கவும் செய்தார்கள். அவர்களிடம் தலைவன் ஏதோ பேசினான். அதையடுத்து வண்டியிலிருந்த இருவரும் இறக்கப்பட்டார்கள். தோழிப் பெண்ணும் வண்டிக்காரனும் அந்தப் பூதங்களிடம் ஒப்படைக்கப் பட்டார்கள். புரவியொன்று வரவழைக்கப்பட்டது. அதைப் பழையனுக்குச் சுட்டிக் காட்டிய தலைவன், ''படைத் தலைவர் இப்புரவியில் அமர்ந்து பயணம் செய்வது நல்லது'' என்று தெரிவித்துக் கொண்டான். பழையன் அதற்கு எதிர்பொன்றும் காட்டிக் கொள்ள வில்லை.

சில நொடிகளில் வீரர்கள் சூழ புரவியில் நகருக்குள் பயணம் செய்தான் பழையன். நகர் முழுவதும் பற்பல தீபங்களால் பெரும் ஒளியைப் பெற்று இரவைப் பகல் ஆக்கிவிட்டிருந்தது. புகாரின் மருவூர்ப் பாக்கத்தை விடவும் - கொற்கையின் அல்லங்காடியை விடவும், முசிறியின் துறைமுகச் சந்தையை விடவும் சிறிய பகுதியாய் இருந்தாலும் வணிகச் சிறப்பில் பெரியதாய் விளங்கியது அந்நகர். கோயம்புத்தூர் மாவட்டத்தில் தாராபுரம் என்று தற்காலத்தில் வழங்கப்படும் தாலுகாவைச் சேர்ந்த ஊராயும் சங்க காலத்தில் படியூர் என்றும் அழைக்கப்பட்ட அந்நகரம் இக்கதை நடந்த காலத்தில் சிறந்த வணிக ஸ்தலமாகத் திகழ்ந்தது. சோழ



நாட்டிலோ பாண்டிய நாட்டிலோ கிடைக்காத பொருளான விலையுயர்ந்த நீலமணிக் கற்கள் இப்படியூரில் நிரம்பக் கிடைத்தன. *கொங்கு நாட்டில் ஆங்காங்கே இக்கற்கள் கிடைத்தாலும் படியூரில் பற்பல வடிவங்களில் அதிக எண்ணிக்கையில் கிடைத்தன. மிகவும் உயர்ந்த தரம் கொண்டதாயும் அவை இருந்தன. கொங்குநாட்டில் உழவர்கள் நிலத்தை உழும்போது நீலமணிக் கற்கள் கிடைக்குமாம். அக்காலப் புலவர்கள் இதுபற்றி பாடியிருந்தார்கள். படியூரில் நீலமணிக் கற்கள் கிடைத்தது பற்றி புலவர்கள் தெரிவிக்கவில்லை என்றாலும் இங்கு வருகை புரிந்த யவன வணிகர்களும் நூலாசிரியர்களும் குறிப்பு எழுதி வைத்துள்ளார்கள். அக்குறிப்புகளின் படி படியூரின் விலையுயர்ந்த நீலமணிக் கற்களை யவனர்கள் மிகவும் விரும்பி வாங்கினார்கள். இங்கு நீலமணிக் கற்கள் கிடைக்கும் சுரங்கம் ஒன்று இருந்ததாகவும் கால வெள்ளத்தில் அச்சுரங்கம் நீர் நிரம்பி விட்டதாகவும், அதனை அறிந்த ஐரோப்பியன் ஒருவன் பெரிதும் முயன்று கி.பி.1819-20ம் ஆண்டு அகழ்ந்தபோது 2196 மணிகள் கிடைத்ததென்றும் சொல்லப்படுகிறது.

* பக் 29. கொங்கு நாட்டு வரலாறு - மயிலை. சீனிவேங்கடசாமி.

'கருவி வானம் தண்தளி சொரிந்தென
பல்விதை உழவின் சில் ஏராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்,
கழுவுறு கலிங்கர் கடுப்ப, சூடி,
இலங் கதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடு கிழவோயே'-

- பதிற்றுப் பத்து
8ம் பத்து ஆறாம் பாடல் வரி 10-15

மொத்தத்தில் உள்நாட்டவரும் அயல் நாட்டவரும் விரும்பிப் பெறும் மணிகளைத் தந்த படியூர் சங்க காலத்தில் சிறந்த வணிகஸ்தலமாய் இருந்தது என்பது உண்மை.

படோரஸ் என்று யவனர்களால் அழைக்கப்பட்ட இப்படியூரின் முக்கிய வீதிகள் வழியாக பலத்த காவலுடன் பழையன் அழைத்துச் செல்லப்பட்டபோது நன்றாக இருட்டிவிட்டிருந்தது. நகர் முழுவதும் பெரும் தீபங்களாலும், யவன விளக்குகளாலும் பிரகாசபட்டு பகலாய் மாறிவிட்டிருந்தது. எல்லா வீதிகளிலுமே யவனவணிகர்களின் எண்ணிக்கையே அதிகமாய் இருந்தது. அவர்களிடம் தமிழிலும் கிரேக்க மொழியிலும் பேசி தமிழ் வணிகர்கள் பல்வேறுபட்ட கற்களையும் மணிகளையும் விற்கும் முயற்சியில் மிகவும் சுறுசுறுப்பாக இறங்கியிருந்த காரணத்தாலும், வணிகக் கலவரத்தைத் தடுக்கும் பொருட்டு ஆங்கங்கே காவல் வீரர்கள் நீண்ட வேல்களுடன் புரவியில் சுற்றி வந்து கொண்டிருந்ததாலும் பழையனையும், புரவி வீரர்களையும் யாரும் கவனிக்கவோ பொருட்படுத்தவோ இல்லை. சிற்சில இடங்களில் கடைகளுக்கு முன்னால் திரண்டிருந்த அழகிய யவன மங்கையர்கூட தான் தேர்ந்தெடுத்த மணிகளை விளக்கொளியில் பற்பல கோணங்களில் காட்டி தங்கள் அதிசயத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்களே யன்றி பெரும் ஊர்வலம் போல் சென்ற பழையன் கூட்டத்தைக் கவனிக்கவில்லை. அப்படியூர் வணிகத் துறையின் தலைவனும், வணிகர்களின் முதல்வனும், 'எட்டி' என்ற பட்டம் பெற்றவனுமான எட்டிச் சாத்தன் கூட ஊரின் மத்தியில் அமைந்திருந்த வணிகர் மாளிகையில் அமர்ந்திராமல் சந்தைப் பகுதியில் வந்து வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டு ஓரிரு கட்டளைகளை சிலருக்கு இட்டபடி இருந்தான்.



பழையனுக்குத் தற்போது தானிருக்கும் இடம் அடையாளம் தெரிந்தது. இருப்பினும் எந்தவித கவலையையும் கொள்ளாமல் பயணம் செய்தான். படியூரின் வடக்கு எல்லையை நெருங்கியபோது வியாபாரச் சந்தையின் ஒரு மூலையின் ஏதோ கலவரம் நடப்பதுபோல் தோன்றவே வீரர் தலைவன் சற்றே முன்னால் சென்று கவனித்தான்.

அங்கே மிகப்பெரிய கடையாய் இருந்த ஒன்றின் முன் யவன வணிகர்கள் சுமார் பத்துப் பேர் திரண்டிருந்தார்கள். கடையில் ஏராளமான கற்களும் மணிகளும் குவிந்திருந்தன. அவற்றை விற்க அமர்ந்திருந்த வணிகன் மிகவும் பீதியடைந்தவனாகக் காணப்பட்டான். அதைக் கண்டதும் தன் அந்தஸ்தைக் காட்டிக்கொள்ளும் விதத்தில் வீரர் தலைவன் ''வணிகரே, இங்கென்ன ரகளை? விலை ஒத்துவரவில்லையா அல்லது பொருள் தரமாயில்லையா? என்ன சொல்கிறார்கள் யவன வியாபாரிகள்?'' என்று அதட்டலாகக் கேட்டான்.

தற்போது அந்த வணிகனின் பீதி அதிகமாயிற்றே தவிர குறையவில்லை. மிரள மிரள விழித்தானேயன்றி பதில் கூறினானில்லை. அதைக் கண்டு சற்றே கோபப்பட்ட வீரர் தலைவன் ''என்ன வணிகரே, உமக்கு காது கேட்காதா?'' என்று கேட்டதும் பதில் வேறொருவனிடமிருந்து வந்தது.

கடையைச் சுற்றி வளையம் போல் நின்றிருந்த யவனர்களில் மிகவும் உயரமாயும், பூரண கவசம் தரித்தும், கூரிய பார்வையினைக் கொண்டுமிருந்த பயங்கரத் தோற்றமளித்த யவனன் பேச முற்பட்டு ''இவன் பேசமாட்டான்'' - என்று தெரிவித்தான்.

''ஏன்? மௌன விரதம் இருக்கிறானா?'' - என்று கிண்டல் தொனிக்க வினவினான் வீரர் தலைவன்.

''ஒரு வகையில் அப்படித்தான்'' - சகஜமாகக் கூறினான் யவனன்.

''ஒரு வகையில் என்றால்?''-

''விரும்பி பேசாமல் இருப்பது மௌன விரதம். பேச முடியாமல் இருப்பதும் ஒரு வகையில் மௌன விரதம் தான்.''

''அப்படியென்றால்''-

''இவன் பேசினால் உயிர் போய்விடும்''

''காரணம்?''

''அதோ - திரையைக் கிழித்துக் கொண்டு தெரியும் அம்பைப் பார். இவன் வாயைத் திறந்தால் அம்பு தைத்துவிடும்.''

''வாயைத் திறக்காமல் எப்படி வியாபாரம் செய்ய முடியும்?''

''கைகள் இருக்கும்போது வாய் எதற்கு?''

''விலை கூற வேண்டாமா?''-

''கேட்டால்தானே கூறவேண்டும்?''-



யவனன் ஏதோ விதண்டாவாதம் செய்கிறான் என்பதை உணர்ந்து கொண்ட வீரர் தலைவன் அவனை மேற்கொண்டு அனாவசியமாகப் பேச அனுமதிக்க விரும்பவில்லை. அதோடு அவன் தன்னை யாரென அறியாமல் பேசிக்கொண்டிருப்பதாகக் கருதி தன்னை அறிமுகம் செய்துகொண்டு மிரட்ட முற்பட்டு ''நான் யார் தெரியுமா?'' - என்று கேட்டான்.

''அதைத் தெரிந்து கொள்ள நாங்கள் இங்கே வரவில்லை''- என்று ஆணித்தரமான வார்த்தையில் சொன்னான் யவனன்.

அதைப் பொருட்படுத்தாத வீரர் தலைவன் ''இந்தப் படியூரின் நிர்வாகத்திற்கு உரியவன் நான். இங்கே என்னைக் கேட்காமல் ஒரு மணியும் அசையாது'' - என்றான் பெருமிதக் குரலில்.

யவனன் அசையவில்லை.

''மணி அசைவது இருக்கட்டும். இந்த வணிகனின் வாயை அசைத்துக் காட்டும் பார்க்கலாம்'' - என்று சவாலிடுவது போல் கேட்டான் அவன்.

வீரர் தலைவனுக்கு மிதமிஞ்சிய கோபம் உண்டாயிற்று.

''யவனனே! அனாவசியமாக நன்னனிடம் விளையாடி உயிரை இழக்காதே'' என்று இரைந்தான்.

யவனன் இதைக்கேட்டு கடகடவெனச் சிரித்தான். ''டைரியஸ் யாரோடும் விளையாடுவதில்லை. விளையாடும்போது உயிரை இழப்பதும் இல்லை'' என்றான் அலட்சியமாக.

டைரியஸ் என்ற பெயரைக் கேட்டதுமே வீரர் தலைவனான நன்னனின் உடல் உள்ளூர நடுங்கியது. சேரநாடு முழுதும் அஞ்சிக் கொண்டிருப்பதற்குக் காரணமானவனும், சேரர் கடற்கரையை அவ்வப்போது தாக்கிச் சூறையாடுபவனும், கொள்ளை என்ற சொல்லின் முழு அர்த்தத்திற்கு பொருளானவனும், பயங்கர கடற் கொள்ளைக்காரனுமான டைரியஸ் என்ற பெயரை அறியாதவர்கள் இல்லை. நன்னனுக்கும் அப்பெயர் தெரியும். ஆனால் அவனை அன்றுவரை நேரில் கண்டதில்லையாதலால் தற்போது கண்டவுடன் அவனது பிரசித்தத்தை எண்ணிப் பார்த்து பெரிதும் கவலை கொண்டான். டைரியஸ் வெறும் கொள்ளையில் மட்டும் நாட்டமுடையவன் அல்ல என்பதும் கொலைவெறி மிகுந்தவன் என்பதும், தன் கொள்ளைக்கு இடைஞ்சல் விளைவிப்போர் தன் கைகளில் சிக்கும் பட்சத்தில் அவர்களைக் கொல்லாமல் விடமாட்டான் என்பதும், அப்படிக் கொல்வதில் கூட சித்ரவதையே அதிகமாய் இருக்கும் என்பதும், அவனைப் பற்றிய வதந்திகளாய் உலவி வந்தபடியால் தன்னிலை குறித்துப் பெரிதும் அஞ்சினான் நன்னன். அரசியலில் ஈடுபட்ட காலம் முதற்கொண்டே வீரத்தைப் பயில்வதற்கு பதில் பதவியைப் பறிக்கும் கலையைப் பயில்வதிலும், சுயபலத்தை நம்பாமல் துணை பலத்தை நம்புவதிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தானாதலால் வெறும் அதிகார மமதையைக் காட்ட முற்பட்டு ஆழம் தெரியாமல் காலை விட்டுத் திண்டாடிய கதையாக டைரியஸிடம் சிக்கியிருந்தான் அவன். ஏற்கெனவே பாண்டிய நாட்டின் படைத்தலைவனான பழையனை ஒரு



புறத்தில் வைத்துக் கொண்டு தற்போது பயங்கர கொள்ளைக்காரனை மறுபுறம் எதிர்கொள்ள வேண்டி வந்து விட்டதை எண்ணி நொந்து கொண்ட அவன் ''எதற்காக வீணாக இவனிடம் பேச்சுக் கொடுத்தோம்? பேசாமல் நம் வேலையைப் பார்த்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா?'' என்று நினைத்து வருந்தினான்.

இருப்பினும் அசட்டுத் துணிச்சலை பாதியில் விட்டு விட அவனால் முடியவில்லை. அதோடு பழையனின் முன்னிலையில் டைரியஸுக்குப் பணிந்து விடவும் அவன் மனம் இடம் தரவில்லை. எனவே டைரியஸிடம் பேச முற்பட்டு ''டைரியஸ், உனக்கு சில நொடிகள் அவகாசம் தருகிறேன். நீயும் உன் கூட்டத்தாரும் ஆயுதங்களைப் போட்டுவிட்டு ஓடி விடுங்கள்'' - என்றான்.

டைரியஸுக்கு மீண்டும் சிரிப்பாக இருந்தது.

''எனக்கு அவகாசம் கொடுக்கும் முதல் மனிதனும் கடைசி மனிதனும் நீதான்'' - என்று கூறிவிட்டுத் தன் பயங்கரக் கண்களை இப்படியுமப்படியுமாய் உருட்டினான் எதையோ உணர்த்துவதுபோல்.

அதையடுத்து நன்னனை மின்னல் வேகத்தில் யவனர்கள் சூழ்ந்து கொண்டது மட்டுமின்றி அவனது கழுத்தை நெறிக்கவும் முற்பட்டார்கள். நன்னனின் துணைவர்கள் செய்வதறியாமல் தவித்தார்கள்.

அதுவரை அந்த உரையாடல்களைக் கேட்டுக் கொண்டு அதே சமயம் அதில் தலையிடாமல் தனக்களித்த

புரவியில் அமர்ந்து கொண்டு தன் தோளில் வந்து வந்து அமர்வதும் பறப்பதுமாய் இருந்த காட்டுப் புறாவுடன் கொஞ்சிக் கொண்டிருந்த பழையன் நன்னனின் நிலையைப் பார்த்தபின் சர்வ சகஜமாய் பேசத் துவங்கி ''டைரியஸ், அவனை விட்டுவிடு. எந்த நடவடிக்கையிலும் இறங்காமல் போய்விடு. ஒரு வாரத்தில் இதே இடத்தில் நீ கொள்ளையிட உத்தேசித்துள்ள மணிகள் அனைத்தையும் நான் ஒப்படைக்கிறேன்'' - என்றான்.

விநோதமான இந்தப் பேச்சைக் கேட்டதும் குரலுக்குடையவனை யாரெனப் பார்த்த டைரியஸ் ''யார் நீ?'' - என்று வினவியதும் ''பாண்டியர் படைத்தலைவர் மோகூர் பழையன்''- என்று இடையே குறுக்கிட்டுச் சொன்னான் நன்னன் தன் கழுத்தின் பிடி சற்றே தளர்ந்ததால்.

அவன் கூறிய பெயரைக் கேட்டதுமே டைரியஸிடம் பெருத்த மாற்றம் உண்டாயிற்று. ஏதோ பார்க்க முடியாத ஒன்றைப் பார்ப்பது போலவும், பார்க்க ஏங்கிய ஒன்றை பார்த்து விட்டாற் போலவும் வியந்த அவன் ''இது உண்மையா?'' - என்று வாய்விட்டே இரைந்து கேட்டு விட்டு அக்கேள்விக்குப் பதில் வருவதற்குள் ''உங்கள் இருவருக்கும் என்ன விவகாரம்?'' - என்று தொடர்ந்து நன்னனைக் கேட்டான்.

நன்னனின் குரல் கம்பீரமாக ஒலித்தது. ''இவனை என்னோடு கொண்டு செல்கிறேன்'' என்றான்.

''பழையனையா கொண்டு செல்கிறாய்? உனக்குப் பைத்தியம்தான்'' என்று கூறிய டைரியஸ் பழையனை



நோக்கி ''உங்களைப் பற்றி நிரம்ப கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் நேரில் பார்த்ததில்லை'' என்று கூறிவிட்டு ''படைத் தலைவரே, இவ்வளவு நேரம் வாய் நோக நன்னன் பேசினாலும் இரண்டு வார்த்தைகளே பேசிய உங்களை நம்புகிறேன்'' என்றான். பின்னர் நன்னனை நோக்கி, ''அறிவில்லாத நன்னா, இன்று உனக்கு அதிர்ஷ்ட நாள் என்று எண்ணிக்கொள். படியூர் முழுதும் என் ஆட்கள் நிரம்பியிருக்கிறார்கள். இந்தக் கடையை வளைத்த மாதிரி எல்லாக் கடைகளும் இந்நேரம் வளைக்கப்பட்டிருக்கும். நிமிட நேரத்தில் சூறையாடி இருப்பேன். உன் கழுத்தும் திருகப்பட்டிருக்கும். என்ன காரணத்தாலோ தடுக்கிறார் படைத்தலைவர். அவரை நம்பி என் திட்டத்தைக் கைவிட்டுச் செல்கிறேன். நீ பிழைத்தாய்'' என்று அறிவித்து விட்டு பழையனை ஏதோ கேட்பதுபோல் திரும்பியதும் அதைப் புரிந்து கொண்டவன்போல் சொன்னான் பழையன்.

''டைரியஸ், நீ இப்படியூரை எளிதில் சூறையாடி விடலாம். ஆனால் சேர நாட்டைவிட்டு எளிதில் தப்பிவிட முடியாது. நடுக்கடலிலும், கரையோரத்திலும் கொள்ளையிடுவது போன்றதல்ல இந்த முயற்சி, உன் நாட்டில் இவ்வளவு தூரம் வந்துவிட்டபின் பெரும் பொருளோடு மீள்வது எளிதல்ல. உன் ஆட்களில் கணிசமான ஆட்களை பலியிட்டால்தான் அது முடியும். தேவையில்லாத நஷ்டம் வேண்டியதில்லை. எந்த மணிகள் தேவையோ அதைச் சேதமின்றி நீ பெறலாம். நான் சொன்னபடி போய் வா.''

''உண்மைதான் படைத்தலைவரே. எனக்குத் தேவை படியூர் கற்கள். நீலமணிகள். இவனைப் போன்ற உதவாக்கரைகள் அல்ல'' - என்று கூறிவிட்டு மடியில் இருந்த சங்கொன்றை எடுத்து இருமுறை ஊதிவிட்டு தன் சகாக்களுடன் புறப்பட்டுச் சென்றான் டைரியஸ்.

நடந்துவிட்ட நிகழ்ச்சிகளை நன்னனால் நம்பவே முடியவில்லை. நிமிட நேரத்தில் தன் உயிர் அரைக்காசு பெறாமல் போனதோத செல்லாக்காசான உயிர் வினாடி நேரத்தில் மீண்டதோ அவனுக்கு அதிக வியப்பை அளிக்கவில்லை. பயங்கர கொள்ளைக்காரனுக்குப் போய் பழையன் படியூர் செல்வத்தை ஏதோ சீதனம் போல் தருவதாக வாக்களித்ததும், அதைக்கேட்டு அக்கொலைகாரன் நம்பிக்கையோடு சென்றதும்தான் அளவற்ற திகைப்பையும் வியப்பையும் தந்தது. படியூரின் நிர்வாகியாக தான் இருக்கும்போது - தன்னிடம் இப்பழையன் வகையாகச் சிக்கியிருக்கும்போது நீலமணிகளைப் போய் எப்படி டைரியஸுக்கு வழங்க முடியும் என்ற பலமான கேள்வியைக் கேட்டுக் கொண்ட அவன் அக்கேள்வியின் பயத்தாலேயே பலவீனப்பட்டுப் போனான். முடிவில் ''இருக்கட்டும். இருக்கட்டும். இவன் திமிருக்கு உரிய பாடத்தை நானே கற்பிக்கிறேன்'' என்று கூறிக்கொண்டு பழையனிடம் எதையும் பேசிக் கொள்ளாமல் புறப்பட்டான்.

விரைவிலேயே செல்ல வேண்டிய இடத்திற்கு அவர்கள் சென்றார்கள். அனைவரும் புரவியை விட்டிறங்கி அருகில் தெரிந்த மாளிகையை நோக்கி நடந்தார்கள். மாளிகை வாசலில் இருந்த காவலரிடம்



நன்னன் ஏதோ விசாரிக்க ''இப்போது தான் வந்தார். சீக்கிரம் செல்லுங்கள்'' என்ற பதில் கிடைத்தது. அதையடுத்து மாளிகைக்குள் அழைத்துச் செல்லப் பட்டான் பழையன். உள்ளே சென்றடைந்ததும் ''வருக வீரனே வருக'' - என்று கரகரத்த குரலொன்று வரவேற்றது. வரவேற்றவனை ஏறெடுத்து நோக்கினான் பழையன். பரம ஆபத்தான மனிதனுக்கு முன்னால் தான் வந்துவிட்டதை உணர்ந்தான்.

◈◈◈

முரசு மூன்று

# சேரமான் விவரணம்

படியூருக்குச் சற்று வடகிழக்கில் கருவூரின் சமீபத்திலிருந்த மலைக் காட்டுச் சரிவிலிருந்த தனி மாளிகையானது அந்த நள்ளிரவு நேரத்தில் பெரும் பேயைப் போல் காட்சியளித்தது. மாளிகைக்கு வழிகாட்டும் விதத்தில் நீண்டிருந்த ஒற்றையடிப் பாதையில் நிலவு ஒளி விழ முடியாத அளவில் மரக்கிளைகள் மறைவு செய்திருந்ததால் ஒற்றை தீபமொன்று எற்றப்பட்டு மினுக்மினுக்கென்று அரைமனதோடு எரிந்து கொண்டிருந்தது. தூரத்திலிருந்து பார்த்தால் ஏதோ நட்சத்திர பொட்டு போல் தெரியும் அந்த ஒளியை நோக்கி அம்புபோல் நடந்து சென்ற நன்னனும் மற்றவரும் பந்தத்தின் துவக்கத்தில் இருந்த மாளிகையை அடைந்தபோது 'கம்'மென்ற சந்தன மணம் அவர்களை வரவேற்றது. தீபம் இல்லாது போனால் கூடத் தன் இருப்பிடத்தை மணத்தால் புலப்படுத்துவதாய் இருந்த அந்த மாளிகையின் வெளிப்புறத்தில் ஒரு தீபமும் இல்லை. அங்குபோய் முன் கதவை நான்கு முறை நன்னன் தட்டிய பின் இரண்டு பேர் இரண்டு பந்தங்களுடன் வந்து கதவைத் திறந்தார்கள். திறந்தவர்களை அடையாளம் கண்டுகொண்ட நன்னன் அவர்களிடம் குசுகுசுவென ஏதோ கேட்டதும் அவ்வனை உடனடியாக உள்ளே செல்லவிட்டார்கள்.



வெளியே வெளிச்சமின்றி இருள் மலைபோல் கிடந்த அம்மாளிகையின் உள்ளே கணக்கற்ற தீபங்கள் ஜொலித்தன. பலவிதமான விளக்குகள் கண்ணைப் பறிக்கும் அழகில் தொங்கின. அவற்றின் ஒளியோடு பட்டை பட்டையான நிழல்கள் சுவற்றில் படிந்து ஓவியக் களையினை உண்டாக்கியிருந்தது. மாளிகையின் கூடம் பெரியதாய் இருந்தது மட்டுமின்றி கலைக்கூடம் போல் தோன்றக்கூடிய சிற்ப அழகைப் பெற்றிருந்தது. உள்ளே வீரர்கள் பலர் வேல்களைத் தாங்கியவர்களாய் காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். அவர்களது காவலுக்குத் துணை புரிவது போல் சந்தன மணம் கூடமெல்லாம் வீசிக் கிறங்க வைத்துக் கொண்டிருந்தது. கூடத்தின் கிழக்கு திக்கில் கதிரவனின் தேரைப் போலிருந்த நீலமணிச் சிம்மாசனம் ஒன்றிருந்தது. அதில் அமர்ந்திருந்த மனிதன் பழையனைக் கண்டதும் முகமலர்ந்தான். ''வருக வீரனே வருக'' என்று அழைக்கவும் செய்தான். சொற்கள் வரவேற்புச் சொற்களாய் இருந்தனவென்றாலும் அழைத்த தோரணையில் விஷமம் சொட்டியது. விஷமம் சொல்லில் மட்டுமின்றி கண்களிலும் தெரிந்தது. அவன் அமர்ந்திருந்த தோரணையே அப்படித்தான் இருந்தது.

இவை அனைத்தையும் குரலைக் கேட்டுத் தலையை உயர்த்திய கணத்தில் கண்ட பழையன் மிகவும் ஆபத்தான மனிதனுக்கு முன்னால் நிற்பதை உணர்ந்தான்.

கொங்கு நாட்டை ஆண்ட சேர மன்னர்களில் கடைசியாக ஆண்டவனும், பதிற்றுப்பத்தின் கடைசி பத்தின் நாயகனாய் அமைந்தவனும், அதியமான் நெடுமான் அஞ்சியை வென்று தகடூர் எறிந்த

மாந்தரஞ்சேரல் இரும்பொறை செய்த வேள்வியின் பயனாக அவனது தவப்புதல்வனாய் பிறந்தவனும், *யானையைப் போன்ற சிறிய கண்களும், யானையைப் போன்ற பார்வை நோக்கும் கொண்ட காரணத்தால் யானைக் கண்சேய் என்று அழைக்கப்பட்டவனுமான கொங்கு நாட்டு அதிபதி மாந்தரன் சேரல் இரும்பொறை நீலமணி சிம்மாசனத்தில் அமர்ந்து தன் சிறிய கண்களால் விஷமத்தைக் காட்டி வரவேற்ற போது தன்னிலையினை உணர்ந்து கொண்ட பழையன் ''வீரர்களை வரவேற்கும் முறை இதுதானா?'' - என்று கேட்டான் மன்னனிடம்.

அவனது தோரணை - வீரர்கள் நிறைந்துள்ள இடமாயிருந்த போதிலும் கவலைப் படாத அலட்சியம் - தன்னிலை எத்தனை சிக்கலானது என்பதை உணர்ந்தும் அது குறித்துத் தளராத அச்சமின்மை, வேற்று நாட்டு மன்னனிடம் தடுமாறாமல் பேச முற்படும் இயல்பு-ஆகிய இவை அனைத்தும் சேர மன்னனை அசர வைத்தன. ''இவனைப் பற்றிப் பேசப்படும் பிரதாபங்கள் அனைத்தும் பொய்யல்ல.'' என்று எண்ணிக் கொண்டதோடு, ''நல்ல வேளையாக இத்திட்டத்தைத் தீட்டினேன். இல்லையென்றால் சிரமம்தான்'' என்று சொல்லிக் கொண்டு பின் பழையனுக்கு பதில் கூற முற்பட்டு, ''எதைச் சொல்கிறாய் பழையா?'' என்று வினவினான்.

''ஏமாற்றிக் கடத்தி வருவதும் பெண்களையும் வயோதிகர்களையும் கருவிகளாகப் பயன்படுத்தி

* கொங்கு நாட்டு வரலாறு - மயிலை. சீனி. வேங்கடசாமி. பக்கம் 116



வருவதும்தான் சேரர்கள் , வீரர்களை அழைக்கும் முறையா?'' என்று கேட்டான் பழையன்.

''பழையா, நீ சொன்னதிலிருந்தே உன்னைப் பற்றிய எங்கள் மதிப்பீடு என்ன என்பது புரியவில்லையா? வேறு எந்த் முறையிலாவது உன்னை இங்கே கொண்டு வந்திருக்க முடியுமா?'' என்றான் சேரன்.

''மன்னவா, உங்களது தாயாதிகளின் பண்பை சற்று எண்ணிப் பாருங்கள்.''

''அவசரப்படாதே. நீ பெரு வீரன் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு கிடையாது. ஆனாலும் நீ இங்கு எதற்காக கொண்டு வரப்பட்டாய் என்பதை அறிந்து கொள். அப்போது புரியும் - ஏன் நாங்கள் அந்த வழிகளை மேற்கொண்டோம் என்று''

''சொல்லுங்கள்-''

''பழையா, உனக்கு வீரமகுடம் சூட்டவோ-வெற்றி விழா எடுக்கவோ-பெரிய பதவியை அளிக்கவோ யாரும் இங்கு முயலவில்லை. இங்கே கொண்டு வரப்பட்டது நீ சிறைபடுவதற்கு. மதுரையில் இருக்கும் உன்னைச் சிறையெடுக்க வேண்டுமென்றால் போரிட முடியுமா? அப்படியே போரிட்டாலும் சேதமில்லாமல் முடியுமா? அப்படியே முடிந்தாலும் கருவூர் வரை உன்னைக் கொண்டு வருவதுதான் சாத்தியமா? ஆகவேதான் சில கருவிகளைப் பயன்படுத்த வேண்டியதாயிற்று. அப்படி கருவிகளைத் தேர்ந்தெடுப்பதில் கூட மிகவும் கவனம் செலுத்தினோம். மதுரையைவிட்டு உன்னை வரவழைக்க வேண்டுமானால் அது இருவரால்தான் முடியும். ஒன்று மன்னன், மற்றொன்று மங்கை. உன் மன்னனின் ஆணை

உன்னை வெளியே வரவழைக்கும். ஆனால் அந்த வழி எங்களுக்கு ஏற்ற வழியல்ல. அச்சிக்கல் வழியை விட்டு விட்டு மங்கை வழியை மேற்கொண்டோம். எத்தனை பெரிய வீரனாய் இருந்தாலும் இந்தக் காதல் சேற்றில் சிக்கித்தானே தவிக்கிறார்கள்? எவ்வளவு பெரிய முரடனாய் இருந்தாலும் அவன் மலராவது காதல் மணத்தால்தானே? ஆகவேதான் ஆராய்ந்தோம். அறிந்தோம். உன் காதலி மேகலையைக் கருவியாக்க முனைந்தோம். பொதினிக்கு போய் அவளையும், அவள் தந்தையையும், அவள் தோழியையும் பிடித்தோம். அவர்களை எப்படியெப்படி பயன்படுத்தினோம் என்பதை நீயே பார்த்திருப்பாய். இப்போது சொல், நீ பெருவீரனாக இருந்தாலும் அதை நாங்கள் உணர்ந்து மதித்தாலும் இந்த வழியை உபயோகித்து வரவேற்றிருக்கிறோம்.''-

சேரன் பேச்சில் வல்லவன் என்பதை அறிந்திருந்தான் பழையன். அது தற்போது உறுதிபட்டது. தவறான காரியத்தை நற்செயல் போல் சாமர்த்தியமாகப் பேசி முடித்த அவனது சாதுரியத்தைக் கண்டு ரசித்த அவன், ''நான் சிறைபடுத்தப்பட்டதற்குக் காரணம்?'' - என்று வினவினான்.

''சொல்கிறேன் பழையா சொல்கிறேன். நீ போய் நீராடிவிட்டு உணவருந்தியபின் வா. விவரமாகச் சொல்கிறேன். எதையும் மறைக்க நான் விரும்பவில்லை.'' என்று கூறிய சேரமன்னன் தன் பார்வையை கூடத்தின் ஒரு மூலையில் செலுத்தினான், அதையடுத்து இரண்டு பெண்கள் வந்து பழையனை அழைத்துச் சென்றார்கள்.



அவன் மீண்டும் வருவதற்கு கணிசமான நேரமிருக்கவே எதையோ யோசித்த சேரமன்னன் நன்னனை அழைத்தான். அவனிடம் பழையனைக் கொண்டு வந்தது பற்றிய விவரங்களைக் கேட்டுவிட்டு பிறகு தன் சந்தேகங்களையும் கேட்டான்.

''தானிருந்த வண்டி பொதினிக்குப் போகாமல் வழிமாறிச் செல்கிறது என்பதை அறிந்தபின் பழையன் என்ன செய்தான்? வர மறுத்தானா?'' என்று வினவினான் மன்னன்.

''மறுத்தது மட்டுமல்ல மன்னவா. குறுவாளை வண்டிக்காரனின் இடையில் அழுத்தி பயமுறுத்தவும் செய்தான். ஆனால் பாவம் - வண்டிக்காரன் யாரென்பதை அறிந்து கொண்டபின் அடங்கி ஒடுங்கியதோடு மட்டுமின்றி குறுவாளையும் என்னிடம் கொடுத்து விட்டான்''-

''இது எதைக் காட்டுகிறது?''-

''நமது சாமர்த்தியத்தைக் கண்டு அஞ்சி விட்டதைத் தான் காட்டுகிறது''

''உனக்கு மூளையில்லை என்பதைக் காட்ட வில்லையா?''

''மன்னவா...தாங்கள் சொல்வது?''

''புரியவில்லையா? இது புரிந்து விட்டால் நீ இந்நேரம் அமைச்சனாகியிருப்பாயே'' என்று பரம இகழ்ச்சியுடன் சொன்ன சேர மன்னன், ''பழையனை இத்தனை அற்பமாய் எடை போடுவாய் என்று தெரிந்திருந்தால் உன்னை அனுப்பியே இருக்க

மாட்டேன். உன்னை அனுப்பியதற்குக் காரணம் மற்றவர்களை விட நீ மதுரை விவகாரத்தை விவரமாக அறிந்தவன் என்பதால்தான். நீயோ ஆடு மாடுகளுக்கு என்ன அறிவுண்டோ அதுதான் உனக்கும் உண்டு என்று ஒப்புக் கொள்வது போல் நடந்து கொண்டிருக்கிறாய்'' என்று மேலும் இகழ்ந்தான்.

நன்னன் இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. பிறர் இமயம் எனக் கருதிய படைத்தலைவனை கடத்தி வந்திருந்த தன் சாமர்த்தியத்திற்கு பரிசென்று ஒன்று கிடைக்காவிட்டாலும பாராட்டொன்று நிச்சயம் கிட்டுமென கட்டாயமாய் எதிர்பார்த்தான். முடிவிலோ முதலுக்கே மோசம் என்ற கதையாய் மன்னனிடமிருந்து மூர்க்கத்தனமான இகழ்ச்சி அம்புகள் வந்து தைக்கவே தத்தளித்தான் சங்கடத்தால்.

மன்னன் அவன் தத்தளிப்பு பற்றி கவலைப்பட வில்லை. பழையனைப் பற்றி மேலும் பேச முற்பட்டு, ''வண்டிக்காரனை யாரென அறிந்தபின் பழையன் அமைதியடைந்து குறுவாளைக் கொடுத்து விட்டு உறக்கத்தை மேற்கொண்டதற்குக் காரணம் உன் மீதோ நம் மீதோ உள்ள அச்சத்தால் அல்ல. அனைத்தையும் அறிந்துகொள்ளவும் நிதானமாகச் செயல்படவும் தீர்மானித்ததுதான். அவன் நினைத்திருந்தால் உன்னிடம் கொடுத்த குறுவாளைக் கொண்டு உன்னையே மடக்கியிருக்கலாம். தப்பி யிருக்கலாம். அவ்வாறு செய்யவில்லை. இது எதைக் காட்டுகிறது? அவனே விரும்பி இங்கு வந்ததைத்தான் காட்டுகிறது. புரிகிறதா? போய்த்தொலை. இங்கு நிற்காதே'' என்று எரிந்து விழுந்தான்.



நன்னனுக்கு விட்டால் போதும் என்றாகிவிட்டது. பாராட்டுக் கிடைக்காமல் மன்னனின் கோபத்திற்கு ஆளாகிவிட்ட நிலையில் பேதலித்துப் போன அவன் டைரியஸ் விவகாரத்தைக் கூறாமலேயே இருந்து விட்டான்.

நன்னன் சென்றபின் சேரமன்னன் வேறு சில ஆலோசனைகளையும் செய்ய வேண்டியிருந்தது. அவற்றைச் செய்து முடிப்பதற்கும் பழையன் வருவதற்கும் சரியாக இருந்தது. அந்த மாளிகைக்கு வருவதற்கு முன்பே பழையன் கவலையற்றவனாகவும் அச்சமற்றவனாகவும்தான் இருந்தான். ஆனால் நீண்ட பயணத்தின் காரணமாக உடலில் அசதி இருந்தது. தற்போது நீராடியதாலும் உணவு உட்கொண்டதாலும் அந்த அசதி மறைந்து தெம்படைந்திருந்ததால் ஏதோ ஆலோசனை அவைக்கு வருவது போன்ற தோரணையுடன் வந்தான் அவன்.

சில நிமிடங்களிலேயே தான் பேச வேண்டிய வற்றைப் பேசிவிட விரும்பிய யானைக்கண் சேய் ''பழையா, வேறு வழி இல்லாமல்தான் உன்னைச் சிறை வைக்கிறேன் நான். இங்கு உனக்கு ஒரு குறைவும் வராது. உண்மையில் இதைச் சிறை என்று சொல்வதுகூட சரியல்ல. ஒதுக்கி வைத்தல் என்பதே சரி'' - என்றதும்-

''எதிலிருந்து என்னை ஒதுக்க விரும்புகிறீர்கள்?'' - என்று கேட்டான் பாண்டியர் படைத் தலைவன்.

இதைக் கேட்டதும் சற்றே அசைந்த சேரன் ''பழையா, உறையூர் சோழனும் என் நண்பனுமான பெருநற் கிள்ளியை உனக்குத் தெரியுமல்லவா?'' என்று கேட்டான்.

''தெரியும்'' - என்றான் பழையன் கூர்ந்து கவனித்த வண்ணம்.

''அவன் அரச மரபிற்குரிய காரியத்தைச் செய்யப் போகிறான். அதாவது அவன் ராசசூயம் நடத்தப் போகிறான். அவ்வேள்வியை அவன் நடத்தும்போது பகையற்றவனாய் இருக்கவும் பேரரசனாய் இருக்கவும் விரும்புகிறான். என் போன்ற மன்னர்களுக்கு அது இயல்புதான். அவனது ராஜ வேட்கைக்குத் தற்போது இடையூறாக இருப்பது பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன்தான்''

''இடையூறு என்றால்?''

''அதாவது சோழன் பெருநற்கிள்ளி பேரரசனாக ஆக வேண்டுமென்றால் அவனது தலைமையை அனைவரும் ஒப்புக் கொள்ள வேண்டும். அல்லது தோற்கடிக்கப்பட வேண்டும். ஆனால் நெடுஞ்செழியன் சோழனின் தலைமையை ஒப்புக்கொள்ள மாட்டான். பகைவனாகவே இருக்க விரும்புகிறான். இந்நிலை ஓர் இடையூறுதானே? இதை அகற்றிவிட நாங்கள் முடிவு செய்திருக்கிறோம்''

''சோழனின் தலைமையைத் தாங்கள் ஏற்றுக்கொண்டு விட்டீர்களா?''

''பழையா, உன் கேள்வியின் நோக்கம் எனக்குப் புரிகிறது. கொங்கு நாட்டு மன்ன்ன் சோழனின் தலைமையை ஏற்றுக்கொண்டு ஏவல் புரிவது கௌரவக் குறைவு என்கிறாய். இல்லையா? அப்படியல்ல. சோழன் என் நண்பன். அவன் தன் தலைமையை ஏற்றுக்



கொள்ளும்படி தன் நட்பையே தூதனுப்பியிருக்கிறானே யன்றி பகைமையை அனுப்பவில்லை. அச்சுறுத்தலை விட்டு அன்பை வைத்து வேண்டுகோள் விட்டிருக்கிறான். அது மட்டுமல்ல காரணம். உன் மனதைச் சற்று பரந்த மனமாக மாற்றிக்கொண்டு பார். சோழனாய் இருந்தால் என்ன சேரனாய் இருந்தால் என்ன? இருவருமே தமிழர்களைத்தானே ஆள்கிறோம்? இத்தமிழ் தரணியை மூலைக்கு மூலையாக முப்பது பேர் ஆள்வதைவிட ஒரே மனிதன் ஆள்வது ஒற்றுமையின் உயர்வைத்தானே குறிக்கும்? பலருக்குப் பதில் ஒருவன் ஆண்டால் உள்சச்சரவுகள் அழியும் இல்லையா? தமிழரைத் தமிழரே அழித்துக் கொள்ளும் அவலம் நிற்குமில்லையா? இதற்கெல்லாம் துணை நிற்க விரும்பியே சோழனின் முயற்சியை ஆதரிக்கிறேன்''-

''மன்னவா, தமிழகத்தை ஒரே மன்னர் ஆள்வதென்பது உயர்ந்த காரியம்தான். ஆனால் அந்த ஒரே மன்னராக இருக்கும் உரிமையைச் சோழ மன்னர் பெருநற்கிள்ளி ஏற்க விரும்புவது என்ன நியாயமாகும்? அதுவும் இச்சோழர் கரிகால் வளவரைப் போன்று தெற்கே காவிரி முதல் வடக்கே காஞ்சி வரை பெரும் சோழ மண்டலத்தை வைத்து ஆண்டு கொண்டிருக்கவில்லை. கரிகாலருக்குப் பின் சோழ மண்டலம் பல துண்டுகளான பின் அத்துண்டுகளில் ஒன்றான உறையூருக்கு மட்டுமே மன்னர் இப்பெருநற்கிள்ளி. இவரைத் தவிர்த்து புகாரில் கிள்ளிவளவர் சோழ மன்னராக ஆட்சி புரிகிறார். இப்படிச் சிறுசிறு ஊர்களுக்கு மட்டுமே மன்னராய் இருந்துகொண்டு தற்போது தமிழகம் முழுவதற்கும் பேரரசராய் விளங்க விரும்புவது நியாயம்தானா? இந்த

ஆசை நீங்கள் சொன்ன மாதிரி உயர்ந்த நோக்கத்திற்காக உண்டானதுதானா? சோழரின் இந்த ஆசை நியாயமானது தான் என்றால் பரந்த பாண்டிய மண்டலத்தை ஆளும் எங்கள் மாமன்னர் இதேபோல் ஆசைப்பட்டால் அதுமட்டும் தவறாகிவிடுமோ?''-

''பழையா, நீ சொல்வது உண்மைதான். ஆனால் ஒன்றை நினைத்துக்கொள். ஒரே மாதிரியான நியாயமான ஆசை பலருக்கு உண்டாகலாம்தான். அப்படி உண்டாகிக் கொண்டே போனால் முடிவிருக்காது. ஆசையும் நிறைவேறாது. தீர்வில்லாமல் வளரக் கூடிய ஆசைகளை ஒரு கட்டத்தில் யாராவது ஒருவர் நிறைவேற்றினால்தான் உண்டு. இங்கே இந்த ஆசையை - நல்ல நோக்கத்தை - உயர்ந்த தீர்மானத்தைத் துவக்கியவர் பெருநற்கிள்ளி. அந்த வகையில் அதை ஆதரிப்பது பொருத்தமானது தான்''-

''கொங்கு சேரரின் நிலையைச் சொன்னீர்கள். தங்கள் தாயாதி சேரர்களின் நிலை? வஞ்சியின் சேரமன்னருக்கும் இது சம்மதம்தானா?''-

''சேரன் கோதைமார்பனுக்கு செய்தியனுப்பப் பட்டுள்ளது. வேத வித்தகனான பராசரன் தூது போயிருக்கிறான். அது நிச்சயம் பலிக்கும். இல்லாது போனால் பாண்டியனை முறியடித்தபின் சோழரின் வெற்றிப் படை சேர நாட்டைத் தாக்கும்''-

''எங்கள் மாமன்னருக்கும் இப்படி தூது அனுப்பி யிருக்கிறீர்களா?''-

''இல்லை''...



''காரணம்?''

''அவன் ஒப்புக்கொள்ள மாட்டான்''

''அது நியாயம் தானே?''...

''எது நியாயம்? நல்ல நோக்கத்தை ஒப்புக் கொள்ளாமல் போவதா? அது கிடக்கட்டும் பழையா. பாண்டியன் சிறுவன். பட்டமேறி பத்துத் திங்கள் கூட ஆகவில்லை. அவனிடம் சேர சோழர்கள் தூதனுப்புவதும் தயவை எதிர்பார்ப்பதும் கௌரவமான காரியங்களாகா''.

இதைக் கேட்டு கோபப்படுவதற்கு முன் நமுட்டுச் சிரிப்பையே வெளியிட்டான் பழையன். அதோடு ''அறிவு வயதைப் பொறுத்ததல்ல மன்னவா'' என்று கூறவும் செய்தான்.

''அதனால்?''-

''பருவத்தை வைத்தோ பதவியில் இருந்த காலத்தை வைத்தோ யாரையும் எடைபோட வேண்டாம். நீங்கள் குறைகளாகக் கருதும் விஷயங்களை அறிவினால் நிரப்ப முடியும். அதைக் கொண்டு வெல்லவும் பாண்டிய மன்னரால் முடியும்''-

''அறிவை வைத்துக் கொண்டு ஊருக்கு உபதேசம் செய்யலாம் பழையா. பிற விவகாரங்களில் பேருக்குத் தான் நிற்கவேண்டும்''-

''சேரமன்னா, பாண்டியர் நெடுஞ்செழியர் மாமன்னராய் முடிசூடி பத்துத் திங்கள் கூட ஆகாமல் இருக்கலாம். ஆனால் பல வருடங்கள் கொற்கையில் இளவரசராய் இருந்திருக்கிறார் என்பதை மறந்துவிட

வேண்டாம். அதே போல் அவர் இளவலாய் இருந்த பருவத்திலேயே வீரசாகசங்களைப் புரிந்திருக்கிறார். கொங்கு சேரர்கள் வேண்டுமானால் இவற்றையெல்லாம் மறக்கவோ, மறைக்கவோ முயலலாம். ஆனால் சரித்திரத்தால் அவ்வாறு முடியாது. உமக்குச் சந்தேகமானால் கொற்கைக்கு வாரும். அங்கு வீசும் காற்று அவர் வீரப்புகழ் பாடும். அங்கு மலரும் பூக்கள் அவர் சாகசச்செயல்களைப் பேசும். கொற்கைக்கடல் அலைகள் ஆடுவதும் இரைவதும்கூட அவர் பேர் பாடும் பேரார்வத்தால்தான்'' - என்றான் பழையன் கணீரென.

''அதற்கெல்லாம் எங்களுக்கு இப்போது நேரமில்லை பழையா. போர் முடிந்த பின் சாவகாசமாக கொற்கைக்கு வந்து அலை ஆடுவதையும், மலர் பேசுவதையும், தென்றல் பாடுவதையும் காண்கிறேன்''- என்று நமட்டுக் குரலில் சொன்ன சேர மன்னன், ''சரி விஷயத்திற்கு வருவோம். பாண்டியனோடு போர் செய்ய வேண்டிய நிலை எங்களுக்கு. அதற்காகத்தான் உன்னைச் சிறைப் படுத்துகிறோம்'' என்றான்.

''என்னைச் சிறைப்படுத்தி விட்டால் என்னாகி விடும்?''

''பழையா, நீ எப்படிப்பட்ட படைத் தலைவன் என்பது எங்களுக்குத் தெரியும். நீ இருக்கும்வரை பாண்டியனை வெல்வது இயலாத காரியம் என்றும் தெரியும். போர்த்தந்திரங்களை சந்தேகமறத் தெரிந்து செயலாற்றும் உன்னைப் போர் அரங்கிலிருந்து அகற்றி விடுவதே எங்கள் திட்டம்''-



''இங்கும் தவறு செய்கிறீர்கள். பாண்டிய மாமன்னரைத் தவறாக எடை போடுகிறீர்கள்''-

''தவறாக அல்ல, சரியாகத்தான் எடை போட்டிருக்கிறோம். உன் மன்னன் தனிப்பட்ட முறையில் வீரம் காட்டியிருக்கலாம். படைகளுக்குத் தலைமை வகிப்பதும் அதை நடத்திச் சென்று போர் புரிவதும் தனி விஷயம். அது எளிதல்ல. அதோடு அவன் போர்த் தந்திரங்களுக்குப் புதியவன்''-

''மன்னவா, தொடக்கத்திலிருந்தே தங்கள் எண்ணங்களும் அனுமானங்களும், செயல்களும் தவறாகவே இருக்கின்றன''.

''உன் மதிப்பீடுதான் தவறு என்பதை நீயே போகப் போக புரிந்து கொள்வாய் பழையா. போர் முடியும் வரை நீ இங்கே சிறையிருக்க வேண்டும். அதுதான் என் ஆசை. மற்றதை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். இது சிறை என்பது பெயருக்குத்தான். உண்மையில் உனக்கு இங்கே எல்லா வசதிகளும் உண்டு. சிறையின் வாசம் கூட உனக்கு வராத விதத்தில் இதைச் சந்தனக் கோட்டையாகவே அமைத்திருக்கிறேன். கொஞ்ச காலத்திற்கு இங்கே நிம்மதியாக இரு. உடல் நலம் சரியில்லை என்றால் ஓய்வெடுத்துக் கொள்வதில்லையா? அப்படி இரு. தப்ப மட்டும் எண்ண வேண்டாம். தப்ப முயன்றால் அது எப்படித் தோற்றுப்போகும் என்பதைத் காவலர்கள் உனக்குப் பிறகு சொல்வார்கள். நான் வருகிறேன்'' என்று கூறி புறப்பட்ட சேரன் யானைக் கண்சேய் இரும்பொறை போகும்போது பழையனை நெருங்கி அவன் காதில், ''கவலைப்படாதே, உனக்கேற்ற பரிசை அனுப்பி

வைக்கிறேன்'' என்று விஷமமாகச் சொல்லிவிட்டு அகன்றான்.

அவன் சென்ற சில நிமிடங்களிலேயே சந்தனக் கோட்டை மயானம் போலாயிற்று. வெளிக்கதவுகள் தடால் தடாலென சாத்தப்படும் அரவங்கள் பெரிதாய் எழுந்தன. அதையடுத்துப் புரவிகள் பல ஓடும் சத்தமும் கேட்டது. இப்படிச் சூனியமாய் மாறிவிட்ட அம்மாளிகையில் அவனுக்கு விரிக்கப்பட்டிருந்த பஞ்சணையில் படுத்தான் பழையன். என்ன காரணத்தாலோ அவனுக்குத் உறக்கம் வரவில்லை. பஞ்சணையை விட்டு எழுந்தான். மாளிகையின் பின்புறக் கட்டிற்கு வந்தான். அப்போது அவனது உடலையே உலுக்கும் விதத்தில் ''ஹா! ஐயோ!''... என்ற ஓலமொன்று பயங்கரமாய் எழுந்து சந்தனக் கோட்டையில் எதிரொலித்தது.

முரசு நான்கு

# சந்தனக் கோட்டை

இக்கதையை மேலே தொடர்வதற்கு முன் வரலாற்றுப் பின்னணிகள் சிலவற்றை அறிந்து கொள்வது நல்லது.

சிலப்பதிகாரம் கூறும் கண்ணகி தன் கணவனை இழந்தபின், அதற்குப் பொறுப்பேற்ற பாண்டிய மன்னன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பதவியையும் உயிரையும் ஒருங்கே இழந்தபின் அவனது மகன் வெற்றிவேல் செழியன் பட்டமேற்றான். ஆனால் கொஞ்ச காலத்திலேயே அவன் மாண்டுவிட்ட காரணத்தால் அவனுடன் இளவரசனாய் இருந்தவனும் இக்கதையின் நாயகனும் சரித்திரத்தில் பெரும் புகழ் பெற்றவனுமான தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாண்டிய நாட்டின் மன்னனானான். அவன் இளவரசனாய் இருந்த காலத்திலேயே அவனுக்கு நண்பனாயும், அரசியல் விவகாரங்களில் ஆலோசகனாகவும் இருந்தவன் தான் பழையன். தற்கால கள்ளக்குறிச்சியையடுத்த மலையடிவாரத்தில் இருந்த மோகூர் என்னும் ஊரில் பிறந்த காரணத்தால் மோகூர் பழையன் என்றிவன் அக் காலத்தே அழைக்கப்பட்டான். இவன் யார் என்பதில் வரலாற்று அறிஞர்களிடம் கருத்து வேறுபாடு உண்டு. தமிழகம் பற்றிய வரலாற்றை எழுதத் தொடங்கியவர்

  

களில் முதன்மையான திருவாளர். வி. கனகசபை பிள்ளையவர்கள் தனது '1800 ஆண்டுகளுக்கு முற்பட்டத் தமிழகம்' என்ற நூலில் இவனைப் பற்றிக் கூறும்போது தென்னிந்தியாவின் மீது படையெடுத்து வென்ற மங்கோலிய மரபினரில் மிகப் பழமையானவர் மாறர் என்றழைக்கப்பட்டதாகவும் அம்மரபின் தலைவன் பழமையானவர்களின் தலைவன் என்ற முறையில் பழையன் என்று அழைக்கப்பட்டான் (பக் 89) என்றும் கூறுகிறார். பழையனைப் பற்றி சங்க நூல்கள் கூறுகின்றன. ஆனால் அதற்கு உரை எழுதியவர்களில் எவரும் பழையன் மங்கோலிய மரபினன் என்று எங்கும் குறிப்பிடவில்லை. அதே சமயம் இன்னாரென்ன அறுதியிட்டும் சொல்லவில்லை. ஒரு விதத்தில் பழையனைப் பற்றிய உண்மை இன்னும் ஆராய்ச்சி யிலேயே இருப்பதாகக் கொள்ள வேண்டும். இக்கதையைப் பொறுத்தவரை கள்ளக்குறிச்சி மலையடிவார மோகூருக்கு உரியவன்* என்ற குறிப்பையே வைத்துக்கொள்ளலாம்.

இப்படி வரலாற்று ஆசிரியர்களுக்குப் பிடி கொடுக்காத பழையன் கதை நடந்த காலத்தில்கூட பகைவர்களுக்குப் பிடி கொடுக்காதவனாய்தான் இருந்தான். அவனது விவேகம் கலந்த துணிச்சலையும் வீரசாகசங்களையும் கண்டவர்கள் அவனைப் 'பிறவி வீரன்' என்றார்கள். 'சாகசங்களை புரியவே பிறந்தவன் என்று பேசிக் கொண்டார்கள். ஓரிரு முறை இளவல் நெடுஞ்செழியனுடனேயே போட்டிகளில் வென்றிருந்

* சங்க கால அரசர் வரிசை-6 பலவர். கா-கோவிந்தன். பக்கம் 50



தானாதலால் அவனையும் நெடுஞ்செழியனைப் போலவே மக்கள் மதித்தார்கள். அன்றியும் அவனது நாட்டுப்பற்று முதன்மையானதாய் இருந்தது. நாட்டுக்கு உண்டாகக்கூடிய ஆபத்துகளைப் பல முறை தன் தனித்திறமையால் அவன் வேரறுத்திருந்ததால் மக்கள் அவனை நாட்டின் நம்பிக்கை நட்சத்திரமாய் கருதினார்கள். ஒருமுறை கொற்கையில் நடக்கவிருந்த கொள்ளையை மிகவும் திறம்பட தடுத்து அதற்குக் காரணமானவர்களைக் கையும் களவுமாய் பிடித்து நிறுத்தியிருந்தான் அவன். அதிலிருந்து அவன் புகழ் சேர சோழ நாடுகளிலும் பரவியது. அவனிடம் மாற்றரசர்கள் அச்சம் காட்டினார்கள். போர் தொடுக்க முற்பட்டவர்கள் தயக்கம் காட்டினார்கள். இந்த நிலையில்தான் திட்டமொன்றைத் தீட்டி அவனைச் சிறை செய்தான் யானைக்கண்சேய் மாந்தரன் சேரல் இரும்பொறை.

பாண்டியர் நிலை இது. இனி சேரர் நிலையையும் பார்ப்போம்.

தொடக்கத்திலேயே சேரர் ஆட்சி மூத்த தலைமுறை என்றும் இளைய தலைமுறை என்றும் இரண்டு பிரிவுகளாய் ஆரம்பித்து இரு மரபுகளாய் வளர்ந்தன. மகாபாரதப் போரில் பாண்டவர் படைகளுக்கு சோறிட்டு ஆதரித்த காரணத்தினால் பெருஞ்சோற்றுதியன் என்று விழங்கப்பட்ட மன்னன் சேரர் மரபை ஸ்தாபித்தான். அவனுக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். மூத்தவன் சேரர் சரித்திரத்தில் இமயவரம்பன் என்று பிரசித்தி பெற்ற சேரலாதன் ஆவான். இளையவன் பெயர் பல்யானை செல்கெழுகுட்டுவன். மூத்தவனான சேரலாதன் இன்று கேரளம் என்று அழைக்கப்படும் மலை நாட்டை உரிய

தாக்கிக் கொண்டு திருவஞ்சிககளம் என்று தற்போது வழங்கப்படும் வஞ்சி மாநகரைத் தலைநகராக்கி சேர சாம்ராஜ்யாதிபதியானான். அவனது மரபு மூத்த தலைமுறை செங்குட்டுவன், இளங்கோவடிகள் போன்ற புகழ் பெற்றவர்கள் பின்னால் தோன்றினார்கள்.

சேரலாதனின் தம்பியான பல்யானை செல்கெழு குட்டுவன் தன் சகோதரனுடன் இணையாமல் தனி சாம்ராஜ்யம் சமைக்க விரும்பி சேர நாட்டிலிருந்து மலைப்பகுதிகளில் அலைந்து இன்றைக்குப் பாலக்காடு என்று அழைக்கப்படும் பாலைக் காட்டு கணவாய் வழியாக ஊடுருவி யானைமலை என்னும் உம்பற் காட்டைத் தன் வசப்படுத்தினான். இப்படி இளைய தலைமுறை மரபில் தனி அரசிற்கு அவன் வித்திட்ட பின் அவனது தாயாதி தம்பியான அந்துவன் சேரல் இரும்பொறை உம்பற் காட்டையடுத்த ஊர்களை வென்று முடிவில் ஆன்பொருனை நதிக்கரையில் அமைந்திருந்த கருவூரையும் கைப்பற்றி அதைத் தலை நகராக்கி கொங்கு ராஜ்யத்தை ஸ்தாபித்தான். அக்கருவூரில் வேண்மாடம் என்னும் அரண்மனையையும் கட்டி ஊரைப் பெருக்கினான். அவனது ராஜ்யம் தலைமுறை தலைமுறையாக வளர்ந்தது. அவனுக்குப் பின் அவன் மகன் செல்வக் கடுங்கோ வாழி ஆதன் ஆட்சி புரிந்தான். அவனுக்குப் பின் அவனது புதல்வர்கள் தகடுரெறிந்த மாந்தரஞ் சேரல் இரும்பொறையும் குட்டுவன் இரும்பொறையும் ஆண்டார்கள். அவர்களுக்குப் பின் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் மகனான யானைக் கண்சேய் கொங்குநாட்டு மன்னனானான். மன்னனான பின் தன் தந்தையைப் போல் புதிய



நிலப்பகுதிகளைக் கவராமல் தனக்கிருந்த ஆட்சிப் பகுதியைத் தக்க வைப்பதில் கவனம் செலுத்தினான். இதற்கிடையில் சோழ மன்னனின் நட்பைப் பெற்று அவன் திட்டத்தை ஆதரித்து அவன் தலைமையை ஏற்று பாண்டிய மன்னனுடன் போர் தொடுக்கத் தீர்மானித்து அதற்கு முதல் சாதகமாய் பாண்டியர் படைத்தலைவனான பழையனை சிறைப்படுத்தி கருவூரையடுத்த மலைக் காட்டில் சந்தனக் கோட்டையில் அடைத்தான்.

இது கொங்கு சேரரின் நிலை. இனி சோழரின் நிலையைப் பார்ப்போம்.

ஓரளவிற்குக் கணிசமான ஆதாரங்களுடன் நிரூபிக்கத் தகுந்த சோழர் வரலாறு திருமாவளவன் என்னும் கரிகாலனுடன்தான் தொடங்குகிறது. சங்க இலக்கியங்கள் இம்மன்னனைப் பற்றி நிரம்ப உரைக்கின்றன. அவனுடன் வாழ்ந்த சமகாலத்துப் புலவர்கள் அவனைப் பற்றிய வரலாற்றைப் பாடியுள்ளார்கள். அவனுக்குப் பின்னால் வந்த மன்னர்களும் புலவர்களும்கூட கல்வெட்டுகளிலும் பாக்களிலும் கரிகாலனைக் குறிப்பிட்டுள்ளனர். அவனுக்கு முன்னால் மனுநீதி சக்கரவர்த்தி மற்றும் சிபிச் சக்கரவர்த்தி போன்றவர்களின் பெயர்கள் சோழர் மரபில் சொல்லப்பட்டாலும் அவர்களைப் பற்றிய விவரங்கள் உறுதியான ஆதாரமின்றி பழங்காலப் புராணக் கதைகள் போலவே இருக்கின்றன.

இப்படி வரலாறு ஒப்புக் கொள்ளும் தொடக்கமாய் அல்லது ஒப்புக் கொள்ளும் வரலாற்றின் தொடக்கமாய் உள்ள சோழ மரபின் பெருமன்னனான கரிகாலன் பெரும் நிலப்பரப்பை ஆண்டான். அவன் இமயமலை வரை

சென்று வென்றதற்குக்கூட ஆதாரங்கள் உள்ளன.* ஆனால் அவனுக்குப் பின்னால் வந்த மன்னர்கள் கரிகாலனைப் போல் பெருமன்னர்களாய்த் திகழவில்லை. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய விஜயாலயன்தான் கரிகாலனைப் போல் தனிப்பெரும் சோழ சாம்ராஜ்யம் உண்டாவதற்கு வித்திட்டான். இவ்விரு பெருமன்னர்களுக்கிடையில் இருந்த மன்னர்கள் பலர். நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, கிள்ளி வளவன், ராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, செங்கணான், கோப்பெருஞ்சோழன் ஆகியோர் அவர்களில் சிலர். இவர்கள் காலத்தில் சோழ மண்டலம் ஒரு குடைக் கீழ் ஆளப்படும் பெருமண்டலமாய் இல்லாமல் பல பிரிவுகளாய் இருந்தது. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு மன்னன் சொந்தம் கொண்டாடி ஆண்டான். அக்காலச் சிற்றரசர்கள்போல் இச் சோழ மன்னர்கள் சோழ மண்டலத்தைக் கூறிட்டுத் தனித் தனிச் சோழ நாடாக ஆண்டார்கள். இப்பிரிவு காரணமாகவும் பிரிவினால் உண்டான பூசல் காரணமாகவுமே சில நூற்றாண்டுகள் வரை சோழ சாம்ராஜ்யம் என்ற ஒன்று நிலை பெறாமலேயே இருந்தது. மாறாக அந்நூற்றாண்டுகளில் இத்தகைய பிரிவுகள் ஏற்படாத காரணத்தால் பாண்டியர்களும் சேரர்களும் தங்கள் மரபிற்கென்று ஒட்டுமொத்தமான பேரரசுகளை ஸ்தாபித்து பெரு மன்னர்களாய் இருந்தார்கள். இக் காரணத்தால்தான் கரிகாலனுக்குப் பின் பல நூற்றாண்டுகள் வரை சோழ மரபில் அவனைப் போன்ற பெரு மன்னர்கள் தோன்றவில்லை.

* கலைமகள் (1932) தொகுதி I பக் 62,63 By மு. ராகவையங்கார்

சென்று வென்றதற்குக்கூட ஆதாரங்கள் உள்ளன.* ஆனால் அவனுக்குப் பின்னால் வந்த மன்னர்கள் கரிகாலனைப் போல் பெருமன்னர்களாய்த் திகழவில்லை. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய விஜயாலயன்தான் கரிகாலனைப் போல் தனிப்பெரும் சோழ சாம்ராஜ்யம் உண்டாவதற்கு வித்திட்டான். இவ்விரு பெருமன்னர்களுக்கிடையில் இருந்த மன்னர்கள் பலர். நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, கிள்ளி வளவன், ராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, செங்கணான், கோப்பெருஞ்சோழன் ஆகியோர் அவர்களில் சிலர். இவர்கள் காலத்தில் சோழ மண்டலம் ஒரு குடைக் கீழ் ஆளப்படும் பெருமண்டலமாய் இல்லாமல் பல பிரிவுகளாய் இருந்தது. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு மன்னன் சொந்தம் கொண்டாடி ஆண்டான். அக்காலச் சிற்றரசர்கள்போல் இச் சோழ மன்னர்கள் சோழ மண்டலத்தைக் கூறிட்டுத் தனித் தனிச் சோழ நாடாக ஆண்டார்கள். இப்பிரிவு காரணமாகவும் பிரிவினால் உண்டான பூசல் காரணமாகவுமே சில நூற்றாண்டுகள் வரை சோழ சாம்ராஜ்யம் என்ற ஒன்று நிலை பெறாமலேயே இருந்தது. மாறாக அந்நூற்றாண்டுகளில் இத்தகைய பிரிவுகள் ஏற்படாத காரணத்தால் பாண்டியர்களும் சேரர்களும் தங்கள் மரபிற்கென்று ஒட்டுமொத்தமான பேரரசுகளை ஸ்தாபித்து பெரு மன்னர்களாய் இருந்தார்கள். இக் காரணத்தால்தான் கரிகாலனுக்குப் பின் பல நூற்றாண்டுகள் வரை சோழ மரபில் அவனைப் போன்ற பெரு மன்னர்கள் தோன்றவில்லை.

* *கலைமகள் (1932) தொகுதி 1 பக் 62.63 By மு. ராகவையங்கார்*



சோழமண்டலத்தின் பிரிவு காரணமாய் புகாரும், உறையூரும் தஞ்சையும் தனித்தனி தலைநகரங்களாயின. அவற்றை ஆண்ட மன்னர்கள் புகார் சோழன், உறையூர் சோழன் என்றே அழைக்கப்பட்டார்கள். இப்படிப்பட்ட நிலையில் உறையூர் சோழனாய் இக்கதை நடந்த காலத்தில் ஆண்டவனே பெருநற்கிள்ளி. அவன் ராசசூயம் வேள்வி நடத்தும் பொருட்டுத் தன்னைப் பேரரசனாக உயர்த்திக்கொள்ள விரும்பி அதற்குத் தனக்கு மிஞ்சிய மன்னனாய் யாரும் இருக்கலாகாது என்ற விருப்பத்துடன் பாண்டியன் நெடுஞ்செழியனை முறியடிக்க கொங்கு சேரனை துணையாகக் கேட்டதும் அதற்குச் சம்மதித்த அக்கொங்கு சேர வேந்தன் யானைக் கண்சேய் அதற்கு முன் எச்சரிக்கை நடவடிக்கையாகப் பாண்டிய மன்னனின் வலதுகரமும் பாண்டிய மண்டலத்தின் பெருந்தூணும், பாண்டியர் வளர்ச்சிக்கு ஆணிவேருமான படைத்தலைவன் பழையனை சிறையெடுத்திருந்தான்.

## இனி கதையைப் பார்க்கலாம்

வஞ்சகமாகக் கவரப்பட்டு கருவூரையடுத்த மலைக்காட்டுச் சந்தனக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டு தனிமைப் படுத்தப்பட்ட பழையன் தனக்கு ஏதோ பரிசை அனுப்பி வைப்பதாகச் சேர மன்னன் சொல்லிவிட்டுச் சென்றதைப் பற்றியே நீண்ட நேரமாக யோசித்தவண்ணமாய் அச்சந்தனக் கோட்டையின் பள்ளியறையில் இருந்த அழகிய மஞ்சத்தில் - பட்டு பஞ்சணையில் படுத்திருந்தான். சிந்தனைக

அடுக்கடுக்காய் எழுந்த காரணத்தாலும் - அவை கனமான சிந்தனைகளாய் இருந்த காரணத்தாலும் பட்டுப் பஞ்சணை அவனுக்குச் சுகத்தையோ தூக்கத்தையோ அளிக்கவில்லை. ஏதோ ஒரு காரியம் செய்ய வேண்டும் போலவும் அதே சமயம் அதை எப்படி, எப்போது செய்ய வேண்டுமென தெரியாமலிருப்பது போலவும் இருந்தது அவனுக்கு. ஏதோ ஒன்று எங்கோ தொலைந்திருப்பது போல் ஒருவிதமான தவிப்பும் உண்டாகியிருந்தது. அவற்றுக்கெல்லாம் விடை கிடைக்க வேண்டுமானால் அதற்கு முதலில் செய்யவேண்டியது சிறையிலிருந்து தப்ப வேண்டியதுதான் என்று தோன்றவே அதற்கு வழி தேடும் விதத்தில் சிறை கோட்டத்தைப் பார்வையிடப் புறப்பட்டான்.

அவனிருந்த பள்ளியறைக்குப் பின்னால் சந்தனக் கோட்டையின் பின்புறக் கட்டு இருந்தது. அக்கட்டு பலமான இரும்புச் சுவற்றால் பாதுகாப்பு செய்யப்பட்டிருந்தது. அங்கு போய் நின்று வெளியே நோக்கினான் பழையன். வெளிப்புறமானது இருட்டுக்கு கரிய வண்ணம் அளித்தமாதிரி இருந்தது. தொடர்ந்து பார்த்துக் கொண்டிருந்தால் அவ்விருட்டு தன் கண்களையே வந்தடைந்து குருடாக்கிவிடும் போலிருக்கவே அங்கிருந்து கிளம்பினான். அப்போது தான் அந்த இருட்டுப் பகுதியிலிருந்து ''ஐயோ''- என்ற ஓலம் நெஞ்சை உலுக்கும் விதத்தில் மிகவும் பயங்கரமாய் எழுந்தது.

திரும்பிப் பார்த்தான் பழையன். கண்களுக்கு எதுவும் புலப்படவில்லை.



அதே சமயம் ''ஏதாவது வேண்டுமா?''- என்ற குரல் ஒன்று திடீரென்று எழுந்தது.

குரலையடுத்து பின் கட்டிலிருந்து கதவொன்று திறக்கப்பட்டது. மனிதன் ஒருவன் வெளிப்பட்டான். பழையனுக்கு முன்னால் வந்து நின்று ஏவலாள் போல் பணியவும் செய்தான்.

பழையன் அவனது பாவனைகளை ஆராயாமல் ''இப்போது கேட்டதே அதென்ன சத்தம்?'' - என்று கேட்டான்.

''வழக்கமான சத்தம்தான்'' - என்றான் பணியாள்.

''யாரப்படி வழக்கமாகக் கத்துவது; ஏன் கத்துகிறான்?''- கேட்டான் பழையன்.

''புலியின் வாயிலோ சிங்கத்தின் வாயிலோ கவ்வப் பட்டால் மனிதன் கத்தாமலிருக்க முடியாது.''

''அப்படியானால் இங்கே புலியும் சிங்கமும் கடிப்பது வழக்கமா?''

''ஏறக்குறைய அப்படித்தான், இப்பகுதியில் நள்ளிரவு நேரத்தில் தனியே செல்வர்கள் பெரும்பாலும் காட்டு மிருகங்களுக்கு இரையாகி மரண ஓலத்துடன் மாள்வது தான் வழக்கம். அவைகளுக்குத் தப்பினால் மலைக் காடுகளில் சதா உலவும் பேய்களால் கழுத்து முறிந்து இறந்து விடுகிறார்கள்''-

பணியாள் இப்படி விளக்கமளித்ததும் சற்றே மௌனம் சாதித்த பழையன் பின் ''நீ யார்?''- என்று வினவினான்.

''ஐயா, இங்கிருப்பது நான் ஒருவன் மட்டுமல்ல. அதோடு எங்களுக்குப் பல பெயர்கள் உண்டு. இருப்பினும் அனைவரது பணிகளும் ஒன்றுதான். இங்கிருந்து தப்புவது ஒன்றைத் தவிர இதர உதவிகள் எதையும் உங்களுக்குச் செய்யும்படி எங்களுக்கு உத்தரவு இருக்கிறது. எனவே என்னைப் பற்றியெல்லாம் அறிந்து கொள்ள விரும்ப வேண்டாம்'' என்று பணிவாகவே தெரிவித்துக் கொண்டான் அவன்.

''வீரனே, இங்கிருந்து தப்ப விரும்புபவர்கள் இங்கிருக்கும் உன் போன்றவர்களின் உதவியை நாடுவதும் உண்டா?''- என்று வினவினான் பழையன்.

''நான் கூறியதைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். உங்களுக்கு ஒருவேளை அப்படியொரு ஆசை இருந்தால் விட்டுவிடுங்கள் என்பதற்காகச் சொன்னேன்-''

''உங்கள் உதவியில்லாமல்தான் நானோ மற்றவர்களோ தப்ப முயலவேண்டும். இல்லையா?''-

''நாங்கள் உதவினால்கூட முடியாத காரியத்தை நீங்களாகவே செய்ய முடியும் என்று கருதினால் எனக்குச் சிரிப்பாகத்தான் இருக்கிறது. ஆனால் பணியாளான நான் சிரிக்க முடியாது''-

''அந்த நிலை வராது வீரரே. நானாகத் தப்பிப் போக முயல மாட்டேன். இது சத்தியம்''-

''படைத்தலைவரே, என்னிடம் போய் தங்கள் சாமர்த்தியத்தைக் காட்ட வேண்டாம். தப்ப மாட்டேன் என்று எங்களிடம் சொல்வீர்கள். அதை நம்பி நாங்கள்



அயர்ந்திருப்போம். நீங்கள் சாமர்த்தியமாகத் தப்பி விடுவீர்கள். அப்படித்தானே?''-

இதைக் கேட்டு அதிர்ச்சியடைந்தவனைப்போல் நடித்த பழையன், ''வீரரே, நீர் அறிவுக் கூர்மை படைத்தவராய் இருக்கிறீர். நான் சற்று ஏமாந்துதான் போய் விட்டேன். ஏன் வீரரே, இங்கிருக்கும் மற்றவர்களும் உம்மைப் போன்றவர்கள்தானா?''- என்று கேட்டான்.

''ஐயா, யார் எப்படிப்பட்டவராய் இருந்தால் என்ன? நீர் எங்கள் கண்களில் மண்ணைத் தூவிவிட்டுத் தப்பினாலும் புலிகளிடமிருந்து தப்ப முடியாது. அவற்றிடமிருந்து தப்பினால் சிங்கங்கள் இருக்கின்றன. இவைகளை உலவவிட்டிருப்பதே நாங்கள்தான்''-

''அப்படியானால் பேய்களையும் நீங்கள்தான் உலவ விட்டிருக்கிறீர்களா?''-

''ஆம். எங்கள் புலிகளால் பட்சணம் செய்யப்படு பவர்கள்தானே பேய்களாய் உலவுகிறார்கள்?''

''எல்லாமே ஆண் பேய்கள் தான் போலிருக்கிறது''-

''இல்லை. ஒன்பது பெண் பேய்கள் இருக்கின்றன. அதுவும் இடாகினிப் பேய்கள்''

''அதென்ன ஒன்பது?-

''நாங்கள் கொன்றிருக்கும் இளம் பெண்களின் எண்ணிக்கை அது''- என்று தெரிவித்த அவன் ''ஐயா, இவையெல்லாம் அனுபவப்படும் போதுதான் தெரியும். இவற்றையெல்லாம் யாருக்கும் நாங்கள் சொல்வ

இல்லை. ஏதோ நீங்கள் வாயைப் பிடுங்கித் தெரிந்து கொண்டு விட்டீர்கள். உண்மையில் நாங்கள் சொல்ல வேண்டிய விவரங்கள் பேய்களைப் பற்றியோ, புலிகளைப் பற்றியோ அல்ல. இச்சந்தனக் கோட்டையைப் பற்றியதுதான். இங்கே சதா சர்வ காலமும் வீசிக் கொண்டிருக்கும் மணத்தைக் கண்டு இதை வசந்த மாளிகை என்றோ, இங்கிருக்கும் சிற்ப ஓவிய எழில்களைக் கண்டு இதைக் கலைக்கூடம் என்றோ எண்ணிக் கொள்ள வேண்டாம். சந்தன மணம்-சிற்ப எழில் இவையெல்லாம் வெறும் ஒப்பனைகள். உண்மையிலேயே இது ஒரு பயங்கரக் கோட்டை. சேரர் கடற்கரையில் வசித்த யவன கொள்ளைக்காரர்களைக் கொண்டு நிர்மாணிக்கப்பட்ட கோட்டை இது. யவனர்களின் நூதனமான பொறிகள் அனைத்தும் இங்கே மறைக்கப்பட்டுள்ளன. இங்குள்ளவர்களை எங்களை விட இப்பொறிகளே சிறப்பாகக் கண்காணிக்கும். இங்குள்ள ஓர் கதவைத் திறந்தாலோ அல்லது தகர்த்தாலோ அதற்கடுத்துள்ள கதவு தானாக மூடிக்கொள்ளும். அந்தக் கதவைத் தகர்த்தால் அதற்கடுத்த கதவு மூடிக்கொள்ளும்.' இப்படியே எல்லாக் கதவுகளையும் தகர்த்துவிட்டால் கடைசியாக மிஞ்சக் கூடியது ஒரே ஒரு கதவுதான். அதை திறக்கவோ தகர்க்கவோ முடியாது. அதற்கான விசை வெளியில் மறைவான இடத்தில் இருக்கிறது. அதை வெளியே உள்ளே காவலர்கள்தான் மேலிடத்து உத்திரவின் பேரில் திறக்க முடியும். கதவுகளைத் தவிர வேறெந்த வழியிலும் தப்புவதென்பது இயலாத காரியம். இச்சந்தனக் கோட்டையின் சுவர்கள் வெளிப்புறம் சந்தனக்



கட்டைகளால் அமைக்கப் பட்டிருக்கிறதே தவிர உட்புறம் கனமான இரும்புப் பாளங்களால் அமைந்துள்ளது. அவற்றைத் தகர்க்க நீங்கள் ஆயுதங்களைப் பயன்படுத்தும்போது யவனர் பொறிகள் தூண்டப்பட்டு ஒலி எழுப்பும். அவ்வொலி காவலர்களை எழுப்பும். காவலர்கள் எழுந்தால் உங்கள் முயற்சி வெற்றி பெறாது. இக்கோட்டைக்கு நிலவறைகள் இல்லை. கோட்டையின் அடி கூட இரும்பால் வேயப்பட்டது. காவலர் அறியாமல் அடியைச் சுரண்டவும் முடியாது. அதோடு இக்கோட்டையை சதா சர்வ காலமும் அதோ அந்த மலை உச்சியின் மீதுள்ள காவல் கூடம் கண்காணிக்கிறது. இக்கோட்டையைத் தாக்க வெளியேயிருந்து பகைவர்கள் வந்தால் காவல் கூடத்திலிருந்து பெரிய சங்கொலியொன்று எழும்பும். அதையடுத்து பகைவரை வெல்ல எங்கள் உதவிப்படை விரையும்.''- என்று கூறி முடித்தான்.

விளக்கங்களைக் கேட்டு புன்முறுவல் கொண்ட பழையன், ''எதற்காக இவ்வளவையும் மூச்சிறைக்கச் சொல்கிறீர். நானாக இங்கிருந்து தப்ப முயல மாட்டேன் என்றுதான் சொன்னேனே?''- என்று சொல்லி விட்டு ''நன்னன் எங்கே காணோம்?''- என்று கேட்டான்.

''தேவைப்படும்போது வருவார்''- என்றான் வீரன்.

இவர்கள் இருவரும் இப்படிப் பேசிக் கொண்டிருந்த நேரத்தில் திடீரென புரவிகள் சத்தம் கேட்டது. அதையடுத்து உள்ளே நுழைந்தான் சேரமன்னன்.

பழையனை நோக்கி வந்து அவனைத் தனியே அழைத்துச் சென்று ''பழையா, உன்னை இப்படிச் சிறை

வைத்திருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நீ மட்டும் பாண்டிய மன்னனுக்கு உதவுவதில்லை என்று சொல், சத்தியம் செய். இச்சிறையிலிருந்து நீக்கி விடுகிறேன்''- என்றான்.

''மன்னவா, இப்போதும் சொல்கிறேன். பாண்டிய மாமன்னரை அற்பமாக எடை போட வேண்டாம். நானில்லாமலேயே பகைவர்களை அவரால் முறியடிக்க முடியும். அதற்காக உங்களிடம் நான் வாக்குறுதி அளிக்க வேண்டிய அவசியமில்லை. நான் பயன்பட வேண்டியது நண்பனாய் ஏற்று நம்பிக்கையை கொண்டிருக்கும் பாண்டிய மாமன்னருக்குத் தானேயன்றி மானத்தை ஒதுக்கி விட்டுச் சுயநலம் தேடும் சிற்றரசர்களுக்கல்ல. வாழும் ஆசை இருக்குமானால் தாங்கள் பாண்டிய மாமன்னரின் தலைமையை ஏற்றுக்கொள்வது தானேயன்றி சோழனின் தலைமையை அல்ல'' என்றான் பழையன்.

இதைக் கேட்டதும் சேரமானின் கண்கள் சிவந்தன. வாளையும் உருவினான் பழையனை வெட்ட. ஆனால் உருவிய வேகத்திலேயே உறையில் போட்டுவிட்டு, ''உன்னை இப்போது வெட்டுவதில் எனக்கு மகிழ்ச்சி இல்லை. பாண்டியனை வீழ்த்தியபின் அவன் அரியணையில் அமர்ந்து உன்னைச் சிரச்சேதம் செய்வதே உகந்தது. நாட்களை எண்ணிக் கொண்டிரு''- என்று கூறி விட்டுப் புறப்பட்டான்.

''எண்ணுகிறேன் மன்னா. நாட்களை எண்ணுகிறேன்'' - என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்ட பழையன் தன் பள்ளியறையை அடைந்து படுத்தான்.



நள்ளிரவு நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அமைதியாய் இருந்த அந்நேரத்தில் இருந்தாற் போலிருந்து திடீரென்று நரியொன்று பயங்கரமாக ஊளையிட்டது. அதையடுத்து காற்று வீசுவதும் நின்று போய் மயான அமைதி சூழ்ந்தது. கொஞ்ச நேரத்தில் அந்தப் பேரமைதியைக் கிழித்து கிலியை உண்டாக்கவல்ல விதத்தில் 'ஜல்ஜல்' என்ற ஒலி எழுந்தது. அவனிருந்த அறைக்குச் சமீபமாய் அவ்வொலி வரவும் செய்தது.

◈◈◈

முரசு ஐந்து

# மோகன வரவு

இரவில் தனிமையும் அமைதியும் பயங்கரமானவை. அதேசமயம் அவ்விரண்டும் திடீரென அமானுஷ்ய அரவத்தால் கிழிக்கப்படும்போது கிலி உண்டாகிறது. சந்தனக்கோட்டைக்குள் மயான அமைதியில் தனித்துக் கிடந்த பழையன் திடீரென 'ஜல்ஜல்' என்ற ஒலி எழுந்ததையும் தன் அறையை நோக்கி நெருங்குவதையும் கேட்டபோது சேரவீரன் விவரித்த பேய்களைப் பற்றியே நினைவு கூர்ந்தான். போர்க்களங்கள் பலவற்றில் பலாது உயிர்களைக் காலனுக்கு அனுப்பி வைத்தவனும், வாழ்நாளில் பாதியை ரத்த ஆற்றிலும் பிணக் குவியல்களிலும் கழித்தவனும், ஒற்றறியும் பொருட்டு காட்டிலும், மலையிலும் தனிமையில் திரிந்தவனுமான பழையனுக்கு சந்தனக் கோட்டையின் தனிமையோ, இருளின் அமைதியோ அசைத்துவிடவில்லை. சேரவீரன் கூறிய பேய்க்கதையிலும் அஞ்சிவிடவில்லை. எங்கே ஆபத்து அதிகமோ அங்கே தன்னை ஈடுபடுத்திக் கொள்வதும் எங்கே மர்மம் இருக்கிறதோ அதை உடைப்பதற்காக அங்கே சென்று செயல்படுவதும் சிறிய வயது முதலே அவனது பழக்கங்களாய் அமைந்துவிட்ட காரணத்தால் தற்போது எழுந்த ஒலியை அடுத்து அவனிடம் அச்சத்திற்குப் பதில் ஆர்வமே உண்டாயிற்று.



சேர வீரன் சொல்லாத வேறு மர்மங்களும் உண்டு போலிருக்கிறது என்று எண்ணியவனாய் ''சரி, அதையும் தெரிந்து கொள்வோம்'' என்று முணு முணுத்தபடி எழுந்து அறையின் கதவைச் சாத்திவிட்டு வந்து பஞ்சணையில் படுத்தான்.

ஜல்ஜல் ஒலி சட்டென நின்றது. அறைக் கதவானது தற்போது தட்டப்பட்டது.

'பேய் கதவையும் தட்டுமா?' என்று கேட்டு கொண்ட அவன் ''சரி, அதுவே திறந்து கொண்டு வரட்டும்'' என்று படுத்துக் கொண்டே இருந்தான்.

பேய் கதவை மெல்லத் திறந்தது. கரிய உருவமாய் மெல்ல உள்ளே நுழைந்தது, பஞ்சணையைச் சற்று உற்றுப் பார்த்தது. கதவைச் சாத்தித் தாளிட்டது. அறையின் மூலையில் அவியக் கூடிய நிலையில் இருந்த விளக்கை நெருங்கியது. திரியைத் தூண்டி தீபத்தை பெரிதாக்கியது. தீப ஒளியிலேயே நின்று முக்காட்டை நீக்கியது.

கதவைத் தட்டியபோதே-இல்லை...ஜல்ஜல் சத்தம் உண்டான சிறிது நேரத்திலேயே உள்ளே நுழையப் போவது யாரென உணர்ந்து கொண்ட பழையன் பொறுமையாய் இருந்து உள்ளே நுழைந்த உருவத்தின் நடவடிக்கைகளைக் கவனித்தான். தற்போது தீப ஒளியில் அப்ஸரஸ் போல் நின்ற உருவத்தை கண்டு அகமலர்ந்தான்.

தீப ஒளி போர்வை போல் அமைய அந்தப் போர்வையின் கீழ் திரையால் பாதிமூடப்பட்ட பொற்சிலை போல் நின்றிருந்தாள் மேகலை.

போர்க்கள நாயகனுக்கு அன்பின் அர்த்தத்தை உணர்த்தியவளான மேகலை தற்போது அவனுக்கு அழகின் அர்த்தத்தை உணர்த்துவது போல் காட்சியளித்தாள்.

'அழகுக்குப் பொருள் சொல்வதற்கு கவிதை இயற்றவோ காவியம் பாடவோ வேண்டாம் தன்னைக் காட்டினால் போதும்' என்று வாய்விட்டுச் சொல்லாமல் அதே சமயம் சொல்லாமல் உணர்த்திவிடும் பாவனையைச் சுமந்தவளாய் அவள் நின்றாள்.

கரிய போர்வை அவளது தலையின் பின்புறம் தொத்திக்கொண்டு முகம் முழுவதையும் வெளிப்படுத்தியிருந்த விதமானது கரிய வானத்தில் முழுநிலவு பளிச்சென காட்சி தருவது போல் இருந்தது.

போர்வையால் விலக்கப்பட்டிருந்த நீண்ட கூந்தலின் மேற்புறம் சூடப்பட்டிருந்த பொற்சங்கிலியானது கருமேகத்தில் முளைத்த பொன்மின்னல் போல் காட்சியளித்தது.

கண்கள் இரண்டும் பார்வையை பூமிக்குச் செலுத்தியிருந்ததால் விழிகளின் முழுபரிமாணமும் புருவங்களின் விஸ்தாரமும் தெளிவாய்த் தெரிந்தன. அவை இரண்டும் கண்களை மறைந்திருந்ததால் அக்கண்களை பார்க்கத் துடிக்கும் ஓர் ஏக்கத்தை உண்டாக்குவதாய் இருந்தன.

அந்த நிலை மூடிக்கிடந்த அதரங்களுக்கும் இருந்தது. பனித்துளிகளைப் போல் இருக்கக் கூடிய விரும்பத்தகுந்த அவளது பற்கள் மூடப்பட்டிருந்த இதழ்களுக்குள் மறைந்து கிடந்ததால் புதையலின் இருப்பிடம் எப்போது



புலப்படும் என காத்திருப்போரின் துடிப்பை ஏற்படுத்தியிருந்தன.

பெண்ணொருத்தி வெளிப்படுத்திக் காட்டும் அங்க அழகுகளை விட வெளிப்படுத்தாமல் மறைந்திருக்கும் அங்க அழகுகளுக்கே அதிக மோகமிருக்கும். அந்த அழகுகளே ஆண்களைக் கவரக்கூடிய ஆயுதங்களாய் அமைந்திருக்கும். அந்த ஆயுதங்கள்தான் ஆடவரை வீழ்த்தும் வலையின் கொக்கிகளாய் விளங்கி நிற்கும்.

மேகலையின் பிற அழகுகள் பற்றி விவரிப்பதானால் மேலே சொன்னது மாதிரிச் சொல்லி விடுவதுதான் பொருத்தமானது.

இப்படி அழகின் பூரண அர்த்தமாக நின்ற மேகலை சந்தனக் கோட்டையில் புதிதாய் நிர்மாணிக்கப்பட்ட பொற்சிலை போலவும் தேர்ந்த கலைஞன் திறம்பட எழுதிய பொன்னோவியம் போலவும் விளங்கினாள்.

அவளை நன்கு அறிந்தவனும் அவளது அழகு அங்கங்கள் மற்றும் அவளது அங்க அழகுகள் ஆகியவற்றின் சிறப்பியல்புகளை உணர்ந்தவனுமான பழையன் தற்போது அவளைப் பார்த்தபோது புதியவளைப் புதியதாய் பார்ப்பவனைப் போலவே பார்த்தான்.

அப்படிப் பார்த்தபோது அவளது அழகு பற்றி அவனிடம் உண்டான உணர்வும் புதியதாகவே இருந்தது. அதோடு அப்புத்துணர்வு சுக உணர்வாயும் சொர்க்க உணர்வாயும் இருந்ததால் கணிசமான நேரம் வரை பேசவும் முற்படாமல் செயலிலும் ஈடுபடாமல் கண்களை மட்டுமே இயங்க விட்டு மௌனமாய் இருந்தான்.

அவளது நிலை சொல்லி விளக்க முடியாத நிலையாய் இருந்தது.

ஆசைபட்ட ஒன்று கிடைத்த மாதிரியும் கிடைக்காத மாதிரியும் இருக்கும் மயக்கம்; எதிர்பார்த்த ஒன்று கிட்டிய மாதிரியும் கிடைக்காத மாதிரியும் இருக்கும் ஏக்கம்; செய்ய வேண்டியதைச் செய்த மாதிரியும் செய்யாத மாதிரியும் இருக்கும் துடிப்பு; சொல்ல வேண்டியதை சொன்ன மாதிரியும் சொல்லாத மாதிரியும் இருக்கும் விழிப்பு; அடைய வேண்டியதை அடைந்த மாதிரியும் அடையாத மாதிரியும் இருக்கும் அவதி-இப்படிப்பட்ட அவஸ்தையில் அவள் இருந்தாள்.

சற்று நேரம் பொறுத்து-

''மேகலை''- என்று மெல்ல அழைத்தான் பழையன்.

திடீரென இடியோசை எழுந்தால் உண்டாகும் சிலிர்ப்பை அடைந்து அசைந்து கண்களை உயர்த்தி அவனைப் பார்த்தாள் மேகலை. அக்கண்களில் பெரும் ஆர்வமும், அச்சமும், மருட்சியும் இருந்தன. அளவுக்கு அதிகமாய் துடித்த அக்கண்கள் ஏதேதோ பேசின.

'''வா மேகலை. ஏன் அங்கேயே நிற்கிறாய்? நானென்ன புதியவனா?''- கேட்டான் பழையன்.

அவளது தலை குனிந்தது. ஆனால் ஓர் அடியும் எடுத்து வைக்கவில்லை.

பழையனே எழுந்து போய் அவளை அணைத்து அழைத்து வந்து மஞ்சத்தில் அமர்த்தி, ''கற்றுக் கொடுத்தவளான நீயே கற்சிலை போல் நின்று விட்டால்



என் போன்ற மாணவர்கள் என்னாவது மேகலை? சொல்.'' என்று கேட்டான்.

அப்போதும் அவள் பேசவில்லை. அவளது உடல் லேசாக நடுங்கியது.

அதைக் கவனித்த பழையன், ''என்னாயிற்று உனக்கு? உடல் ஏன் நடுங்குகிறது?'' என்று வினவினான்.

''அச்சம்''- என்று ஒரே வார்த்தையை மெல்ல உச்சரித்தாள் மேகலை.

அவளைத் தன்னோடு சேர்த்து அழுத்திக் கொண்ட அவன், ''அச்சம் தரக்கூடிய சூழ்நிலைதான். ஆனால் நான் தான் இருக்கிறேனே? பிறகுமா அச்சம்?''- என்று கேட்டான்.

அவள் பதில் சொல்லவில்லை.

''ஆமாம், நீ எப்படி இங்கே வந்தாய்? தனியாகவா?'' - என்று அவனே கேட்டான்.

''இல்லை. அவனும் கூட வந்தான் வாயில் வரை''- என்றாள் அவள்.

''யாரவன்?''

''சேரமன்னன்''

''யார்? இரும்பொறையா?''-

''ம்''

''எங்கே அவன் இப்போது?''-

''தெரியாது. கோட்டையின் வாசல் வரை வந்தவன் திரும்பிப் போய் விட்டான்''-

''ஏதாவது சொன்னானா உன்னிடம்?''-

''சீக்கிரமாகப் போ. பரிசுக்காகப் படைத்தலைவன் காத்திருப்பான் என்றான்''

''ஓகோ. நீதான் அவன் சொன்ன பரிசா? சரி எங்கிருந்து நீ வருகிறாய்?''-

''கருவூரிலிருந்துதான்''-

''புரவியிலா வந்தாய்?''-

''இல்லை. சிவிகையில்''-

''அது எங்கே?''-

''போய் விட்டது''-

''உனக்குத்தான் புரவியேற்றம் தெரியுமே?''

''சிவிகைதான் வசதியாய் இருக்கும் என்றான் சேரமன்னன்''

''வரும் வழியில் ஏதாவது தவறாக நடந்து கொண்டானா அவன்?''

''இல்லை. வழியில் பேசவும் இல்லை. கோட்டை வாசலில் பேசியதோடு சரி''

''கருவூரில் சிறையிலா இருந்தாய்?''

''இல்லை. அந்தப்புரத்தில் இருந்தேன்''

''அங்கு உன் நிலை?''

''ஒரு குறையும் இல்லை''

''உன் தந்தை, தாய், தோழி இவர்களெல்லாம் எங்கே?''



''தெரியாது. ஆனால் கருவூரில்தான் எங்காவது பத்திரமாய் இருப்பார்கள். ஒரு வேளை பொதினிக்கே கூட அனுப்பப்பட்டிருக்கலாம்''

''எனக்குச் சிலைசெய்தி எழுதியது நீ தானே?''

''ம்''

''நீ இற்செறிக்கப்பட்டது?''

''உண்மைதான்''

''சேரன் எப்படிக் குறுக்கிட்டான்?''-

''எங்கள் இருப்பிடத்திற்கு அவனே வந்தான். இருந்த நிலைமையை அறிந்தான். தான் சொல்வது போல் நடந்து கொள்ளும்படி நல்ல விதமாகவே கேட்டான். எல்லோரும் ஒப்புக் கொண்டோம்''

''எப்படி?''-

''அவன் சொல்வது போல் ஒப்புக் கொண்டால் யார் உயிருக்கும் தீங்கு ஏற்படாது என்றான்''

''இது ஒன்றுதானா?''

''இல்லை, முக்கியமாக வேறொன்றைச் சொன்னான்''

''என்ன அது?''-

''என்னை நீங்கள் இருக்கும் இடத்திற்கு அனுப்பி வைப்பதாகச் சொன்னான்''

''பிறகு?''- பழையனின் குரலில் கடுமை புகுந்தது.

''நம் இருவரையும் மணம் செய்து வைப்பதாகச் சொன்னான்.''

''ஓகோ. இதைக் கேட்டதும் நீ சம்மதித்து விட்டாய். என்னை சிறை செய்வதற்கு உடந்தையாகிவிட்டாய். இல்லையா?''

''உங்களைச் சிறை செய்யப் போவதாக அவன் சொல்லவில்லை.''

''காரணத்தை அறியாமல் அவன் ஏற்பாடுகளை ஒப்புக் கொண்டாயா நீ?''-

''உங்களிடம் அனுப்பி வைப்பதாகச் சொன்னானே, அது போதாதா எனக்கு?''-

''அவன் ஏமாற்றியிருந்தால்?''-

''நான் நம்பி விட்டேன்''

''சேரனின் மீது உனக்கு ரொம்ப நம்பிக்கை வந்து விட்டது''

''வெறும் நம்பிக்கையல்ல. நான் நம்பியதற்குக் காரணம் உங்களிடம் வந்துவிட ஒருவாய்ப்புக் கிடைத்ததே என்பதால்தான்''

''இந்த பொய் வார்த்தைகள் எனக்கு வேண்டாம் சேரனிடம்தான் உனக்கு அபார நம்பிக்கை. அவனிடமே போ- இங்கு இருக்காதே''

''அப்படியா? சரி போகிறேன் போய் அவன் காலில் விழுகிறேன். ஏன் அவனையே மணந்து கொள்கிறேன். நீங்கள் இங்கேயே படுத்துக்கொண்டு சந்தேகப்பட்டுக்



கொண்டிருங்கள்'' - என்று மேகலையும் திடீரென கோபத்தால் படபடவெனப் பேசிவிட்டு விருட்டென எழுந்து அறையைத் திறந்து கொண்டு வெளியேறினாள்.

''மேகலை! மேகலை!'' என்று குரல் கொடுத்தான் பழையன். அது அவள் காதில் விழவில்லை.

திறந்து கிடந்த கோட்டை வாயிலை நோக்கிச் சென்றவள் வெளியே ஓடினாள். தூரத்தில் எங்கோ புலியொன்று உறுமும் சத்தம் கேட்டது.

◈◈◈

முரசு ஆறு

## வேங்கைகளின் மோதல்

ஏதோ விளையாட்டாய் கோபத்தைக் காட்டப் போய் அது வினையாய் முடிந்த கதையாக மேகலை உண்மையாகவே கோபமடைந்து ஓடமுற்பட்டதைக் கண்டு சிரித்துக் கொண்ட பழையன் அவளுக்கு அதைச் சொல்ல முற்பட்டு ''மேகலை! மேகலை!'' என்று அழைத்தான். அந்த அழைப்பு அவள் காதில் விழாமல் இல்லை. இருப்பினும் அவள் நிற்கவில்லை. அழைப்புக்கு நிற்பவளாய் இருந்திருந்தால் ஓடியிருக்க மாட்டாள். அதோடு தன்னை நம்பவேண்டியவனும், நம்பி அன்பு செலுத்த வேண்டியவனும், செலுத்தி அரவணைக்க வேண்டியவனுமான காதலன் சந்தேகம் கொண்டு வெறுப்புக் காட்டியபின் அவனது சொற்கள் எதற்கும் உடனடியாக மதிப்பிருக்காதுதான். அந்த வகையில் அவனது அழைப்புச் சொற்களை அலட்சியப்படுத்திவிட்டு ஓடினாள்.

''ஓடட்டும் எங்கே போய்விட முடியும்? சந்தனக் கோட்டையை விட்டுத்தான் வெளியேற முடியாதே?'' என்று நினைத்தான் பழையன். அப்படி எண்ணி அவள் பின்னால் சாதாரணமாகவே நடந்தான். ஆனால் அவனது நினைப்பு பொய்த்தது. கோட்டைக்கதவு திறந்து கிடந்தது. அதன் வழியாக அவள் வெளியே ஓடினாள். பழையன் ஒரு



கணம் வியந்தான் கதவு திறந்து கிடந்ததால். மறுகணம் புலியின் ஞாபகமும் சிங்கத்தின் ஞாபகமும் வந்தது. தனியாய் ஓடும் மேகலையின் கதியைப் பற்றியும் யோசித்தான். யோசனையை விட்டுவிட்டு செயல்பட வேண்டிய அவசியத்தை உணர்த்துவதுபோல் தூரத்தில் புலியின் உறுமல் ஒன்றும் கேட்டது.

எனவே அவனும் ஓடமுற்பட்டு கோட்டை வாயிலை அடைந்தான். அங்கே ஒருவரும் இல்லை. சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு வெளியே வந்தான். பிறகு மேகலை ஓடிய திசை நோக்கி ஓடினான். சிறிது தூரம் சென்றதுமே அவன் எதிர்பார்த்த மாதிரியேதான் நடந்தது. மலையிலிருந்து எங்கோ விழும் அருவி நீரின் ஓசை அவனுக்குத் தெளிவாகக் கேட்டது. அந்த நீர் எங்கோ விழுந்து பிரிவுபட்டு ஓர் ஓடையாய் வந்து கொண்டிருந்தது அவனது கண்களுக்கு முன்னால். ஓடையின் அக்கரையில் மேகலை நடுங்கியவளாய் நின்று கொண்டிருந்தாள். இக்கரையில் புலியொன்று பாயும் நிலையில் தயாராய் நின்று கொண்டிருந்தது. ஓடையின் அகலம் அவ்வளவாய் இல்லாததால் புலியால் அதைத் தாண்டி விடமுடியும் என்றே தோன்றியது. அதேசமயம் அதன் தயக்கம் ஓடையின் ஆழத்தையும் நீரின் வேகத்தையும் உணர்த்துவதாய் இருந்தது. புலியும் சரி மேகலையும் சரி ஏதோ ஒரு சந்தர்ப்பத்திற்காக எதிர்பார்க்கும் நிலையில் இருந்தார்கள்.

பின்னிரவு நேரம். தேய்பிறைக் காலமாயிருந்ததால் நள்ளிரவு வரை முகத்தைக் காட்டாதிருந்த பிறைநிலவு தற்போது திரையை விலக்கி வெளிப்பட்ட பேரழகி போல் வானத்தில் வெளிப்பட்டிருந்தாலும், ஓடைப்பகுதியின்

மரங்கள் சற்றே குறைந்து இடைவெளியைத் தந்திருந்தாலும் நிலவின் ஒளி கணிசமாய் விழுந்திருந்தது. அவ்வொளியில் வெள்ளை நிறத்தில் மிக வேகமாய் போய்க் கொண்டிருந்த அருவி நீர் ஏதோ புலியையும் மேகலையையும் எச்சரிப்பதுபோல் சலசலத்தது. நிலவொளியின் இதமான வெளிச்சத்தில் தேவமங்கை போல் தோன்றினாள் மேகலை. இப்புறத்தில் சூழ்நிலையை கம்பீரமாக்குவதுபோல் நின்றிருந்தது காட்டுப்புலி.

பழையன் சற்று யோசித்துவிட்டு அருகே இருந்த பெரும் பாறை ஒன்றை அசைத்துப் புரட்டிவிட்டான். எதிர் பார்த்த மாதிரியே புலி தலையை பின்புறம் திருப்பியது. பின்புறமாய் திரும்பி பதுங்கிய நடையில் நடந்து வரவும் செய்தது. பாறையின் பக்கத்தில் சற்றே உயரத்தில் நின்றிருந்த பழையன் மின்னல் வேகத்தில் ஏதோ வானத்தில் பறப்பவனைப் போல் எம்பி புலியின் மேலே பாய்ந்து விழுந்தான்.

புலி இந்த நிலையை எதிர்பார்க்கவில்லை போலும். அதோடு தன்னைவிட வேகமாகப் பாய்ந்த மனிதனைக் கண்டு வியப்பும் அடைந்திருக்க வேண்டும். தனக்கு கௌரவ பிரச்சனை உண்டாகிவிட்டது போல் மலைப் பிராந்தியமே அதிர்வதுபோல் பயங்கரமாய் உறுமியது.

அதே சமயம் அதன் மீது பெரும் பாரமாய் விழுந்த பழையன் அதன் உறுமல் தொடராத வகையிலும் திணறும் வகையிலும் தனது இரும்புக் கரங்களால் கழுத்தை அழுத்தமாகப் பிணைத்து இறுக்கினான். புலி தன் நிலையை உணர்ந்து பழையனை விலக்கும் முயற்சியில்



புரண்டது. அவனும் பிடியை விடாமல் சேர்ந்தே புரண்டான்.

புலி சிங்கம் போன்ற கொடிய விலங்குகளுடன் ஆயுத மின்றி நேருக்கு நேர் நின்று கட்டிப் புரண்டு போர் புரிவதென்பது தற்கால ஆடவர்களால் முடியுமா என்பது சந்தேகம்தான். அதற்கு ஏற்ற உடலமைப்பும் உறுதியும் தற்கால ஆடவர்களுக்கு இல்லை. துப்பாக்கியை ஏந்தி மறைவில் நின்றுசுட்டு வீழ்த்துவதும் அதை வேட்டை என்று சொல்லிப் பெருமைப்படுவதுமே தற்போதைய திறமையாயும் சாகசமாயும் கொள்ளப்படுகின்றன. எங்கோ ஒரிருவர் நேருக்கு நேர் போரிட்டால் அது அசந்தர்ப்பங் களாகவே அமைகின்றன. அத்தகைய போர்களில் மனிதன் தப்புவது அரியதாய் இருக்கும். அல்லது குற்றுயிரும் கொலையுயிருமாய் மிஞ்சவேண்டியிருக்கும்.

ஆனால் அக்கால ஆடவரின் நிலை முற்றிலும் மாறுபட்டிருந்தது. நாம் இப்போது திரைப்படங்களில் காணும் டார்ஜானைப் போல் அவர்களின் உடலமைப்பு திடகாத்திரமாய் இருந்தது. பொருட் காட்சிகளில் காணப்படும் அக்கால கவசங்கள், வாட்கள் மற்றும் வேல்களையும் அவற்றின் பரிமாணங்களையும் கொண்டே அக்கால ஆடவரின் உருவ அமைப்புகளை நாம் ஊகித்துக் கொள்ளலாம். மன உறுதியும் படைத்தவர்களாய் அவர்கள் இருந்தார்கள். வீரம் அவர்களது வாழ்வின் முக்கியத் தகுதியாயகவும் இருந்தது. அவர்களது உணவு முறையும் அளவும் கூட அதிசயத் தக்கவை. தற்போது நான்கைந்து பேர் உண்ணும் உணவை அக்கால மனிதன் அருந்தினான். இப்படி உணவின் அளவிலும் அதிகமாய் மனத்திண்மையும் பெரியதாய்

உடல் பரிமாணமும் பயங்கரமாய் இருந்ததால்தான் அக்கால வீரனால் மார்பில் பல வேல்களைத் தாங்க முடிந்தது. வாள் காயமும் வேல் காயமும் அவனுக்கு வீரப்புண்களாய் இருந்து வடுக்களாய் நிலைத்தது. நமக்கோ சிறு சிராய்ப்பு காயம் ஏற்பட்டாலும் தாங்கிக் கொள்ள முடியாமல் அவதிப்படுகிறோம்.

இங்கே பழையன் அப்படிப்பட்ட உடலமைப்பு கொண்டவன் மட்டுமல்ல. வாழ்க்கையில் முக்கால்வாசி நாட்களை அபாயமான காரியங்களிலுமே கழித்தவன். எப்படி சர்க்கஸ்காரன் ஒருவனுக்கு சிங்கத்தின் வாயில் தலையை விடுவது பழகி விடுகிறதோ-அப்படித்தான் சாகசங்கள் பழையனுக்கு பழகிவிட்ட அம்சமாக இருந்தது. இன்று சர்க்கஸ் என்று புரியும் காரியங்கள் விலங்குகள் சம்மந்தப்பட்டவரை அக்காலத்தில் நடைமுறையாகவே இருந்தது என்றாலும் தவறில்லை. மனஉறுதி இல்லை என்றால் மட்டுமே புலிக்கு மனிதன் ஆளாகக் கூடியதாய் இருந்தான்.

மன உறுதி படைத்தவனான பழையன் திடீரெனப் பாய்ந்து கழுத்தை இறுக்கியபோது புலி உண்மையிலேயே திணறத்தான் செய்தது. அவனது பிடியை அறுக்கும் விதத்தில் தானும் புரண்டு அவனையும் புரட்டியது. அவனோ எக்காரணம் கொண்டும் பிடியை விடுபவனாயில்லை. மேலும் மேலும் இறுக்கவே செய்தான். இரும்புத்தண்டுகள் கழுத்தை அழுத்துவது போலிருக்கவே புலியின் கண்கள் பிதுங்கலாயின. விரைவிலேயே அதன் முடிவு நெருங்கிவிடும் என்பதை உணர்ந்து கொண்ட பழையன், தன் பலம் குறையவில்லை என்பதையும் உணர்ந்துகொண்டு தன் இஷ்டத்திற்குப்



புலியைப் புரட்டிக்கொண்டு பாறை இடுக்கொன்றுக்கு வந்தான். வந்ததுமே பிடியைத் தளர்த்திவிட்டு சடாரென எழுந்து தனது நீண்ட கைகளால் புலியின் கழுத்தைப் பிடித்துத் தூக்கிப் பாறையின் மீது ஓங்கி அடித்து உதறினான். அது மரண அடியாய் அமைந்தது. கழுத்தின் குரல்வளைகள் இறுகி பாதி பலத்தையும் பாதி உயிரையும் விட்டிருந்த மிருகம் அவனது அடியால் மீதியையும் இழந்து ஓடைக்கரையில் வெறும் சடலமாய் விழுந்தது.

அதை ஒரு கணம் பார்த்துவிட்டு ஓடை நீரில் கைகளையும் தோள்களையும் துடைத்து விட்டுக் கொண்டான். அதே சமயம் அவனது சாகசத்தைப் பார்த்துவிட்டு ஓடையைக் கடக்கும் பாறைப்பாலம் ஒன்றைத் தாண்டி அவனுக்கு அருகில் வந்து நின்றாள் மேகலை.

கறைகளைக் கழுவிக்கொண்டு திரும்பிய பழையன் ஓடையின் கரைகளைக் காப்பது போல் நின்றிருந்த மேகலையைக் கண்டதும், ''இன்னும் போகவில்லையா நீ?''- என்று கேட்டான் ஏதோ முக்கியமான கேள்வியைக் கேட்பவன் போல்.

''எங்கே?'' என்று கேட்டாள் அவள்.

''சேரனை மணக்கத்தான்'' - என்று கூறி கடகட வெனச் சிரித்த பழையன் ''உனக்கு இப்படியும் ஒரு கோபம் வருமா'' என்று கேட்டான். பின் தொடர்ந்து ''பெண்களுக்கு கோபம் வருவதில் தவறில்லைதான். ஆனால் அதற்கு கால நேரம் கிடையாதா? நள்ளிரவில் கோபப்பட்டு தனியாய் ஓடி வந்துவிட்டாய். உன் கோபத்தின் நியாயம் எனக்கு வேண்டுமானால்

தெரிந்திருக்கலாம். ஆனால் புலிகளுக்குத் தெரிந்திருக்க முடியுமா? மேகலை, நீ தேவமங்கையே தவிர இன்னும் வீர மங்கையாகவில்லை என்பதை மறந்து விடாதே. உன்னிடம் நான் மயங்கலாம். புலி மயங்காது' என்றான்.

தன் போக்கு குறித்து வருந்துபவள் போல் மௌனமாய் இருந்தாள் மேகலை.

''வா, அந்தப் பாறையில் சற்று உட்காருவோம். மிகவும் அழகான சூழ்நிலை. விட்டுவிட்டால் போய்விடும்''- என்று கூறி அவளை அழைத்துக் கொண்டு போய் பாறையில் உட்காரவைத்துவிட்டு ''என்ன கேட்டு விட்டேன் என்று இப்படி ஓடிவந்து விட்டாய்?'' - என்று கேட்டான்.

''சந்தேகப்பட்டீர்கள்''-

''ம்''

''நிற்காதே ஓடிப்போ என்றீர்கள்''

''அப்புறம்?''-

''அதுவும் சேரனிடமே போ என்றீர்களே! அதற்காகத் தான் சந்தனக் கோட்டையில் நுழைந்தேனா?''-

''மேகலை, நான் சொன்னதெல்லாம் தவறா?''

''இல்லையா பின்?''-

''அப்படியானால் சேரனையே மணக்கிறேன் என்று சொல்லிவிட்டு ஓடினாயே, அது மட்டும் சரியா?''-

''நானாகவா சொன்னேன்? நீங்கள் பேசியதால் ஆத்திரத்தில் சொன்னேன்.''



''ஆத்திரம் தானே காரணம்?''

''ஆமாம்''

''நான் பேசியதற்கும் அதுதான் மேகலை காரணம்''

''நீங்கள் ஏன் ஆத்திரப்பட வேண்டும்?''

''சேரன் உன் இருப்பிடத்திற்கு வருவது-உன்னை நிர்ப்பந்திப்பது-உன் குடும்பத்தாரையே சதியில் ஈடுபடுத்துவது-இதெல்லாம் எனக்கு மகிழ்ச்சியை உண்டாக்கக்கூடிய விஷயங்களா? சொல் மேகலை. நீ இற்செறிக்கப்பட்டு விட்டதாய்க் கேள்விப்பட்டு பயணப்பட்டு வழியில் வண்டியோட்டியாய் உன் தந்தையைக் கண்டபோதே என்ன நடந்திருக்கும் என்பதை ஒருவாறு நான் ஊகித்துக் கொண்டேன். ஆகவேதான் தப்பவும் முயலாமல் இருந்துவிட்டேன். இப்போது சொல்கிறேன். அனாவசியமாக அரசியல் லாபத்திற்கு என் குடும்பத்தில்-அதுவும் உன்னிடம் விளையாடி விட்ட சேரனை லேசில் விடப்போவதில்லை. நீயே பார்க்கத்தான் போகிறாய். இது சத்தியம்''

பழையனின் குரல் படிப்படியாக உயர்ந்து கொண்டே போனதையும் முகம் பயங்கரமாகச் சிவந்ததையும் கண்ட மேகலை அச்சமடைந்தாலும் மறுபுறம் மகிழ்ச்சியும் கொண்டாள். அப்பெரு வீரன் தன் காதலன் என்பதால். அவன் வாக்குத் தவற மாட்டான் என்பதும் அவளுக்குத் தெரிந்த விஷயமாதலால் அவனது தற்போதைய சத்தியம் நிச்சயம் நிறைவேறும் என்பதும் தெரிந்தது. இருப்பினும் சொன்னாள்.

''பெண்ணொருத்திக்காக மன்னனைப் பகைத்துக் கொள்ளப் போகிறீர்களா?''-

''இல்லையென்றால் மட்டும் அவனென்ன நண்பனாகவா இருக்கப் போகிறான்? அவன் மதுரைக்கு நன்னனை அனுப்பியதே பகையை அழைத்துவந்தது மாதிரித் தானே? விழா நடத்தவா என்னைக் கொண்டு வந்தான்? நட்பை வளர்க்கவா உன்னைச் சதியில் ஈடுபடுத்தினான்? உனக்காக இல்லையென்றாலும் அவனெனக்குப் பகைவனாகிவிட்டது நிச்சயம். அவன் துன்பப்படப் போவதும் நிச்சயம்''-என்றான் பழையன்.

அவனது பேச்சு அவளுக்குப் பெருமிதமாய் இருந்தது. அரசியல் காரணத்தைவிட சொந்த காரணமே அவனை அதிகமாகப் பாதித்திருக்கிறது என்பதையும், அச்சொந்தக் காரணமானது தன் மீதான சொந்தத்தைப் பற்றியது என்பதையும் அறிந்து கொண்ட அவள் காதலின் சக்தி குறித்து வியப்பும் கொண்டாள். காதலையும் அதன் அர்த்தத்தையும் அவனுக்கு உணர்த்தியவளே அவள் தான். ஆனால் தற்போது அவனந்த காதலுக்கே ஆசிரியனாகி அவளுக்கே தெரியாத சக்தியை அனுபவப்பூர்வமாய் உணர்த்தி அவளை மாணவியாக்கிவிட்ட மாதிரி இருந்தது அவளுக்கு.

உள்ளம் பூரிப்படைந்ததால் இயல்பான துடுக்குத் தனம் எழுந்தது அவளிடம். வேண்டுமென்றே கலுக்கெனச் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய் மேகலை? என் பேச்சில் நம்பிக்கை இல்லையா உனக்கு?'' என்று கேட்டான் அவளது சிரிப்பைக்கண்டு.



''அதற்கில்லை. ஏதோ இங்கிருந்து தப்பிவிட்ட மாதிரி பேசுகிறீர்களே என்று பார்த்தேன். இங்கிருந்து தப்பினால் அல்லவா மற்றதெல்லாம்?'' என்று கேட்டாள் மேகலை.

''தப்புகிறேனோ இல்லையோ-இங்கிருந்து நிச்சயம் போவேன். அப்போது என் வார்த்தைகள் நிறைவேறும்?''-

''அதற்குள் சேர மன்னன் முந்திக் கொண்டு விட்டால்?''

''பொறுத்திருந்துதான் பாரேன்''-

''தற்போது தப்புவதில் என்ன கஷ்டம்? நாமென்ன கோட்டையிலா இருக்கிறோம்?''

''மேகலை, நாமிப்போது கோட்டையில் இல்லைதான். ஆனால் பலத்த காவலில் இருப்பதாகவே நினைக்கிறேன். எப்போது சந்தனக் கோட்டையின் கதவு திறந்திருந்ததோ அப்போதே இப்படித்தான் நினைத்தேன் நான். இந்த ஏற்பாடு அநேகமாக நீ வந்ததால் இருக்கலாம். நீயும் நானும் ஒருவேளை உல்லாசமாய் இருக்க விரும்பலாம் என்று ஊகித்து இப்படியொரு ஏற்பாட்டைச் செய்திருக்கிறானோ என்னவோ. சேரன் உண்மையிலேயே ஒரு ரசிகன்தான். என்ன சொல்கிறாய்?''

''ஏன் நீங்கள் ரசிகரல்லவா?'' - தலையை சாய்த்து ஓரக்கண்கள் துள்ள அவள் கேட்டாள்.

''நான் ரசிகன்தான் ஆனால் ரசிகனானது உன்னைக் கண்ட பின்புதானே?''

''சேரன் கதை வேறா?''

''ஆம். அவன் பரம்பரை ரசிகன் மேகலை. சிறையிருக்கும் கோட்டையைச் சந்தனத்தால் அமைத்திருக்கிறான். அக்கோட்டையை அமைத்த இடமும் எவ்வளவு அழகாய் இருக்கிறது பார் அதுமட்டுமல்ல. அழகான உன்னை என்னிடம் அனுப்பியும் வைத்திருக்கிறான். இவன் சாதாரண ரசிகனல்ல.''

''அனுப்பி என்ன பயன்?''-

''ஏன் ஏன்? என்னாகிவிட்டது?''-

''அதை வேறு சொல்ல வேண்டுமாக்கும் நான்?

''ஓ! அதற்கு போய் விட்டாயா நீ? வேண்டாம் மேகலை''

''ஏன் வேண்டாம்?''-

''நான் பொல்லாதவன்''-

''நம்ப முடியாது''-

''பிறகு நீதான் கஷ்டப்படுவாய்''

''எதற்கு?''-

''எதற்கா? உடல் வலிக்கும்''

''வலிக்கட்டும்''-

''அப்படியானால் சரி''-என்று கூறிவிட்டு ஒரு பார்வை பார்த்தான் பழையன். அது யமப்பார்வையாய் இருந்தது. அப்பார்வை அவன் எந்த அளவிற்குப் பொல்லாதவன் என்பதையும் உணர்த்தியது. பேச்சில் காட்டிய தைரியம் மேகலைக்குத் தற்போது இல்லை.



அவனது பார்வையை எதிர்கொள்ளவே இயலவில்லை அவளால். எனவே முரட்டுப் பார்வையைச் செலுத்தி கைகளை எடுத்து அவன் அவளது இடையில் செலுத்தியபோது அவளுடல் நடுங்கியது. இடையில் செலுத்திய அவனது கைகள் அழுந்தியபோது அவளது கைகள் அவனது கைகளைப் பிடித்தன அச்சத்தால். இடையில் அழுந்திய கை இடைச் சதையை சீண்டியபோது ''வேண்டாம்?'' என்றாள் அவள்.

''வேண்டாமா? எது வேண்டாம்?'' என்று கேட்டான் பழையன்.

''இது-இது'' என்று எதோ குழறினாள் அவள் தெளிவாகப் பேச முடியாமல்.

◈◈◈

முரசு ஏழு

# ஒற்றைப் பேரிகை

சுகம் வேண்டுமென ஏறக்குறைய நேராகவே கேட்டவள் அதனைத் தரும் பொருட்டு காதலன் முற்பட்ட போது ஏற்பதற்கு பதில் 'வேண்டாம்' என உடல் நடுங்க நாக்குழறினாள் மேகலை. எதை சற்றே நாணமின்றிக் கேட்டாளோ அதை வேண்டாமெனச் சொல்ல முற்பட்ட போது வார்த்தைகள் சரிவர வெளிப்படவில்லை. பெண்களுக்கு உண்டாகும் ஆசை அளவற்ற ஆசையாய் இருக்கலாம். அதே சமயம் அதைத் துய்க்கும்போது இயல்பான நாணத்தையும் அச்சத்தையும் காட்டாமலிருக்க அவர்களால் முடிவதில்லை. ஆசை வெட்கமறிவதில்லைதான். ஆனால் அது அனுபவமாக அமையும் போது வெட்கமடையாமல் இருப்பதில்லை.

இத்தனைக்கும் மேகலை பக்குவப்படாதவளல்ல. அன்பு பற்றியும் ஆசை பற்றியும் பழையனுக்குச் சொல்லித் தந்தவளே அவள்தான். இருப்பினும் கூட அவன் பார்வையும் ஸ்பரிசமும் பட்டபோது மெழுகாய் உருகினாளென்றால் அது பெண்ணின் இயற்கையான பலவீனம் தான்.

அவளது பேச்சிற்கும் போக்கிற்கும் சம்மந்தமில்லாமல் செய்துவிட்ட பலவீனத்தைக் கண்டு உள்ளுக்குள் சிரித்துக் கொண்ட பழையன் ''மேகலை'' - என்று மெல்ல அழைத்தான்.



'ம்'- என்ற ஒற்றை எழுத்து மட்டும் எழுந்தது அவளிடம்.

'ஏன் உன் உடல் இப்படி நடுங்குகிறது? ஏன் வேண்டாம் என்கிறாய்? கேட்டதே நீதானே?'-

'ம்'- முனகினாள் அவள்.

'பின் ஏன் தயக்கம்? பயமா?'-

'ம்'- மீண்டும் அப்படியே முனகினாள்.

''பயமெதற்கு மேகலை? நானென்ன புதியவனா உனக்கு?''

'உஹூம்'

''இதற்கு முன் உன்னை தொட்டதே இல்லையா நான்?''

'ம்'

'நாம் பழகி பல காலம் ஆகிவிட்டதே, தெரியாதா?'

'ம்'

''பின் எதற்கு பயம்?''- என்று கூறி இடையில் இருந்த கைகளை எடுத்து அவளது முகத்தைத் தனக்காகத் திருப்பி உயர்த்திப் பிடித்த அவன், ''என்னைப் பார் மேகலை. பயத்தை விடு. இது அர்த்தமற்றது''- என்றான்.

அவள் அவனது பிடியிலிருந்து விலகி ''எப்படி?''- என்று கேட்டாள்.

'இன்றில்லை என்றாலும் என்றாவது ஒரு நாள் உன்னைத் தொட்டுத் தானே ஆக வேண்டும்? அப்போது என்ன செய்வாய்?'-

'தந்தை...'

'அவருக்கென்ன?'-

'என்னை அவர் சிறை வைத்ததை மறந்து விட்டீர்களா?'

'ஓ! மறந்துதான் விட்டேன். அதென்ன உன் தந்தை அப்படிச் செய்து விட்டார்? என்னைத் தெரியாதா அவருக்கு?

'தெரியும்'

'பிறகேன் தடை போட வேண்டும்?'-

'நான் உங்களை'.

'சொல் மேகலை'

'மணக்கக் கூடாதாம்'

'தந்தையா சொல்கிறார்? ஏனாம்?'-

'தெரியவில்லை'-

'கவலைப்படாதே மேகலை. நானே கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்'

''தெரிந்து கொண்டு?''-

'இதென்ன கேள்வி? தெரிந்து கொண்டு என்ன செய்ய வேண்டுமோ செய்கிறேன்'-

'அவர் பிடிவாதக்காரர்'-

'பிடிவாதம் அவருக்கு மட்டும் சொந்தமில்லை'-

'பழி பாவத்திற்கு அஞ்சமாட்டார்'



'உன் விஷயத்தில் நானும் அப்படித்தான்'

'அவர் என்னைப் பெற்றவர்'

'அதனால் உனக்குத் தடைபோட முடியாது'

'இயற்கையே தடை போட்டால்?'

'உடைப்பேன்'

'விதியை உடைக்க முடியுமா?'

'மதியால் முடியும்'-இப்படிச் சொல்லிய பழையன் 'வீணாக அலட்டிக் கொள்ளாதே மேகலை. என்னை வெறுப்பதற்கோ விலக்குவதற்கோ உன் தந்தைக்குக் காரணமெதுவும் இல்லை. ஏதோ குழம்பிப் போயிருக்க வேண்டும். இல்லையென்றாலும் கவலைப்பட வேண்டாம். நான் உயிரோடு இருக்கும்வரை உன்னை எவனும் தொடமுடியாது. உன்னைத் தொட்டு மனைவியாக்கும் வரை என் உயிர் போகவும் போகாது. வா. மிகவும் நேரமாகிவிட்டது. கோட்டைக்குள் போவோம்'-

அவனது பேச்சு ஓரளவிற்கு ஆறுதலை அளித்ததால் அவ்விடத்தை விட்டு எழுந்து சந்தனக் கோட்டையை நோக்கி அவனுடன் நடந்தாள் மேகலை. விடிவதற்குக் கொஞ்ச நேரமே இருந்ததால் இருளின் கறுப்பு சற்றே அழிய தொடங்கிக் கொண்டிருந்தது. நள்ளிரவு வரை திகிலை உண்டாக்கக் கூடியதாயிருந்த வனவிலங்குகளின் கூச்சல் நின்று போய் பொழுது விடிவதை உணர்த்த முற்படுவது போல் சிற்சில பறவைகள் கிரீச்சிட்டன. மலையருவியின் ஆரவாரம்கூட மந்தப்பட்டுக் கொண்டிருந்தது.

கோட்டைக்குப் போகும் வழியில் 'மேகலை, உன்னை விரைவிலேயே இங்கிருந்து அனுப்பி விடுவார்கள் என்று தோன்றுகிறது. ஆனால் எங்கு அனுப்புவார்கள் என்பது தெரியாது. எங்கு அனுப்பினாலும் சரி கவலைப்படாமலிரு. உன்மீது எனக்கு ஒரு கண் இருந்து கொண்டிருக்கும். நம் பாண்டிய நாட்டைச் சதிமேகங்கள் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. பெரும் போர்களுக்கான ஆயத்தங்களை நான் பார்க்கிறேன். ஆகவே நீ எங்கு அனுப்பப்பட்டாலும் எப்படியாவது மதுரைக்குப் போய்விடு. அங்கே நீ இருக்க வேண்டிய இடம் உனக்கே தெரியும்'-என்று சொல்லி வைத்தான் பழையன்.

பின் இருவரும் கோட்டை வாயிலை அடைந்தபோது அங்கே பழையனுக்கு ஏற்கெனவே பரிச்சயமான சேரர் பணியாள் நின்று கொண்டிருந்தான். அவனிடம் பேசமுற்பட்டு 'வீரரே, கோட்டைக் கதவு திறந்திருந்ததே எப்படி?'- என்று கேட்டான் பழையன்.

'உத்தரவு அப்படி.' என்றான் பணியாள்.

'கதவைத் திறந்து வைத்திருக்கும்படியா உத்தரவு?'

'ஆமாம் படைத்தலைவரே'

'கோட்டையின் காவல் அமைப்புகளைப் பற்றிச் சொன்னீர்கள் அல்லவா?'

'ஆமாம்'

'மிக பயங்கரமானவை என்று சொன்னதாக நினைவு'

'ஆமாம்- எப்போதுமே அவை பயங்கரமானவை தான்'



'இதிலிருந்து தப்புவது முடியாத காரியம் என்றெல்லாம் சொன்னீர்'

'ஆமாம். சொன்னேன்'

'அப்படியிருக்கும்போது கோட்டைக் கதவுகளைத் திறந்து வைத்திருப்பதில் என்ன அர்த்தமிருக்கிறது?'

'ஏன்? என்ன அர்த்தமில்லாமல் போய்விட்டது படைத்தலைவரே?'

'கோட்டையை விட்டு வெளியே வந்து விட்டபின் தப்பிச் சென்றுவிட முடியாதா?'

'படைத் தலைவரே, நான் ஏற்கனவே புலிகளைப் பற்றியும் சிங்கங்களைப் பற்றியும் சொல்லியிருக்கிறேன்.'

'பேய்களைப் பற்றியும் கூடச் சொன்னீர்'-

'இன்னொன்றையும் கேளும். இந்தக் காட்டையடுத்து நாற்புறங்களிலும பலத்த காவல் இருக்கிறது. அக்காவல் இரவிலும் உண்டு. பகலிலும் உண்டு. ஒரு ஈ காக்கை கூட காவல் வீரர்கள் அறியாமல் காட்டை விட்டுப் போக முடியாது. புலி முதல் பேய் வரை சமாளித்து விடக் கூடியவர்கள் இக்காவல் வீரர்களிடம் நிச்சயம் சிக்கிவிடுவார்கள். ஆகவே மன்னர் இடும் உத்தரவுகளும் சரி, செய்கிற காரியங்களும் சரி அர்த்தமுள்ளவை களாகவே இருக்கும்'

'எங்களை வெளியே அனுப்பியதில்கூட அர்த்தமிருக்க வேண்டும்'-

'சங்கடமான விஷயத்திற்கு என்னை அழைத்து வந்து விட்டீர்கள் படைத்தலைவரே. இருந்தாலும் நான் எதுவும்

மறைப்பதற்கில்லை. உத்தரவு அப்படி' என்று விஷமப் பீடிகை போட்ட அப்பணியாள் 'படைத்தலைவரே, இக் கோட்டை மணமானது. மற்றும் அழகானது. ஆனால் சிறியது. இதற்குள் காதலர்கள் ஓடியாட முடியுமா?'- என்று கேட்டான்.

பழையன் புரிந்து கொண்டான். 'சரிசரி. உமது மன்னர் செய்வதெல்லாம் அர்த்தமுள்ளவைகள்தான்'- என்று ஒப்புக்கொண்டு விட்டு அவளுடன் உள்ளே சென்றான்.

கோட்டைக் கதவு சாத்தப்பட்டது. அதையடுத்து இதர கதவுகள் சாத்தப்படும் ஓசையும் கேட்டது. அதையுமடுத்து பெரிய சங்கொலி ஒன்றும் கேட்டது.

காவல் ஏற்பாடுகள் இறுகி விட்டதை உணர்ந்து கொண்டான் பழையன்.

பள்ளி அறைக்குச் சென்றான். அறையின் கதவுகளைச் சாத்தவும் முற்படவில்லை.

மேகலையை மஞ்சத்தில் படுக்கச் சொல்லிவிட்டு அவளுக்கருகிலேயே அவனும் படுத்துவிட்டான்.

இரவு நிகழ்ச்சிகளாலும் கண் விழிப்பினாலும் பெரும் அசதி ஏற்பட்டிருந்ததால் படுத்த சிறிது நேரத்திலேயே உறங்கியும் விட்டான்.

பிறகு கண் விழித்து பார்த்தபோது அறையில் மேகலை இல்லை.

'எங்கே அவள்?'-என்று அவன் விசாரிப்பதற்கு முன் 'நீராடப் போயிருக்கிறார்கள். நீங்கள் விரும்பினால் நீராடலாம். தயாராக இருக்கிறது' என்றான் அறைவாயிலில் காத்திருந்த பணியாள்.



அதையடுத்து பழையனும் நீராடினான். பிறகு இருவருக்கும் புத்தாடைகள் தரப்பட்டன. அதையடுத்து கோட்டையின் பிரதான கூடத்தில் உணவிடப்பட்டது. ஏறக்குறைய விருந்தாளிகளைப் போலவே நடத்தப் பட்டார்கள் அவர்கள்.

அன்றும் சரி அதற்கடுத்த நாளும் சரி இருவருமே அது போன்ற உபசாரங்களைப் பெற்றார்கள்.

இந்த இரண்டு நாட்களிலும் இருவருமே கோட்டையை விட்டு வெளியே செல்லவே இல்லை.

உள்ளேயே பொழுதைப் போக்கினார்கள். சில நேரங்களில் அவள் பாட அவன் ரசித்தான். சில நேரங்களில் அவன் பாட அவள் ஆடினாள். சில நேரங்களில் இருவரும் சொக்கட்டான் ஆடினார்கள். சில நேரங்களில் அவளை உட்காரவைத்துக் கொண்டு கதைகளைச் சொன்னான் பழையன்.

பாண்டிய மன்னர்களின் சரித்திரங்களைச் சொன்னான். அதில் சம்பந்தப்பட்ட கோவலன்-கண்ணகி பற்றியும் சொன்னான். அவ்வப்போது மாதவியைப் பற்றிச் சொல்லி அவளை வம்புக்கிழுத்தான். 'கண்ணகிபோல் வாழக்கூடாது' என்று சொல்லி அவளை திடுக்கிட வைத்து பின் 'அதனால்தானே அவள் துன்பப்பட்டாள்?' என்று கூறி அவன் சிரிப்பதுண்டு. 'மாதவியும் தான் துன்பப்பட்டாள்!' என்பாள் அவள். 'ஏன் அவள் மாதிரி வாழ விருப்பமா?' என்று சீண்டுவான் அவன், 'பின் யாரை மாதிரி வாழ்வது?'- என்று கேட்பாள் அவள். 'நமது பாண்டிய மாமன்னரின் பாட்டனார் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனைத் தெரியுமா?'

பொற்கொல்லனின் பேச்சைக் கேட்டுத் தவறிழைத்ததை உணர்ந்ததுமே மாண்டார். அதே கணத்தில் அவருடனே சேர்ந்து மாண்டார் அவரது தேவியாரான கோப் பெருந்தேவியார். வாழும்வரை கணவரோடு சிறப்பாக வாழ்ந்து அவர் வீழ்ந்ததுமே தன்னையும் வீழ்த்திக் கொண்ட தூய பத்தினி அவர். கண்ணகி பேரில் கூட குறை சொல்ல முடியும். இத்தேவியார் மீது சொல்ல முடியாது மேகலை. நீ வாழ்வதானால் அந்த உத்தம தேவிபோல் வாழவேண்டும்' என்பான் பழையன்.

இப்படி சிரிப்பும் சிந்தனையும் அளிக்கும் காரியங்களையே செய்து காட்டுக் கோட்டையின் தனிமையைப் போக்கி கலகலப்பாக்கினான். காவல் வீரர்களுக்கும் பணியாளர்களுக்கும் அவனது போக்கு ஒருபுறம் மகிழ்ச்சியை அளித்தாலும் மறுபுறம் ஒருவித சந்தேகத்தையே அளித்தது. இப்படி பாட்டும் கூத்துமாய் இருப்பது போல் நடித்து தப்பி விடுவானோ என்னவோ என்று உள்ளூர பயந்தார்களாதலால் கூர்மையான காவலை மட்டும் விடவில்லை.

இரண்டாம் நாள் இரவு மேகலையும் அவனும் வழக்கம் போல் பள்ளியறையில் அமர்ந்து கொண்டு பாடிக்கொண்டிருந்தார்கள். பாடுவதோடு நில்லாமல் பாடிய பாட்டை பள்ளியறைச் சுவர்களில் கையில் கிடைத்த கரியைக் கொண்டு எழுதவும் முற்பட்டான் பழையன். வழவழத்த சந்தனச் சுவற்றில் தீபஒளியில் அவன் எழுதிய எழுத்துக்கள் மிகப்பயங்கரமாகக் காட்சியளித்தன், ஏதோ சேரமன்னனுக்கு எதிராக எழுதப்பட்ட வெஞ்சினம் போல்.



வெளியே இருந்த பணியாளனுக்கு பழையனின் செயல் ஒரு மாதிரியாக இருந்தது. அழகான சுவர் இப்படி பாழாவது அவனுக்குப் பொறுக்கவில்லை. அதே சமயம் பழையனைத் தடுக்கவும் இயலாதவனாய்த் தவித்தான். தடுக்காமல் விட்டால் பள்ளியறைச் சுவர் முழுவதும் கறுப்பாகிவிடும் என்பதை உணர்ந்த அவன் சற்றே துணிந்து 'படைத்தலைவரே, சுவரை ஏன் பாழடிக்கிறீர்?'- என்று மெல்லக் கேட்டான்.

'என்ன கேட்டீர்?'- காதில் விழாதது போல் கேட்டான் பழையன்.

'சுவரை ஏன் பாழ்படுத்துகிறீர் என்று கேட்டேன்?'-

'வீரரே. நீர் மணமானவர்தானே?'- கேட்டான் பழையன்.

'அதற்கென்ன இப்போது?- எரிந்து விழுந்தான் பணியாள்.

பழையன் விடவில்லை. 'கேட்டதற்கு பதில் சொல்லும்'- என்றான் மிரட்டுவது போல்.

'ஆமாம். மணமானவன்தான்'

'பெண்ணைத்தானே மணந்து கொண்டிருக்கிறீர்?'-

'ஆண் ஆணையா மணப்பான்?'-

'கேட்டதற்கு மட்டும் பதில் சொன்னால் போதும்.'

'படைத்தலைவரே, இதென்ன மிரட்டுவது போல் கேட்கிறீர்கள்?'

'வீரரே என்மீது தவறில்லை.'

'எப்படி?'-

'நானா உம்மை பேசச் சொன்னேன்.'

'இல்லை.'

'நீராக வாயைத் திறந்தபின் அதன் பலனை அனுபவிக்க வேண்டாமா? நீர்?'-

'நான் வாயைத் திறந்தது என் திருமணத்தைப் பற்றியல்ல.'

'எதுவானாலும் சம்பந்தம் வந்து விட்டது வீரரே'

'சம்பந்தமா?'

'ஆம். அதைச் சொல்லத்தான் பேசுகிறேன். அதற்குள் உமக்கு அவசரம். ஆத்திரம்'

'சரி சரி. கேளுங்கள்'

'வீரரே'

'ம் என்ன?'

'உமது மனைவி அழகானவளா?'

'என்ன?'

'பதில் சொல்லும் வீரரே கோபமெதற்கு? உமது மனைவி உம்மைப் போல் அழகானவள் தானே?'

'ஆமாம்'

'அவள் மீது நீர் அன்பு செலுத்துகிறீரா?'

'அதைப்பற்றி உமக்கென்ன?'

'வீரரே நான் இதோ-இங்கே பாருங்கள் இவள்தான் மேகலை. இவள்மீது அன்பு செலுத்துகிறேன். சாதாரண அன்பல்ல. பேரன்பு. என் உயிரை விட்டாலும் விடுவேன். ஆனால் அன்பைவிட மாட்டேன்.'



'அதற்கென்ன?'

'அந்த அன்பின் முகவரிதான் நான் பாடும் பாடல் இவள் ஆடும் ஆடல்'

'சரி'

'அந்த அன்பின் முகவரியைச் சுவரெல்லாம் எழுதி மகிழ்கிறேன். இது தவறா?'-

'இதைச் சொல்லவா இவ்வளவு பேச்சு?'-

''எதையும் விவரமாகச் சொல்ல வேண்டும் வீரரே. அப்போது தானே புரியும்?''

''அதிருக்கட்டும். உமது அன்பைக் காட்ட கரியும் இச்சந்தனச்சுவரும் தான் கிடைத்ததா?''-

''வேறென்ன இருக்கிறது வீரரே? நான் என்ன புலவனா? இல்லை இதென்ன சங்கப் பலகையா?- சுவடி எழுதி நீரில் விட? இருப்பதில் சுகம் காணுவதில்தான் நியாயம்''

''ஒன்றும் வேண்டாம். எழுத்தாணியும் சுவடியுமே தருகிறேன். அதிலேயே எழுதி எழுதிப் படியும்''-

'வேண்டாம்'

'வேண்டாமா? ஏன்?'

'சுவர் தான் அழகாயிருக்கிறது'

'படைத்தலைவரே விளையாட வேண்டாம். இந்தச் சுவர் கறுப்பாகிக் கொண்டிருப்பதை நான் அனுமதிக்க முடியாது''

''வீரரே, நீர் நல்ல மனத்தோடு எழுத்தாணியும் சுவடியும் தருகிறீர். நானதைத் தவறாகப் பயன்படுத்திக் கொண்டால்?''

''தவறாகவா?''

''ஆம். என் ஆட்களுக்குச் செய்தியனுப்ப பயன்படுத்திக் கொண்டு விட்டால்?''

''அதையும் தான் பார்த்து விடுகிறேன்''- என்று கூறிய அந்தப் பணியாள் ''அது அவ்வளவு எளியதல்ல படைத்தலைவரே. வீணாக மிரட்ட வேண்டாம்'' என்று கூறி உள்ளே போய் சில ஓலைச் சுவடிகளையும் எழுத்தாணி ஒன்றையும் கொண்டு வந்து உள்ளே எறிந்து விட்டு அங்கே நிற்கவும் செய்யாமல் அகன்றான்.

ஆனால் பழையன் அவற்றைத் தொடவுமில்லை. ''மேகலை, நேரமாகி விட்டது. படுத்துக்கொள்''- என்று கூறி அவளைப் படுக்க வைத்து அவனும் படுத்துக் கொண்டான்.

சிறிது நேரம் சென்றிருக்கலாம். காட்டுப் பகுதியில் தொலைவிலிருந்து ''டம்டம்'' என்று ஒற்றைப் பேரிகை யொலியொன்று எழுந்தது. அதைக் கேட்டதும் எழுந்து உட்கார்ந்தான் பாண்டியர் படைத்தலைவன். ஒலியைக் கூர்ந்து கவனிக்கவும் செய்தான். பேரிகையொலி சீராய் இருந்தது. விட்டு விட்டு ஒலித்தது. அவ்வொலி தன் இதயத்திலிருந்தே எழுவதாய் இருந்தது பழையனுக்கு. நடவடிக்கையில் இறங்க வேண்டிய கட்டாயம் நெருங்கி விட்டதையும் உணர்ந்தான்.

◈◈◈

முரசு எட்டு

# திருப்பரங்குன்றம்

ஒற்றைப் பறையொலியைக் கேட்டதும் நடவடிக்கை யில் இறங்க முற்பட்ட பழையன் மேகலையைத்தட்டி எழுப்பினான். அவள் எழுந்தவுடன் காதில் ஏதோ சொல்லிவிட்டு உதடுகளைக் குவித்து சற்றே மடித்து விசித்திரக் குரலொன்று எழுப்பினான் குயிலைப்போல். பிறகு அவளைப் பார்த்து ''ஏதோ நீ கூவு பார்க்கலாம்'' என்று கூறி அவளைக் கூவ வைக்க முயன்றபோது ''யாரிங்கே கூவியது?''- என்று கேட்டபடி அறை வாசலில் வந்து நின்றான் ஒரு காவல் வீரன்.

அவனது கேள்வியைக் காதில் வாங்கிக் கொண்ட பழையன் ''இக் கேள்வியை ஏன் இந்த அறையில் வந்து கேட்கிறாய்?'' என்று கேட்டான். அவனது குரலில் அதுவரை பணியாட்களிடம் காட்டி வந்த மரியாதை இல்லை.

''குரல் இங்கிருந்துதான் வந்தது''- என்றான் காவல் வீரன்.

'பிறகு ஏன் கேட்கிறாய்?'- என்றான் பழையன்.

காவல் வீரனுக்கு ஒரு கணம் என்ன பேசுவதென்று புரியவில்லை திடீர்க் குழப்பத்தால்.

பிறகு சமாளித்துக்கொண்டு ''நீங்கள்தான் கூவினீர்களா?'' என்று கேட்டான் விசாரிப்பது போல்.

''தெரிந்த விஷயத்தைக் கேட்டு ஏன் தொல்லை செய்கிறாய்? போய் வா''- எரிச்சலுடன் சொன்னான் பழையன்.

'எதற்காகக் கூவினீர்கள்?'- விடாமல் கேட்டான் வீரன்.

'உன்னிடம் சொல்லி விட்டுத்தான் கூவ வேண்டுமா?'

'சொல்லிவிட்டுக் கூவ வேண்டியதில்லை. கூவிய பின்பாவது சொல்லலாம் இல்லையா?'' சாமர்த்தியமாகக் கேட்பது போல் கேட்டான் காவல் வீரன்.

பழையன் அவனிடம் பேசுவதை நிறுத்திக் கொண்டு மேகலையைப் பார்த்து ''சரி, நீ கூவு மேகலை. அனாவசிய பேச்செதற்கு?''- என்று சொல்லி உதடுகளை எப்படி குவிக்க வேண்டும் என்றும் மடிக்க வேண்டும் என்றும் சொல்லிக் கொடுக்கலானான்.

அவள் அவனைப் போல் கூவ முடியாமல் கொடூர மாகக் கூவினாள்.

''அப்படியில்லை மேகலை. உதட்டை இப்படி வைத்துக்கொண்டு மூச்சை இழுத்து விடு...'' என்று பாடத்தைத் தொடர்ந்தான் பழையன்.

அவள் மீண்டும் சரிவரக் கூவவில்லை. ''இதென்ன மேகலை, இப்படிக் கூவுகிறாய்? ஏற்கெனவே கோபமாய் இருக்கும் காவல் வீரர் மேலும் மேலும் ஆத்திரப்படப் போகிறார். இதோ பார். என் உதடுகளை கவனி'' என்று கூறி கூவினான் அவன்.

தற்போது அவளும் சரியாகக் கூவினாள்.



அவனும் கூவினான்.

இருவரும் மாறி மாறி கூவினார்கள்.

காவல் வீரன் காதைப் பொத்திக் கொண்டு அகன்றான் வேறு வழியில்லாமல்.

கூவல் சிறிது நேரம் அவ்வாறே தொடர்ந்தது.

அதையடுத்து அறையின் காற்று துவாரத்தில் தலை காட்டியது பழையனின் காட்டுப்புறா. சிறகடிக்கவும் செய்தது.

பழையன் அதைக் கண்டபின் மேகலை அணிந்திருந்த சேலையின் ஒரு முனையைச் சற்றே கிழித்தான். எழுத்தாணி கொண்டு எதையோ கீறினான். பிறகு சேலைக் கிழிசலை சுருட்டினான்.

கூவினான்.

புறா அவன் மடியில் வந்தமர்ந்தது.

அதன் இறக்கையை விரித்தான். உள்ளே எதையோ தேடுவது போல் கை விரலை விட்டு ஆராய்ந்த பின் சேலைக் கிழிசலை எடுத்து ஆராய்ந்த இடத்தில் வைத்தான். புறா இறக்கைகளை ஓரிரு முறை அசைத்தது. அதைத் தட்டிக்கொடுத்த பழையன் கைகளிலிருந்து விடுவித்தான். வந்த இடம் வழியாகவே புறா மறைந்தது.

ஏதோ மந்திரவித்தைபோல் நடந்து முடிந்த காரியத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த மேகலை 'புறாவை வரவழைக்கத்தான் இந்த நாடகமா?' என்று கேட்டாள்.

தலையை ஆட்டிய அவன் 'அது என் நண்பன். என்னோடு எப்போதும் வரும். நான் அனுப்பும் இடத்திற்குப் போகும். அதைவிடச் சிறந்த தூதுவன் எனக்கு வேறில்லை. மதுரையிலிருந்து என்னுடன் வந்த இப்புறா இக்காட்டிலேயே தங்கியிருக்கும். அதைக் கோட்டைக்குள் அழைக்கத்தான் நாம் மாறி மாறிக் கூவினோம். தவறாமல் வந்துவிட்டது பார்' என்றான்.

'திட்டமிட்டுத்தான் செய்திருக்கிறீர்கள்'

'ஆம் மேகலை. நீ வந்தபின் செய்தியனுப்ப உன் சேலை கிடைத்தது என்று தீர்மானித்தேன். செய்தியை பொறிக்க எழுத்தாணி வேண்டுமே- அதற்காகத்தான் கரியைக் கொண்டு குட்டி நாடகமாடினேன். எதிர்பார்த்த படி எழுத்தாணி கிடைத்தது. பிறகென்ன கவலை? கூவினேன். புறாவும் வந்தது'-

'பெரிய ஆள் நீங்கள். ஆமாம் - எங்கே தூதனுப்பினீர்கள்?' என்று கேட்டாள் மேகலை.

அவன் பதில் சொல்வதற்குள் அதிர்வேட்டு ஒன்று முழங்கியது. இரண்டு காவல் வீரர்கள் அவனது அறைவாசலில் வந்து நின்றார்கள்.

அவர்களைப் பார்த்து 'அதென்ன வெடி சத்தம்?'- என்று கேட்டான் பழையன்.

'தலைவர் வருகிறார்'- என்றான் காவலன்.

'தலைவரா? யாரவர்?'

'படியூர் நிர்வாகி'

'யார் நன்னனா?'-

'அவரே தான்'



'எதற்கு வருகிறார்?'-

'உம்மைப் பார்க்கத்தான்'-

பழையன் அதோடு பேச்சை நிறுத்திவிட்டு யோசனையில் ஆழ்ந்தான்.

ஃ ஃ ஃ

ஆறுமுகனே என்றும்...

சிவ பெருமானின் செல்வனே என்றும்-

மலைமகளின் மைந்தனே என்றும்

கொற்றவையின் குழந்தையே என்றும்...

பகைவரின் கூற்றுவனே என்றும்...

தேவரின் தலைவனே என்றும்...

கடம்ப மலர் கொண்டவனே என்றும்...

போர்த்தொழிலில் வல்லவனே என்றும்...

பொருதும் போது வெற்றியடைபவனே என்றும்...

அந்தணரின் செல்வமே என்றும்

வள்ளி தெய்வயானை மணாளனே என்றும்-

புகழால் புனைந்த பெருமலையே என்றும்...

வலிய வீரர்களுக்கு காளையானவனே என்றும்

வேலேந்திய கரங்கொண்டவனே என்றும்...

கிரவுஞ்ச மலையினைப் பிளந்தவனே என்றும்...

குறிஞ்சி மலைக்கு உரியவனே என்றும்...

சொல்வளப் புலவருக்கு ஏறு போன்றவனே என்றும்...

அரிய பெரும்பொருளாகிய வீட்டினை உடையவனே என்றும்...

வீட்டினை விரும்பி அடைபவர்க்கு அதனை அளிக்கும் அருளாளனே என்றும்...

துன்புற்றோர்க்கு இன்பருள் அளிக்கும் பொன்னணி அணிந்த சேயே என்றும்...

போர்புண் மலிந்த மார்பினால் இரவலரைத் தழுவி வேண்டியவை அளித்துப் பாதுகாக்கும் நெடியவேளே என்றும்...

தேவரும் முனிவரும் வணங்கும் திருப்பெயரினைத் தாங்கியவனே என்றும்...

சூரனின் குலமறுத்த மதவலியே என்றும்...

பேராண்மை மிகுந்த தலைவனே என்றும்...

இதமாற போற்றி மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார் வணங்கித் துதித்தவனும் தமிழரின் பெருங் கடவுளும், பல்லாயிரம் திரு நாமங்கள் கொண்டவனும் காட்சிக்கு எளியவனும், அருளாட்சிக்கு அரியவனும், மனசாட்சியிலே உறைபவனும், மலையாட்சிக்கு உரிய வனுமான முருகப் பெருமானின் அறுபடை வீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றம் தேவலோகச் சிறப்பைத் தாங்கி தேவர்களே திணறும் தெய்வீக அழகோடு காட்சி தந்தது.

கூடல் மாநகர் மதுரைக்கு மேற்கே தேவேந்திரனின் பிரத்தியேக சித்திரக்கூடம் போல் அமைந்திருந்த அத்திருக்குன்று திருவிழா என்னும் திருவாபரணத்தைப் புனைந்து மணப்பெண் போல் திகழ்ந்தது.

மதுரை ஓர் மன்னன் என்றால் தான் அதன் தேவி என்று பறைசாற்றுவது போல் மதுரையின் சிறப்புகள் பலவற்றில் பங்கு வகித்த அத்தெய்வக்குன்றம் திருவிழாச் சிறப்பினால் பெருநகராய் விளங்கியது.



குமரனிருக்கும் குன்றான காரணத்தால் அமரத்துவம் பெற்றுவிட்டது போல் பார்க்கும் இடமெல்லாம் ஜீவகளை ததும்பிக் கிடந்தது.

அங்கே அமர்ந்துறைந்த குமரனும் குடிமக்களின் உள்ளமெல்லாம் நிறைந்த எளிய இறைவனாயிருந்த காரணத்தால் பரமபக்தரின் உள்ளம் போலவே குன்றம் முழுதும் பரவசத்தில் ஆழ்ந்து கிடந்தது.

அப்பரவசத்தை அக்குன்றைச் சூழ்ந்த திருநகரும் கொண்டிருந்தது.

அகன்ற வீதிகள் அழகுபடுத்தப்பட்டு அனைவரது இல்லங்களும் அலங்கரிக்கப்பட்ட தேர்களைப் போல் அளப்பரிய பொலிவோடு இலங்கின.

இல்லந்தோறும் ஏற்றப்பட்டிருந்த கொடிகள் அங்கே மலர்ந்திருந்த விழாவின் ஏற்றத்திற்கான அடையாளங்க ளாய் இருந்து அவ்விழா எடுத்த பேரரசனை வாழ்த்துவது போல் பறந்தன சடசடவென.

கொடியேற்றியிருந்த குடிமக்களோ கொடியோடு தங்கள் பணிமுடிந்து விட்டதாக முடங்கி விட்டாரில்லை. கொடியேற்றம் என்பது ஏற்றத்திற்கான ஒரு தொடக்கமே என்று உணர்ந்தவர்களாய்-உணர்ந்ததைப் பறைசாற்றுபவர் களாய் செயல்பட்டுக் கொண்டிருந்தவர்களாதலால் ஏதோ மலர் பூங்காவில் லட்சக்கணக்கான வண்டுகள் சுற்றித்திரியும் ஓர் ஈடுபாடு அத்திருப்பரங்குன்றத்தில் உருப்பெற்று பெருகிக் கொண்டிருந்தது.

குன்றக்குமரனைத் துதித்து எழுப்பிய நாவொலிகள் உலகை அசைக்கும் ஓங்காரமாய்-மனித ஆத்மாவின் ரீங்காரமாய்-பக்திப் பெருக்கின் ஆங்காரமாய்...தமிழரின் இதயங்களில் பெருகும் தேன்கீதமாய் குன்றத்து வீதிகளில் ஒலித்து வானில் எதிரொலித்ததால் அதிர்ந்தெழுந்தாற் போல் கீழ்த்திசையில் பளிச்சென எழுந்த கதிரவன் முதல் வணக்கம் செய்வது போல் தன் வெள்ளிக் கதிர்களை அத்திருக்குன்றிலே செலுத்தியதால் பொற்குன்றம் போல் தோன்றியது அத் தெய்வமலை.

விண்ணுக்கும் மண்ணுக்கும் நிரந்தரத் தூதுவர்கள் போல் செயல்படும் பறவையினங்கள் தங்களுக்கு அரிய வாய்ப்பொன்று கிடைத்த மாதிரியும் அவ்வாய்ப்பு அழகுபடுத்தவே கிடைத்தமாதிரியும் எண்ணிச் செயல் படுவது போல் குன்றத்திற்கும் திருநகருக்குமாய் பறந்தன. சுற்றின. கீதமிசைத்தன.

குமரனின் குன்றம் கோயில் தேவசிற்பமாய் இருந்தது. தேவசிற்பி மயனுக்கே மயக்கம் தரத்தக்க மரகத மாடமாய் திகழ்ந்த ஆலயத்தில் பூசைமணி இடைவிடாமல் ஒலித்தது. அம்மணியை நிகர்க்கும் வேத ஒலிகளை குமரன் கோயிலில் தெய்வப்பணி புரிந்த கூளியர்கள்* எழுப்பினார்கள்.

* அக்காலத்தில் முருகன் கோயில்களில் உடனிருந்து பணி செய்பவர்களும் மன்னர்களுக்கு அருகிலிருந்து பணிபுரிபவர்களும் கூளியர் என்று அழைக்கப்பட்டார்கள். தம்முள் ஒருவருக்கொருவர் ஒவ்வாத பல்வேறு வடிவங்களில் அவர்கள் இருந்தார்கள். இவர்களைப் பற்றி சங்க இலக்கியங்களே தெரிவிக்கின்றன.

"சூர்நவை முருகன் சிற்றத் தன்னநின்
கூர்நல் அம்பிற் கொடுவிற் கூளியர்" புறம் - 23

"வேறுபல் உருவின் குறும்பல் கூளியர்" (திருமுருகாற்றுப்படை)



குன்றத்தைச் சுற்றிலும் மாதர்கள் தங்கள் வழி பாட்டைத் தொடங்கியிருந்தார்கள். அதற்கு அடையாள மாக அவரவர்களும் கோழிக் கொடிகளை நட்டு அதன்மீது நெய்யையும் கடுகையும் தெளித்திருந்தார்கள். தங்களுக்குள்ளேயே மந்திரங்களை ஓதியபடி மலர்களைத் தூவினார்கள். இரு நிறமுள்ள ஆடைகளை அணிந்து கையிலே சென்னிறக் காப்பிட்டு வெண்பொரியினைத் தூவினார்கள். மணற்திட்டுக்களில் வைத்து பலியிட்ட ஆட்டுக் கிடாக்களின் ரத்தத்தில் தோய்த்த வெண் அரிசியை நிவேத்தியமாய்ப் படைத்தார்கள். கணக்கற்ற தானிய வகைகளையும் பெரும் கூடைகளில் படைத்து சந்தனத்தையும் மஞ்சளையும் தெளித்தார்கள். அலரிப்பூக்களாலான மாலைகளைத் தோரணம் போல் கட்டித் தொடங்கவிட்டார்கள். அகில் முதலிய வாசனைப் பொருள்களால் மணப்புகையை எழுப்பி குறிஞ்சி யாழ் கொண்டு இன்னிசைகளை எழுப்பினார்கள். குறிஞ்சி யாழின் அரிய இசையையடுத்து பல்வேறு வாத்திய இசைகளும் எழுந்தன. திருநகரையும் திருப்பரங் குன்றையும் வாழ்த்தி ஒலிகளை எழுப்பினார்கள்.*

அதே நேரத்தில் ஆலயமணியும் கொடுபறையும் ஒலிக்க, அதிர்வேட்டுக்கள் முழங்க குன்றக் குமரனுக்குத் தீபாராதனை நடக்க... முன்னேயிருந்த திறந்தவெளி கூடத்தில் பரம பக்தனாய் நின்றிருந்த பாண்டிய மன்னன் சிரத்தையோடு கரங்களைக் கூப்பினான் இறைவனை நோக்கி. கூப்பிய கரங்களை மலர்த்தியபோது அதில் வந்து விழுந்தது ஒரு புறா. விழுந்ததும் துடித்தது. பின் அசைவற்று நின்றது-உயிர் பிரிந்ததால்.

* மேற்சொன்ன வழிபாட்டு முறை அனைத்தும் திருமுருகாற்றுப் படையில் கூறப்பட்டுள்ளவை தாம்.

முரசு ஒன்பது

# நெடுஞ்செழியன்

கடைச்சங்க காலத்துப் பாண்டியருள் தலைசிறந்தவனாகக் கருதப்பட்ட இக்கதையின் நாயகனான பாண்டியன் நெடுஞ்செழியன் தன் இளம் பருவத்திலிருந்தே தீட்சண்யமும் தெளிவும் கொண்டவனாய் இருந்தான். இளமைக் காலங்களை அவன் வீணாகக் கழித்துவிடவில்லை. அரசர் குல சுக போகங்களைத் தேடி ஓடவில்லை. ஆழ்ந்த சிந்தனைகளில் இறங்கி அரசர்குல உயர்விற்கும் அதன் வளர்ச்சிக்குமான காரியங்களில் முனைந்தான். அதற்கு முதல் முக்கியமானது வீரம்தான் என்று உணர்ந்து அதைப் பயிலவும் தொடங்கினான். பயிற்சியானது பெயருக்கென்றில்லாமல் இதயப்பூர்வமாக இருந்த படியால் வீர உணர்ச்சியானது குறுகிய காலத்திலேயே அவனோடு பிணைந்து அவனது பெரும் சொத்தாயிற்று. அவ்வீரத்தை தேவையான இடங்களிளெல்லாம் காட்டவும் செய்தான். பகை அவனைக் கண்டு பயந்தது. பயமின்றி நெருங்கிய பகைகளை எதிர்கொண்டு அழித்தான். அவனைப் பற்றித் தவறாகப் புறம் பேசவும் பலர் பயந்தார்கள். அந்த வகைகளில் தனிப்பெரும் வீரனானான் செழியன்.

ஆனால் இளவரசு பட்டம் ஏற்று அரசர்குல கடமைக்கு இலக்கானபோது வீரம் மட்டும் ஒருவனுக்குப் போதாது



என்பதை உணர்ந்தான். அதுமட்டுமல்ல. தான் விரும்பிய அரசர் குல உயர்வும் வளர்ச்சியும் சுயநலமானவை என்றும் அவை உயர்வதும் தாழ்வதும் தன்னைப் போன்ற அரச குலத்தவரிடம் இல்லை என்றும் மக்களின் கரங்களிலேயே இருக்கின்றன என்றும் உணர்ந்தான். வீரவுணர்வுகொண்டு முடி சூடிவிட்டாலே ஆளும் தகுதி வந்துவிடாது என்றும் உண்மையில் அது மக்களுடன் கொள்ளும் தொடர்பு பற்றியதே என்பதையும் அறிந்தான். ஆளும் உரிமை வேண்டுமானால் அரச குலத்தவருக்கு மறுக்கப்படாமல் தங்களைத் தேடி வரும். தவிர ஆளும் தகுதியை தாங்கள்தான் தேடிப்போக வேண்டும் என்பதும் அதை மக்களிடையேதான் தேடவேண்டும் என்பதும் அவனுக்குத் தெரிய வந்தன. அனைத்திற்குமே அடிப்படை அரியணையல்ல-அதிலிருந்து கொண்டு யாரை ஆள்கிறோமோ அந்த மக்கள் தான் என்றும் எனவே தன் செயல் ஒவ்வொன்றும் மக்களோடு சம்பந்தப் பட்டதாய் இருக்கவேண்டும் என்று தெளிந்தான்.

அவனது தெளிவிற்கு அவனது பாட்டனார் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியரின் அரசாட்சி ஒரு வழிகாட்டியாய் இருந்தது. அரசாட்சி என்பது உண்மையில் அறசாட்சியாய் இருந்தால்தான் சிறக்கும் என்பதையும் முடி சூடுவது என்பது ஒரு சடங்கேயன்றி மற்றபடி முடிக்கு உரிய சிறப்பெல்லாம் தேடிப் பெற வேண்டிய புதையல் என்பதையும் உணர்ந்தான்.

எனவே இளவரசனாய் இருந்தபோது வீரசாகசங்களில் மட்டுமே ஈடுபட்டுக் கொண்டிருக்காமல் நிர்வாகங் களையும் கவனித்தான். கொற்கையிலும் மதுரையிலும்.

அரசியல் என்னும் ஆழ்கடலின் ஆழத்தை ஓரளவு அறிந்தான். நிர்வாகம் என்னும் நெடுவானத்தின் விஸ்தாரத்தை கணிசமாக உணர்ந்தான். மக்களுடன் சதா பழகியதால் அவர்களின் விருப்பங்களையும் விருப்பமில்லாதவைகளையும் தெரிந்து கொண்டான். தனது அரசாட்சி பின்காலத்தில் எப்படி அமைய வேண்டும் என்பதையும் வரையறுத்துக் கொண்டான்.

அந்நிலையில் அவனது தந்தை வெற்றிவேல் செழியர் குறுகிய காலத்திலேயே மாண்டுவிட்டதால் அவன் மன்னனாக முடிசூடினான்.

அரியணை ஏறி முடியைச் சூடி திங்கள்பல போயிருந்தாலும் அவனுக்கு அவையிரண்டும் அவ்வளவாகப் பழக்கமாகவில்லை. அதற்குக் காரணம் தன் அரசாட்சி பற்றி அவன் ஏற்கெனவே தீர்மானம் செய்து வைத்திருந்ததுதான். மரபால் வரும் சம்பந்தத்தைவிட பண்பால் வரும் சம்பந்தமே அரியணைக்கு ஏற்றது எனக் கொண்டு அப்பண்பை வளர்க்கும் வகையில் அரண்மனை வாசத்தை அவ்வளவாக கொள்ளாமல் தன் சாம்ராஜ்ய மண் விரிந்திருந்த இடமெல்லாம் சென்று அதனை ராமராஜ்யமாக்க உதவும் வழி வகைகளைச் செய்யலானான். விரைவிலேயே அவனது செயல்கள் அவன் உணர்ந்திருந்த அரசியல் தத்துவத்தில் அவனைப் பெரும் வித்தகனாக்கியது.

மரபால் மன்னனானாலும் மக்களால் ஏற்றுக் கொள்ளப்படும் வரை மன்னன் என்ற அந்தஸ்து வெறும் பெயருக்குத்தான் என்பதை உணர்ந்து விவேகமாய் செயல்பட்ட நெடுஞ்செழியன் மக்களால் ஏற்கப்பட்டது



மட்டுமின்றி ஏத்தப்படவும் செய்தான். மன்னனாய் முடிசூடியவனை தெய்வமாய் ஏற்றார்கள் மக்கள். திருப்பரங்குன்றத்துக் குமரன் காவல் தெய்வமாயும் பாண்டிய மன்னன் ஏவல் தெய்வமாயும் ஆனார்கள் அவர்களுக்கு.

இந்த நிலையில்தான் திருப்பரங்குன்றத்து குமரவேல் விழாவை முன்னிட்டு அங்கே விஜயம் செய்திருந்தான் மன்னன். விழா என்றால் அதைத் தங்கள் விளம்பரத்திற்கான வழியாகக் கொள்ளாமல் விழா என்பது மக்களால் மக்களுக்காகச் செய்யப்படும் நிகழ்ச்சி என்றே கருதினானாதலால் விழாவிற்கு ஒருவாரம் இருக்கும் முன்பாகவே அங்கு விஜயம் செய்து ஏற்பாடுகளைக் கவனித்தான். வேண்டியவற்றுக்கு வழி வகுத்தான்.

இப்பாண்டியன் மட்டுமல்ல. அக்கால முடி மன்னர்கள் அனைவருமே விழாக்களை மக்கள் நலத்திற்காகவே சிறப்பாகக் கொண்டாடினார்கள். மன்னன்-மக்கள் என்ற வேற்றுமை பாராமல் ஒன்றிணைந்தார்கள். மக்களின் மகிழ்ச்சியே மன்னனின் மகிழ்ச்சி என்று கருதி அவர்களின் மன உணர்வுகளை மதித்து விழாக்களுக்கு உதவி அரசாட்சி செய்தார்கள்.

இவ்வாறு சோழராட்சியில் நடைபெற்று வந்ததுதான் இந்திர விழா. மக்களின் நல்வாழ்விற்காக சோழ மன்னர்கள் எடுத்த இப்பெருவிழாபற்றி சிலப்பதிகாரம் விரிவாக எடுத்துரைக்கிறது. இவ்விழா மக்களின் விழா என்பதால்தான் ஒருசமயம் சோழமன்னன் கிள்ளிவளவன் என்பவன் இவ்விழாவை எடுக்கத் தவறியதால் கடல்

பொங்கி எழுந்து புகார் நகரை விழுங்கி மக்களுக்குப் பெருந்துன்பம் அளித்ததாக மணிமேகலை கூறுகிறது.*

விழா என்று மட்டுமல்ல பண்டிகைகள் கூட மன்னனாலும் மக்களாலும் சிறப்பு பெற்றன. அக்கால சேர சோழ பாண்டியர்கள் தங்களுக்கென்று தனித்தனியாகச் சொந்தம் கொண்டாடி விழா எடுத்தார்கள். ஒவ்வோர் ஊரும் ஒவ்வொரு பண்டிகை நாளை சொந்தம் கொண்டாடின. அவற்றைச் சிறப்பித்தார்கள்.

மக்கள் நலத்தில் பின்தங்காத பாண்டியன் நெடுஞ்செழியனும் திருப்பரங்குன்றத்து விழாவினை சோழர்களின் இந்திர விழாவிற்குச் சமமாகக் கொண்டாடினான். **அப்படிச் சிறப்பாகக் கொண்டாடும் பொருட்டு வெறும் ஆணைகளை மட்டும் பிறப்பித்து விட்டு நிற்காமல் விழாவிற்கு ஒரு வாரத்திற்கு முன்பாகவே விஜயம் செய்து ஏற்பாடுகளை நேரில் கவனித்தான். விழாவின் பிரதான நிலைக்களனான முருகன் ஆலயத்திற்குச் சென்று அங்கு பணி புரிந்து வந்த கூளியரிடம் ஆலய நியமம் பற்றியும், தினசரி பூசைக் கிரமம் பற்றியும், பொருள் வசதி பற்றியும் விசாரித்தான். அவைகளுக்கு எந்தக் குறைவும் இல்லை என்று தெரிவித்த கூளியர் ஆலய விழாவிற்குரிய செலவுகளையெல்லாம்

* ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை - வரி 178-206

** மதுரை ஆவணி அவிட்டமே உறையூர் பங்குனி உத்திரமே கருவூர் உள்ளி விழாவே என இவை; - இறையனார் அகப்பொருளுரை (17வது சூத்திரம்)



மதுரை நகர் வணிகர்கள் மனமுவந்து ஏற்று வருவதால் விழா சிறப்பாக நடைபெறும் என்று தெரிவித்தார்கள். பிறகு ஆலயத்திற்கு திருப்பணிகள் ஏதாவது தேவையா என்பது பற்றியும் விசாரித்து அறிந்தான்.

விழா என்றால் மக்கள் கூட்டம் மட்டும் பெருகுவதில்லை, கொள்ளையர் கூட்டமும் பெருகும். எனவே மக்களைக் காக்க செய்யப்பட்டிருந்த காவல் ஏற்பாடுகளையும் கவனிக்க அவன் தவறவில்லை. புரவி வீரர்கள் வேல் தாங்கிய கைகளுடன் திருப்பரங்குன்ற எல்லை முழுவதும் கணிசமாக நிறுத்தப்பட்டிருந்தது மட்டுமின்றி நகருக்குள் கடை வீதிகளிலும் ஆலயச் சுற்றுப் புரங்களிலும் பிரார்த்தனைக் கூடங்களிலும் கூட விழிப்புடன் திரிந்து கொண்டிருந்தார்கள். சந்தேகப்படும் பேர்வழிகளையும் கையும் களவுமாகப் பிடிபடும் கொள்ளையரையும் உடனுக்குடன் வளைத்துக் கொண்டு போய் விசாரிக்கவும் தீர்ப்பு வழங்கவும் ஊர் எல்லையில் அறங்கூர் அவைகள் சில அமைக்கப்பட்டிருந்தன.

இந்த ஏற்பாடுகள் ஒரு புறம் இருந்தாலும் மக்கள் என்னவோ கொள்ளையரைப் பற்றிக் கவலைப் பட்டவர்களாக இல்லாததையும், ஏதோ தங்கள் இல்லத்திருநாட்களில் நடந்து கொள்ளும் இதமான மனநிலையோடும் மகிழ்ச்சியோடும் இருப்பதையும் கண்ட பாண்டிய மன்னன் பெரும் உவகை கொண்டான். ஓரிரு இடங்களில் மக்களை நேரில் சந்தித்து, 'உங்களுக் கெல்லாம் கொள்ளையர் பயமே இல்லையா?'- என்று வினவவும் செய்தான் உண்மையை அறிந்துகொள்ளும் ஆர்வத்தில்.

'பிரபு, பாண்டிய நாட்டில் உள்ளங்களை கொள்ளை கொள்ளும் கள்வர்கள்தானே இருக்கிறார்கள்? இதற்கு நாங்கள் ஏன் பயப்படவேண்டும்?' - என்றார்கள் சிலர்.

இன்னும் சிலரோ, 'இல்லாமை இல்லாதபோது இப்பாண்டிய நாட்டில் கொள்ளையடிக்க யார் வரப்போகிறார்கள்?' என்றார்கள்.

தன் மக்களை எண்ணிப் பெருமிதமடைந்தான் பாண்டியன் நெடுஞ்செழியன். தனதுடல் புத்துணர்வு உண்டாவது போலிருந்தது அவனுக்கு. மக்களின் இதயப் பூர்வமான மகிழ்ச்சி வார்த்தைகளைவிட பரவசத்தைத் தரக்கூடிய விஷயம் மன்னனுக்கு வேறு இருக்க முடியாது. அதை தற்போது உணர்ந்த அவன் இப்படிப்பட்ட மக்களைப் பெற்ற தான் ஒரு பாக்கியசாலிதான் என்று பெருமிதமும் கொண்டான்.

கொள்ளையர் பற்றி மட்டுமின்றி மக்களிடம் பொதுவான அபிப்ராயங்களையும் தேவைகளையும் கேட்டான்.

திருப்பரங்குன்றத்து ஆலயத்தில் இருந்த கலைக்குழுவினர் ஒருசேர வாழ்ந்த பகுதிக்கு விஜயம் செய்தான் மன்னன். தாமரைத் தடாகத்தை அடுத்திருந்த அப்பகுதியில் குடியிருந்த தாய்மார்களும் பெண்களும் முகம் மலர அவனை வரவேற்றார்கள். அவனது மனம் மகிழும் வண்ணம் பற்பல நடனங்களை ஆடிக் காட்டினார்கள். மன்னனுக்கும் குமரவேளுக்கும் பிடித்தமான குறிஞ்சி யாழைக் கொண்டு இன்னிசை மழை பொழிந்தனர்.



அவர்களிடம் ''ஏதேனும் உதவி தேவையா?'' என்று மன்னன் வினவியபோது பெண்ணொருத்தி விபரீதமான தேவை ஒன்றை வெளியிட்டாள்.

அதைக்கேட்டு அனைவரும் பதறினார்கள். 'அடிப்பாவிப் பெண்ணே! இப்படியுமா கேட்பாய்? உன் புத்தியில் என்ன கோளாறா?' என்று கேட்டார்கள். சிலர் அவளுக்கு பைத்தியம் பிடித்து விட்டது என்று அபிப்ராயப் பட்டார்கள்.

அப்பெண் மட்டும் அவர்களது பேச்சு, அபிப்பிராயம் ஆகியவற்றைப் பற்றி கவலைப்பட்டவளாக இல்லை. மிகவும் சரியான கேள்வி ஒன்றைக் கேட்டுவிட்டு நியாயமாக எதிர்ப்பார்ப்பவள் போல் மன்னனின் பதிலை எதிர்நோக்கி நின்றாள்.

அவள் இத்தனைக்கும் இளம் பெண்தான். பருவத்தை அடைந்து சில ஆண்டுகள்தான் ஆகியிருக்கிறது என்று புலப்படுத்துவது போல் இருந்தது அவள் தோற்றம். இள வாழைக்கன்று போல் பசுமையாகவும் செழிப்பாகவும் இருந்த அவளது முகம் குழந்தை போல் இருந்தாலும் அதில் அச்சமோ அறியாமையோ தெரியவில்லை. நிர்மலமான நீரில் திடீரென பூத்த செவ்வல்லி மலர் போல் சிவந்த மேனியும் செவ்வான மலர்ச்சியும் கொண்டவளாய் விளங்கினாள். சற்று முன்பு குறிஞ்சிப் பண் இசைத்திருந்த அவள் அது குறித்து அலுப்பேதும் கொள்ளாமல் பாடிய மாதிரியே தோன்றாமலிருந்த விதத்திலிருந்தே இசையும் இசைப்பும் அவளுக்குச் சர்வ சாதாரணமானவை என்று எண்ண வைத்தது. அதுமட்டுமல்ல. அவள் கேள்வி கேட்ட தோரணையும் பதிலை எதிர்பார்த்திருந்த

தோரணையும் மன்னனிடம் அக்கேள்வியை கேட்பதற்கென்று, ரொம்ப நாட்களாகவே காத்திருந் திருக்க வேண்டும் என்று கருத வைத்தன. அதைக்கேட்பதில் அவள் திட்டவட்டமாகவும் முடிவு செய்து வைத்திருக்க வேண்டும். இல்லையென்றால் அவள் தற்போது அச்சமின்றி நின்று கொண்டிருக்க முடியாது.

ஆனால் நெடுஞ்செழியன் மட்டும் அவளது கேள்வியைக் கேட்டு அசரவில்லை. சினமடையவு மில்லை. சூரிய ஒளிபட்டு இதழ் விரித்த தாமரை போல் முகமலர்ந்த அவன் ''என்ன கேட்டாய்? இன்னொரு முறை சொல்'' என்று கேட்டான்.

'தாங்கள் அமரும் அரியணையில் ஓர் இடம் வேண்டும் மன்னவா!' என்றாள் அவள் பயப்படாமல்.

'அந்த இடத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வாய்?'- கேட்டான் மன்னன் சாந்தமாக.

'அங்கே அமர்வேன்.'

'அமர்ந்து?'-

'அமர்ந்தவர்கள் என்ன செய்வார்களோ - அதைச் செய்வேன்'

கலகலவெனச் சிரித்தான் மன்னன். 'அந்த இடம் காலியாக இருக்கிறதா என்று தெரியுமா உனக்கு?' என்று பிறகு கேட்டான்.

'தாங்கள்தானே மன்னவா சொல்ல வேண்டும் அதைப் பற்றி?'-



'இடம் காலி இல்லை என்றால் என்ன செய்வாய்?' - ஆர்வத்துடன் கேட்டான் மன்னன்.

'பெரிய அரியணையாக ஒன்றை வைத்துக் கொள்ளுங்கள் மன்னவா தங்களால் முடியாததா?'-

மன்னனிடம் சிரிப்பு தொடர்ந்தது. இந்த நிலையில் குறுக்கிட்ட சிலர் 'பிரபு, இவளுக்குப்பித்துப் பிடித்து விட்டது பைத்தியக்காரியின் பேச்சை பொருட்படுத்த வேண்டாம்' என்றார்கள்.

'பெண்ணே, இவர்களெல்லாம் சொல்கிறார்களே- உனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது?' என்று கேட்டான் மன்னன்.

'நான் பைத்தியம்தான் என்றால் நம்பி விடுவீர்களா மன்னவா?'

'ஏனிப்படிக் கேட்கிறாய்?'

'என் பதிலை வைத்தா இதில் முடிவு செய்ய முடியும்? அதோடு தங்களால் அறிய முடியவில்லையா?'

'அறிவாளியாகப் பேசுகிறாய் பெண்ணே. அதில் எனக்கு மகிழ்ச்சிதான். அதேசமயம் ஒரு விஷயத்தை நீ யோசித்தாயா?'

'எதை மன்னவா?'

'துன்பம் மிகுந்த இடத்தை ஏன் விரும்புகிறாய்?'

'சுகமில்லை என்ற இடத்தில் அமர்ந்து தாங்கள் துன்பத்தைச் சுமக்கும் போது நான் சுமக்க முடியாதா பிரபு?'-

எப்படிக் கேட்டாலும் வகையாகப் பேசிவிடும் அவளது பேச்சுத் திறனைக் கண்டு ரசித்தான் மன்னன். அரியணையில் அமர வேண்டும் என்ற ஆசை உறுதியாக உண்டாகிவிட்டதால் அதுபற்றி எப்படி கேட்டாலும் பதில் கூறிவிடுவாள் என்பதை உணர்ந்த அவன் 'உன் பெயரென்ன பெண்ணே?' - என்று கேட்டான்.

'தேவி' - என்றாள் அவள்.

ஏதோ சந்தேகம் உண்டாகவே 'உன் தந்தை... என்று அவன் கேட்கத் தொடங்கியதும் தந்தையின் பெயரைச் சொன்னாள் அவள்.

மன்னன் ஸ்தம்பித்து நின்றான்.

◈◈◈

முரசு பத்து

# நக்கீரர்

தேவி என்னும் பெண் தன் தந்தையின் பெயரைச் சொன்னதும் ஏதோ அபச்சாரப்பட்டு விட்டவனாய் கருதி ஸ்தம்பித்துப் போனான் நெடுஞ்செழியன். அதைப்பற்றி மேன்மேலும் சிந்திக்க முடியாத நிலையில் அருகிலிருந்து வாழ்த்தொலிகள் பல எழுந்தன.

''மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார்''-

''வாழ்க வாழ்க''-

''பாண்டிய மாமன்னரின் குருநாதர் நக்கீரனார்''-

''வாழ்க வாழ்க''-

''தமிழ்ப் புலவரேறு நக்கீரனார்''

''வாழ்க வாழ்க''-

''இறையருள் புலவர் பெருமான்''

''வாழ்க வாழ்க''-

வாழ்த்தொலிக்குப் பின்னால் பெரும் மக்கள் புடை சூழ அறிவுச்சுடரொன்று மனிதவடிவம் பெற்று வந்தாற்போல் வந்து கொண்டிருந்தார் நக்கீரர்.

பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனின் பிரதான குருநாதர்கள் இருவரில் ஒருவரும், மதுரையில்

கணக்கராய் வசித்து வந்தவரின் மகனாய்ப் பிறந்து பெரும் புலவராயும் அறிவாற்றல் கொண்டவராயும் விளங்கியவரும், சங்கத்தமிழ் புலமையை தரணி யெல்லாம் வெளிப்படுத்தத் தகுந்த வகையில் நெடுநல் வாடை, திருமுருகாற்றுப்படை ஆகிய பேரிலக்கியங் களை உருவாக்கித் தந்தவரும், மன்னரால் மட்டுமின்றி மக்களாலும் மதிக்கப்பட்டவருமான, நக்கீரர் *தன் புடைச் சூழல்களை விலக்கிவிட்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டதுமே அவர் வரும்வரை நின்றிராமல் தானே போய் அவரை வரவேற்று ''குருநாதரின் வரவால் எல்லாருமே மகிழ்ச்சியடைகிறார்கள். குமரனும் குருநாதரும் ஏக காலத்தில் இங்கே காட்சி தருவது மக்கள் பாக்கியம். என் பாக்கியம்'' - என்று நிறைவான வார்த்தைகளைக் கூறி கட்டித்தழுவினான்.

''எல்லா சிறப்புக்கும் நீதானே நெடுஞ்செழியா காரணம்? தெய்வாட்சியாய் உன் அரசாட்சி நடக்கும் போது மக்கள் மகிழத்தக்க காட்சிகளைத் தானே காணமுடியும்?'' - என்றார் நக்கீரர். அவரது குரல் கணீரென்றிருந்தது.

* அக்காலத்தில் பலரது பெயர்கள் அவர்கள் புரியும் தொழில்களை உணர்த்தக் கூடியனவாய் இருந்தன. நக்கீரரின் தந்தை கணக்கர் வேலை பார்த்து வந்ததின் பொருட்டும் அவர் மதுரையைச் சேர்ந்திருந்ததின் பொருட்டும் அவரது பெயர் மதுரை கணக்காயனார் என்றே வழங்கப்பட்டது. மதுரை கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், கோவூர் கிழார், வெண்ணிக் குயத்தியார், கணியன் பூங்குன்றனார், உறையூர் இளம்பொன் வாணிகனார் ஆகிய சில பெயர்களை உதாரணமாகச் சொல்லலாம்.



'பிறகு இருவரும் தடாகக்கரையிலிருந்த மண்டபம் ஒன்றில் போய் அமர்ந்து கொண்டார்கள்.

மண்டபத்தில் வந்து அமர்ந்த குருநாதர் ''இவர் களெல்லாம் இங்கே ஏன் திரண்டிருக்கிறார்கள் நெடுஞ்செழியா? இவர்கள் கூட வேண்டியது குமரக் கோட்டத்தின் வேள்விக் கூடத்தில் அல்லவா?'' என்று கேட்டார்.

''அங்கு செல்லப் போகிறவர்தாம். குறைகளைக் கேட்டறிய நான்தான் அழைத்திருக்கிறேன்'' என்றான் மன்னன்.

''மன்னா! நீ நீடுழி வாழ வேண்டும். மக்களின் குறைகளைக் கேட்க மக்களின் இருப்பிடங்களுக்கே வந்திருக்கிறாயே - உன்போல் எத்தனை பேர் இருப்பார்கள் பெயர்கள். என்று எண்ணிப் பார்க்கிறேன். அக்குமரக்கடவுள் உனக்கு நீண்ட ஆயுளை அளிக்க வேண்டும்'' என்று வாழ்த்தினார் புலவர். பிறகு தொடர்ந்து ''நெடுஞ்செழியா, குறைகளை மக்களிடம் கேட்டு ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லிவிட்டுப் போவதோடு இருந்து விடக்கூடாது. அவைகளை நிவர்த்தி செய்வதுதான் முக்கியம். அப்போதுதான் உன் செயல்களுக்கு அர்த்தமிருக்கும்'' என்றார்.

''குருநாதேரே! செய்ய முடியாதவற்றை நான் சொல்வதில்லை. சொல்லிவிட்டால் செய்யாமல் விடுவதில்லை. மக்களை நான் சந்திப்பதும், விசாரிப்பதும் அவர்களுக்கிடையில் என்னை உயர்த்திக் கொள்ளவும் செல்வாக்கைத் தேடிக்கொள்ளவும் அல்ல.

அவர்களைக் கட்டியாளும் தகுதியை உண்டாக்கிக் கொள்ளவும் நிலைநிறுத்திக் கொள்ளவும்தான். அது என்னால் முடியாமல் போனால்-அதை நான் மேற்கொள்ளாமல் போனால் நான் மன்னனாய் இருக்க மாட்டேன்.'' - என்றான் நெடுஞ்செழியன்.

'நம்பிக்கை எனக்கிருக்கிறது மன்னா, அரசாட்சியை அறசாட்சியாய் செய்தவர்கள் பாண்டியர்கள். நீதி தவறியதற்காக உயிரைத் துறந்தவன் உன் பாட்டன். அவன் பேரனாய் நீ பிறந்தது எங்கள் பாக்கியம். உன்னைச் சீடனாய் பெற்றது என் பாக்கியம். வந்த வழியெல்லாம் பார்த்துக் கொண்டுதான் வருகிறேன் உன் அரசாட்சியின் அடையாளங்களை. உன்னை வாழ்த்தாத நாவைக் காணாததுபோல் உள்ளம் மகிழாத மக்கள் ஒருவரையும் பார்க்க முடியவில்லை. பொற்காலம் பூத்துவிட்ட பூரிப்பைச் சுமந்தவர்களாகவே எல்லாரும் தென்படு கிறார்கள். விழாக்கோலம் பூண்டிருக்கும் இத்தெய்வத் திருநகர் உன் பெயரையே இன்று ஒலிக்கிறது. இக்குன்றத்து குமரன்கூட உன்னைக் கண்டு பூரிப்பே அடைந்திருப்பான். தெய்வ நம்பிக்கையும் மக்கள் நல்வாழ்விற்கான முயற்சிகளும் கொண்ட மன்னன் சரித்திரத்தில் இடம் பெறுவதில்லை. சரித்திரமாகவே உயர்ந்து விடுகிறான். நீ ஒரு சரித்திரம். அதில் நான் ஒரு ஏடு.''

வாழ்த்துச் சொற்களைக் கேட்டு சற்றே வெட்க மடைந்தான் வேந்தன்.

சிறிது நேரத்திற்கு இருவரும் பேசியிருந்துவிட்டு முருகப்பெருமானை வழிபட குன்றக் கோயிலுக்குச் சென்றார்கள். குன்றுக்குச் சூட்டப்பட்ட மகுடம்போல் விளங்கிய கோயிலுக்குள் தெய்வீக அழகு இயற்கையாகவே விரவியிருந்தது. கருவறைக்குச் சென்று முருகனின் அறுமுகத் திரு உருவத்தைக் கண்ட அவர்கள் நீண்ட நேரத்திற்கு தங்களை மறந்து தெய்வ ஈடுபாட்டில் ஆழ்ந்திருந்தார்கள். பின்னர் தீபாராதனையும் கோயில் மரியாதைகளும் விமரிசையாக நடந்தன. அதிர்வேட்டு முழங்கியது-மக்களை பூசை வழிபாடுகளை அங்கங்கே துவக்கும் பொருட்டு. அதையடுத்து இறை வணக்கப் பாடல்களும் ஒலிகளும் பெரிதாய் எழுந்தன. அபிஷேகத் திருமுறையையொட்டிக் கருவறையில் திரை யிடப்பட்டது. புலவருடன் வெளியேறி வந்த மன்னன் அவரிடம் கேட்டான்.



'குருநாதரே, உலகையே காட்டிக்காக்கும் பேரருள் கொண்ட கடவுள்தான் முருகவேள். இவருக்கேன் ஆறு முகங்கள்? ஒன்று போதாதா?'-

லேசாக புன்னகை செய்தார் குருநாதர்.

'நெடுஞ்செழியா, கர்ணன் மிகச் சிறந்த வள்ளல். வாரி வாரி வழங்கி அவனது கரங்கள் இரண்டும் சிவந்து விடுவதுமுண்டு. அவனுக்கு மட்டும் இரண்டாயிரம் கைகள் இருந்திருந்தால் எவ்வளவு எளிதாக இருந்திருக்கும் பார். முருகனும் அப்படிதான். ஒருமுகம் கொண்டே எல்லோருக்கும் திருவருள் தர முடியும்தான். ஆறுமுகங்களாக இருந்தால் சற்று எளிதாக இருக்கும் அல்லவா? அவனை நம்பி வழிபடுவோர் கணக்கில் அடங்காது. அவன் காத்து ரட்சிக்க வேண்டிய

விஷயங்களும் அதிகம். ஒவ்வொன்றும் ஒரு முகம் என்று வைத்துக்கொண்டால் குறைவற்ற திருவருள் அளிக்கலாம் அல்லவா?'-என்றார்.

'அப்படியானால் குமரனின் ஆறுமுகங்கள் எந்தெந்த விதத்தில் அருள் செய்கின்றன?' - கேட்டான் மன்னன்.

'இருள் சூழ்ந்த பேருலகில் ஒளி பரப்ப அருளும் முகம். தன் மீது அன்பும் பக்தியும் கொண்டு வணங்கும் பக்தர்களுக்கு வரமருளும் முகம் ஒன்று. வேதங்கள் உரைத்த நெறி முறைகளைத் தவறாமல் மேற் கொண்டு நடக்கும் மறையோர்களை காத்தருளும் முகம் ஒன்று. மெய்யறிவு நூல்களின் அரிய பொருளை முனிவர்களுக்கு உணர்த்தி அவர்கள் மூலம் இருளில் ஒளி தரும் நிலவைப் போல் உலகுக்கு உணர்த்தியருளும் முகம் ஒன்று. பகைவருடன் மேற்கொள்ளும் போரில் அவர்களை வீழ்த்தி களவேள்வி செய்தருளும் முகம் ஒன்று. இத்திருப்பரங்குன்றத்திலே மணம் புரிந்து கொண்ட குறமகள் வள்ளியை மகிழ்வுற வைக்க அருளும் முகம் ஒன்று. இவையே அறுமுகங்களின் அருட்செயல்கள்*

* மா இருள் ஞாலம் மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக் காதலின் உவந்து வரம் கொடுத் தன்றே; ஒரு முகம் மந்திர விதியின் மரபுளி விழா அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே; ஒருமுகம் எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்திங்கள் போலத் திசை விளக்கும்மே; ஒரு முகம் செறுநர்த்தேய்த்துச் செல்சமம் முருக்கிக் கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே; ஒருமுகம் குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின் மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே'-

- நக்கீரனின் திருமுருகாற்றுப்படை வரி 91.103



இதையடுத்து முருகனின் பன்னிருகரங்களைப் பற்றிய விளக்கமளித்தார் நக்கீரர். பின் முருகன் கோயில் கொண்ட படை வீடுகள் பற்றி விவரித்தார். முருகனைப் பற்றிய விவரத்தொகுப்புகளாய் அமைந்த அந்த விளக்கங்களைக் கேட்ட மன்னன் 'குருநாதரே, தங்கள் விளக்கங்களால் பரவசப்பட்டு நிற்கிறேன் நான். தாங்கள் அளித்த அரிய விளக்கங்கள் நம் உரையாடலாய் மட்டுமிருந்து மறைந்து விடாமல் பின்னால் வெகு காலத்திற்கு உலக மக்கள் உணர்ந்தறியத்தக்க இலக்கியமாய் அமையவேண்டும் என்பது என் அவா. பத்தியுள்ளம் கொண்டவர் மட்டுமின்றி அனைவரையுமே முருகவேளின் வரலாற்றினையும் அருளையும் அறியும் வண்ணம் வழிப்படுத்திச் செல்லும் காவியம் ஒன்றைத் தாங்கள்தான் சமைக்க வேண்டும். எங்களை பாக்கியசாலிகளாக்க வேண்டும்'-என்று வேண்டிக் கொண்டான்.

'உன் அவா மட்டுமில்லை நெடுஞ்செழியா, என் அவாவும் அதுதான். திருமுருகாற்றுப் படை ஒன்றைச் சமைக்க வேண்டும் என்று நீண்ட காலமாகவே எனக்கோர் ஆசை உண்டு. முருகனைக் காணும்போது... இல்லை, அவனை எண்ணும் போதெல்லாம் இந்த ஆசை என்னிடம் ஓர் பேராசையாகவே உருவெடுத்திருக்கிறது. அவனருள் இருந்தால் உன் ஆட்சிக் காலத்திலேயே அதை இயற்றுவேன்' என்று தெரிவித்துக் கொண்டார் புலவர்.

இருவரும் தற்போது கருவறைக்கு நேரே ஆலயத்தின் வெளி அரங்கிற்கு வந்திருந்தனர். அங்கே நடனக்கலையில் வல்லவர்களான சாக்கையர்கள் மக்கள்

விரும்பும் கொட்டிச் சேதத்தை* ஆடி மகிழ்வித்துக் கொண்டிருந்தார்கள். சோழ நாட்டின் பிரசித்தமான கலை பாண்டியநாட்டில் மக்களை மகிழ்வித்துக் கொண்டிருந் ததைக்கண்ட பாண்டிய மன்னன் கலைகளின் சிறப்பை எண்ணி பெருமிதம் கொண்டான். நாடுகள் வேறுபட்டாலும் அரசுகள் வேறுபட்டாலும் மக்கள் மட்டும் ஒருவராகவே இருப்பதையும் கலைகள் அவர்களுக்குப் பாலமாய் அமைவதையும் உணர்ந்தான் அவன். இதன் காரணமாகவே பண்டைய மன்னர்கள் கலைகளைக் கண்போல் போற்றி வந்ததின் காரணமும் புரிந்தது அவனுக்கு.

இந்நிலையில் கருவறைத் திரை திறப்பதற்கான மணியோசை ஒலித்தது. தீபாராதனையுடன் காட்சி தரவிருந்த முருகக்கடவுளை முதற்கண் காணும் பாக்கியம் பெற்றவனே பாண்டிய மன்னன். அதற்காகத் தயாராகி புலவர் பெருமானுடன் கருவறையை நோக்கித் திரும்பிய போது தான் அவனிருந்த வெளிக்கூடத்திற்கு மேலே வானத்தில் பெரும் புறா ஒன்று வட்டமிட்டபடி இருந்தது. அப்புறா சொல்லி வைத்தாற்போல் அந்த வெளிக்கு மேலேயே வட்டமிட்டதேயன்றி அதைத்தாண்டி அப்பால் பறக்கவில்லை. அதை அங்கே பிரார்த்தனைக்காகக் கூடியிருந்தவர்களில் சிலர் காணவே செய்தார்கள். கண்டு வியக்கவும் செய்தார்கள்.

இந்த நிலையில் மணியோசை மேலும் அதிகமாகி மேள ஓசையும், வேதபாராயண ஓசையும், வேட்டு

* சேரன் வஞ்சி, எஸ். இருஷ்ணசாமி ஐயங்கார் பக் 51-52



ஓசையும் எழவே எல்லோரது பார்வையும் கவனமும் கருவறையை நோக்கித் திரும்பின. திரை விலகியது. தீப ஒளியே ஓர் ஜீவ ஒளியாய் அமைய திருமுருகனின் ஜீவமுகம் பரவசத்தைத் தரக்கூடியதாய் தெரிந்தது. தன் கைகளைச் சேர்த்து உயர்த்தி வணங்கினான் நெடுஞ்செழியன். பிறகு கைகளைத் தாழ்த்தி விரித்தான் ஆண்டவனிடம் ஏதோ கேட்பதுபோல். அதே நேரத்தில் அவன் கேட்காத ஒன்று கிடைத்த மாதிரி வானத்தில் வட்டமடித்த புறா திடீரென வந்து விழுந்தது அவன் கைகளில். சிறகடித்தது சில கணங்களுக்குப் பிறகு உயிர் துடிப்பு நின்று அடங்கியது.

ஏதோ சர்வேஸ்வரனின் அருள்தான் கிடைத்துவிட்ட தென்று எண்ணிய வேளையில் புறா ஒன்று கைகளில் விழுந்ததையும் சில கணத்திலேயே சிவபதமடைந்து விட்டதையும் கண்டு சங்கடமடைந்த மன்னன் அப்புறாவின் உடலில் மெல்லிய அம்பொன்று பாய்ந்திருந்ததையும் அதனால் பெருக்கெடுத்த ரத்தம் தன் கைகளைச் சிவப்பாக்கி விட்டதையும் கவனித்தான். இதற்கிடையில் ஓரிருவர் அவனை நெருங்கி அப்பறவையைப் பார்த்தார்கள். சற்று முன் அது வானில் வட்டமிட்டுக் கொண்டிருந்ததைக் கூறி அதற்குள் எப்படி வீழ்த்தப்பட்டது என்று வினவினார்கள். கருவறைப் பக்கம் அனைவரது கவனம் திரும்பிய வேளையில்தான் பறவையின் மீது அம்பெய்யப்பட்டிருக்க வேண்டும் என்று கருதினார்கள்.

சிறிய பறவையைக் கொண்டு உண்டான சிறியசம்பவம் மன்னனுக்கு சந்தேகத்தைக் கிளப்பியது.

சாதாரணப் புறாவைப் போய் அம்பெய்து வீழ்த்த வேண்டிய அவசியம் என்ன என்ற கேள்வி அவனிடம் எழுந்து ஐயத்தை அதிகரித்தது. பின் எதையோ நினைத்துக் கொண்டவனாய் அப்புறாவை சற்றே உற்று நோக்கி விட்டு அதன் இறக்கைகளை ஆராய்ந்தான். அங்கே சிறிய சீலைச்சுருள் ஒன்று செருகப்பட்டிருந்ததைக் கண்டு கையில் எடுத்தான். புலவரிடம் கொடுத்து 'தங்கள் நாவால் இத்தூதுச் செய்தியை அறிவியுங்கள் குருநாதரே' என்றான்.

இதற்கிடையில் பணியாட்களிடம் புறா ஒப்படைக்கப்பட்டது. அவனது கரங்களைக் கழுவியும் கொண்டான். பிரார்த்தனை முடிவடைந்த நிலையில் மக்கள் மன்னனையும் மகேசனையும் வாழ்த்தியபடி ஆலயத்திற்குள் நுழையலானார்கள். மன்னனும் இதையறிந்து அவ்விடத்தைவிட்டு நீங்கி குன்றின் பக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த மன்னர் தாவடிக்குப் புலவருடன் சென்றான். அங்கு போனபின் நீண்ட நேரமாய் சீலையை ஆராய்ந்த புலவர் கடைசியாய் அதன் செய்தியைப் படித்தார்.

பாண்டிய மன்னனின் மலர் முகம் தணல் போல் சிவந்தது.

◈◈◈

முரசு பதினொன்று

# நான்மாடக்கூடல்

அரசாட்சியை அறசாட்சியாய் கருதி ஆண்டு தன் மக்களை அன்பாட்சியால் கவர்ந்து அதன் அத்தாட்சியாய் என்றும் சாந்தம் தவழும் சாந்தமான முகத்தையும் கருணை ததும்பும் காந்தக் கண்களையும் பெற்றிருந்த நெடுஞ்செழியன் தூதுப்புறா மூலம் வந்த செய்தியைக் கேட்டதும் அது உண்மையா பொய்யா என்று ஆராயாமல் உண்மையாகவே கொண்டு உள்ளுணர்வுகளின் உந்துதலுக்கு ஆளாகி ரத்த சிவப்பினை தன் முகத்தில் காட்டித் தீ விழி விழித்தானென்றால் அதில் வியப்பேதும் இல்லைதான்.

'தன் இடம் தெரிந்து இப்படியொரு செய்தியை பழையனால்தான் அனுப்பமுடியும். அவன் அனுப்பும் செய்தி பொய்யாய் இருக்காது'... என்பதுதான் அவனது தீர்மானம்.

எனவே செய்தியின் உண்மை பற்றி ஆராயாமல் வேறு சிந்தனையில் இறங்கினான்.

தாவடியில் புலவர் நக்கீரருடன் ஒருசில உப தளபதிகள் இருந்தார்கள்.

பகை பற்றியோ போர் பற்றியோ விவாதிக்க அந்த இடமும் சரி... இருந்த ஆட்களும் சரி... பொருத்தமாக இல்லை. இதை உணர்ந்த மன்னன் பேச்சில் இறங்காமல் சீலையை வாங்கி செய்தியைப் படித்தான்.

''மன்னவா, உடனே மதுரைக்குத் திரும்புங்கள். நான் வரும் வரை போரைத் துவக்க வேண்டாம்- பழையன்'...

அவனது சிந்தனை சிலையிலேயே ஆழ்ந்து விட்டதைக் கவனித்த புலவர் வினவினார்.

'என்ன சிந்தனை நெடுஞ்செழியா? போரைப் பற்றியா? மன்னன் என்றால் போர் என்ற ஒன்று குறுக்கிடாமல் போகாது'

'அது தெரியும் குருநாதரே. போரை எதிர்கொள்ளவும் பகையை முறியடிக்கவும் நான் எப்போதும் தயாராகத்தான் இருக்கிறேன். முடிசூடிய நாளிலிருந்தே போர்த்தினவை எதிர்பார்த்தபடிதான் இருக்கிறேன். என் சிந்தனையெல்லாம் போருக்கு முனைந்து விட்ட புது எதிரி யாரென்பதைப் பற்றித்தான்' என்றான் நெடுஞ்செழியன்.

''இதில் சிந்திக்க என்ன இருக்கிறது? எதிரி யாராய் இருந்தால் என்ன? எதிரி எதிரிதானே?'' என்று கேட்டார் புலவர்.

''மறுக்கவில்லை குருநாதரே. வியப்படைகிறேன் திடீர் எதிரியை எண்ணி. என்ன நடந்து விட்டதென்று அல்லது என்ன நடக்க வேண்டும் என்று போர் அறிவிப்பு செய்திருக்கிறான் அவன்? முடி சூடிய நாளில் கூட நட்புக்கான கரத்தைத்தான் அனைவருக்குமே நீட்டினேனேயன்றி பகை மூச்சை விடவில்லையே நான்? பிறகெப்படி வருகிறது போர்?''

''நெடுஞ்செழியா, என்ன நடக்கும் எப்போது நடக்கும், யாரால் நடக்கும் என்று அனுமானிக்க



முடியாததுதான் அரசியல். நியாயத்தின் அடிப்படையில்தான் ஒரு காரியம் நடக்கவேண்டும் என்ற நிச்சயம் இல்லாததுதான் அரசியல். முடி சூட்டியவனே பின்னால் நின்று குத்தவும் முற்படும் கேவலம் நடக்கக் கூடியதுதான் அரசியல். இதில் வியப்படைய எதுவும் இல்லை. உனக்கு இருக்க வேண்டியது விவேகமும் விழிப்புணர்வும்தான்'-

'புலவர் பெருமானே! தாங்கள் சொன்னதுபோல் தற்போது போர் அறிவிப்பு செய்திருப்பவன் யாராக இருந்தாலும் சரி - எதற்காகச் செய்திருந்தாலும் சரி - மிகவும் தண்டிக்கப்பட வேண்டியவன் என்பதை மட்டும் சொல்லிக்கொள்கிறேன். மக்களின் நல்வாழ்வுக்காக ஆண்டவனின் அருளோடு எடுக்கப்பட்ட இவ்விழாவில் இப்படியொரு செய்தியை அறிய நேரிட்டதற்குக் காரணமான அந்த எதிரியை அந்த ஆண்டவன்கூட மன்னிக்கப் போவதில்லை. இது நிச்சயம். நானும் சொல்லிக் கொள்கிறேன். மக்கள் விழாவின் மகிழ்ச்சியில் கல்லைப் போட்ட அப்பகைவனைப் பழி வாங்காமல் விடமாட்டேன்'-

வழக்கமில்லாத ஆவேசத்தில் மன்னன் இப்படி பேசியதைக் கண்ட புலவர் 'பொறு மன்னா பொறு. மதுரைக்குச் சென்ற பின் முடிவுகளை எடு. உனது முதல் காரியம் மதுரைக்குப் போவதுதான். அதை தாமதிக்காதே.' என்று அறிவுறுத்தி விட்டு, 'ஆமாம், இச்செய்தியை பழையன் உனக்கனுப்பியிருக்கிறானே, அவனிப்போது மதுரையில் இல்லையா?' என்று கேட்டார்.

'இல்லை என்றுதான் தெரிகிறது'- என்றான் மன்னன் உள்ளூர ஏதோ ஒரு சந்தேகத்துடன்.

'நீயும் இல்லை. படைத்தலைவனும் இல்லை. இந்த நிலையில் போர்ச் செய்தி வருகிறது. ம். நிலைமை நெருக்கடியாய்த் தான் இருக்கிறது. எதற்கும் நீ விரைவாய் போ'- என்றார் புலவர்.

நிலைமையை நெடுஞ்செழியனும் உணர்ந்தான். எனவே மேலும் பேச்சில் இறங்கித் தாமதம் செய்ய விரும்பாமல் திருப்பரங்குன்றத்தின் நிர்வாக அதிகாரிகளை அழைத்துச் சற்றே பேசிவிட்டு தான் மதுரைக்கு உடனடியாகத் திரும்ப வேண்டிய அவசியத்தையும் தெரிவித்தபின் புறப்படலானான்.

மதுரையிலிருந்து வந்தபோது பயன்படுத்திய தேரை விட்டுவிட்டு அவனது வெள்ளைப் புரவியிலேயே பயணம் செய்தான்.

மதுரையை விட்டு வெளியேறி பத்து நாட்களுக்கு மேலாகியிருந்ததாலும் மக்களுக்குரிய பெருவிழாவை கொண்டாடிவிட்டு வருவதாலும் மதுரை மக்கள் மன்னன் திரும்பும் போது கோலாகலமான பட்டிணப்பிரவேசத் திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

'தென்றமிழ்நாட்டு தீதுதீர் மதுரை' என்று சிலப்பதிகாரமும், 'புலத்தினும் போரினும் போர் தோலாக்கூடல்' என்று பரிபாடலும், 'புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனலூர்' என்று கலித்தொகையும் 'தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின் மகிழ்நனை மறுகின் மதுரை' என்று சிறுபாணாற்றுப் படையும், 'மாட மோங்கிய மல்லன் மூதூர்' என்று நெடுநல்வாடையும் 'மிக்கு புகழ் எய்திய பெரும் பெயர் மதுரை' என்று மதுரைக் காஞ்சியும் போற்றும் வண்ணம்



திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என்ற நான்கு மாடங்களை உள்ளடக்கி நான்மாடக் கூடல் நகர் என்ற பெயர் பெற்றதும், கடல் கோள்கள் தொடர்ந்து விழுங்கி விரட்டிய பாண்டியர்கள் படிப்படியாக தங்கள் நிலப்பகுதிகளை இழந்து முடிவில் வையையாற்றின் தென் கரையில்* ஊரொன்றை நிறுவி மதுரை என்று பெயரிட்டு பாண்டியர் தலைநகராக்கி கடைத்தமிழ் சங்கத்தை நிறுவியதால் பெரும் பெயர் பெற்றதுமான தெய்வத் திருநகரான மதுரை மாநகர் மிகக்கம்பீரமாக நின்றது தன் மன்னனை வரவேற்க.

கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமான கண்ணகியால் எரியூட்டப்பட்ட மதுரை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்குப் பின்னால் வந்த வெற்றிவேற் செழியனால் புதிதாக நிர்மாணிக்கப்பட்டது. அதை யவனர்களைக் கொண்டு சிறந்த கோட்டையாக அமைத்தான் அவனது மகனும் இக்கதையின் நாயகனுமான நெடுஞ்செழியன். அப்படிச் செய்தபோது பழைய குறைகள் நீக்கப்பட்டு புதிய சிறப்புகள் உருவாக்கப்பட்டன. புதிய யந்திர சூட்சுமங்களும் பொருத்தப்பட்ன. சாம்ராஜ்ய கனவிலேயே பாண்டியன் கண்ணாய் இருந்ததால் அதன் அடிப்படையான மதுரை கண் இமை எனக் கருதினான். எனவே அதை உன்னத

* பண்டை மதுரை அல்லது கூடல் இருந்த இடம் தற்கால மதுரை நகரத்திற்கு தென்கிழக்கே 6 கல் தொலைவில் பாழடைந்து கிடக்கும் பழமதுரை (பழைய மதுரை) யாகவே இருத்தல் கூடும். இப்பாழ்நகர் வையையின் வடகரையில் இருக்கிறது. ஆனால் பண்டை மதுரை அதன் தென்கரையில் இருந்ததாகவே அறிகிறோம். - பக்கம் 25. 1800 ஆண்டுகளுக்கு முன் தமிழகம்! -by வி. கனகசபை.

நகராய் உயர்த்தும் சிந்தனை இடைவிடாமலிருந்தது அவனிடம். சிந்தனை தந்த திட்டங்களை அவ்வப்போது நிறைவேற்றி வந்தானாதலால் மதுரை மாநகர் தற்போது அவனுக்குப் பட்டிணப் பிரவேச சிறப்பை அளிக்கும் பொருட்டு புத்தம் புதிய மணப்பெண் போல் பொலிவுற காட்சியளித்தது.

பிரவேசிக்க இருப்பவன் தங்கள் ஆருயிர் தலைவன் என்ற காரணத்தால் மக்கள் அனைவருமே தங்கள் வேலைகளை விட்டுவிட்டு கோட்டை வாயிலையடுத்த ராஜவீதிகளில் நிரம்பிய வண்ணமாய் இருந்தார்கள் அவனை வாழ்த்த, வரவேற்க. அவர்கள் முகங்களில் ஆர்வமும் ஆனந்தமும் நிரம்பி வழிந்தன. அன்னை மீனாட்சியின் திருமுகத்தையடுத்து தரிசிக்க வேண்டிய ஒருமுகம் உண்டென்றால் அது மன்னனின் மலர்முகமே என்பது மக்களின் ஒருமித்த தீர்ப்பாய் இருந்ததால் விழியைத் திறந்தார்கள் மூடவிரும்பாமல். வைத்த விழி வாங்காமல் வழி மேல் விழி வைத்தவர்களாய் காத்திருந்தார்கள்.

ஆனால் திடீரென அவர்களது ஆர்வத்தில் கல் விழுந்தாற் போன்ற சம்பவமே நடந்தது. அதிர் வேட்டொன்று ஒலித்ததும் மன்னன்தான் வருகிறான் என்று நம்பியிருக்க வீதியிலோ ஒற்றை முரசொன்று வந்தது. புரவியின் மீது அமர்ந்தபடி டமடம வென ஒற்றை முரசை ஒலித்த பணியாள் 'அருமை குடிமக்களே, நமது இன்னுயிர் மன்னரை எதிர்பார்த்து யாரும் வீதிகளில் காத்திருக்க வேண்டாம். பட்டிணப் பிரவேச சிறப்புகளை ஏற்கும் மனநிலையில் மன்னர் வரவில்லை. யாரும் எதிர்பாராத விதத்தில் பகைவர்கள் நம்கோட்டையைச்



சூழவிருப்பதால் விழாக்கோலங்களைவிட்டு அவரவர்கள் தங்கள் இல்லங்களுக்கு உடனடியாகச் செல்லுங்கள். வெளியேற வேண்டியவர்கள் உடனடியாக வெளியேறட்டும். விரைவிலேயே கோட்டைக் கதவுகள் அடைக்கப்படுமாதலால் யாரும் வெளியேற முடியாது. இது அரசகட்டளை' என்று அறிவிப்பு செய்துவிட்டு மறுவீதிக்கும் புரவியை ஓட்டினான்.

மக்கள் இந்த அறிவிப்பை சிறிதும் எதிர்பார்க்க வில்லை.

'என்ன! பகைவனா? நம் நாட்டையா வளைக்கப் போகிறான்? என்ன துணிச்சல்?'-

'பாண்டியரைப் பகைக்கும் எதிரி எவன் இருக்கிறான்?

'அடடா! மன்னரின் பட்டிணப்பிரவேசத்தைக் காண வேண்டிய நேரத்திலா இப்படி ஆகவேண்டும்?'

'எவனாய் இருந்தால் என்ன? நம் மன்னனிடம் புறமுதுகிட்டு ஓடத்தான் போகிறான்'

'யார் வந்தாலும் வரட்டும். நாங்கள் இருக்கிறோம் எதிர்க்க'

இப்படி மக்கள் பலபடி பேசிக்கொண்டார்கள். சிலர், 'படைக்கு ஆள் தேவையா? நாங்கள் தயார். எங்கே வரவேண்டும்?' என்று கண்ணில்பட்ட புரவி வீரர்களை வினவத் தொடங்கினார்கள்.

'இன்றிலிருந்து இருவேளை உணவுதான். முடிந்தவரை சேமிக்க வேண்டும். முற்றுகை தொடங்கி நீடித்தால் ஆபத்து'.

'முற்றுகையாவது! நீடிப்பதாவது! நமது மன்னர் அதற்கு இடம் தரப்போவதில்லை. இரண்டே நாளில் பகைவரை விரட்டப் போகிறார் பார்'-

இப்படி வேறு சிலர் விசாரித்துக் கொண்டார்கள்.

இதற்கிடையில் வேறொரு அறிவிப்பு ஒலித்தது.

'படைகள் திரட்டப்பட்ட வேண்டுமாதலால் மக்கள் அதற்கு இடையூறாகச் சாலைகளில் உலவ வேண்டாம். உடனடியாக இல்லங்களுக்குத் திரும்பட்டும். யாரும் வீதிகளில் இருக்கக்கூடாது. இது அரசகட்டளை'-

போர் அறிவிப்புகள் இதே ரீதியில் மேலும் பல வந்து கொண்டே இருந்தன.

போர் என்றால்அஞ்ச வேண்டிய மக்கள் தற்போது அஞ்சவில்லை. மன்னனின் மீதிருந்த அசைக்க முடியாத நம்பிக்கை அதற்கு ஒரு காரணமாய் இருந்தாலும் வேறொரு காரணமும் இருந்தது.

பலகாலமாக மதுரையைப் பகைத்து போரிட வந்த பகைவர்கள் யாருமில்லை. மதுரையை ஆண்டவர்கள் தான் பகைவரைத் தேடிச் சென்றிருந்தனர். எனவே மதுரையில் போர் எவ்வாறு நடக்கும் என்பதைக் காணும் ஆர்வம் இயற்கையாகவே தற்போது உண்டாகியிருந்தது மக்களிடம்.

எனவே யாரும் அஞ்சவில்லை. மாறாகப் படையில் சேரவும் போர்புரியவும் முன்வந்தார்கள். கோட்டை முற்றுகையிட்டு அம்முற்றுகை நீடித்தால் உண்டாகக்கூடிய சிரமங்களை அவர்கள் அனுபவித்த தில்லையென்றாலும் அறியாமலிருக்கவில்லை. எனவே



அச்சிரமங்களைத்தாங்கிக் கொள்ளும் வழிகளில் தங்கள் சிந்தனைகளை ஓட்டியவர்களாய் ராஜவீதிகளை விட்டுக் கலைந்து செல்லலானார்கள்.

இதே நேரத்தில் அரண்மனை வட்டாரத்திலும் சுறுசுறுப்பு காணப்பட்டது. அரண்மனை கருவூலமும் தானியக் களஞ்சியமும் பெருத்த காவலுக்கு இலக்காகின. தானியக் களஞ்சியத்தை நோக்கி தானியவண்டிகள் எங்கிருந்தோ வரலாயின. அவற்றை ஆராயவும் ஏற்றுக்கொள்ளவும், கணக்கர்களும் வணிகர்களும் தீவிரமாய் முனைந்தார்கள். அதிகப்படியாய் உணவுப் பொருள்களை வைத்திருப்போர் அவற்றை அரண்மனைக் களஞ்சியத்திற்கு உடனடியாக விற்கவும் ஒவ்வோர் இல்லமும் படைவீரர்கள் தங்கவும் உண்ணவும் வசதிசெய்து தரவும் உரிய ஆணைகளைப் பிறப்பிக்க அரண்மனை வட்டாரத்தில் பேச்சுக்கள் எழுந்தன.

அதோடு ராஜவீதியில் புரவி வீரர்களின் நடமாட்டம் பெருகியது. கோட்டை வாயில்கள், மதிற்புரங்கள், சுவர் தளங்கள் மற்றும் சுவரையடுத்திருந்த படைவீரர் குடியிருப்புகள் ஆகியவற்றிலும் பரபரப்பு உண்டாயிற்று. கோட்டைச்சுவற்றின் தளங்களிலும், மாடங்களிலும் இருந்த போர்ப் பொறிகளை அவசர அவசரமாகச் சோதிக்கவும் இதர போர் ஆயத்தங்களைச் செய்யவும் வீரர்கள் ஏவப்பட்டார்கள்.

பாண்டியர் படைத் தலைவர்களில் பழையனுக்கு அடுத்தபடியாக விளங்குபவனும் யானைப் படைகளை இயக்கி போர் புரிவதில் வல்லவனும், பல போர்களில் கலந்து கொண்டு விழுப்புண் பெறுவதையே தொழிலாகக்

கொண்டவனும், பழையனின் வலது கரம் போல் விளங்குபவனுமான பாண்டியர் படைத்தளபதி அதுகை மேற்சொன்ன ஏற்பாடுகளை கவனிக்க நேரிலேயே வந்து விட்டதால் படை வீரர்கள் பகுதி தீவிரப்பட்டது.

படைகளின் எண்ணிக்கை, பொறிகளின் எண்ணிக்கை, போர் ஆயுதங்களின் எண்ணிக்கை, போர் வாகனங்களின் எண்ணிக்கை ஆகியவற்றோடு அரண்மனை கருவூலத்தின் பொன் வெள்ளி இருப்பு ஆகிய விவரங்களையெல்லாம் உடனடியாக சேகரித்துத் தரும்படி கட்டளையிட்ட அவன், போர் அறிவிப்புகளை யொட்டி மக்கள் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பதையும் நேரில் கவனித்தான். மக்களிடையே உண்டாயிருந்த ஆர்வமும் அவர்கள் காட்டிய அமைதியான ஒத்துழைப்பும் அவனை திருப்தியடைய வைத்தன.

இந்த நிலையில் கோட்டை வாயிலில் ராஜ பேரிகைகள் முழங்கவே விரைந்து அங்கே சென்றான் அதுகை. தெற்கு வாயிலுக்கு அவன் சென்றடையவும் அதேசமயம் அங்கே மன்னன் பிரவேசிக்கவும் சரியாக இருந்தது.

வாயிலில் பிரவேசித்த மன்னன் தற்செயலாக எதையோ கண்டான். அவன் கண்கள் மீண்டும் சிவந்தன. அதுகையை நோக்கி ''தளபதி! இது என்ன?''- என்று வெகுண்டு கேட்கவும் செய்தான்.

தளபதியின் கண்கள் அந்த விபரீதக் காட்சியைக் காணத் திரும்பின.

முரசு பன்னிரண்டு

# வரிப்புனை பந்து

திருப்பரங்குன்றத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்பாகவே மதுரையில் இருந்த அமைச்சருக்கும் படைத்தளபதி அதுகைக்கும் போர்ச் செய்தியினை அனுப்பிவிட்ட நெடுஞ்செழியன் புலவரிடம் 'குருநாதரே, தாங்களும் என்னோடு வருகிறீர்களா?'- என்று கேட்டான்.

''நான் சமயத்தில் அங்கு வந்து சேர்ந்து கொள்கிறேன் நெடுஞ்செழியா. இங்கு எனக்குச் சில வேலைகள் இருக்கின்றன. இங்குள்ள சமண சமயத்தினர் நம் சங்கத்திற்கு வரும்படி அழைத்திருக்கிறார்கள். எனவே நீ போய் வா. மதுரையில் சந்திப்போம்''- என்று தெரிவித்துக் கொண்டார் நக்கீரர்.

புலவர் வராததால் தேரில் பயணம் செய்வதை விட்டு விட்டு தனது வெள்ளைப் புரவியிலேயே பயணம் செய்ய விரும்பி பணியாளனிடம் தாவடி கொட்டடியில் இருந்த தன் புரவியைக் கொண்டு வரும்படி சொன்னான் மன்னன்.

அப்பணியைச் செய்யச் சென்ற பணியாள் திரும்பி வந்து சொன்ன பதில் வியப்பை அளிக்கக் கூடியதாய் இருந்தது.

''மன்னவா, தங்கள் புரவியின் மீது பெண்ணொருத்தி அமர்ந்துகொண்டு கீழிறங்க மறுக்கிறாள். பலவந்தமாக அவளை இறக்க அருகே சென்றால் புரவி எங்களைத்

தூரத்துகிறது. தாங்கள்தான் நேரில் வர வேண்டும்'' என்றான் பணியாள்.

இதைக்கேட்டதும் ஆர்வமும் வியப்பும் சற்றே கோபமும் கொண்டவனாய் புரவிக் கொட்டடிக்குச் சென்றான் நெடுஞ்செழியன்.

அங்கே அவனது வெண் புரவியில் தேவிதான் கம்பீரமாக அமர்ந்திருந்தாள்.

அவளை அந்தக் கோலத்தில் கண்டபோது உண்மையிலேயே அவனுக்கு வியப்பாகத்தான் இருந்தது அவளது தைரியத்தைக் குறித்து.

தடாகக் கரையில் அவள் கேள்விகளைக் கேட்டபோது அவளை வெறும் துடுக்குக்காரப் பெண் என்று மட்டுமே நினைத்தான் அவன்.

தற்போது அவளது தைரியத்தை உணர வேண்டியவனானான். அதே சமயம் அத்தைரியம் அவளைத் தன் புரவி மீதே வந்து அமரச் செய்துவிடும் என்பதை அவன் எதிர்பார்க்கவில்லை. தன்னைத் தவிர யாரையும் அமர அனுமதிக்காத புரவி அவளை எப்படி அனுமதித்தது என்ற கேள்வியும் அவனிடம் எழுந்தது. எப்படியானாலும் மொத்தத்தில் அவள் ஒரு சாகசக் காரியாய் இருக்க வேண்டும் என்ற முடிவிற்கு வந்த அவன் ''பெண்ணே'' என்றழைத்ததும் ''என் பெயர் தேவி'' என்று சுட்டிக் காட்டினாள் அவள்.

''ஆமாம் ஆமாம். மறந்து விட்டேன் உன் பெயரை. இப்போது தான் நினைவிற்கு வருகிறது. பெயரை நன்றாக வைத்தவர் உன்னையும் நன்றாகத்தான் வளர்த்திருக்



கிறார்கள்'' என்றான் மன்னன் அவள் வழியிலேயே செல்வது போல்.

''என்ன வளர்த்து என்ன பயன்?''- குறைப்பட்டாள் தேவி.

''ஏன்? உன்னை வளர்த்ததில் என்ன குறை வைத்து விட்டார்?''

''அவர் ஒரு குறைவும் வைக்கவில்லை''

''பின்?''

''எனக்குத்தான் குறை''

''எதில்?''

''மிகச் சிறப்பாக அவரென்னை வளர்த்தும் என்னால் எதைச் சாதிக்க முடிந்தது? மன்னரிடம் ஓர் உதவியைக் கூடப் பெற முடியவில்லையே என்னால்?''

''அதனால்தான் மன்னனின் புரவியிலேயே இடம் பிடித்துக் கொண்டிருக்கிறாயா?''

மன்னனின் குரலில் சினம் துளிர்த்தது. அதைக் கண்ட அவள் அசட்டு தைரியத்தில் மீண்டும் பேசினாள்.

''எந்தப் புரவியாய் இருந்தாலும் அதை அடக்கி இடம் பிடித்து விடுவேன் மன்னவா. புரவியேற்றம் எனக்கு கை வந்த கலை''

மன்னனுக்குத் தற்போது உண்மையாகவே கோபம் வந்துவிட்டது.

''போதும் நிறுத்து. கொள்ளையடிப்பதைக்கூட சாமர்த்தியமாய் செய்து விடலாம்தான். ஆனால் அது

குற்றம் என்பது நினைவிருக்கட்டும். போனால் போகிறதென்று பேச்சுக் கொடுத்தால் புரவியில் வந்து அமர்ந்து கொண்டதோடு அதிகப்பிரசங்கம் வேறா செய்கிறாய்? பேசாமல் இறங்கி உன்னிடத்திற்குப் போய் சேர்''- என்று கடுகடுத்தான்.

''பாண்டியர் நீதி இதுதானா அரசே?'' சற்றே கலங்கியவளாய் கேட்டாள் அவள்.

'நீதியைக்காட்ட முற்படும் பட்சத்தில் மன்னன் புரவி மீது முறை தவறி ஏறியதற்கு மரண தண்டனை கிடைக்கும் தெரிந்து கொள்'

''தண்டனையை ஏற்கிறேன் அரசே. அதற்குமுன் என் வேண்டுகோளுக்குத் தங்கள் பதிலென்ன என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஒருவேளை வேண்டுகோள் விடுப்போரிடம் பதிலே சொல்லாமல் ஊரை விட்டு ஓடி மரணதண்டனை அளிப்பதுதான் பாண்டியர் நீதி என்று சொல்வதானால் நான் எதையும் கேட்கமாட்டேன்''

''பெண்ணே, அரியணையில் பங்கு கேட்கிறாயே அதை என்னவென்று எண்ணிக் கொண்டிருக்கிறாய் நீ? கேட்பவருக்கெல்லாம் பங்கு வைக்க அரியணை என்ன பொதுச் சொத்தா அல்லது தின்பண்டமா? ஏதோ ஒரு பேதைப் பெண் அறியாமல் கேட்டுவிட்டாள் என்பதால் மன்னன் தலையாட்டிவிட்டா செல்ல முடியும்? அறியாமையால் நீ கேட்கிற வேண்டுகோளைப் போய் பாண்டியர் நீதியோடு சம்பந்தப்படுத்துகிறாயே! நீ கேட்கும் அளவிற்குப் போய்விடவில்லை அப் பாண்டியரின் நீதி. அறம் தவறியதை அறிந்ததும்



அரியணையையும் அரிய உயிரையும் விட்டொழித்த வர்கள் பாண்டியர்கள். நீதியின் அர்த்தமே அவர்கள்தான். உன் வேண்டுகோளை நீயே மீண்டும் மீண்டும் யோசித்துப்பார். நான் மிக அவசரமாக மதுரை போக வேண்டிய நிலையில் இருக்கிறேன். உன்னுடன் நிதானமாகப் பேசி விளக்கும் நிலையில் இல்லை'- என்றான் மன்னன்.

இதற்கிடையில் அவள் புரவியை விட்டு இறங்கி விட்டிருந்தாள். புரவியும் மன்னனிடம் வந்திருந்தது. அதில் மன்னன் ஏறிக்கொண்டதும் 'பிரபு'- என்றழைத்தாள் தேவி.

வேண்டாவெறுப்பாகத் திரும்பி 'என்ன?'- என்று கேட்டான் மன்னன்.

'என் வேண்டுகோளின் அர்த்தம் உண்மையிலேயே தங்களுக்குப் புரியவில்லையா?'

'அந்த ஆராய்ச்சிக்கெல்லாம் இடமில்லை. வருகிறேன்' என்று கூறிவிட்டு புரவியைத் தட்டிவிட்டான் அவன்.

அவர்களது உரையாடல்களை அதுவரை அருகேயிருந்து கேட்டுக் கொண்டிருந்த உருவம் மறைவிடத்தை விட்டு நீங்கி அவளை நோக்கி வந்தது.

அதைக் கண்டதுமே ஓடிப்போய் அவரது மார்பிலே சாய்ந்தாள் தேவி. கண்கள் பொலபொலவென நீரைப் பொழிந்தன.

கண்ணீர் மழைக்கிடையில் யாழிசைப்பது போன்ற குரலில் 'அவர் கோபித்துக் கொண்டு போய் விட்டார்

அப்பா'- என்று புலம்பினாள். 'இப்படி அவர் கோபப்பட்டு நான் பார்த்ததேயில்லை' என்று குறைபட்டாள். 'அவரைக் கவரவேண்டும் என்றுதான் துடுக்கானவள் போல் நடந்து கொண்டேன். அவரோ என்னை அதிகப்பிரசங்கியாய் எண்ணிவிட்டார். என் வாழ்க்கை அவ்வளவுதான் அப்பா'' என்று பிரலாபித்தாள்.

அவள் முதுகை தந்தையின் வாஞ்சையோடு தட்டிக் கொடுத்த அவ்வுருவம் ''முதலில் அழுகையை நிறுத்து. மன்னனை மணக்க விரும்புபவள் இப்படியெல்லாம் அதைரியப்படுவதோ பலவீனப்படுவதோ கூடாது'- என்றது.

'நான் அவரை மணக்க முடியுமா அப்பா? இவ்வளவு கோபத்துடன் போனவர் என்னை ஏறெடுத்துப் பார்ப்பார் என்கிறீர்களா? இது உடைந்து விட்ட கனவுதான் அப்பா. என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். நிலவைப் பார்த்து மலர் மகிழலாமே தவிர அடைய விரும்பக் கூடாது'- என்று பேதைப் பெண் போல் பேசினாள்.

மெல்லச் சிரித்தது அவ்வுருவம். 'இதையெல்லாம் ஏற்கனவே யோசிக்கவில்லையா நீ? இப்போதுதான்- அதுவும் அவன் கோபப்பட்டு போனபின்தான் யோசிக்க ஆரம்பித்திருக்கிறாயா? இப்படி எண்ணவும் தீர்மானிக்கவுமா காலம் காலமாய் அவனை எண்ணி பூசித்து வந்தாய்? இதற்காகவா இக்குன்றக் குமரனைக் கூடத் தொழாமல் அவனையே தெய்வமாய் எண்ணி வணங்கினாய்?' என்று சரமாரியாய் கேட்ட அது சற்று விட்டுவிட்டுத் தொடர்ந்தது.



'பக்குவமான நேசத்திற்கு வித்தியாசங்கள் கிடையாது மகளே. நேசம் என்பது சம அந்தஸ்து கொண்டவர்களுக் கிடையேதான் வரும் என்று எண்ணிக் கொள்ளாதே. புராணங்களில் தேவர்கள் இங்கு வந்து மனிதர்களை நேசித்ததுண்டு. வெற்றி பெற்றதுண்டு. நம்மை ஆளும் முருகவேள் சாதாரண மலைக் குறத்தியை இத் திருப்பரங் குன்றத்திலே மணக்கவில்லையா? அவனை மணக்க வேண்டும் என்றுதானே வள்ளி தவம் கிடந்தாள்? அவளென்ன தோற்றா போனாள்? கவலைப்படாதே மகளே. வெற்றிக்குத் தேவை தளராத மனமும் முயற்சியும் தான். வெற்றிக்கான படிகள் சறுக்கும்படி தான் இருக்கும். அது மனத்திண்மையைச் சோதிக்கத்தானேயன்றி தோல்வியை அளித்து விடுவதற்கில்லை. மன்னனின் மனம் சரியில்லை. எதிர்பாராத செய்தியால் கோபமடைந்திருக்கிறான். நாட்டைப் பாதுகாக்க வேண்டிய நெருக்கடி வந்திருக்கிறது அவனுக்கு. இந்நிலையில் தனியொரு பெண்ணுக்காக நிதானமாக யோசித்துக் கொண்டிருக்க முடியாது. இன்னொரு முறை அவனை மதுரையில் சந்திக்கலாம். அநேகமாக அவன் நிதானமாக யோசிக்கும்போது உன்னையும் உன் வேண்டுகோளையும் புரிந்துகொள்ளத் தவறமாட்டான். அவனைப் பற்றி எனக்கு நன்றாக தெரியும் என்பதாலேயே இதைச் சொல்கிறேன். அப்படி ஏதாவது இடையூறு உண்டானால் இத்தனை நாட்களாக வெளிப்படுத்தாத ரகசியம் ஒன்றை வெளிப்படுத்துகிறேன். அப்போது அவன் மறுக்கமுடியாது'.

'அதென்னப்பா ரகசியம்?' - பெண்களுக்கே உரிய ஆர்வத்துடன் கேட்டாள் தேவி.

'அவசியம் ஏற்பட்டாலொழிய அதை வெளியிடும் உரிமை எனக்கில்லையம்மா. ஆனால் ஒன்று சொல்கிறேன். அந்த ரகசியம் உன் வாழ்வை நிச்சயம் வளப்படுத்தக் கூடியது' என்றது உருவம்.

'நாட்டைக் காக்க வேண்டிய நெருக்கடி வந்திருப்பதாகச் சொன்னீர்களே, அது என்ன?' என்று கேட்டாள் அவள்.

'போர்தான். வேறென்ன இருக்கமுடியும்? அறிவு வளர்ந்தாலும்கூட போரும் பகையும் மட்டும் ஒய்வதில்லை.'

'போரா? யாரப்பா வருகிறார்கள் அவ்வளவு துணிச்சலாக?'

'யாரோ வருகிறார்கள் என்பது மட்டும்தான் தெரிகிறது. துணிச்சலோடு வருகிறார்களா என்பது தெரியவில்லை'

'இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்?'

'உண்மைதான் மகளே. போரிடுபவர்கள் பெரும்பாலும் ஆசையோடும் வேட்கையோடும்தான் அக்காரியத்தில் இறங்குகிறார்கள். துணிச்சலோடு வருபவர்கள் ஒரு சிலர்தான். ஆகவேதான் அப்படிச் சொன்னேன்.'

⁂ ⁂ ⁂

திருப்பரங்குன்றத்திலிருந்து சிறியதொரு பரிவாரத்துடன் தலைநகரை நோக்கி புரவியில் பயணம் செய்த நெடுஞ்செழியன் புரவி என்ற பெயரில் புயலொன்று சென்றதால் மிகக் குறைந்த நேரத்திலேயே



சென்றடைந்தான். அவனுக்கு முன்பாகவே போர்ச்செய்தி அனுப்பப்பட்டிருந்தது. அதையொட்டி மதுரையில் பட்டினப்பிரவேசத்திற்கான ஏற்பாடுகள் விலக்கப் பட்டன. விழாக்கோலம் களையப்பட்டன. மாறாகப் போர்கோலம் பூண்டு நின்றது மதுரை மாநகர். அங்கே தெற்கு வாயிலை மன்னன் அடைந்ததுமே எதிர் கொண்டான் கோட்டைத் தளபதி அதுகை. உரிய வணக்கத்தினைச் செலுத்தி வரவேற்றான். வாயிலில் நுழைந்த மறுகணமே மன்னனின் கண்கள் தற்செயலாக வலப்புறமிருந்த மரக்கம்பம் ஒன்றின்மீது சென்றன. அங்கே இருந்ததைக் கண்டதும் சிவந்தன.

'தளபதி, இது என்ன?' - என்று கோபத்துடன் கேட்கவும் செய்தான்.

அக்காலத்தில் கோட்டை வாசலுக்கருகில் கம்பம் ஒன்று நாட்டப்பட்டு அதில் பெண் பொம்மையும் வரிப்பந்தும் தொங்கவிடப்பட்டிருக்கும். அதன் அர்த்தம் பந்து விளையாடும் பொருட்டு பெண்கள் வேண்டுமானால் கோட்டைக்குள் நுழையலாமேயன்றி போர் நோக்குடன் பகைவர் யாரும் வரமுடியாது என்பதாகும். இச்செயல் சம்பந்தப்பட்ட மன்னரின் வலிமையை உணர்த்தக் கூடியதாய் இருந்தது.*

ஆனால் மன்னன் நெடுஞ்செழியன் கண்டபோது அக்கம்பத்தில் பந்துமில்லை, பாவையுமில்லை. மாறாக அம்பொன்றும் வில்லொன்றும் இருந்தது. புலித் தோலொன்றும் தொங்கிக் கொண்டிருந்தது. பெண்கள் -

* 'வரிப்புனை பந்தொடு பாவை தூங்க' - வரி 68
திருமுருகாற்றுப்படை

அதுவும் விளையாடும் நோக்கத்துடன் மட்டுமே நுழையலாம் என்று உணர்த்தும் அடையாளம் அகற்றப்பட்டதிலிருந்தே அந்த அடையாளத்தின் நோக்கமும் அகற்றப்பட்டு விட்டமாதிரி எண்ண வைத்திருந்தது கம்பம். அது மட்டுமல்ல. அங்கே தொங்கிக் கொண்டிருந்த மாற்று அடையாளங்கள் பெண்களுக்குப் பதில் போர் வீரர்கள் நுழையக்கூடும் என்று உணர்த்துவது போல் அமைந்து விடவே கோபப்பட்டு வினவினான் மன்னன்.

அதுகை இந்த விபரீத மாற்றத்தை அப்போதுதான் கண்டான். கோட்டைத் தளபதியாய் இருந்து அதை கவனிக்காததையும் அதேசமயம் அது மன்னனின் கண்களுக்குப் பட்டுவிட்டதையும் உணர்ந்து வெட்கப் பட்ட அவன் நடுங்கினான் தற்போது.

அதைக் கவனித்த மன்னன், ''தளபதி, கோட்டை வாயிலின் அடையாளம் மாறிப் போனதை நீர் கவனிக்காதது போகட்டும். இது எதை உணர்த்துகிறது என்பதையாவது புரிந்து கொண்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

'விபரீதம்'- என்ற ஒரு வார்த்தையை மட்டும் உதிர்த்தான் அதுகை திகைப்புடன்.

அதே சமயம் அத்திகைப்பைக் கவனித்துக் கொண்டிருந்த பெண் உருவமொன்று மெல்ல நகர்ந்து விலகியது ஊருக்குள்.

அந்தப் புதிரை அதிகரிப்பது போல் கோட்டைக் கதவுகள் பெரும் சத்தத்துடன் சாத்தப்பட்டன.

◈◈◈

முரசு பதின்மூன்று

# தளபதி அதுகை

நகர்ப் பிரவேசம் செய்த பாண்டிய மன்னன் கோட்டை வாயிலில் இருந்த கம்பத்தில் பாவைகள் விளையாடும் வரிப்பந்துக்கும் பொம்மைக்கும் பதிலாக அம்பும் வில்லும் தொங்கியதைக் கவனித்து அருகில் இருந்த தளபதி அதுகையை விசாரித்ததும் 'விபரீதம்' என்ற ஒற்றை வார்த்தையை உதிர்த்ததுமே அவனது முகத்தைக் கவனித்தான் மன்னன். அதுகையின் முகத்தில் படிந்திருந்த வியப்புக்குறி கோட்டைக் கம்பத்தை அவன் தற்போதுதான் கவனிக்கிறான் என்பதைப் புலப்படுத்தியது. மன்னனும் பிரதான படைத் தலைவனான பழையனும் இல்லாத நேரத்தில் கோட்டையின் கௌரவத்தையே பாதிக்கக்கூடிய விஷயத்தை எப்படி தளபதியால் கவனிக்க முடியாமல் போயிற்று என்று நினைத்தான் மன்னன். தளபதியே கூட சற்றே வியந்தான். வெட்கப்பட்டான். அதே சமயம் கோட்டைக்கு வந்த ஆபத்தைச் சமாளிக்க ஏறக்குறைய எல்லாவிதமான முன்னேற்பாடுகளையும் அவன் எடுத்திருந்தது நன்றாகவே தெரிந்தது.

கோட்டை வாசல் வியப்பிற்குப் பின் அங்கேயே நின்று எதையும் பேச மன்னன் விரும்பவில்லை. தளபதியுடன் அரண்மனையை அடைந்தான். ஓய்வைப் பற்றிய நாட்டமின்றி நேராக ஆலோசனை அவைக்குச் சென்றான். நகரின் நிலையை மட்டுமின்றி மன்னரின்

மனநிலையையும் நன்றாக எடை போட்டிருந்த அதிகாரிகள் அவனது வரவைக் கணக்கிட்டு ஆலோசனை அவையை தயார் நிலையில் வைத்திருந்ததைக் கண்ட மன்னன் திருப்தியுடன் உள்ளே பிரவேசித்தான். அவையில் வழக்கமாகக் கடைபிடிக்கப்படும் சம்பிரதாயங்களை உதறிவிட்டு பேசவேண்டிய விஷயத்தை உடனடியாகத் துவக்கினான் மன்னன்.

''கோட்டை வாசல் கம்பம் அனைவருக்கும் விஷயத்தைப் புலப்படுத்தியிருக்கும் என்று நினைக்கிறேன். பாவைகளின் விளையாட்டுப் பொருள்களுக்குப் பதில் படைக்கலன்கள் அங்கே வெளிப் படுத்தியிருப்பதிலிருந்தே பகைவர்கள் தோன்றி விட்டார்கள் என்பதும், நம்மைத் தாக்க முற்பட்டு விட்டார்கள் என்பதும், போர் விரைவிலேயே வெளிப்படப் போகிறது என்பதும் புலப்படுகின்றன. அப்படைக் கலன்கள் வில்லும் அம்புமாய் இருப்பதிலிருந்து நமக்கு எதிராகத் தோன்றியுள்ள பகைவன் சேரன் என்பதும் புலப்படுகிறது. இவற்றோடு மூன்றாவது முக்கிய விஷயமொன்று புலப்படுகிறதா உங்களுக்கு?''-

அவையில் இருந்த பல்வேறு தளபதிகளும் அதிகாரிகளும் மன்னனை உற்று நோக்கினார்களே தவிர எதையும் தெரிவிக்கவில்லை.

மன்னன் அதுகையை நோக்கினான். பார்வையாலேயே வினவினான்.

''மன்னவா, மூன்றாவதாகப் புலப்படும் விஷயம் எனக்குப் புரிகிறது. ஆனால் சொல்ல வெட்கப் படுகிறேன்'' என்றாள் அதுகை.



''வெட்கப்பட வேண்டிய அவசியம் என்ன தளபதி?'' வினவினான் மன்னன்.

''பிரபு, கோட்டைக்குள் இருக்கும் கம்பத்தில் இருந்த மாற்றம் உண்டானதிலிருந்து எதிரி நம் கோட்டைக்குள் ளேயே இருக்கிறான் என்றாகிறது. அவனை அறியாமல் நாங்களெல்லாம் உலவிக்கொண்டிருப்பது வெட்கத்திற் குரியதல்லவா?''-

''இதற்காக யாரும் வெட்கப்பட்டுக் கொண்டிருக்க வேண்டியதில்லை. நேரடிப் போருக்குப் பின்னால் சதி செய்யும் குள்ளநரிகளாக எதிரிகள் மாறும்போது அவர்கள் எங்கே எந்த வடிவத்தில் இருப்பார்கள் என்பதை அறிவது எளிதாக இருக்காது. அதோடு இதில் மிக முக்கியமான ஒன்று என்னவென்றால் யார் எதிரியாக மாறுவார்கள் என்பதையும் எளிதாக ஊகிக்கவோ கண்டுபிடிக்கவோ முடியாததுதான். ஆகவே நாம் எல்லோரும் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய நேரமிது. கோட்டைக்கு வெளியே மட்டும்தான் எதிரி இருப்பான் என்று எண்ணிக் கொண்டிருக்காமல் நம் கண்களையும் கவனிப்பையும் உள்ளேயும் செலுத்த வேண்டியது அவசியம். சந்தேகப்பட வேண்டிய வேளை இது. சந்தேகத்தின் பரிமாணத்தைப் பெரிதாக்கிக் கொண்டு எச்சரிக்கையாய் இருக்க வேண்டிய நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். புரிகிறதல்லவா?''- என்று விளக்கிய மன்னன் ''போருக்கான ஆயத்தங்களை எப்படிச் செய்திருக்கிறீர்கள்?''- என்று வினவினான்.

இதற்கு அதுகை பதில் கூற முற்பட்டு ''மன்னவா, திருப்பரங்குன்றத்தில் தங்களுக்குச் செய்தி வரும் முன்பு

படைத்தலைவர் மூலம் எனக்குச் செய்தி வந்தது-அவரது தூதுப்புறா மூலம். இரண்டு சீலைகளை அவர் அனுப்பியிருந்தார். ஒன்று தங்களுக்கும் ஒன்று எனக்கும் இருந்தது. என் செய்தியை அறிந்தபின் தங்களுக்கான செய்தியை வேறொரு புறா மூலம் அனுப்பிவிட்டு தூதுப் புறாவை அவரிடமே திருப்பி விட்டேன். அதற்குப் பிறகு ஆயத்தங்களில் இறங்கினேன். எதிரி திடீரென முளைத்து விட்டதால் அவன் நமது கோட்டையை முற்றுகை யிடுவதைத்தான் மேற்கொள்வான் என்பதால் முற்றுகையைத் தாங்கும் சக்தியை அறிந்து ஏற்பாடுகளைச் செய்தேன். அதற்கு அத்தியாவசியமான உணவுப் பொருள்கள் களஞ்சியத்தில் சேகரிக்கப்பட்டன. அன்னை மீனாட்சியின் அருளால் நிலவளத்துக்கும் நீர் வளத்துக்கும் குறைவில்லாததால் ஏற்கெனவே நமது களஞ்சியத்தில் ஒரு மாதத்திற்கான உணவு தானியங்கள் இருந்தன. போர் அறிவிப்பைச் செய்ததும் தாங்கள் கண்போல் மதிக்கும் அருமை குடிமக்கள் தாமாகவே அள்ளிக்கொடுத்த தானியங்கள் ஒரு மாதத்திற்கு வரும். ஆக இரண்டுமாத முற்றுகையைத் தாங்கும் நிலையில் கோட்டை இருக்கிறது. பாடி வீடுகளில் இருந்த படைகள் ஆயத்தப் படுத்தப்பட்டு கோட்டை மதில்களிலும் வாயில்களிலும் காவலுக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள். கோட்டைச் சுவற்றின் உட்புறங்களில் நாற்புறமும் நான்கு விதமான படைகள் அணிவகுத்து நிற்கின்றன. சுவற்றை அடுத்த இரு சுற்று வீதிகளும் ஒழிக்கப்பட்டு படைகள் தங்க வசதி செய்யப்பட்டுள்ளது. அவர்களுக்கு உணவளிக்க மக்களாகவே முன்வந்திருப்பதோடு இருவேளைக்கு மட்டுமே உண்ணும் கட்டுப்பாட்டிற்கு மக்கள் தங்களைத் தயார்ப் படுத்திக்கொண்டு விட்டார்கள். படை நடமாட்டத்திற்கு தடையாக இருக்காத வண்ணம் மக்கள் நடமாட்டமும் வாகனங்களின் நடமாட்டமும் பெருமளவு குறைக்கப்பட்டுவிட்டது. தாங்களே பார்த்திருப்பீர்கள். மக்களுக்கும் படைகளுக்கும் உரிய அறிவிப்புகளைக் கொடுக்கத் தேவையான முரசுகள் கோட்டைக்குள் நாளைக்குள் அமைக்கப்பட்டுவிடும். ஆயுத சாலையில் இருந்த ஆயுதங்கள் நெய் பூசப்பட்டு வாகனங்களில் ஏற்றப்பட்டு படைப்பாசறைகளுக்கு அனுப்பப்பட்டு விட்டன. அதோடு புதிய ஆயுதங்களை வடிக்கும் பணியும் தொடங்கிவிட்டது. அப்பணியை ஆயிரத்துக்கும் மேற்பட்ட கொல்லர்கள் செய்கிறார்கள். மதில் பொறிகளும் மற்ற யவனர் பொறிகளும் சீர்படுத்தப்பட்டிருக்கின்றன. கவண்களும் கொப்பறை களும் எதிரிகளை வீழ்த்தக் காத்திருக்கின்றன. முதியவர்களும் குழந்தைகளும் வெளியேற்றப்பட்டு விட்டார்கள். கோட்டைக்கதவுகள் சாத்தப்பட்டு விட்டன. இனி வெளியே செல்பவர்களும் உள்ளே வருபவர்களும் கண்காணிக்கப்பட்ட பின்பே அனுமதிக்கப்படுவார்கள். மக்களில் பல இளைஞர்கள் படையில் சேரவும் போர் புரியவும் துடிக்கிறார்கள். அவர்களை பயில்விக்கும் பணியும் நாளை தொடங்கிவிடும். தங்கள் குருநாதரும் கௌரவ அமைச்சருமான மாங்குடி மருதனாரும் புலவர் பெருமக்களும் மக்களை ஆங்காங்கே சந்திப்பதிலும் எதிரியின் தீய எண்ணங்களை விளக்கிச் சொல்வதிலும் ஈடுபட்டிருக்கிறார்கள்' என்றான்.

ஏற்பாடுகளின் நேர்த்தியைக் கேட்ட மன்னன் மனம் நெகிழ்ந்தான். இப்படிப்பட்ட மக்களையும் தளபதி

களையும் வேறு எந்த மன்னனாவது பெற்றிருப்பானா என்று யோசிக்கவும் செய்தான். அதோடு இத்தகைய மகோன்னதமான மாநகரைப் போய் பகைவன் தாக்க முயல்வதை எண்ணிச் சிரித்துக் கொள்ளவும் செய்தான். பிறகு அதுகையிடம் கேட்டான்:

'ஏன் தளபதி, போருக்கு நீங்கள் செய்திருக்கும் ஏற்பாடுகளைக் கேட்டபின் எனக்கொன்று கேட்கத் தோன்றுகிறது. நான் அவசியம்தானா?'-

இப்படிக் கேட்டு மெல்லச் சிரித்தான் மன்னன்.

'மன்னவா நான் கூறியவை வெறும் ஏற்பாடுகள்தான். ஆனால் அவற்றைச் செயல்படுத்த வேண்டுமானால் உங்கள் ஆணை வேண்டும். அந்தச் செயல்பாட்டில் உத்வேகம் உண்டாக வேண்டுமானால் தாங்கள் முன் நிற்க வேண்டும். அவை வெற்றிபெற வேண்டுமானால் தங்கள் வாள் வெளிப்பட வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக தாங்கள் மன்னர் என்ற காரணம்தான் என்னையும், தளபதிகளையும், படைகளையும், அருமைக் குடிமக்களையும் இந்நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறது. தங்கள் குருநாதரைப் பற்றி நான் சொல்ல வேண்டியதில்லை. பிடிவாதம் நிறைந்தவரும் கொஞ்சத்தில் கருத்து சொல்லாதவருமான அவரே முன் வந்து புலவர்களை அழைத்துக் கொண்டு மூலைக்கு மூலை போய் மக்களைச் சந்திக்கச் சென்றிருக்கிறார் என்றால் அதற்குத் தாங்கள்தானே மன்னவா காரணம்? ஆகவே தாங்கள் வியக்கும் காரியம் எல்லாமே தாங்கள் இருப்பதாலேயே நடக்கின்றன'- என்று சொன்னான் அதுகை.



மன்னனின் மனம் மீண்டும் நெகிழ்ந்தது. 'இல்லை தளபதி. மன்னன் இருப்பதே உங்களாலெல்லாம்தான். அவனது உயர்வும் தாழ்வும் அவன் கைகளில் இல்லை. உங்கள் கைகளில்தான் இருக்கின்றன. நான் மக்களுக்கு நல்லதைச் செய்ய நினைக்கிறேன் என்றால் அப்படிச் செய்யும்படி மக்கள் தங்களை வைத்துக் கொண்டிருக் கிறார்கள் என்பதுதான் உண்மை.' என்று கூறிவிட்டு 'ஏற்பாடுகளைப் பற்றியும் எதிரிகளைப் பற்றியும் பேசிய நாம் முக்கியமானவரைப் பற்றிப் பேசவில்லை என்று நினைக்கிறேன்' என்றான்.

'அதாவது...' என்று ஒரு தளபதி இழுத்ததும், 'படைத் தலைவர் பழையனைப்பற்றி மறந்தே விட்டீர்களா?' என்று நினைவுபடுத்திய மன்னன் 'என்ன ஆயிற்று அவருக்கு? எங்கிருக்கிறார் அவர்?' என்று வினவினான்.

'மன்னவா, தாங்கள் திருப்பரங்குன்றத்திற்குச் சென்ற மறுநாள்தான் அவரும் புறப்பட்டார். தன் மனங்கவர்ந்த மேகலை இற்செறிக்கப்பட்டிருப்பதாகச் செய்தி வந்ததாம். பொதினிக்குப் போனார்'- என்றான் ஓர் உபதளபதி.

'ஆனால் வந்திருக்கும் செய்தி போரைப் பற்றியதாய் இருக்கிறதே?' என்று கேட்டான் மன்னன்.

'இடையில் ஏதோ நடந்திருக்க வேண்டும்'- என்றான் உப தளபதி.

'அப்படியானால் அவரைப் பற்றி அறிய வேண்டாமா?'- கேட்டான் மன்னன்.

'தான் வரும் வரை போரைத் துவக்க வேண்டாம் என்று அவர் திட்டமாகச் செய்தி அனுப்பியிருப்பதால்

அவரைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்று நினைக்கிறேன்' - என்றான் தளபதி.

'தளபதி, இற்செறிக்கப்பட்ட மேகலையைக் காண பொதினிக்குப் புறப்பட்ட படைத்தலைவர் போர்ச் செய்தி அனுப்பியதிலும், கோட்டைக்குள் இருந்த விளையாட்டுக் கம்பம் போர்க்கம்பமாய் மாற்றப் பட்டிருந்ததிலுமிருந்தே ஏதோ பலமான சதி நடக்கிறது என்று தோன்றுகிறதல்லவா? படைத்தலைவரும் அனேகமாக அப்படிப்பட்ட சதியில் ஒருவேளை சிக்கியிருக்கலாம். போரிட நம்மிடையே போதுமான பலமிருக்கலாம். ஆனால் மறைவில் இருந்து கொண்டு செய்யப்படும் சதிகளை முறியடிக்கும் வல்லமை அந்த அளவிற்கு இருக்கிறதா? ஆகவே நம் எதிரி கோட்டையின் உள்ளும் புறமும் இருப்பதாகவே எண்ணி எச்சரிக்கையாய் இருங்கள். இனி எந்தப் புது ஆணையைப் பிறப்பிப்பதானாலும் என்னிடம் சொல்லிவிட்டே செய்யுங்கள். நான் என் அன்னையையும் குருநாதரையும் சந்தித்துவிட்டு வருகிறேன். மாலையில் நாம் சந்திப்போம்'- என்று கூறிவிட்டுப் புறப்பட்டான் மன்னன்.

அவன் எந்த அவசியத்தை முன்னிட்டு புதிய ஆணைகளைத் தன்னிடம் சொல்லிவிட்டு அறிவிக்கும்படி சொன்னானோ அது பயனற்றுப் போகும்படி புதிய ஆணை ஒன்றை மன்னனிடம் சொல்லாமல் பிறப்பிக்கவேண்டியவனானான் தளபதி அதுகை. அதன் விளைவோ மிகவும் மோசமாய் இருந்தது.

◈◈◈

முரசு பதினான்கு

# வெள்ளியம்பலம்

ஆலோசனை அவையை விட்டு நேரே அந்தப் புரத்திற்குச் சென்று பெரிய மாளிகையை அடைந்ததும் அவனுக்காகக் காத்திருந்த அவனது அன்னையின் முகம் நீர்தெளிக்கப்பட்ட மலர்ச்சரம் போல் தெம்படைந்தது. ''வா மகனே. முருகப் பெருமானின் விழாவெல்லாம் நன்றாய் நடந்ததா? இறைவனின் திருவிழாக்களுக்குக் கூட செல்லமுடியாத துர்பாக்கியசாலியாகி விட்டேன்?- என்று வார்த்தைகளைக் கொட்டியதும்-

மன்னன் புன்னகையை உதிர்த்தான். ''யாரம்மா அப்படிச் சொன்னது? இப்பாண்டிய மண்டலத்தின் சாம்ராஜ்யாதிபதியைப் பெற்றிருக்கும் தாங்கள் எப்படி துர்பாக்கியவதியாக முடியும்?''- என்று கேட்கவும் செய்தான்.

அன்னை அவனை வினோதமாகப் பார்த்தார். ''இதென்ன மகனே நீயா இப்படிப் பேசுவது? உன்னை நீயே பாராட்டிக் கொள்வதா? இந்தக் குணம் எப்படி வந்தது உனக்கு? பாண்டிய மரபிலேயே இல்லாத தற்புகழ்ச்சியை எங்கு கற்றாய்?''- என்று கேட்டார்.

''தவறாகப் புரிந்து கொண்டுவிட்டீர்கள். அம்மா நான் முடிசூடி பல திங்கள் ஓடி விட்டன. ஆனால் இன்று வரை

இந்த முடிக்காகவோ அரியணைக்காகவோ நான் பெருமைப்பட்டுக்கொண்டதில்லை. பரமானந்தப்பட்டு கூத்தாடவில்லை. ஏதோ மரபு வழி பணி என்று மட்டுமே எண்ணியிருந்தேன். இன்று அதெல்லாம் தவறு என்று புரிந்து கொண்டேன். உங்களுக்குத் தெரியுமா? போர் என்ற பேச்சு வந்து ஒரு பொழுதுகூட சாயவில்லை. கட்டளைகளைப் பிறப்பிக்க வாயைக்கூட நான் திறக்க வில்லை. அதற்குள் கோட்டை எப்படி மாறிவிட்டது தெரியுமா? தளபதிகளும் படைகளுமாகச் சேர்ந்து இந்தக் கணமே போரைச் சந்திக்க ஆயத்தமாகிவிட்டார்கள். நான் எள் என்று சொல்லவில்லை. அதிகாரிகளோ எண்ணெயுடனேயே வந்து நிற்கிறார்கள். என் தந்தையைப் போல் மதிக்கும் என் குருநாதரும் அறிவுச் சுடர்களான புலவர் பெருமக்களும் என் பொருட்டு நகரெங்கும் வீரப்பாலூட்டுகிறார்கள். என் கண்களைவிட அரிய குடிமக்களோ-ஆகா! எந்தவிதமான தியாகத்திற்கும் தயாராகி விட்டார்கள். இப்படிப்பட்ட அருஞ் செல்வங்களைப் பெற்ற நான் பாக்கியசாலியல்லவா? என்னைப் பெற்றத் தாங்கள் என்னைவிட பெரும் பாக்கியசாலியல்லவா? இவற்றில் தற்புகழ்ச்சி எங்கிருக்கிறது தாயே?''...

மன்னனின் ஆவேச மொழிகள் அந்த மூதாட்டியின் கண்களைப் பனிக்க வைத்தன.

'உண்மைதான் குழந்தாய், என்னைவிட பாக்கியசாலி வேறு யார் இருக்க முடியும்; உன் பாட்டனாரைப் போல் பெரும் பராக்கிரமசாலியாய்... மாபெரும் நீதிமானாய் தழைக்க வந்த உன் அருமைத் தந்தை அகால மரணமடைந்தபோது ஆண்டவன் எனக்கு அநீதி இழைத்து விட்டதாகவே கருதினேன். ஆனால் அதே ஆண்டவன்தான் உன்னைத் தந்து என்னை அழைத்தான் இந்த பாக்கியத்திற்கு. அந்தக் குமாரக் கடவுளின் அருளும் அன்னை மீனாட்சியின் அருளும் உனக்கு என்றுமிருக்க வேண்டும்'' - என்று நெகிழ்ந்து போய் பேசிய அவர் ''இதென்ன மகனே திடீரென்று போர்ச் செய்தியைச் சொல்கிறாய்? உண்மைதானா? அமைதியின் உறைவிடமாய் இருந்த மதுரை மாநகர் அமர்க்களப்படப் போகிறதா? அருள் வெள்ளம் பாய்ந்தோடும் கூடல் மாநகரில் குருதி வெள்ளம் ஓடப் போகிறதா?- என்று கேட்டார்.



''இதென்ன தாயே இப்படிக் கேட்கிறீர்கள்? ராஜ்யம் என்றிருந்தாலும் போரும் பகையும் இருப்பது இயல்புதானே?''- என்று கேட்டான் மன்னன்.

''இயல்பை நான் கேள்வி கேட்கவில்லை குழந்தாய் அமைதியின் விளைவிடமாய் விளங்கி வந்ததல்லவா இக்கூடல் மாநகர்? உன்பாட்டனாரும் சரி அதற்கு முற்பட்டவர்களும் சரி இங்கிருந்து போய் போரில் ஈடுபட்டார்களே தவிர பகை என்றும் படை என்றும் யாரும் இங்கு நெருங்கியதில்லையே! அப்படியிருக்க எந்தப் பகைவன் உண்டானான் இப்போது? யாருக்கு வந்தது இத்தனை துணிச்சல்?''-

''உண்டாகியிருப்பது பகையல்ல தாயே. பேதமை. வருகின்றவன் பகைவனல்ல தாயே சதிகாரன். அவன் காட்ட விருப்பதும் துணிச்சலல்ல. முட்டாள்தனம். படை என்ற பெயரிலும் போர் என்ற பெயரிலும் அமைதிக்கு

ஊறுவிளைக்கப் புறப்பட்டிருக்கிறான் கருவூர் சேரன் யானைக் கண்சேய்''-

'போர் எதுவாயிருந்தாலும் விளைவு ஒன்றுதானே குழந்தாய்?'-

'இல்லையம்மா- போர் என்று எதை வேண்டுமானாலும் சொல்லிவிடமுடியாது. பகைப்பதும் படையெடுப்பதும் கூட கௌரவமான காரியங்கள் தாம். இதை மறந்து போர்தொடுப்பவன் சரித்திரத்தில் பாராட்டப்படமாட்டான்.'

'பாராட்டு யாருக்காவது கிடைக்கட்டும். ஆனால் நஷ்டமும் கஷ்டமும் படப்போவது குடிமக்கள்தானே? குடிமக்களை அழிக்கும் செயலுக்குத் எந்த பேராக இருந்தாலென்ன மகனே?'

'தாயே, கருணைத் தெய்வமான தங்கள் மனநிலை எனக்கும் புரியாமலில்லை. இருப்பினும் நானாகப் போரை அழைக்கவில்லை. அதுவாக வலுவில் வரும்போது வாளெடுக்காமல் இருக்கமுடியுமா? போரை விட்டுவிட முடியுமா? வெற்றிவேற் செழியர் என்று பெயரிலேயே வெற்றியினைக் கொண்ட அருமைத் தந்தையாருக்குப் பிறந்த நான் வாளைப்போட்டு விட்டு கோழையாக நிற்க முடியுமா?'- விடுவிடுவென கேட்டான் நெடுஞ்செழியன்.

'பாண்டியர் குலம் விளங்க வந்த குலவிளக்கான உன்னை வாளைத் தொடாமல் இருக்கும்படி உன் தாய் எப்படிச் சொல்லுவாள்? உன்னைக் கோழையாக நிற்கும் படி யார்தான் சொல்லமுடியும்? நான் சொல்வதும் வேதனைப்படுவதும் உன் வீரத்தைப் பற்றியோ அல்லது அதைப் பற்றிய சந்தேகத்தாலோ அல்ல குழந்தாய். அமைதி குலவிய மாநகரில் அப்பாவி மக்களின் குருதி ஓடவேண்டி வந்த அவலத்தைச் சொல்கிறேன்'-



'அம்மா, இப்போரில் நான் பாண்டியர் குல கௌரவத்தை மட்டுமல்ல- முடிந்தவரை இங்கே உள்ள அருமை மக்களின் உயிரையும் காக்கத்தான் போகிறேன். மன்னனுக்கு இருக்க வேண்டிய மனம் அது' கடமை அது. அதையும் மீறி அவலம் உண்டாகுமானால் அது என் உயிர் போன பின்புதான்.'

'மக்களின் உயிர் காக்க சேர மன்னனிடம் நீ கேட்டுக் கொள்ளக் கூடாதா?'-

'போர் வேண்டாம் என்றா தூதனுப்பச் சொல்கிறீர்கள்?'

'அதாவது மகனே-'

'அம்மா, உடல் கொழுத்து புறப்பட்டிருக்கும் யானையை தட்டிக் கொடுத்தா தடுத்து நிறுத்த முடியும்? என்னிடம் ஏதாவது கோரிக்கை விடுத்து அதைநான் மறுத்ததாலா இன்றவன் படையெடுத்து வருகிறான்? இல்லை தாயே. எதையும் அவன் கோரவில்லை. மாறாகக் கோரிக்கையற்று கிடப்பதாக எண்ணி நம்மைக் கபளீகரம் செய்ய வருகிறான். அவனிடம் போர் வேண்டாமென தூதனுப்புவது கடலலைகளைத் தடுக்கக் கைகளை உயர்த்துவது போலத்தான். மக்களைப் பத்தி வேதனைப் படுகிறீர்களே, இந்த வேதனை அச்சேரனுக்கு ஏன் இல்லை? போரிடுவதால் அப்பாவி மக்கள்

பலியிடப்படுவார்கள் என்ற உண்மை அவனுக்குத் தெரியாதா? படைப்புயல் வீசினால் மக்களின் குருதிவெள்ளம் உருவாகும் என்பது யாருக்கும் புரியக்கூடிய விஷயம்தானே? சேரனுக்கு ஏன் புரியவில்லை? மக்களைவிட - அவர்கள் சிந்தும் குருதியைவிட பெரியதாக ஏதோ எதிர்பார்க்கிறான் போலிருக்கிறது. போரின் உண்மைக் காரணம் இன்னும் தெரியவில்லை. தெரிந்தாலும் இனிபோரைத் தடுக்க முடியாது. ஆகவே தங்களை மிகவும் வேண்டிக் கொள்கிறேன். போரை மட்டும் நிறுத்தும் படி என்னிடம் கேட்டு விடாதீர்கள்'-

'ஆகா! விதியின் வழியை யார் மாற்றமுடியும்? மக்களை அம்மீனாட்சிதான் காக்க வேண்டும்' என்றார் அன்னை.

'அம்மா அனைத்திற்கும் ஆதி அம்மீனாட்சி தாய்தான். அவளின்றி நானில்லை. நாடில்லை. அகிலமே இல்லை. வரப்போகும் போர் என் கன்னிப்போர். அதன் வெற்றிக்கு அவள் அருளின்றி வேறில்லை. இன்றிரவு மீனாட்சி யம்மன் ஆலயத்திற்குச் சென்று வருகிறேன் தாயே' - என்றான் நெடுஞ்செழியன்.

'நல்லது குழந்தாய். ஆலயத்திற்குச் சென்றுவிட்டு என்னிடம் வா. போர் நிச்சயமாகிவிட்ட நிலையில் உன்னிடம் முடிக்க வேண்டிய கடமை ஒன்றிருக்கிறது' என்றார் அன்னை.



அருளாட்சியாய் அரசாட்சி புரிந்து அந்த அருளுக்கு ஆதிமூலமான திருவாகிய தெய்வத்தினை ஒருபோதும் ஒதுக்க விரும்பாதவனான பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன் தன் அன்னையை சந்தித்தபின் சிரமபரிகாரங்களை விரைவிலேயே முடித்துக் கொண்டு அன்னை மீனாட்சியைத் தரிசிக்கும் பொருட்டு தேரேறி புறப்பட்டான். அரசனின் வருகை தற்போது நகரம் முழுதும் தெரிந்துவிட்டிருந்தபடியால் மக்கள் ஆங்காங்கே கூடி மன்னனுக்குக் கைகளை ஆட்டித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். அதேசமயம் தங்கள் இல்லங்களை விட்டு வெளியே வந்து வீதிகளை ஆக்கிரமிக்காமல் கட்டுப்பாட்டுடன் தங்கள் இல்லங்களின் படிகளிலேயே நின்று ஆரவாரித்தார்கள். அனைவருக்கும் கைகளை ஆட்டியும் முகமலர்ச்சியைக் காட்டியும் தன் அன்பைத் தெரிவித்துக் கொண்டான் மன்னன். ஓரிரு இடங்களில் தேரை நிறுத்தி மக்களை அழைத்தான். ''போர் வரப் போகிறதே, நீங்களெல்லாம் கவலைப் படுகிறீர்களா?'' என்று கேட்டான். ''தாங்கள் மன்னராய் விளங்கும் வரை எங்களுக்கு எது குறித்தும் கவலை இல்லை''- என்றார்கள் மக்கள். ''பகைவன் கோட்டைக்குள் புகுந்து விட்டால் என்ன செய்வீர்கள்? அச்சமடைவீர்களா?'' என்று வேறு சிலரைக் கேட்டபோது ''அச்சமென்பதை அறியாதவர்கள் தானே பாண்டியர்கள்? பகைவன் எப்படிக்கோட்டைக்குள் நுழைய முடியும்? அப்படியே நுழைந்தால் நாங்களென்ன உலக்கை குத்திக் கொண்டா இருப்போம்? அவற்றையே ஆயுதமாக்கிப் போரிடுவோம் பிரபு. எங்களைப் பற்றிய கவலை தங்களுக்கு வேண்டாம்''- என்று பதிலளித்தார்கள்.

விசாரித்த இடங்களிளெல்லாம் இத்தகைய பதில்களே வந்ததைக் கேட்ட மன்னன் பெரும் திருப்தியடைந்தான். மாலை நேரம் முகிழ்ந்து இரவுப் பொழுது தலைகாட்டத் தொடங்கியிருந்ததால் வீதித் தூண்களில் ஆங்காங்கே பூக்கள் பூத்தது போல் விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. அவ்விளக்குக்குகளில் அவ்வப்போது எண்ணெயை விடத் தேவையான எண்ணெய் பெரும் கொப்பரைகள் நிறைய காளை பூட்டிய பார வண்டியில் இங்குமங்குமாய் சென்று கொண்டிருந்தன. போர் அறிவிப்பை முன்னிட்டு நகரம் ஓர் ஒழுங்குக்கு கொண்டு வரப்பட்டிருந்ததால் வீதிகள் நிர்மலமாய் இருந்தன. சாரதாரணமாய் கலகலப்பாய் காணப்படும் அங்காடிப் பகுதிகள் கதிரவன் மேற்கே சாய்ந்தபோதே மூடப்பட்டு சுத்தம் செய்யப்பட்டு விட்டதால் தற்போது அங்கெல்லாம் மயான அமைதியே நிலவியது. அறங்கூர் அவையத்தார் இருந்த தெருவிலும் அமைச்சர்கள் இருந்த தெருவிலும்கூட வழக்கமாய் நிலவும் ஆரவாரமில்லை. சம்பந்தப்பட்டவர்கள் தத்தம் இல்லங்களுக்குள்ளேயே கூடி ஆலோசனையில் இறங்கியிருந்தார்கள். ஆதலால் வீதியில் அமைதி நிலவியது. சமண பௌத்தப் பள்ளிகளில் சாயங்கால பூசைகள் ஏற்கனவே முடிந்திருந்தன. அந்தணர் பள்ளி மட்டும் என்னேரமும் இயங்கும் திருமறைப் பள்ளியாதலால் தற்போதும் வேதபாராயணங்கள் ஒலித்துக் கொண்டிருந்தன. அவ்வேத ஒலிகள் காற்றிலே கலந்து தெய்வ கானமாய் மெல்லிய சுரத்தில் நகரெங்கும் உலவிய விதமானது கூடல் நகருக்கு தெய்வம் பாதுகாப்பு அளிப்பது போலிருந்தது. அல்லங்காடிகளில் வியாபாரம் முடிந்து விட்டாலும்கூட கற்பூரம் எரிந்த இடம் மணப்பது



போல-மலர்களைக் குவித்து விற்ற இடமெல்லாம் அப்போதும் மணந்து கொண்டிருந்தன ராஜ விசுவாசிகளைப் போல். வணிகர் தெருவை அடுத்திருந்த பரத்தையர் தெருவில் வழக்கமாய் எழும் வளையல் ஒலிகளும் மங்கையரின் சிரிப்பொலிகளும் இல்லை. மாறாக அவை ஏன் எழவில்லை என்பதை விளக்குவது போலவும் போர்க்கால நெருக்கடிக்குப் பின்னணி இசைப்பது போலவும் யாழிசையானது ஒலித்துக் கொண்டிருந்தது.

அரண்மனையிலிருந்து ஆலயம் செல்லும்போது இப்படி அனைத்துப் பகுதியிலும் உலா செல்வது மன்னனுக்கும் அவனது தேருக்கும் வாடிக்கையாதலால் தற்போதும் அவ்வாறே சென்றது. இப்படி உலா வரும் வேளைகளில் மன்னன் எந்தப் பகுதியையாவது விட்டுவிட்டால் அவற்றைச் சேர்ந்தவர்கள் மறுநாளே அவன் முன் நின்று 'வராது போனதற்கு என்ன காரணம்?' என்று அன்பால் கணை தொடுப்பதும் அங்கே ஒரு வாடிக்கையானதால் மன்னன் அனைத்துப் பகுதிகளையும் விட்டுவிடாமல் தேரில் கடந்தான். முடிவில் ஆலயமணி அவனை வரவேற்றது.

பாண்டியன் நெடுஞ்செழியனின் காலத்தில் மதுரை மீனாட்சியம்மனின் ஆலயமானது இப்போது இருப்பது போல் இல்லை. இவ்வளவு பெரிதாகவும் இல்லை. அம்மனுக்கென்று தனியான ஆலயமும் இருக்கவில்லை. *சொக்கநாதருக்கும் சேர்த்தே ஒரே ஆலயமாய்த்தான்

* 'கோயில் மாநகர்' by-இ. பழனியப்பன் பக்கம் 111-112
பக்கம் 111-112

இருந்தது. ஆனால் மன்னனின் நேரடி கண்காணிப்பில் இருந்த காரணத்தால் அரண்மனையைப் போன்றே சீரும் சிறப்புமாக பராமரிக்கப்பட்டிருந்தது. மன்னனின் வரவு முன்கூட்டியே சொல்லப் பட்டிருந்ததால் அம்மனுக்குப் பிரத்தியேக பூசைகள் செய்யப்பட்டிருந்தன. வைகை ஆற்றின் நீரை ஆலயத்தின் பிரதானப் பரிவாரமான அலங்கார யானையின் மீது பொற் குடத்தில் கொண்டு வந்து அபிஷேகம் செய்யப்பட்டது. பாண்டிய மன்னர்கள் இவ்வாலயத்திற்கென்று வழங்கியிருந்த நவரத்தின அணிகலன்களும், பாண்டியப் பேரரசிகள் உவந்தளித் திருந்த திருவாபரணங்களும், அங்காடிப் பெருவணிகர்கள் தினசரி நிவந்தமாய் கொடுத்திருந்த மலர்மாலைகளும் அம்மனுக்குச் சாத்தப்பட்டு தெய்வ அழகிற்கு ஓர் பூரணத்துவத்தை அளித்திருந்தன. மதுரை மாநகருக்குப் புகழ் சேர்த்ததா என்று பிரித்துச் சொல்ல முடியாதவாறு 'நீயின்றி நானில்லை' என்று நிரூபிப்பது போல் ஆலயமும் பெருநகரும் இருந்ததால் மன்னனும் மக்களும் இரண்டையுமே இரு கண்களாய் அந்த ஆலயத்தைப் பாவித்தார்கள். அதை அங்கீகரிப்பது போலவே மன்னனின் அன்பும் அம்பிகையின் அருளும் அங்கே குறைவின்றி இருந்தது.

பழங்காலத்தில் சக்தி, வீரியம் ஆகியவற்றுக்கு அடையாளமாக மீனைக் கருதினார்கள். செழிப்பிற்குரிய அடையாளமாக நினைத்தார்கள். நாடு செழிப்படைய சங்கையும், நண்டு, மீன் ஆகியவற்றையும் வைகை ஆற்று நீரில் விட்டு விளைக, பொழிக என மக்கள் கூவியதாகப் பரிபாடல் கூறுகிறது. இந்த மீன்கள் தம் கண்பார்வையால் சினைகளை பொரிக்கச் செய்து வெளிப்பட வைத்து பாதுக்காக்கக் கூடியன. அது போலவே தன் அருள் பார்வையினால் ஆதரவை வெளிப்படுத்தி மக்களை பாதுகாக்கும் காரணத்தால் ஆலயத்தில் குடி கொண்ட அம்மனையும் மீனுடன் சம்பந்தப்படுத்தி 'மீனாட்சி' என்றழைத்தனர்.* இப்படி மீனைப்போல் பாதுகாப்பு செய்து அருளாட்சி புரியும் மீனாட்சியின் திருவிக்கிரகத்திற்கு முன்னால் ஒருநிலைப்பட்ட மனத்துடன் ஒன்றிப் போய் மன்னன் நின்று தொழுதான்.



'தாயே! அனைவருக்கும் தாயானவளே! மதுரை மாநகரின் தனிச்சிறப்பே! அருள் கலசமே! உன்னை நம்பி வணங்கி வாழும் பாண்டிய மண்ணிற்கு நெருங்கியுள்ள ஆபத்தைக் காக்க நீதான் வழிகாட்ட வேண்டும். நீ இருக்கும் இடம் வெற்றி நிலைக்கும் இடம். நீ காணும் இடம் வெற்றி கிடைக்கும் இடம் என்ற சிறப்பை சரித்திரமாக்க வேண்டும் தாயே. வீணாக வந்துவிட்ட வினையை வாளால் அறுக்க வேண்டிய நிலைக்கு வந்து விட்டதற்கு இம்மன்னனை மன்னித்துவிடு.'- என்று கேட்டுக் கொண்டது அவனது மனம்.

அதையடுத்து மறையவர்களும் கூளியர்களும் தூப தீப நிவேத்தியங்களைச் செய்து முடித்தார்கள். மங்கல பிரசாதங்களை வழங்கினார்கள். மன்னனின் கரத்திலும் வெற்றிக் காப்பு கட்டப்பட்டது. அந்த அளவில் மனநிறைவு பெற்றவனாய் கருவறையை விட்டு வந்த மன்னன் திருச்சுற்றுக்கு வந்தான்.

* தமிழ் இலக்கியங்களில் தாய்த் தெய்வ வழிபாடு.
by பி.எல். சாமி. பக் 70-71

அதுவரை அவனது அசைவு ஒவ்வொன்றையும் கவனித்து வந்த பெண் உருவம் ஒன்று ஆலய இருளிலேயே நகர்ந்து மன்னனைப் பின் தொடர்ந்தது. திருச்சுற்றுக்கு வந்த மன்னன் அந்தணர்களும் கூளியர்களும் சூழ நடந்தான். மேலைப்புறச் சுற்றுக்கு வந்தபோது அந்த எதிர்பாராதச் சம்பவம் நடந்துவிட்டது. அவனைத் தொடர்ந்து வந்த பெண் உருவம் தன் கையிலிருந்த வில்லில் நாணேற்றியது. மன்னனின் மார்பை நோக்கி எய்யவும் செய்தது. அதையடுத்து சில விநாடிகளில் 'ஐயோ' என்ற ஓலம் மிக பயங்கரமாய் எதிரொலித்தது திருச்சுற்றின் சுவர்களில்.

◈◈◈

முரசு பதினைந்து

# எதிர்பாராத பணி

மீனாட்சியம்மன் ஆலயத்தின் கருவறையை ஒட்டிய திருச்சுற்றில் வலம்வரப் புறப்பட்ட மன்னன் சுவற்றுச் சித்திரங்களையும் சிற்பங்களையும் கண்டு அவற்றில் கருத்திழந்தான். அவற்றில் சிவபெருமானின் திருவிளையாடல் காட்சிகளும், சக்தி லீலைகளும் ராமாயண மகாபாரத நிகழ்ச்சிகளும், முருகப் பெருமானின் அவதார மற்றும் படைவீட்டுச் சம்பவங்களும் அளப்பறிய அழகில் ஓவியமாய் தீட்டப்பெற்றும் சிற்பமாய் வடிக்கப்பட்டுமிருந்ததைக் கண்டு பெரிதும் வியந்து கொண்டு சென்றான் மன்னன்.

அக்காலத்தில் சிவபெருமான், முருகன், திருமால், துர்க்கை ஆகிய தெய்வங்களை வழிபடும் மக்களும் மன்னர்களும் இருந்தார்களே தவிர அவர்களை இனம்பிரிக்கும் விதத்தில் சைவம் வைணவம் என்று இந்துமதம் பிரிக்கப்பட்டிருக்கவில்லை. இத் தெய்வ வழிபாடு செய்தவர்கள் திராவிட மதத்தினராகக் கருதப்பட்டனர். திராவிட மதம் என்ற மதம்தான் அக்காலத் தமிழர்களின் பொது மதமாய் இருந்தது.* அப்பால் தமிழ்நாட்டிற்கு வந்து சேர்ந்தன பிற மதங்களான சமணமும் பௌத்தமும். மூன்று மதங்களும் தனித்தனி

* 'சமணமும் தமிழும்' by மயிலை சீனி வேங்கடசாமி
பக் 57

கொள்கைகளையும் நடைமுறைகளையும் கொண்டு ஒன்றையொன்று மீறி உயர்ந்து நிற்க போட்டியிட்டன. இவைகளுக்கிடையே போட்டியும் பூசலும் பலமாயிருந்தன. இக்கதை நடந்த காலத்திற்குச் சற்றுமுன்பே இயற்றப்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களில் இம்மதங்களுக்குள் இருந்த போட்டி பூசல்களை விரிவாகவே காணலாம். இப்படி போட்டிகளாலும் பூசல்களாலும் உயர முற்பட்ட மதத்தினர் தத்தம் தனித்திறமைகளை வெளிப்படுத்தவும் தவறவில்லை. ஓவியம், சிற்பம், இசை ஆகிய கலைகளில் தங்கள் திறமைகளைக் காட்டினர். அவைகளுக்கு ஆலயங்கள் தளமாக அமைந்தன. அந்த விதத்தில் திராவிட மதத்தினர் ஆலயங்களில் சிற்பங்களை வடித்தும் ஓவியங்களைத் தீட்டியும் யாழ்போன்ற கருவிகளை மீட்டியும் காலத்தை வென்று நிற்கும் கலைச் சரித்திரங்களைப் படைத்தார்கள். அந்தப் படைப்புகளைத் தான் தற்போது மன்னன் பார்வையிட்ட படி நடந்தான்.

ஏறக்குறைய அந்தணர்களும் கூளியர்களுமாய் பத்துபேர் மன்னனுடன் சென்றாலும் அனைவரும் சுவற்றிலே இருந்த ஓவியம் மற்றும் சிற்பங்கள் பற்றி அவனுக்கு விளக்கிச் சொல்லிக் கொண்டு வந்ததால் அவர்களின் கவனம் வேறெதிலும் சிதறாமலிருந்தது. எனவே மன்னனைப் பின்தொடர்ந்த கொலையாளியை அவர்கள் கவனிக்கவில்லை. அதோடு மன்னனும் மெய்க்காப்பாளர்கள் என்றோ அரண்மனைப் பரிவாரங்கள் என்றோ யாரையும் ஆலயத்திற்குள் அழைத்து வருவது வழக்கமில்லையாதலால் மன்னனைச் சுற்றி கண்காணிக்க ஆளில்லை. மேலும் திருச்சுற்றில்



ஏற்றப்பட்டிருந்த எண்ணெய் விளக்குகள் திருச்சுற்று முழுவதையும் பிரகாசப்படுத்த போதுமானதாய் இல்லை. இரு ஓரங்களும் இருண்டேயிருந்தன. சுற்றின் நடுப்புறம் இருந்த ஒளியும் பிரகாரத் தூண்களாலும் இதரச் சிற்றாலயங்களாலும் மறைக்கப்பட்டிருந்ததால் ஓரப்பகுதியில் ஒதுங்குபவர்களை காணமுடியாம லிருந்தது. எல்லாவற்றையும் விட ஆலயத்திற்குள் மன்னனைக் கொல்லும் கொலையாளி இருப்பான் என யாரும் எதிர்பார்க்க முடியாதாகையால் திருச்சுற்றிலும் அவர்கள் இயல்பாக இருந்தார்களே தவிர சந்தேகம் கொள்ளவில்லை. கோட்டைவாசல் கம்பத்தில் மாற்றம் செய்திருந்ததைக் கண்டு கோட்டைக்குள்ளேயே எதிரி இருக்கிறான் என மன்னனே ஆலோசனை அவையில் வாய்விட்டுச் சொல்லியிருந்தாலும் ஆலவாய் அழகனின் ஆலயத்திற்குள் வந்த பின் - அம்பிகையை தொழுத பின் - மனம் இலேசாகிவிட்ட நிலையில் அதை மறந்தே போனான்.

எது எப்படியானாலும் வில்லும் அம்பும் ஏந்திய பெண் உருவம் மட்டும் இவற்றையெல்லாம் சரியாகவே ஊகித்திருக்க வேண்டும். மன்னனைத் தீர்த்துக் கட்டுவதானால் அதற்கு இந்த இடத்தைத் தவிர வேறு எதுவும் ஏற்றதாய் இருக்காது என்பதை நன்றாக உணர்ந்திருக்க வேண்டும். திருச்சுற்றின் அமைப்பும், இரவு நேரத்தில் அதன் நிலையும் அக்கொலையாளிக்கு விரிவாகத் தெரிந்திருக்கவே இருளில் மன்னனைப் பின் தொடர்ந்து சென்று இடையில் ஒருவிதத் தீர்மானத்துடன் சற்றே முன்னேறி நடந்தது. அங்காலயம் ஒன்றின் பின்னால் நின்று கொண்டது. மன்னன் திருச்சுற்றின்

மேலைப் புறமாய் திரும்பியபோது அவனது மார்புக்குக் குறி வைத்து நாணை இழுத்தது. மன்னன் மேலைப் புறம் திரும்பியதுமே அவனது கரங்கள் அங்கிருந்த தட்சிணா மூர்த்தியின் திரு உருவத்தை நோக்கி இயல்பாகவே உயர்ந்து ஒன்று சேர்ந்து வணங்கின. அடுத்த நிமிடம் அவரது கரங்களிலிருந்தது வீரக் கழலில் பட்டு 'டங்' என்ற சத்தத்துடன் விழ்ந்தது அம்பு. 'ஐயோ' என அலறினார் கூளியரில் ஒருவர். அது மட்டுமல்ல, அந்தணர்களில் ஒருவர் கையிலிருந்த மணியை மிக வேகமாக ஆட்டவும் செய்தார். அதையடுத்து ஆலயக் கதவுகள் மூடப்படும் பெரும் ஓசையும் எழுந்தது.

கொலையாளியின் அம்பு தொடுக்கப்பட்ட நேரத்திற்கும் மன்னன் இறைவனை நோக்கித் தொழ கரங்களை உயர்த்தும் நேரத்திற்கும் வித்தியாசம் இல்லாமல் போனதால் மன்னனின் மார்பை அவனது கூப்பிய கரங்கள் மறைத்தன. கரங்களை வீரக் கழல்கள் காத்தன. எனவே அம்பு கழலில் பட்டு கீழே விழுந்தது. அதைக் கண்ட மன்னன் கீழே குனியவும், கூளியர் ஒருவர் அலறவும், அந்தணர் மணியோசை எழுப்பவும், ஆலயக் கதவுகள் மூடவுமாய் துவங்குகையில் அந்தணர்கள் சிலர் இப்படியும் அப்படியுமாக கொலையாளியைக் கண்டுபிடிக்க ஓட முற்பட்டார்கள். ஆனால் மன்னன் பரபரப்படைய வில்லை. 'என்ன?' என்பதுபோல் பார்க்கவும் அவர்கள் மிகவும் கலவரப்பட்டார்கள். எண்ணெ விளக்குகளின் மங்கலான ஒளியில் அவர்களது முகங்கள் அடைந்திருந்த பீதி நன்றாகவே புலப்பட்டது. மன்னனுக்கு மட்டுமின்றி மகேசனின் ஆலயத்திலும் நடக்கக் கூடாத சம்பவம் நடந்து விட்டதால் அவர்களின் உடல் நடுங்கியது.



இதற்கிடையில் கீழே விழுந்த அம்பை எடுத்து விளக்கொளியில் சோதித்தான் மன்னன். அம்பு ஒரு அடி நீளமே இருந்தது மட்டுமின்றி மெல்லியதாயும் இருந்தது. அதன் நுனியில் ஏதோ பசை போன்ற பொருள் பூசப்பட்டதின் விளைவாய் வழுவழுப்பாய் காணப் பட்டது. அதை கவனித்த மன்னன், 'நேர்த்தியான அம்பு மார்பில் தைத்திருந்ததால் இச்சிவபிரான் ஆலயத்திலேயே அவனது திருப்பதங்களை அடைந்திருப்பேன். எனக்கந்த பாக்கியம் இல்லாமல் போய்விட்டது'- என்றான் சிரித்தபடி.

அந்தணர்களுக்கோ பதட்டம் விட்டபாடில்லை. பேசுவது அறியாமல் தத்தளித்தார்கள். கணம் தவறியிருந்தால் மரணமாகியிருக்கக் கூடிய நிலையில் மன்னன் மிகவும் சகஜமாய் இருந்ததைக் கண்டு அவர்கள் வியந்தார்கள். உயிரைப் பற்றிய கவலையோ மரணத்தைப் பற்றிய அச்சமோ அவனிடம் இல்லாததைக் கண்டு 'இதனால் தான் இவன் மன்னனாய் இருக்கிறான். மன்னர்களுக்கு உரிய தகுதி இவனுக்கு முற்றிலும் இருக்கிறது' என்று கருதிக் கொண்டார்கள். 'இப்படிப் பட்டவர்களுக்கு போர்க்களம் ஒரு விளையாட்டு மைதானம். அங்கே அடையும் காயங்களெல்லாம் பரிசுகள் போல' என்றும் தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள்.

வியப்பு இருந்தாலும் அதற்குப் பின்னால் அசம்பாவிதம் நடந்து விட்டதைக் குறித்த கலக்கம்

குலையாமலேயே இருந்ததால் 'மன்னிக்க வேண்டும் பிரபு. எங்களை மன்னிக்க வேண்டும்'- என்றார்கள் ஒருவித அச்சம் தொனிக்கும் குரலில்.

'மன்னிப்பா எதற்கு?'- என்று வினயமாகக் கேட்டான்.

'அசம்பாவிதம் நடந்துவிட்டது பிரபு'-

'பிறகு எதற்கு மன்னிப்பு? அசம்பாவிதம் என்பதே எதிர்பாராமல் நடப்பது தானே?'

'மன்னவா, நாங்கள் இருக்கும் நிலையில் இது நடந்து விட்டது. எங்கள் கவனக் குறைவுதான் இதற்குக் காரணம்'

'இல்லை மறையோர்களே. தெய்வ வழிபாட்டிலும் நிவேத்திய கிரமங்களிலும்தான் உங்கள் கவனம் இருக்க முடியுமே தவிர இங்கே வருகிறவர்களுக்கு நேரக் கூடிய ஆபத்தின் பேரில் இருக்க முடியாது. அதோடு ஆலயத்திற்குள் ஏதோ ஒரு மூலையிலிருந்து அம்பு வீச ஒருவன் இருப்பான் என்று யார் எதிர்பார்க்க முடியும்?'.

'பிரபு, மணியோசை எழுப்பி ஆலயக் கதவுகளை மூடியாகிவிட்டது. தங்களைக் கொல்ல முயன்றவன் ஆலயத்திற்குள்தான் இருக்க முடியும். எங்கும் தப்ப முடியாது. அவனைப் பிடித்துவிடுகிறோம்...

'வேண்டியதில்லை'...

'அவன் கொலையாளியாய் இருக்கலாம் பிரபு. அவனை விட்டு வைத்தால் விபரீதங்கள் மேலும் மேலும் நிகழலாம்'...



'சதிகாரர்களில் ஒருவன் பிடிபடுவதால் விபரீதங்கள் நின்றுவிடாது'

'அவனைப் பிடிப்பதன் மூலம் மற்ற சதிகாரர்களை வளைக்கலாம்'.

''சதிகாரர்களைப் பிடிக்க பயனற்ற காரியங்கள் வேண்டாம். இக்கொலையாளியைத் தப்ப வைத்தே மற்றவர்களைப் பிடிக்கலாம். ஆலயத்தில் இப்படியொரு திட்டத்தைத் தீட்டத் துணிந்தவன் நிச்சயமாய் முட்டாளாய் இருக்கமாட்டான். அதோடு அவன் நமக்குப் பிடிபடவும் மாட்டான். தப்ப வழி வைத்துக் கொள்ளாமல் கொலையாளிகள் காரியத்தில் இறங்க மாட்டார்கள். எனவே அந்த முயற்சி வேண்டாம். அந்த ஒருவனுக்காக அம்பிகையின் ஆலயம் மூடப்பட வேண்டியதில்லை. கொலையாளிக்கு இடமளித்த அதே ஆண்டவன்தான் கொலையிலிருந்து என்னைக் காத்துமிருக்கிறான். அவனது சன்னிதானத்தில் நம் சாமர்த்தியங்களைக் காட்டிக் கொள்ள வேண்டாம். இங்கு நடந்த சம்பவம் பிரஸ்தாபிக்க வேண்டிய விஷயமாக இருக்க வேண்டியதில்லை. இத்துடன் விட்டு விடுவதோடு எதுவும் நடந்ததாகக் காட்டிக் கொள்ளாதீர்கள்''-என்று உறுதியான வார்த்தைகளை உதிர்த்துவிட்டு ஆலயத்தை விட்டு வெளியே வந்த அவன் ஆலய நிர்வாகிகளை அழைத்து ''போர்க்காலத்தை உத்தேசித்து ஆலயங்களில் காவல் ஏற்பாடுகளைச் செய்யுங்கள். உள்ளும் புறமும் எப்போதும் பாதுகாக்கப்பட வேண்டும். எதிரி ஒருவேளை கோட்டைக்குள் பிரவேசித்து விட்டால் ஆலயமே கூட ஒரு கோட்டையாகச் செயல்பட வேண்டியிருக்கலாம்.

அதோடு இங்கே வருபவர்களையும் கண்காணித்துக் கொண்டிருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

வேறு சில அதிகாரிகளையும் அழைத்து வேறு வேறு உத்தரவுகளைப் பிறப்பித்து விட்டு அரண்மனைக்குச் சென்றபோது அங்கே தயாராகக் காத்திருந்தான் தளபதி அதுகை.

⁂ ⁂ ⁂

கொலையாளியைக் கண்டுபிடிக்கும் முயற்சியை வேண்டாமெனத் தடுத்துவிட்டாலும் அவனைப் பற்றிய சிந்தனையை மன்னன் விட்டுவிடவில்லை. அவன் யாராக இருப்பான் என்றும் அவனது எண்ணம் என்னவாக இருக்கும் என்றும் யோசித்துக்கொண்டே அரண் மனைக்குத் திரும்பியபோதுதான் அதுகை காத்திருந்தான். அவனிடத்தில் ஆலய சம்பவம் பற்றி மன்னன் சொன்னதும் பெரிதும் திகைப்படைந்தான் அதுகை. சம்பவத்தை நம்பவே சிரமமாய் இருந்தது அவனுக்கு.

''மன்னவா, தாங்கள் எப்போது தலைநகருக்குத் திரும்புவீர்கள் என்று காத்திருந்தது போலல்லவா இருக்கிறது? போரை ஒரு புறம் துவக்கிவிட்டு மறுபுறம் மன்னரைத் தீர்த்துக் கட்டும் பேராசையில் இறங்கியிருக்கிறார்களா எதிரிகள்?'' என்று வியந்தான் தளபதி.

மன்னன் சாதாரணமாகவே பேசத் தொடங்கி ''தளபதி இச்சம்பவம் நமக்கு உணர்த்தும் உண்மை உமக்குப் புரிகிறதல்லவா? போர்ச் செய்தி நமக்கு வந்ததிலிருந்து அது எப்போதோ வெளிப்பட்டிருக்கிறது என்று



தெரிகிறது. ஆனால் போர் நடவடிக்கைகளை விடச் சதி நடவடிக்கைகள் வேகமாக நடக்கின்றன. இது உண்மையானால் எதிரிகள் போர் நடவடிக்கைகளைச் சற்று தாமதப்படுத்துகிறார்கள் என்று நினைக்கிறேன். சதி நடவடிக்கைகளை அதிகம் நம்புகிறார்களோ என்னவோ. அவற்றின் மூலம் உடனடியாக பலன் கிடைக்கிறதா என்பதைக் கவனித்துவிட்டே போர்ச்செயலைத் துரிதப்படுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. அதில் என்னைக் கொல்வது முக்கிய காரியமாய் இருக்கலாம். இன்று அது தோற்றுவிட்ட நிலையில் இரண்டாவது முறையாக முயற்சிக்க மாட்டார்கள் என்று தோன்றியது. மாறாக போர் நடவடிக்கைகள் முடுக்கிவிடப்படலாம். சில நாட்களுக்குள்ளேயே நாம் தாக்கப்படுவோம். படைகளுக்கு உரியபடி தெரிவித்து விடுங்கள்' என்று கூறினான்.

அவன் கூறியது சரியாக இருப்பதாகவே கருதினான் அதுகை. அதேசமயம் கொலை முயற்சியோ, சதி நடவடிக்கைகளோ தற்போதைய கட்டத்தில் ஒட்டு மொத்தமாய் நின்று விடாது என்றும் அவைகள் குறித்து பாதுகாப்பு நடவடிக்கைகள் மேலும் இருக்கப்பட வேண்டும் என்றும் கருதினான். அதுபற்றி மன்னனிடம் பேசினால் அவன் அலட்சியப்படுத்தி விடுவான் என்றும் நடவடிக்கை எடுக்க விடமாட்டான் என்றும் அபிப்பிராயப்பட்ட அவன் தானாகவே முயற்சி மேற்கொள்ளத் தீர்மானித்தான்.

ஆலயச் சம்பவம் பற்றி தெரிவித்த மன்னன் பின் படைகள் விவரங்களைப் பற்றியும் ஆயுதக் குவிப்பு

பற்றியும் அதுகையிடம் பேசினான். விவரங்கள் திருப்தியாய் இருந்தன. ஆனாலும் ஏதோ ஒன்று குறைவது போல் தோன்றியது அவனுக்கு. அது தனது படைத்தலைவன் பழையனைப் பற்றியது. ஏற்பாடுகள் பலபடி இருந்தாலும் அவற்றை இயக்கும் ஆற்றல் பழையன் ஒருவனுக்கு மட்டுமே உண்டு என்று அவன் கணித்திருந்ததால் அப்படைத்தலைவனின் இருப்பிடம் தெரியாதது குறித்தும் இன்னும் கோட்டைக்குத் திரும்பாதது குறித்தும் கவலை கொண்டான்.

அன்றிரவு அந்தப்புரத்திற்குச் சென்றபோது என்றுமில்லாத வாஞ்சையுடன் அவனைக் கைப்பிடித்து அழைத்துச் சென்றார் அவனது அன்னை. அவன் விரும்பும் உணவை வைத்து உண்ணச் செய்தபின் நிலாமாடத்திற்கு அழைத்துச் சென்றார். உயர்ந்திருந்த அத்திறந்தவெளி மாடத்தில் மனந்திறந்த மங்கை பாடலிசைப்பது போல் இதமான காற்று மெல்லிய கீதமாய் வீசி அன்னை மற்றும் மகனின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டது. அந்தப்புர தோட்டத்தை யடுத்திருந்த அந்த நிலா மாடத்தை என்றென்றும் நேசிப்பது போல் மல்லிகை மலர்கள் தினம் தினம் பூத்து மணம் பரப்பி வந்ததால் மாடத்தின் சுற்றுப்புறம் சுகந்த சாம்ராஜ்யமாய் இருந்தது. அந்தப்புரம் பெண்டிர் அந்திப் பொழுது வந்தபின் செந்தமிழ் இசைப்பாடல்களைச் செவியுறப் பாடும் வழக்கமும் நிலை பெற்றிருந்தது. அவ்வழக்கப்படி அந்தி சாய்ந்ததுமே அந்தப்புரச் சுந்தரிகள் மந்தகாசம் பெற்று மெல்லிசையினை எழுப்பவே அவ்விசை அளப்பறிய லயத்தைப் பெற்று நிலாமாடத்துப் பிரமுகர்களை வசப்படுத்தியது.



கனிந்திருந்த சூழ்நிலையைக் கண்டு கனியாகி விட்டிருந்த அந்த மூதாட்டி மகனிடம் பேச்சைத் துவக்கி ''குழந்தாய் போர் சம்பந்தமான ஏற்பாடுகள் எல்லாவற்றையும் சரியாகச் செய்திருக்கிறாய் அல்லவா?''- என்று கேட்டார்.

''எனக்குத் தெரிந்து ஒரு குறைவுமில்லை அம்மா''... என்று தெரிவித்துக் கொண்டான் செழியன்.

''அரசனுக்குரிய பணி போரைப் பற்றியது மட்டுமே அல்ல மகனே.''

''தெரியுமம்மா. ஏன் வேறெந்த ப்பணியாவது தேவைப் படுகிறதா?''

''ஆமாம் குழந்தாய். அரசகுலத்தில் மரபு என்பது மிகப்பெரிய சொல். அதற்கான கடமையை இன்னும் செய்யவில்லையே?''

''என்ன அம்மா அது?''

சொன்னாள் அவள். மிகவும் எதிர்பாராத பணியாய் இருந்தது அது!

முரசு பதினாறு

# புலவர் அவை

மரபு சம்பந்தப்பட்ட பணி ஒன்று செய்ய வேண்டியிருப்பதாய் அன்னை குறிப்பிட்டபோது அது மிகவும் சங்கடமானதாய் இருக்கும் என்று மன்னன் எதிர்பார்க்கவில்லை. தான் கூறப்போகும் பணி மகனுக்கு எதிர்பாராததாய் இருக்காது என்று அன்னையும் நினைக்கவில்லை.

இருப்பினும் அது விஷயமாகப் பீடிகைகள் வளர்க்காமல் 'நீ மணம் செய்து கொள்ள வேண்டும் குழந்தாய்' என்றார் நிதானமாக. அன்னையின் கோரிக்கை வேடிக்கையாய் இருந்தது. 'மணமா? எனக்கா? இந்த நேரத்திலா?' என்று வியப்புடன் கேட்டான் மன்னன்.

'இதில் வியப்போ தவறோ எதுவுமில்லை மகனே. நீ மணமுடிக்க வேண்டியது அவசியம்'-

'அவசியமில்லை என்று நான் சொல்ல வரவில்லை தாயே. போர் வந்து கோட்டைக்கதவுகளை தட்டிக் கொண்டிருக்கும் நேரத்தில் நான் என் திருமணத்திலா கவனம் செலுத்த வேண்டும் என்கிறீர்கள்? காலனை வாசலில் வைத்துக்கொண்டு கன்னியையா நான் மணக்க வேண்டும்? அப்படியொரு செயலில் இப்போது நான் ஈடுபட்டால் ஊர் சிரிக்காதா?'

'சிரிக்காது மகனே. கன்னிப்போருக்கு மன்னனாய் இருந்து புறப்படும் நீ பட்டமகிஷியை ஏற்பதையும்



போர்க் காலத்தில் அவளை இங்கே பொறுப்பில் அமர்த்துவதையும் யாரும் தவறாக எண்ண முடியாது. இது மரபுவழி காரியம்தான்' என்று சுட்டிக் காட்டினார் அன்னை.

''மரபு வழிதான். ஆனாலும் அது இந்த நெருக்கடியில் தானா நடக்கவேண்டும்?''-

''இந்த நெருக்கடி எதிர்பாராதது. எப்போது வேண்டுமானாலும் நேரக் கூடியது. அதற்காக திருமணம் போன்ற முறையான காரியங்கள் தடைப்பட வேண்டிய தில்லை. மனைவி என்று ஒருத்தி உனக்கும் அரசி என்று நாட்டிற்கும் இருந்து உனக்கு வீரத்திலகமிட்டு போர்க்களம் அனுப்புவதே சாலச் சிறந்தது. அவள் உனக்காக நடத்தும் வேள்வி உனக்குப் பெரிய வெற்றியைக் கொடுக்கும்''

''என் வீரத்தில் தங்களுக்கு நம்பிக்கையில்லையா தாயே?''

''பூரணமாக இருக்கிறது குழந்தாய். ஆனால் வீரம் வேறு. சந்தர்ப்பம் வேறு. போர் என்று வந்துவிட்டால் வீரம் மட்டுமே உன்னை எதிர்க்காது. சதியும் சூழ்ச்சியும் எதிர்க்கும். அவற்றை வீரம் முறிக்காது மகனே. பிரார்த்தனையும் வேள்வியும் தான் வீழ்த்தும். மகாபாரதப் போரை எண்ணிக்கொள். அதில் வீரம் பாதி என்றால் மீதி சூழ்ச்சிதான் பங்கு வகித்தது. உன் தந்தை இருந்து நீ இளவரசனாக இப்போருக்குச் செல்வதானால் உன் திருமணம் பற்றி இந்த அவசரத்தை நான் காட்டமாட்டேன். நீயோ மன்னனாகி விட்டாய். இப்பெரும் போருக்கு அனாதை போல் செல்லக் கூடாது நீ?'

'நானெப்படி தாயே அனாதையாவேன் நீங்கள் இருக்கும் வரை?'

'தாயன்பு வேறு. தாம்பத்யம் வேறு குழந்தாய். என் அன்பு உன்னை மேன்மேலும் குழந்தையாகத்தான் ஆக்கும். தாம்பத்யம் அப்படியில்லை. மனம் கவர்ந்த மங்கை ஒருத்தி அரசியாய் இருந்து உனக்குத் தூண்டு கோலாய் இருந்தால் அது உன்னை உயர்த்தும். வீர உணர்வை வளர்க்கும். சாம்ராஜ்ய பொறுப்பை நிலைநிறுத்தும். அப்படியொருத்தி இருந்து உனக்கு உதவும் வரை நீ அனாதைதான்.''

தாயின் உறுதிப்பாடு மன்னனை அசரவைத்தது. அவர் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார் என்றும் அதில் மாற மாட்டார் என்றும் அவனுக்குப் புரிந்தது. முகத்தில் லேசான அசதி உண்டாயிற்று.

அதைக் கவனித்த அன்னை, 'உன் சங்கடம் எனக்குப் புரியாமலில்லை குழந்தாய். கவலைப்படாதே. இத் திருமணம் ஊர் உலகமெல்லாம் அறியும் பெருமணமாய் இல்லாமல் கால நேரச் சிக்கல்களை உத்தேசித்து அம்மன் ஆலயத்தில் முக்கியமானவர்கள் அறிந்த சிறிய சம்பவமாகவே நடத்தலாம். போரில் வெற்றி வீரனாய் திரும்பியபின் மூவுலகும் அறியும் விழாவாக நடத்தி விடலாம்''- என்றார்.

''இன்று ஓரிரவு மட்டும் அவகாசம் கொடுங்கள் அம்மா. எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. இன்றிரவு புலவர் பெருந்தகைகளின் அவை கூடுகிறது. என் மனமெல்லாம் அங்கேயே இருப்பதால் எதையும் இவ்விஷயத்தில் உறுதியாகச் சொல்ல முடியவில்லை. மன்னிக்க வேண்டும்''



''பாதகமில்லை குழந்தாய். காலையிலேயே உன் முடிவைச் சொல்'' என்றார் அன்னை.

நெருக்கடி உண்டாகியிருந்த நேரத்தில் அதுவும் இரவில் மன்னன் புலவர் குழுவினரது அவையைக் கூட்டியிருந்தது அரண்மனை வட்டாரத்தில் வியப்போடு பேசக்கூடிய விவகாரமாகியிருந்தது. போர் மேகங்கள் தழைக்கும் நேரத்தில் போரை நடத்தும் தளபதிகளையும் வீரர்களையும் அடிக்கடி கலந்தாலோசிப்பதே சம்பிரதாயமாயிருக்க மன்னனோ அவ்வாறன்றி போருக்குச் சிறிதும் சம்பந்தமில்லாத புலவர்களை அவை கூட்டியிருந்தானாதலால் பலரும் வியப்பாய் வினவிக் கொண்டார்கள். வியப்பு அவர்களிடம் ஆட் கொண்டாலும் அதேசமயம் மன்னனின் நடவடிக்கை களில் அர்த்தமிருக்கும் என்ற நம்பிக்கையை அவர்கள் விட்டுவிடவில்லை. அவன் மீதான மதிப்பைக் குறைத்துக் கொள்ளவுமில்லை.

இவ்வுணர்ச்சி அவையில் கூடிய புலவர் பெருமக்களுக்கும் இருந்தது. அவையில் மன்னனுக்கு அருகில் சமமான இரு ஆசனங்கள் இரு பக்கமும் போடப்பட்டிருந்தன. ஒன்றில் அவரது முதல் குருநாதரும், பெரும் புலவரும், மன்னனிடம் போரின்போது கூடவே இருந்து கண்டு பின்னால் மதுரைக் காஞ்சி என்னும் பேரிலக்கியத்தைப் படைத்தவரும் மாங்குடியைச் சேர்ந்தவருமான மருதனார் வீற்றிருக்க மறு ஆசனம் மற்றொரு குருநாதரான நக்கீரர் இல்லாத

காரணத்தால் காலியாய் இருந்தது. அவையின் இரண்டு பக்கங்களிலும் பல ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. அவற்றில் பிரதான அங்கப் புலவர்களான கல்லாடனார், மாங்குடி கிழார், இடைக்குன்றூர் கிழார், குடபுலவியனார் ஆகியோரும் பாண்டிய நாட்டின் புகழ்பெற்ற புலவர்களும் வீற்றிருந்தார்கள். அவர்களின் முகங்கள் வெளிக்காட்டிய வியப்பைக் கவனித்த மன்னன், ''பாண்டிய நாட்டின் அறிவுச் செல்வங்களான புலவர் பெருந்தகைகளே! உங்களையெல்லாம் இந்த அகாலத்தில் கூட்டியதற்காக என்னை மன்னிக்க வேண்டும். போர்ப்புயல் மையம் கொண்டிருக்கும் நேரத்தில் பாசறையில் இருந்து படைத்தலைவர்களைக் கூட்டி ஆலோசிக்க வேண்டிய நான் உங்களையெல்லாம் கூட்டியிருப்பது வியப்பாகத் தோன்றுமானால் அதற்காகவும் என்னை மன்னியுங்கள். போர் என்று பேச்சு வந்ததுமே படைவீரர்கள் ஆயத்தப்பட்டார்கள் என்றால் அது எங்கும் நிகழக் கூடிய இயல்பான காரியம். ஆனால் புலவர் பெருமக்கள் ஒன்று கூடி பாண்டிய தேசமெங்கும் அறிவுப் பிரச்சாரம் செய்து மன்னனின் நெஞ்சிற்கு உரமூட்டுகிறார்கள் என்றால் அது வேறெங்கும் நடந்து கேட்டிராத-பாண்டிய நாட்டில் மட்டுமே நடந்திருக்கின்ற பாக்கியம் தான். வெறும் படையும், வீரர்களும், வீர உணர்வுகளும் மட்டும் நாட்டிற்கு வெற்றியைத் தந்து விடுவதில்லை. அவற்றுக்குப் பின்னால் அறமும் அறிவும் உதவவேண்டும். அப்பணியைத் தலையாய பணியாய் புரிந்துவரும் உங்களையெல்லாம் நான் என் கண்களாகவே மதிக்கிறேன். படைத்தலைவர்களின் ஆலோசனை வாளுக்குப் பலமளிக்குமென்றால் புலவர்



பெருமக்களின் ஆலோசனை நெஞ்சிற்கு பலமளிக்கும். சங்கம் வளர்த்த கூடல் நகர் செய்த பாக்கியம்தான் உங்களையெல்லாம் ஒரு சேரக் காணும் பாக்கியத்தை எனக்களித்திருக்கிறது. வாளுக்குப் பலம் பெற்றிருக்கும் நிலையில் நெஞ்சிற்கான பலத்தை உங்களிடம் யாசிக்கிறேன். இப்போர் குறித்து உங்கள் ஆலோசனைகளைத் தெரிவிக்க வேண்டும்''- என்று வினயமாகக் கேட்டுக் கொண்டான்.

''மன்னா! இதில் எங்கள் ஆலோசனை என்ன இருக்கிறது? நீ மேற்கொள்ளப் போகும் குறைவற்ற செயலில் வெற்றி கிடைக்கப் போவது உறுதி. எனவே வாழ்த்துவது வேண்டுமானால் எங்களுக்குச் சாத்தியமே தவிர உபதேசிக்க என்ன இருக்கிறது?''- என்று கேட்டார் கல்லாடனார்.

''ஐயா, அப்படிச் சொல்ல வேண்டாம். இதுவரை நான் எடுத்துள்ள முடிவுகள் வாளுக்குரியவர்களைக் கொண்டு எடுக்கப்பட்டவை. அதாவது உணர்ச்சிப் பூர்வமாய் வந்திருக்கும் முடிவுகள். அவை சரியானவைதானா என்பதை அறிவுப்பூர்வமாய் தாங்களெல்லாம் ஆய்ந்து சொல்ல வேண்டும்''- என்று கேட்டுக் கொண்டான் மன்னன்.

''வலுவில் வருகிற எதிரியை விரைவில் அழிப்பது தான் போற்றத் தகுந்த வரலாறு. இதில் குறை கூற எதுவுமில்லை''- என்றார் கல்லாடனார்.

''புலவர் பெருமானே, இப்போருக்கான காரணம் என்னவாய் இருக்க முடியும் என்று என்னால் ஊகிக்க முடியவில்லை'' என்றான் மன்னன்.

''நீ சிறுவன் என்பது கூட காரணமாய் இருக்கலாம் செழியா'' என்றார் இடைக் குன்றூர்க் கிழார்.

அதை ஆமோதித்த கல்லாடனார், ''புதியதாய் ஒரு மன்னன் அதுவும் உன்னைப் போன்ற இளைஞன்- இப்பெரும் பாண்டிய மண்டலத்தில் அரியணை ஏறினான் என்றால் எதிரிகள் பகைத்துக்கொள்ள அதுவே ஒரு காரணமாகலாம். பொறாமை வித்து வேரூன்றிக் குறுகிய காலப் பயிராய் உயிர் பெற்று பகைவர்களுக்கு மிக விரைவில் அரிப்பை உண்டாக்கக்கூடியது. அந்த அரிப்பையே படையெடுப்பாய் அமைத்துக் கொள்கிறார்கள் எதிரிகள்'' என்றார்.

''இளைஞன் மன்னனாய் பட்டமேறக் கூடாதா?''- என்று கேட்டான் நெடுஞ்செழியன்.

''பொறாமைக்காரர்களுக்கு அது ஒரு பொருத்தமற்ற செயல். ஏதோ தகுதியற்ற இடத்திற்கு வந்து விட்டதாக ஒரு கணிப்பு''- என்றார் கல்லாடனார்.

'அரியணை என்பது வயதோடு சம்பந்தப்பட்டதா?'-

''நெடுஞ்செழியா, அரியணை என்பது போதைப் பொருள், அதனோடு பலருக்கும் சம்ட்ந்தம் ஏற்படுவதுண்டு. ஆனால் உண்மையான சம்பந்தம் என்பது அதை எப்படிப் பயன்படுத்துவது என்று யோசிப்பவனைப் பொறுத்தே அமையும். எவனொருவன் மக்களுக்காக வாழவும், மக்களை உயர்த்தவும், காக்கவும் பரிபாலனம் செய்ய வேண்டும் என்று முயல்கிறானோ அவனுக்குத்தான் அரியணை என்பது உண்மையாகச் சம்பந்தப்பட்டது. வயதோ, அந்தஸ்தோ, பலமோ அல்ல''- என்றார் குடபுலவியனார்.



'அப்படியானால் நான் அரியணையோடு சம்பந்தப்பட்டிருப்பது அங்கீகரிக்கக் கூடியதுதானே?'

'உன் அரசாட்சியே அதற்கு சாட்சி'

'எனக்கு அதற்கு அருகதை இல்லை என்றும், என்னை சிறுவன் என்றும் எதிரி நினைப்பது உண்மையானால் அது தவறுதானே?'

'நிச்சயமாக'-

'நல்லது. படையெடுப்புக்கு வேறுகாரணம் என்னவாய் இருக்கலாம் ஐயா?' கேட்டான் மன்னன்.

'ஆசையும் ஒரு காரணம்' என்றார் ஒரு புலவர்.

'ஆசைப்படுவது நியாயம் தானே?'

'பிறர் பொருளுக்கு ஆசைப்படுவது நியாயமில்லை மன்னா' என்றார் ஒரு புலவர்.

'அப்படியானால் எதிரி இப்பாண்டிய நாட்டின் மீதான ஆசையால் படையெடுக்க முற்பட்டிருந்தால் அது தவறு தானே?'

'சந்தேகமில்லாமல்'

'வேறு காரணம்?'-

'பொறாமை, ஆசை ஆகிய இரண்டிலுமே எல்லா காரணங்களும் அடங்கிவிட்டன' என்றார் கல்லாடனார்.

'இல்லை, வேறொரு காரணம் தனியாக இருக்கிறது' என்று ஒரு குரல் குறுக்கிட்டது.

அது குருநாதரும் அமைச்சருமான மாங்குடி மருதனாரின் குரல். முதிர்ந்த வயதும், வெண் நரையும்,

நீண்ட தாடியும் தெளிவான கனிந்த முகமும், தீட்சண்யமான கண்களும், எளியதோற்றமும் கொண்ட மூத்த புலவரும், மன்னனின் குருநாதரும் அமைச்சருமான மாங்குடிமருதனாரின் பேரில் அனைவருக்குமே மதிப்புண்டு. பேசினாலும் சரி எழுதினாலும் சரி வார்த்தைகளை அளந்து நடக்கக் கூடியவர் என்பது பிரசித்தமாயிருந்தது. புலவர் அவை கூடிய நேரத்திலிருந்து ஒருவார்த்தையும் பேசாதிருந்ததால் பெரு மதிப்புக்கு ஆளாகியிருந்த அவர் தற்போது அவரே முன்வந்து பேசியது அனைவரது கவனத்தையும் கவர்ந்தது.

'சொல்லுங்கள் குருநாதரே'- என்றான் மன்னன்.

'இப்பாண்டிய நாட்டின் மீது எதிரிகள் படையெடுக்கக் காரணம் நீ செய்த அநீதியாகவும் இருக்கலாம்'' என்றார் மாங்குடி மருதனார்.

அவரது பேச்சைக் கேட்டு அனைவருமே திகைத்தார்கள்.

''குருநாதரே இதென்ன சொல்கிறீர்கள்? என்னைத் தங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்டான் மன்னன்.

''அதற்கென்ன?''- சாதாரணமாக வினவினார் புலவர்.

''தங்களுக்குத் தெரியாமல் நான் என்ன செய்திருக்கிறேன்'' மன்னன் வினவினான்.

''என்னிடம் சொல்லிவிட்டா அநீதிகளைச் செய்வாய்?'' இப்படி புலவர் கேட்டதும் என்ன பேசுவது என்று யாருக்கும் விளங்கவில்லை.



புலவரே பேசமுற்பட்டு, ''நெடுஞ்செழியா, நீ அறிவில் சிறந்தவன். யோசித்துப்பார். போருக்கான காரணத்தை எதிரிகளிடம் ஆராய்வதைவிட நம்மிடம் ஆராய்ந்து பார்ப்பது நன்று. நம்மை மறந்து நாம் அநீதி இழைத்திருக்கலாம். அல்லது இழைத்துவிட்ட அநீதியை மறந்திருக்கலாம். அதற்காக எதிரி போர் தொடுக்கலாம். அல்லவா?''- என்றார்.

''குருநாதரே, நன்றாகக் கேட்டுக் கொள்ளுங்கள். தவறுகளை என்னை அறியாமல் செய்யும் பழக்கமோ செய்துவிட்ட காரியங்களை மறந்துவிடும் வழக்கமோ எனக்கில்லை. என் உயிரினும் மேலான இக் குடிமக்களை நான் முடிசூடி பொறுப்பேற்றதிலிருந்து முடிந்த வரையிலான உதவிகளைத் தான் செய்திருக்கிறேன். என் குடிமக்கள் மட்டுமல்ல-குடிகள் யாராயிருப்பினும் சரி அவர்களுக்கும் சரி-வேற்று நாட்டு மன்னர்களாயிருப்பினும் சரி உலகறிந்த நீதியைத்தான் தந்திருக்கிறேனே தவிர அநீதி என்று ஒன்றைக் கற்பனையிலும் செய்ததில்லை. அப்படியொன்றைச் செய்து அதற்காகவே போரும் உருவாகியிருக்குமானால் அனைவரிடமும் மன்னிப்புக் கோரிவிட்டு வாளேந்தி புறப்பட்டிருப்பேனேயன்றி அவைகளைக் கூட்டி ஆலோசனைகளைக் கேட்டுக் கொண்டிருக்க மாட்டேன். நான் செய்த காரியங்களெல்லாம் அநீதிகள் என்று அறிவில் சிறந்த என் குருநாதர் கருதுவாரானால் வாழ்நாள் வரை அவற்றைத் தொடர்வதை என் வாழ்வின் பயனாகவே கருதிச் செய்துகொண்டே இருப்பேன்''- என்றான் மன்னன் ஆவேசக்குரலில்.

'நெடுஞ்செழியா, மிகவும் சிறிய வயதில் பட்டமேற்ற நீ உடனடியாக உன் பராக்கிரமத்தைக் காட்டும் வகையில் அண்டை நாடுகளின் மீது படையெடுத்திருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் அயல் நாட்டவர் இப்போது உன்னை அண்டுவார்களா? நீ செய்யாமல் விட்ட காரியம் உன் மீதே திரும்பியுள்ளது' என்றார் புலவர்.

புலவரா இப்படிப் பேசுகிறார் என்று அங்கே வியக்காதவரில்லை. மன்னன் கூட ஆச்சரியப்பட்டான். பிராயத்திற்குத் தக்க அறிவுரை வழங்குவதானால் அவர் மன்னனிடம் உண்டாகக்கூடிய ஆவேசத்தைக் குறைக்கவும் முடியுமானால் போரைத் தவிர்க்கவும் முயன்றிருக்க வேண்டும். அப்படியின்றி ஓர் இளம்பிராயத்தவர் போல் அவரே ஆவேசப்பட்டு அவனுக்கும் ஆவேசத்தை ஊட்டும் வார்த்தைகளை உதிர்த்தார் என்றால் வியப்படையாமல் இருக்கமுடியாது தான்.

அனைவரது வியப்பையும் கவனித்த புலவர் புன்முறுவல் கொண்டார். 'என் பிராயத்திற்கும் பேசும் பேச்சுக்கும் சம்பந்தம் இல்லையே என்று எண்ணுகிறாயா நெடுஞ்செழியா? பிறரது உணர்வுகளை அடக்குவதும் பொறுமையை உபதேசிப்பதுமே முதுமைப் பிராயத்தின் மரபுகள் அல்ல. என் மகளுக்கு கேடு விளைகிறதென்றால் கிழவன் என்ற காரணத்தால் நான் பொறுமையை கடைப்பிடித்துக்கொண்டா உட்கார்ந்திருக்க முடியும்? உபதேசத்தைப் பொறுத்தவரை வயது முக்கியமல்ல. வேளைதான் முக்கியம். பட்டமேறிய உடனேயே காட்டவேண்டிய பராக்கிரமத்தைக் காலம் கடந்து



காட்டுவதாக இச்சந்தர்ப்பத்தை எண்ணிக்கொள். இன்றையச் சூழ்நிலையில் உன் பராக்கிரமம் உலகறிய வெளிப்பட வேண்டும். அதற்கேற்ப உனக்கு வீர உணர்வை ஊட்டுவதுதான் என் கடமையே தவிர பொறுமையை உபதேசிப்பதில்லை. போர் குறித்து யோசிக்கவோ ஆலோசிக்கவோ இனி எதுவுமில்லை. வாளை உயர்த்தவேண்டிய வேளை வந்துவிட்டது. ஆயத்தப்படுத்திக்கொள்' என்று பேசிய புலவர் 'அவையைக் கலைத்துவிட்டு என்னோடு வா செழியா. உன் நடவடிக்கைக்கு முக்கியமான பொருள் ஒன்றை உனக்குக் காட்ட வேண்டியிருக்கிறது' என்றார்.

விரைவிலேயே அவையைக் கலைத்துவிட்டுப் புலவருடன் சென்று அவர் காட்டிய பொருளைக்கண்டு அவர் தந்த விளக்கத்தையும் கேட்டான் மன்னன். மலைத்துப் போய் நின்றான்.

◈◈◈

## முரசு பதினேழு

# பாண்டிய முரசு

புலவர்கள் அவை கலைந்தபின் மன்னன் நெடுஞ்செழியனை அரண்மனையின் மேற்குப்பகுதிக்கு அழைத்துச் சென்றார் குருநாதர். அங்கிருந்த ஆடலரங்கின் பின்புறம் நடந்தார். அதன் கோடியில் இருந்த இசைத்தூணுக்கு அருகிலிருந்த மாடமொன்றில் கையை விட்டு அசைத்தார். அதையடுத்து பின்புறச் சுவற்றிலிருந்த பெரிய கருங்கல் ஒன்று நகர்ந்து இருண்ட துவாரம் ஒன்றைக் காட்டியது. ''வா நெடுஞ்செழியா!''- என்று சொல்லிவிட்டு அந்த துவாரத்தில் குனிந்து நுழைந்தார். மன்னனும் நுழைந்தான். இருவரும் நுழைந்தபின் குருநாதர் மீண்டும் எதையோ தடவி அசைக்கவும் துவாரத்தைக் கருங்கல் மறைத்து உள்ளே கும்மிருட்டைச் சிருஷ்டித்தது. இருப்பினும் அவர்கள் தங்கள் கண்களையே விளக்குகளாக்கிக் கொண்டு மெல்ல நடந்தார்கள். சிறிது தூரம் சென்றதுமே விளக்கொளி ஒன்று தெரிந்தது. அருகில் சென்றபோது சிறிய மாடமொன்றில் அகல் விளக்கொன்று எரிந்து கொண்டிருப்பதை இருவரும் பார்த்தார்கள். குருநாதர் அங்கே ஏதோ ஒரு மூலையில் குனிந்து ஒருசில பந்தங்களை எடுத்தார். அவற்றை அகல் விளக்கில் கொளுத்தி அங்கே இருந்த துளை மாடங்களில் செருகினார். சில நிமிடங்களிலேயே அந்த இடம் பிரகாசமானதாய் மாறியதோடு அங்கிருந்த பொருளும்



நன்றாக புலப்பட்டது. அதைத் தன் விரிந்த கண்களால் நோக்கிய மன்னன் 'குருநாதரே, இதென்ன?' என்று கேட்டான் வியப்புடன்.

குருநாதர் அதன் அருகில் சென்று ஏதோ குழந்தையைத்தொடுவதுபோல் ஆசையுடன் தொட்டுத் தடவிக் கொடுத்து ''கண்டாயா நெடுஞ்செழியா? இதுதான் ஐந்து முகப் பேரிகை. இது முழங்க வேண்டிய காலம் வந்து விட்டது'' என்று கூறி ஏதோ கனவுலகைப் பார்ப்பது போல் மேலே பார்த்தார். விநோதமான ஐந்து முகப் பேரிகையைக் கண்டான் மன்னன். போர்க்காலங்களில் கோட்டைமீது வைத்து கொட்டப் படும் பேரிகையைவிட நான்கு மடங்கு பெரியதாயும் ஐந்து முகங்களைக் கொண்டதாயும் இருந்தது அப்பேரிகை. அப்படியொரு பேரிகையை அவன் பார்த்ததுமில்லை. இருப்பதாய் கேள்விப்பட்டது மில்லை.

அதை அவன் வியப்புடன் நோக்குவதைக் கவனித்த குருநாதர், ''நெடுஞ்செழியா, நீ பார்க்கிறாயே இதுதான் பாண்டியர் பேரிகை. இது போன்று வேறெங்கும் இல்லை. இதை யானையைக் கட்டித்தான் நகர்த்த முடியும். இதை ஐந்து பேர் நின்று கொண்டு ஐந்து முகங்களில் கொட்டினார்களானால் இடி முழக்கமே தோற்கக்கூடிய பேரொலி உண்டாகும். திசைகள் அதிரும். எதிரிகள் கலங்குவார்கள்.''... என்று விளக்கிய குருநாதர், 'இதன் கதை சரித்திரம் உனக்குத் தெரியுமா?' என்று கேட்டார். வியப்பிலும், பரவசத்திலும் இருந்த மன்னன் எதுவும் பேசவில்லை. குருநாதரே தொடர்ந்தார்.

'நெடுஞ்செழியா, இதை நிர்மாணித்தவர் உன் பாட்டனாரும் பெரும் வீருமான ஆரியப்படைக் கடந்த நெடுஞ்செழியர். தன் ஆட்சிக் காலத்தில் அவரிதை உருவாக்கத் துவங்கிய போது வியக்காதவரில்லை. இத்தனை பெரிய ஐந்து முகங்களைக் கொண்ட ஒரே பேரிகை மன்னன் மேற்பார்வையில் விசேஷமாக இருக்கும் என அனைவரும் எண்ணினர்.

''நான் அப்போது இளைஞனாக இருந்ததால் புலமை பெற்றிருக்கவில்லை. நான் இலக்கிய விவகாரங்களின் பக்கமே தலைவைக்காமலிருந்த வேளை அது. மன்னரின் மெய்க்காவல் படையினரில் ஒருவனாய்-அவருக்கு மிகவும் பிடித்தமானவனாய்-எப்போதுமே அவருட னேயே இருந்தேன். அப்போதெல்லாம் இப்படியொரு முரசு உருவாக்கப்படுவது குறித்து நான் விசாரிப்பதுண்டு. 'முரசு கட்டி முடிக்கப்படட்டும் பொறு' என்று சொல்லிக்கொண்டே வந்தார்.

'விரைவிலேயே முரசு கட்டி முடிக்கப்பட்டது. மன்னராகவே அழைத்து என்னிடம் அதனைப் பற்றிய விளக்கமளித்தார். ஆகா! அப்படிப்பட்ட மன்னர்கள்தான் நாட்டின் வரலாற்றுக் கிரீடங்களாகிறார்கள்'- என்று நெகிழ்ச்சியுடன் பேசி நிறுத்திய குருநாதர் தொடர்ந்து 'நெடுஞ்செழியா, அவரளித்த விளக்கம் என்ன தெரியுமா? 'மருதா, பறைகளும் பேரிகைகளும் தூதுவர்களைப் போல். ஓர் விஷயத்தை அறிவிப்பதற்காகக் கொட்டப் படுபவை. போரைப் பற்றிய செய்தியை அறிவிப்பது போர்ப்பேரிகை. அறச்செயல்களை அறிவிக்க கொட்டு வது அறப்பேரிகை. அரசகுலத்தோரின் வருகையை அறிவிப்பது ராஜபேரிகை. இப்படிப் பேரிகைகள் பல



இருப்பது உனக்குத் தெரியும். இவை அனைத்துமே ஐவகை நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றுக்குள் தானே அடக்கம்? அரசன் முதல் ஆவினம் வரை இந்நிலங்களுக்குள் தானே வாழ்கிறார்கள்? எனவேதான் ஐந்து முகங்களைக் கொண்ட இப்பேரிகையை அமைத்தேன். இப்பேரிகை தினமும் கொட்டப்படும். எதற்காகத் தெரியுமா? இந்த பாண்டிய மண்டலத்தில் உள்ள ஐவகை நிலத்தவரும் சுகமாகவும் நிம்மதியாகவும் வாழ்கிறார்கள் என அயல் நாட்டவருக்கும் அறிவிக்கும் பொருட்டு இது தினமும் முழங்கும் பேரிடிபோல். என்றாவது இது முழங்க வில்லை என்றால் மேலே சொன்ன ஐவகை நிலங்களுக்குள் எங்கோ ஆபத்து அல்லது குறை என்று உணரப்பட்டு அவைகளை ஆராய்ந்து நிவர்த்தி செய்யப்படும். பாண்டிய நாட்டின் நலத்தைப் பிரதிபலிப்பதால் இது இனி பாண்டிய முரசு என்றழைக்கப்படும். மன்னனை விட உயர்ந்ததாய்க் கருதப்படும்' என்றார்.

'ஆனால் அவரது நல்லெண்ணத்திற்கு அதிவிரை விலேயே மண் விழுந்துவிட்டது மன்னா. அவர் முடிசூடிய சில காலத்திற்குள்ளாகவே தமிழகத்தின் மீது ஆரியர்களின் நடமாட்டம் மிகுந்திருந்தது. அது கொஞ்சம் கொஞ்சமாய் பெருகி படை நடமாட்டமாய் உருப்பெற்றது. அந்த காலத்தில் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் வலுவான பேரரசுகள் அமையவில்லை. பாண்டிய நாடு மட்டுமே பேரரசாய் விளங்கியது. மகத்தான படைவலுவையும் பெற்றிருந்தது. எனவே பாண்டிய நாட்டின் மீது கண்ணாய்

இருந்தார்கள் அவ்வாரியர்கள். அவரது ஒற்றர்கள் மதுரை மாநகரெங்கும் திரிந்தனர். அவர்களுக்கு இப்பாண்டியர் முரசின் பெருமை பற்றித் தெரிந்தது. தலைநகரில் உள்ள காவல் மரத்தை விடச் சிறப்பு வாய்ந்த இப்பாண்டியர் முரசின் பெருமையை அழிக்கத் தீர்மானித்த அக்கயவர்களில் சிலர் ஒரு நாள் இரவோடு இரவாக இங்கே நுழைந்து இப்பாண்டிய முரசைக் கிழித்துக் கேவலப்படுத்திவிட்டுச் சென்று விட்டார்கள்.

''விவரமறிந்த மன்னர் எரிமலையானார். தனக்கு ஏற்பட்ட பேரவமானமாகக் கருதினார். தன்னைவிட மேலானதும் பாண்டிய நாட்டின் கௌரவ அடையாளமுமான முரசு பேரிகை எதிரிகளால் அழிக்கப்பட்டதைவிட வேறு அவமானமே இல்லை என்று எண்ணிய அவர் சிதைந்து போன முரசைச் சீர்படுத்தினார். படைகளைத் திரட்டினார். தளபதிகளைக் கூட்டினார். 'எந்தப் பேரிகை நாட்டின் நலத்தை அறிவிக்கும் தூதுவனாக இருந்து வந்ததோ அதன் அர்த்தம் இன்று எதிரிகளின் கயமைத்தனத்தால் அழிந்துவிட்டது. இனி இப்பாண்டிய பேரிகை பாண்டிய நாட்டின் நலத்தை அறிவிக்கும் பொருட்டு ஒலிக்காது. இப்பாண்டிய நாட்டின் நலத்தையும் கௌரவத்தையும் குலைக்கும் எதிரிகளைப் பூண்டோடு ஒழிக்கும் கட்டாயம் வரும்போது மட்டும் வானதிர ஒலிக்கும். அதற்கான வேளை வந்துவிட்டது. முழங்கட்டும் பாண்டிய பேரிகை. கிளம்பட்டும் பாண்டியர் படை' என்று முழங்கினார்.

'பிறகு நடந்த நிகழ்ச்சிகளை நான் எண்ணி எண்ணி பூரிக்காத நாளே இல்லை நெடுஞ்செழியா. பெரும்படை திரட்டிச்சென்ற அவர் வடக்கே நிறைந்திருந்த கடல் போன்ற ஆரியர்படைகளை தன்னந்தனியே எதிர்த்துப் பூண்டோடு அழித்தார். அதையொட்டியே ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியர் என்ற சிறப்புப் பெயரை நாடு அவருக்குச் சூட்டி மகிழ்ந்தது. வரலாறு பொன் னெழுத்துக்களால் அதைப்பொறித்துக் கொண்டது.



'அவர் மாவீரர் மட்டுமல்ல. மகானும் கூட. எதிரிகள் அநீதி இழைத்தது கண்டதும் படைதிரட்டிப் போய் பரிகாரம் கண்ட அம்மாவீரர் பின்னால் பொற் கொல்லனின் பேச்சினால் தடுமாற்றம் எய்தி கண்ணகிக்கு அநீதி செய்தபோது அக்குற்றத்தை மறைக்க முற்படாமல் ஒப்புக்கொண்டு தன்னைத்தானே மாய்த்துக் கொண்டார். தன்மீது குற்றமிருக்கிறது என்பதை உணர்ந்ததும் தன்னைக் கள்வன் என்று ஊராறிய ஒப்புக் கொண்டு அதற்கான உயர்ந்தபட்சதண்டனையாய் அரிய உயிரையே மாய்த்துக் கொண்ட அம்மகானைப் போன்ற ஒரு மாமன்னர் சரித்திரத்தில் வேறெங்கும் நீ பார்த்திருக்க முடியாது நெடுஞ்செழியா.

''அவரைப் போன்று நடந்துகொள்ள வேண்டிய நிலை உனக்கு வந்து விட்டது என்று சொல்ல விரும்புகிறேன். எதிரிகள் உன்னைச்சிறுவன் என்று கருதி உன்மீது படையெடுத்து வந்திருக்கிறார்கள். சிறுமை உனக்கு மட்டுமல்ல. இப்பாண்டிய நாட்டிற்கும் மக்களுக்கும்தான். அந்த அவமானத்தைப் போக்க நீ போரில் இறங்கியே ஆகவேண்டும். எனவே கொட்டட்டும் பாண்டிய முரசு. கேட்கட்டும் வெற்றிப் பேரொலி''...

தன் பாட்டனாரின் அரசநெறியையும் வீர உணர்வையும் கேட்டுப் புல்லரித்துப் போனான் நெடுஞ்செழியன். குருநாதர் கூறியது போல் அவனது இயற்கையான வீர உணர்வையும் அற உணர்வையும் கூர்மைப்படுத்துவதாகத்தான் அமைந்தன பாட்டனாரின் செயல்கள். குருநாதர் அதை விவரித்த விதமும் நேர்த்தியாய் இருந்தது. இப்படியொரு வேகமும் ஆவேசமும் மிகுந்து குருநாதர் அதுவரை பேசி அவன் பார்த்ததில்லை. தற்போது பார்த்தான். வியந்தான். யாராயிருந்தாலும் தாயைப் பற்றியோ, தாய் நாட்டைப் பற்றியோ பேசும் போது ஆவேசம் அடையத்தான் செய்வார்கள் போலிருக்கிறது என்றெண்ணிக் கொண்டான்.

பிறகு குருநாதரிடம் ''குருநாதரே, இப்பாண்டிய முரசை இங்கிருந்து வெளியேற்றவே முடியாது போலிருக்கிறதே?'' என்று கேட்டான்.

''முடியாமல் எப்படி போகும்? இங்கேயே வைத்தா ஒலிக்க முடியும்? அதோ வடக்குப்புறச் சுவற்றில் தாமரைப் பூ போன்ற விசையொன்று இருக்கிறது பார். அதைத் திருகினால் இதோ, இந்தச் சுவர் விலகி பெரிய இடைவெளிய அளிக்கும். அது நீண்ட சுரங்கப் பாதைக்கு வாயிலாகிறது. யானையைக் கொண்டு இங்கிருந்து இம்முரசைக் கட்டி இழுத்து சுரங்கப் பாதையிலேயே செல்லலாம். இச் சுரங்கம் அன்னை மீனாட்சி உறையும் வெள்ளியம்பலத்தின் வெளிச் சுற்றில் உள்ள நாவல் மரத்தருகே முடிகிறது. அங்குள்ள மேல்வாயிலைத் திறந்து கொண்டு முரசை வெளியேற்றலாம். அங்கிருந்து கோட்டைக்குக் கொண்டு



சென்று காவல் கூடத் தூணுக்கு ஏற்றலாம். அங்கிருந்து இதனை முழக்கினால் வடக்கே பொதினிமலை வரையிலும், மேற்கே பொதிகைமலை வரையிலும் கேட்கும். கிழக்கே கடலலையை அதிரவைக்கும் கொற்கையில். மேற்கே திருப்பரங்குன்றத்தில் எதிரொலிக்கும்''- என்றார் குருநாதர்.

ஆரம்பத்தில் முரசைக் கண்டு குருநாதர் எப்படி ஒரு குழந்தையைத் தொடுவது போல் தொட்டாரோ... அதே போல் தற்போது தொட்டு மகிழ்ந்தான் மன்னன்.

❖ ❖ ❖

அன்றிரவு பாண்டிய முரசு பற்றியும் பாட்டனாரைப் பற்றியும் வெகு நேரம் எண்ணிக் கொண்டிருந்தான் நெடுஞ்செழியன். அவற்றை எண்ண எண்ண அவனிடம் பெருமித உணர்ச்சி பெருக்கெடுத்தது. பாண்டிய நாட்டின் மிகப்பெரும் சொத்து காணாமல் போயிருந்து கிடைத்த மாதிரி இருந்தது அவனுக்கு. அந்த ஐந்துமுகப் பேரிகை இப்படிப்பட்ட வரலாற்றுப் பேரிகை இருப்பது இத்தனை நாட்களாகத் தனக்குத் தெரியாமல் போனதேன் என்றும் மாங்குடி மருதனாருக்கு மட்டும் தெரிந்தது எப்படி என்றும் பலவாறு யோசித்து விடை கிடைக்காமல் தவித்தான். அது எப்படியானாலும் தற்போது வெளிப்பட்ட வரை மகிழ்ச்சியே அடைந்தான்.

பிறகு அவன் சிந்தனை தன் அன்னையைப் பற்றியும் அவர் விரும்பிய திருமணம் பற்றியும் சென்றது. அந்த விஷயத்தில் அன்னையின் அபிப்பிராயத்தை குறை கூறவும் முடியாமல் எதுவும் சொல்லாமல் ஏற்கவும் முடியாமலிருந்தது அவனுக்கு. அரச காரணங்கள்

ஆயிரமாயிரமாய்ச் சொன்னாலும் திருமணம் என்பது சொந்த விஷயம்தான் என்பது அவனது தனிப்பட்ட அபிப்ராயமாய் இருந்ததால் அதில் தற்போது ஈடுபடுவது மக்களிடையே நல்லதொரு நினைப்பாய் அமையாது என்று நிச்சயமாய் அவன் நம்பினான். அன்னை சொல்லும் காரணம் குடும்ப ரீதியானதேயன்றி வேறில்லை என்றும் கருதினான்.

அதோடு திருமணம் பற்றிப் பேசி அது இரண்டொரு நாட்களில் அதிக விளம்பரமின்றி வெள்ளியம்பலத்தில் நடத்தி விடலாம் என தெரிவித்த அன்னையார் பெண்ணைப் பற்றி எதுவும் பேசவில்லையே என்றும் நினைத்தான் அவன். ஓரிரு நாட்களுக்குள் மணக்கக் கூடிய விதத்தில் எந்தப் பெண் இருக்கிறாள்? சுற்றியுள்ள மன்னர்கள் எல்லாம் எதிரிகளாகிவிட்ட நிலையில் பெண் கொடுக்க யாரிருக்கிறார்கள்? என்றெல்லாம் யோசித்த அவன் 'அன்னை யாரோ ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுதான் திருமணப் பேச்சை எடுத்திருக்க வேண்டும். இல்லையென்றால் இரண்டொரு நாட்களில் திருமணம் சாத்தியமில்லை' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

இதற்கிடையில் அவனது நினைவில் திருப்பரங் குன்றத்தில் பேசிய துடுக்குப் பெண்ணும் நினைவுக்கு வந்தாள். திருப்பரங்குன்றத்தில் அவள் கோரிக்கை விடுத்த போது வினோதமாய் இருந்தது. அக்கோரிக்கையை மீண்டும் மீண்டும் வலியுறுத்தி அதிகப்பிரசங்கித் தனமாய் பேசியபோது கோபமாய் இருந்தது. அந்த கோபத்திலேயே பலவாறு பேசிவிட்டு வந்திருந்தான். தற்போது அமைதியாய் இருந்த நேரத்தில்




அவளது பேச்சுக்களை எண்ணிப் பார்த்தபோது அனைத்துமே ரசிக்கத்தக்தாய் இருந்தன. ''இப்படியும் ஒரு பெண் இருப்பாளா?' என்று எண்ணியிருந்த அவனுக்குத் தற்போது 'ஏன் இருக்கக்கூடாது?' என்று தோன்றியது.

'அவள் கேட்ட விதம் எப்படி இருந்தாலும் அதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் அன்பாய் இருக்கலாம் என்று நினைத்தான் அவன். அன்பு ஒருவனைப் பிழிந்தெடுக்கக் கூடியது. எதை வேண்டு மானாலும் தொலைத்துவிட்டு நிற்கலாம். அன்பு அப்படியல்ல. அதைத் தொலைத்துவிட்டு வாழ்வ தென்பது நரக வேதனைக்கு ஒப்பானது. அதை அப்பெண் அறிந்திருக்க வேண்டும். எனவேதான் எந்த வகையிலாவது அதை வெளிப்படுத்தி வெற்றிக்காக முயன்றிருக்கிறாள் என்று எண்ணினான்.

''பாவம்-மிகவும் எதிர்பார்த்துக் கொண்டு முயன்றிருப்பாள். அவள் மனதை நோகடித்து விட்டேன். பாண்டியர் நீதியைப் பற்றிப் பேசினாளே-நான் நீதியைத் தான் வழங்கியிருக்கிறேனா? குருநாதர் கூட எடுத்துரைத் தாரே என் பாட்டனாரின் நீதியை! இப்பெண்ணுக்கு நான் அநீதி இழைத்து விட்டேனா? ஒரு பெண் என்னை விரும்புவதோ அரியணையை விரும்புவதோ எப்படித் தவறாக முடியும்? தகுதியோடுதான் அரியணையில் ஒருத்தி பங்குபோட வேண்டுமா? அமர்ந்த பின் தகுதியைப் பெற முடியாதா? ஐயோ! அவள் மனமொடிந்து போய் ஏதாவது செய்து கொண்டிருந்தால்?'

'இவள் விரும்புவது நியாயம் என்று வைத்துக் கொள்ளும் பட்சத்தில் இப்படி பலரும் விரும்ப

முற்பட்டால் அவர்களையும் அல்லவா ஏற்றுக் கொள்ள வேண்டியதாக இருக்கும்? அதெல்லாம் ஆகக் கூடிய காரியங்களா?''

'இல்லை இல்லை அதுபோல் ஆசைப்பட எல்லோரும் பைத்தியங்களா என்ன? இவள் ஒருத்தியை நாம் ஏற்றுவிட்டால் மற்றவர்கள் விரும்பப் போவ தில்லை. இவளைப் போல தொல்லைப்படுத்தப் போவதில்லை.'

'இவளை ஏற்கலாமா? அதெப்படி? அன்னையார் வேறு யாரையாவது தேர்ந்தெடுத்து வைத்திருந்தால்? அன்னை யாரிடம் இதை எப்படிச் சொல்வது? இதென்ன தர்ம சங்கடம்? போர் பற்றிய விஷயத்தில் கூட இவ்வளவு சங்கடங்கள் இல்லையே?'

இப்படி அவனது மனம் பலவாறு வாதங்களைச் செய்து கொண்டிருந்தது.

எண்ணங்கள் கனத்ததால் இரவெல்லாம் தூங்க முடியாமல் போன அவன் விடியற்காலை நேரத்தில் ஆழ்ந்து உறங்கினான். உறக்கம் விடியும் போது பொழுது விடிந்து கணிசமான நேரமாகியிருந்தது.

அவன் எதிர்பார்த்தபடியே அன்று காலை உணவு வேளையின்போது திருமணத்தைப் பற்றிய பேச்சை துவக்கியபோது 'அம்மா என் சம்மதம் கிடைத்த மாதிரியே இருக்கட்டும். பெண் கிடைத்து விட்டாளா? அல்லது இனிமேல்தான் தேட வேண்டுமா?' என்று கேட்டான் நெடுஞ்செழியன்.



'தேடுவதா? ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியரின் அருமைப் பேரப்பிள்ளைக்கு- பாண்டிய மன்னனுக்கு- என் செல்வத்திற்குப் பெண்ணை நான் தேடவா வேண்டும்? வட பாரத அரசகுமாரிகள் முதல் பலர் காத்திருக்கும்போது தேடுவதாவது? குழந்தாய்! அந்தக் கவலை உனக்கு வேண்டாம். உனக்குத்தான் இவள் என்று ஒருத்தியை முடிவு செய்து எத்தனையோ நாட்களாகி விட்டன. அவள் எப்படிப்பட்டவள் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. நீயே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அவளை அழைத்து வருகிறேன். பார்''-

''அம்மா, பாண்டியர் நீதி பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''இதில் நான் நினைக்க என்ன இருக்கிறது?''-

''யாராவது அநீதி இழைத்திருக்கிறார்களா?''-

''இதென்ன கேள்வி மகனே? உன் பாட்டனாரை மறந்து விட்டாயா? பாண்டியரின் நீதிக்கு அவர் ஒரு கலசம். உலகம் உள்ள வரை உள்ளத்திலே இருந்து தழைக்கக் கூடிய பேரறம் அது. அந்த மரபில் அநீதியாவது! இழைப்பதாவது!''

''அப்படியானால் இந்த விஷயத்தில் நீதி வழங்க தாங்கள் தான் உதவ வேண்டும்''

'நீ என்ன சொல்கிறாய்?'-

''அம்மா, திருப்பரங்குன்றத்தில் குறும்புக்காரப் பெண்ணொருத்தி என்னிடம் வழக்சொன்றைத் தொடுத்திருக்கிறாள். அரியணையில் அவளுக்குப் பங்கு வேண்டுமாம். பலவாறு அவளிடம் வாதித்து விட்டேன்.

அவள் பாண்டியர் நீதியையே சுட்டிக் காட்டி நீதி கேட்கிறாள். அவளை நிராகரிப்பது அநீதியாகும். என்ன சொல்கிறீர்கள்?''

''ஆகா! இதென்ன சோதனை? நானும் இப் பெண்ணுக்கும் அவள் தந்தைக்கும் வாக்கு கொடுத்து விட்டேன் குழந்தாய்?''-

''இரண்டு பெண்களையும் மணக்கும் நிலையில் நானில்லை தாயே''...

''அதற்கு அவசியமே இல்லை மன்னா. உன் நீதியும் கெடாது. அன்னையாரின் வாக்கும் கெடாது.'' என்றபடி பிரவேசித்தார் ஒருவர்.

அவர் பின்னே பெண்ணொருத்தியும் வந்தாள்.

அவள்?

◈◈◈

முரசு பதினெட்டு

# வெற்றி மாலை

அவள்?

தேவி.

திருப்பரங்குன்றத்துக் குறும்புக்காரி.

அவளுக்கு முன்னால் வந்தவர்?

அவளது வளர்ப்புத் தந்தை.

புலவர் கல்லாடனார்.

தேவியைக் கண்டதில் நெடுஞ்செழியனுக்கும் வியப்பு. அன்னையாருக்கும் வியப்பு இரண்டு விதங்களில்.

புலவர் அவர்களது வியப்பை அதிகரிக்க விரும்பாமல்

''மகாராணி! திருப்பரங்குன்றத்தில் மன்னனிடம் நீதி கேட்டவளும் இவள்தான். மன்னனுக்கென்று என்றோ முடிவுசெய்து வைத்திருந்தீர்களே அவளும் இவள்தான். பாண்டியர் நீதிக்கும் பங்கமில்லை. தங்கள் வாக்கிற்கும் குறைவில்லை. நிம்மதிதானே'' என்று வினவினார்.

'எல்லாம் அன்னை மீனாட்சியின் செயல்' என்று பரவசப்பட்டார் அன்னை.

'மன்னா, திருப்பரங்குன்றத்தில் இவளிடம் நீ சரிவர பதிலளிக்கவில்லையாம். இவளை மறுத்து விட்டால் என்ன செய்வது என்று கேட்டாள். நீ மறுக்கமாட்டாய்

என்று உறுதியளித்தேன் நான். அப்படியும் சிக்கல் ஏற்பட்டால் இவள் யார் என்பதையும் வேறு சில ரகசியங்களையும் வெளிப்படுத்தியாவது திருமணத்தை முடிப்பேன் என்று கூறியிருந்தேன். நல்லவேளையாக ஆண்டவன் அருளால் சிக்கல் விழாமலேயே முடிந்து விட்டது. வேற்று நாட்டுக்காரிக்கு வேண்டுமானால் உன்னைத் தெரியாமலிருக்கலாம். ஆனால் உன்னை எனக்குத் தெரியாதா? பாண்டியர்களை எனக்குத் தெரியாதா?' என்றார் புலவர்.

''ஐயா, சிககல் விழாமல் நல்லபடியாய் முடிந்ததில் மகிழ்ச்சி வருவது இருக்கட்டும். அதனால் இவளைப் பற்றிச் சொல்லாமல் இருந்து விட வேண்டிய தில்லையே?''- என்று கேட்டான் மன்னன்.

''உண்மைதான் மன்னா. இவள் யார் என்பது உன் அன்னையாருக்கும் தெரியாது. ஒரு வேளை உன் குருநாதர் மாங்குடி மருதனாருக்கும் நக்கீரருக்கும் வேண்டுமானால் தெரிந்திருக்கும்' என்ற புலவர் தேவி யார் என்பதையும் அவளைப் பற்றிய சில ரகசியங்களையும் தெரிவித்தார்.

அதைக் கேட்டபின் பலவிஷயங்கள் புரிந்தன நெடுஞ்செழியனுக்கு. வேறெதுவும் பேசிக் கொள்ளவில்லை.

அன்று மாலையே திருமணம் பற்றி மாங்குடி மருதனாரிடம் பேசி அவரது சம்மதம் பெற்றபின் தளபதிகள் மற்றும் சில அதிகாரிகள், புலவர்கள் ஆகியோரின் முன்னிலையில் மறுநாள் வெள்ளியம் பலத்திலேயே எளியமுறையில் திருமணவிழா நடைபெற்றது.



விழா பற்றிய செய்தி அதிகாரிகளுக்குள் இருந்தாலும் வதந்தியாய் வெளியே பரவி விட்டதால் மக்கள் திரள் திரளாக வெள்ளியம்பலத்தில் கூடினார்கள். மன்னன் வேறு வழியில்லாமல் அவர்களுக்கு முன்னால் தோன்றினான் தேவியுடன்.

'என் அருமை குடிமக்களே, என் தெய்வமான அன்னையாரின் விருப்பபடியும், குருநாதரின் ஆசிப்படியும் திருமண விழாவினை போர் காரணமாக எளிமையாக நடைபெறுவதற்காகவும் உங்களை யெல்லாம் வரவேற்காமல் விட்டதற்காகவும் என்னை மன்னிக்க வேண்டும். போர் முடியட்டும். வெற்றி விழாவும் திருமண விழாவும் உங்கள் விருப்பப்படி நடக்கும். என்ன சம்மதம்தானே?' என்று கேட்டான்.

'சம்மதம் சம்மதம்' என்ற பலகுரல்கள் எழுந்தன.

'பாண்டிய மாமன்னர் வாழ்க வாழ்க' என்றும், 'தேவியார் வாழ்க வாழ்க' என்றும் வாழ்த்தொலிகள் எழுந்து வானில் எதிரொலித்தன.

மன்னன் பிறகு தேரேறி தேவியுடன் படைப்பாசறைப் பக்கம் உலாசென்று வீரர்களை மகிழ்ச்சியுறச் செய்தான்.

* * *

அந்தப்புரத்தில் தந்தத்தால் இழைக்கப்பட்ட இந்திர லோகத்தை நிகர்க்கும் சுந்தர மாடத்தில் சுந்தர தேவதையாய் தேவியும் இந்திரவர்மனாய் நெடுஞ் செழியனும் அமர்ந்திருந்தார்கள். வளர்பிறைக் காலமாய் இருந்ததால் வானத்தில் தங்கத்துண்டு ஒன்று

பதிக்கப்பட்ட மாதிரி பிறை நிலவு பளிச்சென்று விளங்கி ஒளிச் செழிப்பை வழங்கிக் கொண்டிருந்தது. தொல்லை நீங்கப் பெற்ற கனவானைப் போல் வானம் மேகங்களின் இடையூறுகள் இல்லாமல் நிர்மலமாய் இருந்ததால் நட்சத்திரங்கள் தங்கப் பூக்களாய் காணுமிடமெல்லாம் நீக்கமற நிறைந்திருந்தன. வானப் புலவனுக்கு வைய வள்ளலொருவன் மெய்யன்புடன் உவந்தளித்த பொன் பூக்கள் இழைக்கப்பட்ட பட்டாடை போல் தோன்றியது நட்சத்திரங்களாலும் நிலவாலும் நிரம்பிய வானவெளி. எங்கும் நிறை நாத பிரம்மம் போல் எப்போதும் நிலவும் தென்றல் அப்போதும் இருந்து இனிமையானதும் இதமானதுமான குளிர்ச்சியை மதுரை மாநகருக்கு அளித்துக் கொண்டிருந்தது. போர் மேகம் எந்த நேரத்திலும் தழைக்கக்கூடும்தான். ஆனால் தழைக்கும் வரை அமைதிக்குக் குறைவில்லையாதலால் சுற்றுப் புரங்கள் தொலைதூரம் வரை அமைதியாய்-ஓர் அழகோடு இருந்தன. அமைதியைப் போன்ற அழகு பல நேரங்களில் நிகரற்றதாய் இருக்கிறது. அதை அனுபவிப்பதென்பது ஏறக்குறைய சொர்க்க போகம்தான் அப்படிப்பட்ட போகம் ஒன்றை அனுபவிக்கிற நிலையில் புது தம்பதிகளாய் அமர்ந்த இருவரும் நீண்ட நேரம் வரை பேசாமலேயே இருந்தனர். பேசத் தெரியவில்லையா அல்லது பேச விரும்பவில்லையா அல்லது பேச அவசியமில்லையா என்று இனம் பிரித்துச் சொல்ல முடியாத விதத்தில் இருந்தார்கள் அவர்கள். இந்தக் குழப்பத்தைக் கண்டு பரிதாபப்படுவது போல் ஓரிரு பல்லிகள்கூட மாடத்துச் சுவர்களிலிருந்து 'ச்ச்' என்ற ஒலிகளை எழுப்பிவிட்டு நகர்ந்தன.



ஏறக்குறைய ஒருவர் அழகை மற்றொருவர் தடையின்றிப் பருகிக் கொண்டிருந்தார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். பேச்சு என்று ஒன்று இருப்பதையே அவர்கள் மறந்திருக்க வேண்டும்.

திருப்பரங்குன்றத்தில் துடுக்குக்காரப் பெண்ணாய் பார்த்ததற்கும் தற்போது மன்னனை மணந்து மகாராணியாய் இருப்பதற்கும் நிரம்ப வித்தியாசங்கள் புலப்பட்டதைக் கவனித்தான் மன்னன். காட்டுத் தடாகமொன்றில் முளைத்த குருக்கத்தி மலர் போலிருந்த அவள் தற்போது பிரத்தியேகமாக வளர்க்கப்பட்ட கொடியில் பூத்துக்குலுங்கிய அல்லி மலர் போல் விளங்கினாள். தொட்டால் குத்தி விடுவது போல் 'பட்பட்' என பேசிப் பழக்கப்பட்டவளாய் இருந்த அவள் சுரணையே அற்றுவிட்ட சொர்ணச்சிலை போல் காட்சியளித்தாள். குளக்கரையில் சாதாரண ஆடையை மட்டுமே அணிந்து வெறும் பேதை போலிருந்த அவளது உடலில் தற்போது தொடுவதற்கு இடமின்றி தங்க அணிகலன்கள் சேர்ந்திருந்தன. அவை வீசிய ஒளி அவளைச் சுற்றி ஓர் ஒளி மண்டலத்தையே உருவாக்கி விட்டிருந்தன. செந்தாமரைப் பூவிற்கு செவ்வண்ணம் சேர்த்தாற்போல் இயற்கையான அவளது அழகிற்கு அலங்காரங்கள் சேர்ந்து பேரழகைத் தோற்றுவித்திருந்தன. கிரீடம் போன்றிருந்த கொண்டை அலங்காரம் அவளது அரசதோற்றத்திற்கு ரொம்பவும் பொருத்தமாய் இருந்தன. மைதீட்டப்பட்டிருந்த கண்கள் பாண்டிய நாட்டு அடையாளச் சின்னமாய் மாறிப்போய் மன்னனின் கண் வலையில் சிக்கி மருண்டன மான்களை நினைவுபடுத்தும் வகையில். கண்களின் கீழே தேன் வடியும் பூக்கள் பூத்துக்

தெரிந்தாற்போல் தென்பட்ட அதரங்கள் பெண்ணின் மென்மைக்குச் சான்றளித்துக் கொண்டிருந்தன. கழுத்துப் பகுதி பட்டாடையாலும் பொன்னாபரணங்களாலும் மூடப்பட்டு கழுத்தே பொன்னாகி விட்டாற்போல் புலப்பட்டன. அவள் மரகத ஆசனத்தில் அமர்ந்திருந்த காட்சியானது திருமகள் அவசரத்தில் வந்து மன்னன் மாளிகையில் அமர்ந்த மாதிரி இருந்தது.

இவற்றையெல்லாம் மன்னன் ஒன்று விடாமல் பார்த்துப் பார்த்து ரசித்தானென்றால் அவளோ அவனை அங்குமிங்குமாய் பட்டும் படாமலும்தான் ஓரக் கண்களால் பார்த்தாள். ஆனால் அப்படிப் பார்த்ததிலேயே அவனது அழகின் நிறைவையும் ஆண்மையின் நிறைவையும் உணர்ந்து கொண்டாள். கழுத்தில் புரண்ட காகபட்சக் குழலுடன், திறந்த மார்புடன், காதில் குண்டலங்களும், தோள்களிலும் கைகளிலும் கழல்களும் விளங்க, வெண்பட்டணிந்து கந்தர்வ இளைஞனாய் காட்சி தந்தான் மன்னன்.

அழகே விருந்தாய்- விருந்தே அழகாய் அவர்களை வெகுநேரம் வரை ஆட்கொண்டபின் முதலாவதாய்த் தெளிந்தான் மன்னன். தெளிந்தபின் பேச்சு நினைவிற்கு வந்தது. எனவே பேசமுற்பட்ட அவன், 'தேவி, ஏனிப்படி மௌனமாகி விட்டாய்? பேசுவதுதானே?' என்று வினவினான்.

அவனது வார்த்தைகள் அவளது இதயத்தையும் ஆனந்தத்தையும் தட்டிவிடவே கண்கள் ஆனந்தத் தூறலை உருவாக்கிக் கண்ணீராய் வெளிப்படுத்தியது.



அவளருகில் சென்று மெல்லப்பற்றிய மன்னன் இதென்ன கண்களில் கண்ணீர்?' - என்று கேட்டதும் ஆனந்தக் கண்ணீர் பிரபு'- என்றாள் தேவி.

பின் அவளாகவே கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

'பேசு தேவி. ஏதாவது பேசு' என்றான் மன்னன்.

'பிரபு, ஏதோ பேசவேண்டியதை எல்லாம் பேசிவிட்ட மாதிரி இருக்கிறது'- என்றாள் அவள்.

'ஏனிப்படி?'-

'பேசக்கூடாத வேளையில் பலவாறு பேசிவிட்டவள் தான். அதனால்தானோ என்னவோ இப்போது பேச வேண்டிய நேரத்தில் பேச்சு வரவில்லை'

'திருப்பரங்குன்றத்தில் பேசியதைச் சொல்கிறாயா?'

'ம்'

'உன்னால் எப்படி அவ்வாறு பேசமுடிந்தது?'

'பிரபு, தங்களின் அன்னையாரின் சித்தம் எனக்குத் தெரிந்த பின்புதான் தைரியமாக இல்லை-இல்லை- அசட்டுத் தைரியமாக அப்படிப் பேசி நடந்து கொண்டேன்...'

'அதாவது என்னை மணம் முடிக்க அன்னையார் முடிவெடுத்து விட்டது உனக்குத்தெரிந்து விட்டதால் அவ்வாறு நடந்து கொண்டாய. அப்படித்தானே?'

'இல்லையென்றால் அப்படியெல்லாம் பேசும் அசட்டுத் துணிச்சல் யாருக்கு வரும் பிரபு? இப்போது

எண்ணிப் பார்த்தால் அதெல்லாம் தவறானவை என்று தோன்றுகிறது. என்னை மன்னித்துவிடுங்கள். பேதையைப்போல் நடந்துகொண்டு விட்டேன்'

'இருந்தாலும் நீ அதிர்ஷ்டசாலி. உனக்கு அன்னையின் சித்தம் முன்கூட்டியே தெரிந்திருந்தது. எனக்கு அப்படியில்லையே'

''தெரிந்திருந்தால் என்ன செய்திருப்பீர்கள்?''

''என்ன செய்திருப்பேனா? கொஞ்சத்தில் உனக்குத் தலையாட்டியிருக்க மாட்டேன். இது தெரிந்துதான் சொக்கநாதரே இப்படிச் செய்துவிட்டார் போலிருக்கிறது. எப்படியோ - தேவியாய் இருந்த நீ துடுக்குத்தனத்தால் பெருந்தேவியானாய். இன்று மன்னனை மணந்து கோப்பெருந்தேவியாகிவிட்டாய். அரசியாகிவிட்ட உனக்கு இனி இப்பெயரே நிலைக்கட்டும். சரித்திரத்தில் இப்பெயர் தான் உனக்கு என்றென்றும் விளங்கும்''-

மன்னனின் வார்த்தைகள் அவளைப் பரவசப்படுத்தின. அதே சமயம் மன்னன் தன்னைப் பெருமைப்படுத்தியதற்குத்தான் தகுதியானவள்தானா என்று கேட்டுக் கொண்டாள் அவள். அன்னையாரின் விருப்பத்தை அறிந்து வைத்திருந்த பட்சத்தில் சற்றே துடுக்குத்தனமாய் அன்பை வெளியிட்டது அப்போதைக்கு யோசிக்க இடம் தரவில்லை அவளுக்கு. அவனிடம் அரியணையில் பங்கு கேட்டு பாண்டியர் நீதி பற்றி நினைவுறுத்தியபோதுகூட தன் கோரிக்கை பற்றி அவள் ஏதும் ஆராயவில்லை. தற்போது யோசித்தாள். அவற்றைப் பற்றியெல்லாம் ஒருவனை மணப்பதென்பது -அதுவும் மன்னனை மணப்பதும் அரியணையில் இடம்



பெறுவதும் வெறும் நீதி அநீதி பற்றியதுதானா வேறொன்றும் தேவையில்லையா என்று கேட்டுக் கொண்டாள். நீதி செய்ய வேண்டும் என்ற வெற்றுக் காரணத்துக்காக மட்டும் மன்னன் தன்னை மணந்திருந்தால் அதைவிட நரகம் வேறிருக்க முடியாது என்று எண்ணிய அவள் மறுநிமிடமே தன்னிடம் தோன்றிய அந்த மோசமான எண்ணத்திற்காக தன்னை நொந்து கொள்ளவும் செய்தாள். ''இவரைப் போயா இப்படி எண்ணினோம்?'' என்று வருந்தினாள். வெறும் நீதிக்காக மணப்பதைவிட பேசாமல் விருப்பமில்லை என்று மறுத்திருப்பாரே தவிர மனமின்றி மணந்திருக்க மாட்டார் என்றும் தன்னை உரிய கௌரவத்துடன் வைத்திருப்பார் என்று நினைக்க முற்பட்டு அந் நினைவை நம்பி வணங்கினாள்.

தற்போது அவள் எண்ணம் போரை நோக்கிச் சென்றது. அதையொட்டி கலக்கமெய்தினாள் அவள்.

கலக்கம் அவள் கண்களில் புலப்பட்டதைக் கண்ட மன்னன், ''தேவி, கலக்கமேற்பட்டிருப்பது போல் தெரிகிறதே உண்மைதானா?'' என்று வினவினான்.

அவள் தலையாட்டினாள்.

''ஏன்?''- என்று கேட்டான் அவன்.

''என் அன்பைத் தவறான நேரத்தில் வெளியிட்டு விட்டேனோ என்று கலக்கமாக இருக்கிறது பிரபு?''

''அதெப்படி? அன்பை வெளியிட்ட நேரம் - அது கிடைத்துவிட்டது. திருமணமாய் மலர்ந்தும் விட்டது. இது நல்ல நேரத்தின் அடையாளம் அல்லவா?''.

''போர் நெருங்கிவிட்டதே பிரபு?''

''அதனால் என்ன?''-

''என்னை மணந்த வேளையல்லவா நீங்கள் போர்க்களம் போகவிருக்கிறீர்கள்?''

''இல்லை. போர் வந்த வேளையில் உன்னை நான் மணந்திருக்கிறேன். இரண்டும் ஏக காலத்தில் சேர்ந்து வந்திருப்பதில் எனக்கு மகிழ்ச்சிதான். அதோடு என் மனைவியாகிவிட்ட நீ வீரனின் மனைவி அல்லவா? போர் குறித்து கலக்கப்படலாமா?''-

''பெண் மனம் பலவீனமானது என் மன்னவா''-

''நீ இப்போது சாதாரணமான பெண்ணல்ல. இந்நாட்டின் அரசி. என் மனைவி. நாளைக்குக் களத்திலேயே நான் வீழ்ந்து போனால் நீ வாழ்ந்து இந்நாட்டை ஆளவேண்டியவள்'

'அந்த நிலைமை வரவே வேண்டாம் பிரபு.'

'தேவி. உண்மையிலேயே போரை உத்தேசித்துதான் என்னை மணந்து கொள்ளும்படி அவசரப்படுத்தினார் அன்னையார். களம் புக நான் புறப்படும்போது வீரமனைவியாய் ஒருத்தி இருந்து நெற்றித் திலகமிட்டு வெற்றிக்கான வேள்வி நடத்த வேண்டுமாம். புரிகிறதா உன் கடமை? நீ கலக்கமடையலாமா? திருப்பரங் குன்றத்தில் உன் துடுக்குத்தனத்தைப் பார்த்து நானே யல்லவா பயந்து விட்டேன்? எங்கே போய் விட்டது உன் துடுக்குத்தனம்?'

'வந்த இடத்திலேயே போய்விட்டது பிரபு? அதென்ன என் பிறவிக்குணமா நிலைத்திருக்க?'



'போனால் போகட்டும். என்னை மணந்த வேளை நீ வீரப்பெண்ணாகிறாய். போருக்குப் புறப்படும்போது வெற்றித் திலகமிடுகிறாய். என்ன? செய்வாய் அல்லவா?'

''நிச்சயம் செய்வேன் பிரபு. அதைவிட வேறு பாக்கியம் எனக்கு வேறேது? நான் மணந்த வேளை நல்லவேளைதான் என்றால் தங்களுக்கு வெற்றி மாலை சூட்டும் பாக்கியம் எனக்குக் கிட்டாமல் போகாது''-

''அதில் சந்தேகம் வேண்டாம். நிச்சயம் கிட்டும். வெறும் வெற்றி மாலை மட்டும் தானா?''-

'தங்கள் சித்தம் என் பாக்கியம்'-

'அப்படியா? நல்லது நல்லது' என்று கூறி கடகடவெனச் சிரித்தான் நெடுஞ்செழியன்.

ஆனால் அடுத்த சில கணங்களில்-

டமடமவென வேறொருவொலி மிகபலமாய் எழுந்தது. அதையடுத்து பல ஒலிகள் எழுந்தன. தேவி கலக்கமுடன் நோக்கினாள் மன்னனை.

அதையடுத்து அங்கே பிரவேசித்தான் அரண்மனைத் தூதுவன்.

'எதிரிப்படைகள் வந்து சேர்ந்து விட்டன மன்னவா'... என்று தெரிவிக்கவும் செய்தான்.

◈◈◈

முரசு பத்தொன்பது

# சேரனின் ஆலோசனை

பொழுது விடிந்த சிறிது நேரத்திலெல்லாம் விழுது விழுந்தாற் போல் சேரர்படை சாரிர சாரையாய் வந்து மதுரை மாநகரின் கோட்டையைச் சூழ்ந்து கொண்டன. கோட்டையின் வடக்கே வையை ஓடியதால் அந்தப் பக்கத்தைத் தவிர்த்து மற்ற முப்புறங்களிலும் படைகள் தழைத்து வந்து பரவின. கணக்கற்ற அப்படைகள் திடீரென முளைத்துச் சூழ முற்பட்டதால் உண்டான புழுதிப் படலம் கோட்டையைச் சுற்றியிருந்த காவற் காட்டையே ஒருகணம் மறைத்தது. அக்காவற் காட்டில் இரவில் தங்கியிருந்த பட்சிகள் படைகளின் பேரரவம் கேட்டு கீச்கீச்சென்று குரலிட்ட வண்ணமாய் வானிலேயே பறந்து அமைதியில்லாமல் சுற்றின. படைகள் வந்து சேர்ந்ததற்கு அறிகுறியாய் பேரிகைகள் பலவும் கொம்புகள் பலவும் கட்டளையின் பேரில் பெரிதாய் ஒலித்து நின்றபின் கட்டளை பிறப்பிக்கப்படாமலேயே ஒலித்து பேரொலியை எழுப்பின போர்யானைகளும் புரவிகளும். வீரர்களுக்கு மகிழ்ச்சியைத் தரும் ஆரவாரச் சூழ்நிலையானது அக்காலை நேரத்திலே காலனால் உருவாக்கப்பட்டது போல் தோன்றியது.

படைகள் இப்புறமும் அப்புறமுமாய் முப்புறமும் சூழ்ந்தபின் கூடாரங்களை அமைக்கும் வேலையில் உடனடியாக இறங்கியதால் வெடிச்சத்தம் போன்ற ஒலிகள் மீண்டும் மீண்டும் எழுந்தன. படைகளோடு



படைகளாய் நூற்றுக்கணக்கில் வந்த காளைமாட்டு வண்டிகளில் இருந்த உணவுப் பொருட்கள் திரட்டப்பட்டு படைகளுக்குப் பங்கிடப்பட்டன. அதன் காரணமாய் காளைமாட்டு வண்டிகள் முப்புறமும் உணவைச் சுமந்து சென்றன. யானைகளை இயக்கி வந்தவர்கள் அவைகளை காவற்காட்டின் முகப்புகளில் திரியவிட்டு அவைகளுக்கு வேண்டிய உணவிற்கு வழிசெய்து வைத்தார்கள். வடக்கே ஓடிய வையை கரைகளைத் தொட்டுக்கொண்டு ஓடியதால் திரண்ட நீர் நிரம்பிக் கிடந்தது. அவை பெரும் மரச்சாடிகளில் சேகரிக்கப்பட்டு படை வீரர்களுக்கு அனுப்பப்பட்டது. இப்படி ஆரம்பகால ஏற்பாடுகள் முடிந்தபோது நண்பகல் நேரமாகிவிட்டது. அந்த வேளையில் சேரமன்னன் யானைக்கண் சேய் இரும்பொறையும் மேலைவாசலில் அமைக்கப் பட்டிருந்த பெரும் பாசறையில் தளபதிகள் மற்றும் பிரதான போர் அமைச்சர்களுடன் வந்து சேர்ந்தான்.

பாசறைக்கு வந்து உணவருந்திவிட்டு சில நிமிடங்களுக்குள்ளாகவே போர் ஆலோசகர்களை அழைத்துக் கொண்டு படைகள் இருந்த பகுதி வழியாகவே புரவியில் சென்று கோட்டையைச் சுற்றி நோட்டம் விட்டான் சேர மன்னன். காவற்காடு அடர்த்தியாய் இருந்ததால் அதற்கப்பால் இருந்த கோட்டையைத் தெளிவாகப் பார்க்க அவனால் இயலவில்லை. ஒருவித அதிருப்தியை வெளியிட்டுக் கொண்ட அவன் வையையாற்றங்கரைக்கு வந்து அதன் அமைப்பைக் கவனித்தான். பிறகு பாசறைக்கு வந்து சேர்ந்து அங்கிருந்த பிரதான ஆசனத்தில் அமர்ந்த பின் மற்றவர்கள் மர ஆசனங்களில் அமர்ந்தார்கள்.

''சரி, உங்களுடைய போர்த் திட்டங்களைச் சொல்லலாம்''- என்று பேச்சைத் துவக்கினான் சேரமன்னன்.

போரமைச்சர் ஒருவர் ''மன்னரின் சித்தம் என்ன என்பதை வெளிப்படுத்தினால் கருத்து சொல்ல எங்களுக்கு வசதியாக இருக்கும்''- என்று தெரிவித்தார்.

''நீர் எழுந்து வெளியே போய் விடும்'' என்றான் சேரமன்னன்.

அனைவரும் திகைத்தார்கள்.

''என்ன பார்க்கிறீர்கள்? வீண் சம்பிரதாயம், வெட்டிப் பேச்சு ஆகியவைகளை வெளிப்படுத்திக் கொள்ள எனக்கு அமைச்சர்களோ தளபதிகளோ தேவையில்லை. அவைகளைக் காட்ட விரும்புபவர்கள் இங்கிருந்தால் வெளியேறிவிடுவது நல்லது. நேரம் வீணாக விரயமாவதாவது தடுக்கப்படும்'' என்றான் யானைக்கண்சேய்.

'முற்றுகையிடுவதும் ஒரு சம்பிரதாயம்தான்''- என்று துணிச்சலாக போரமைச்சர் ஒருவர் சுட்டிக் காட்டினார்.

''இல்லை. முற்றுகையிடுவது சம்பிரதாயமல்ல. அது ஒரு போர் நடவடிக்கை. அதோடு நானிங்கே தவிர்க்கச் சொன்னது வீண் சம்பிரதாயங்களையும் அதையொட்டிய பேச்சுக்களையும் தானேயன்றி சம்பிரதாயங்களையே ஒட்டுமொத்தமாய் விட்டுவிடச் சொல்லவில்லை. அப்படி விட்டு விடுவதானால் போரே நடக்க முடியாது. சரிசரி. வீண் சம்பிரதாயங்கள் எவை என்பதில் சர்ச்சை வேண்டியதில்லை. விஷயத்திற்கு வருவோம்.



கோட்டையை எப்படி வசப்படுத்துவதாய் இருக்கிறீர்கள்?' என்று வினவினான் சேரன்.

'மீனை வசப்படுத்த முடியாது. வலை போட்டு பிடிக்கத்தான் வேண்டும்' என்று தளபதி ஒருவன் சொன்னதும்...

''என் துரதிருஷ்டம் புலவர்களாய்ப் போக வேண்டியவர்கள் எல்லாம் தளபதிகளாய் வந்து சேர்ந்திருக்கிறார்கள். உங்களுக்குப் பதில் புலவர் கண்ணனாரையே நான் அழைத்து வந்திருக்கலாம். உபயோகமான ஆலோசனைகளைச் சொல்லியிருப்பார்''... என்று அலுத்துக் கொண்டான் இரும்பொறை ''நல்லகாலம். மீனைப் பிடிக்க அம்பும் வில்லும் பயன்படாது என்று கூறி நம் படையெடுப்பையே தடுக்காமல் இருந்தீரே, அதுவரை புண்ணியம் தான். வாள் எடுத்து வீசவேண்டிய வேளையில் உவமை இலக்கியம் பேசுகிறீரே, இதுவா தளபதியின் வேலை? உங்களையெல்லாம் வைத்துக் கொண்டு எப்படித்தான் கோட்டையைப் பிடிக்கப் போகிறேனோ தெரியவில்லை.''... என்றான்.

சில நிமிடங்கள் மௌனமாய் நகர்ந்தன.

பிறகு சேர மன்னனே பேசத் தொடங்கி, 'எல்லோரும் நன்றாகக் கவனியுங்கள். இக்கோட்டையை வையையாறு வடக்கில் பாதுகாப்பு செய்து இயற்கை அரணாய் அமைந்திருப்பதால் நாம் மற்ற முப்புறம் உள்ள செயற்கை அரண்களையே கவனித்து வருகிறேன். கோட்டையைச் சுற்றி காவற்காடு இருப்பது இயல்பு தான். என்றாலும் இங்கே நம் முன்னே காணப்படும் காவற்காடு

வழக்கத்தைவிட அதிக அடர்த்தியாய் பயங்கரமாய் இருக்கிறது. இது நமக்கு மிகப் பெரிய தடை. இந்தத் தடுப்புச் சுவரை இப்படியே வைத்துக்கொண்டு நாம் முன்னேறுவது முடியாத காரியம். இதை உடனடியாக அழித்துவிட விரும்புகிறேன். என்ன சொல்கிறீர்கள்?'... என்று கேட்டான்.

''தாங்கள் சொல்வது போல் காட்டை முழுவதும் அழித்து விட்டால் கோட்டையின் முப்புறங்களும் வெட்ட வெளியாகின்றன. அது நமக்குப் பாதுகாப்பற்ற தல்லவா? மறைந்திருந்து தாக்கும் வசதி நமக்குப் போய்விடுமல்லவா?'' என்று வினவினார் ஒரு போரமைச்சர்.

''இரண்டு விஷயங்களை இதில் கவனிக்க வேண்டும் நாம். நாமிங்கே படையெடுத்து வந்ததும் முற்றுகை யிட்டிருப்பதும் மாதக் கணக்கில் தங்கியிருந்து கோட்டைக்குள் இருப்பவர்களை பட்டினிபோட வைத்து அடிபணிய வைப்பதற்காக அல்ல. அந்த முயற்சி போகப் போக நம்மையே பட்டினிக்கு ஆளாக்கிவிடும். முடிந்த வரை துரிதமாகத் தாக்கி எதிரிக்கு நேரம் அளிக்காமல் முறியடிக்க வேண்டும். இது முதல் விஷயம். இரண்டாவது நம்மை எதிர்த்து நின்று போராடும் தந்திரம் படைத்த படைத்தலைவனான பழையன் இங்கில்லை. அவன் நம் சந்தனக் கோட்டையில் சிறையிருக்கிறான். ஆகவே வெட்ட வெளியால் உண்டாகும் வசதிக் குறைவை நாம் நமது பெரும் பலவீனமாய் எண்ணிக் கொள்ள வேண்டியதில்லை''- என்று விளக்கி நிறுத்திய இரும்பொறை எல்லோரது முகங்களையும் ஒருமுறை நோக்கி விட்டுத் தொடர்ந்தான்.



'காவற்காட்டு மரங்கள் ஒன்று விடாமல் அழிக்கப்பட வேண்டும் என்பதல்ல என் நோக்கம். கோட்டையைப் பார்க்க முடியாத அளவிற்கு அடர்த்தியாய், தடுப்புச் சுவராய் இருக்கிறதல்லவா? இதை உடைப்பது தான் என் குறிக்கோள். ஆகவே இதன் அடர்த்தியைப் பெருமளவு குறைப்போம். மெல்லியத் தடுப்புச்சுவர் போல் ஒரு சுற்று மரங்களை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவற்றை அழிப்போம்.''

போரமைச்சர் ஒருவர் எழுந்து, ''மன்னவா, காவற் காட்டை தாங்கள் சொல்வது போல் அமைத்து விட்டால் என்ன பிரமாதமான சாதகம் கிடைத்துவிடும்? நமது இறுதி வெற்றி கோட்டையைப் அழிப்பதிலும் பிடிப்பதிலும் தானேயன்றி காவற்காட்டை அழிப்பதிலும் மரங்களைப் பிடிப்பதிலும் அல்லவே?' என்று கேட்டார்.

'அறிவில் சிறந்த போரமைச்சரே, நீர் இப்படிப் பேச வேண்டிய அவசியமென்ன? இது கூடத் தெரியாமலா படைகளோடு திரண்டிருக்கிறேன் நான்? காவற்காட்டை அழித்து மரங்களைச் சேகரிக்கவா நான் திட்டம் தீட்டுகிறேன்? ம். உம்மைச் சொல்லிப் பயனில்லை. ஏதோ ஒரு அரைகுறைப் போரில் சாமர்த்தியம் காட்டியதற்காகப் போரமைச்சராக நியமித்தேன் அதுதான் தவறு'- என்று பேசிய இரும்பொறை 'அவசரப்படாமல் நான் கூறுவதை முழுவதுமாய் கேட்டுக்கொண்டு பிறகு சொல்லுங்கள் இதன் குறைகளை. நான் கூறிய இத்தடையை நீக்கிவிட்டு ஒட்டு மொத்தமாய் கோட்டையின் மூன்று வாயில்களையும் யானைகளை விட்டுத் தாக்குவோம். அதேசமயம் யானைகளை கோட்டையின் மேலே இருப்போர் தாக்க முடியாமல்

போகும் விதத்தில் காவற்காட்டு மரங்களுக்குப் பின்னால் இருந்தபடி நமது வில்வீரர்கள் கோட்டை மதில்களை நோக்கியும், தளத்தை நோக்கியும், துளை மாடங்களை நோக்கியும் இடைவிடாமல் அம்புகளைப் பொழிவோம். அவ்வாறு அம்புகள் இடைவெளியில்லாமல் பறந்தால் கோட்டைச் சுவற்றிலோ துளை மாடங்களிலோ ஒருவன் கூட நிற்க முடியாது. இதே நேரத்தில் வாயிற் கதவுகளைத் தொடர்ந்து தாக்கி தகர்த்து உள்ளே புயல் வேகத்தில் முப்புறமும் நுழைவோம். அப்படி நுழையும் நேரத்தில் கோட்டை மதில் மேல் ஏறவும் செய்தால் மதில் தளங்களை நம் வசப்படுத்திக் கொண்டு நம் வசதிக்கேற்ப இயக்கலாம். இவற்றைச் சரிவர செய்து விட்டால் பிற நடவடிக்கைகள் எளிதாய் இருக்கும்' - என்றான்.

இம்சமயத்தில் சேரர் தளபதியான கருவூர் சேந்தன் தன் சந்தேகத்தை வெளியிட்டான். 'மன்னவா, தங்கள் திட்டபடி கோட்டைக் கதவுகளைத் தகர்ப்பதென்பது சாத்தியமாவதாகவே வைத்துக் கொண்டாலும் அதையடுத்து முன்னேறுகிற விஷயம் தாங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு எளிதான காரியமா என்பதில்தான் எனக்கு யோசனையாக இருக்கிறது'

'என்ன சிரமங்களை எதிர்பார்க்கிறாய் சேந்தா?' - என்று அவனது சந்தேகத்திற்கு மதிப்பளித்தே கேட்டான் இரும்பொறை. 'மன்னவா. நம் வில் வீரர்களின் அம்பு மழையின் காரணமாக கோட்டை மதில் மீதும், துளை மாடங்களிலும் பாண்டிய வீரர்கள் யாரும் தலை காட்ட முடியாமல் போகலாம். அதே சமயம் கோட்டை மதிலின் அமைப்புகளை நாம் மறந்துவிடக் கூடாது. மதில்களுக்கு



உட்புறம் சற்றே தாழ்வான இடத்தில் நீண்ட தளம் அமைக்கப்பட்டிருக்கலாம். கோட்டை நிர்மாணக் கலைக்கு இது இயல்புதான். பாண்டிய வீரர்கள் அந்த தளத்தில் இருந்து கொண்டு வாயில்கள் மூலம் உள்ளே நுழையும் நம் வீரர்கள் மீது மின்னல் வேக அம்புத் தாக்குதல்களை பயங்கரமாகச் செய்ய முடியும். எண்ணைக் கொப்பரைகளைக் கவிழ்க்க முடியும். தீ உருண்டைகளை வீச முடியும். விற் பொறிகள் அந்தத் தாழ்வான தளத்திலிருந்தே எளிதாக இயங்கவும் முடியும். அப்படியொரு தாக்குதல் நடக்குமானால் நமது படைகள் உள்ளே முன்னேறுவது இயலாமல் போவதோடு அழியவும் செய்யும் அதிகமாக' - என்றான் கருவூர் சேந்தன்.

'சேந்தா, நாம் இப்படித்தான் இயங்குவோம் என்று முன்கூட்டியே தெரிந்தாலன்றி இப்படியொரு தாக்குதலை பாண்டியர்கள் செய்ய முடியுமா?' வினவினான் சேர மன்னன்.

'தேவையில்லை மன்னவா. ஓர் ஊகம் இருந்தாலே போதும்.'

'அப்படி ஊகிக்கிறவன் உள்ளே இருக்கிறானா?'

'இருக்க மாட்டானா?' -

'அந்த ஒரே மனிதன்தான் சந்தனக் கோட்டையில் சிக்கிவிட்டானே?'

'மன்னவா, பழையன் பயங்கரமானவன் என்பதில் சந்தேகமில்லை. அதே சமயம் நாம் பிரஸ்தாபிக்கும் ஊகம் சிரமமானதொன்றுமல்ல. பிற பாண்டிய தளபதிகளால்

ஊகிக்க முடிந்த ஊகம்தான். கோட்டைத் தளபதி அதுகை அப்படியொன்றும் முட்டாளல்ல. அதோடு நாம் அம்பு மழைக்கிடையில் முன்புறம் தாக்கும்போதே நம் நோக்கம் எதிரிக்குப் புரிந்துவிடும்.'

'அதற்குப் பின் அந்தத் தாக்குதல் ஏற்பாடுகளைச் செய்ய அவனுக்கு நேரமேது?'

'இயக்குபவன் சாமர்த்தியமாய் செயல்பட்டால் முடியலாம்.'

'சரி. வேறு சிரமம் ஏதாவது இருக்கிறதா சேந்தா?'-

'தங்களுக்கே தெரிந்திருக்கக் கூடிய விஷயம்தான். நாம் உள்ளே நுழைகிறோமே, உள்ளே என்ன வெட்ட வெளியா இருக்கிறது வரவேற்கவும் வழிகாட்டவும்? பாண்டியர் படை இல்லையா? அவை கோட்டைக்குள் தூங்கிக் கொண்டா இருக்கும்?'-

'அவைகள் மூலம் என்ன நடவடிக்கைகளை எதிர்பார்க்கிறாய்?'

'பாண்டியர் படை மூன்று வாயில்களிலும் உட்புறத்தின் இரண்டு பக்கங்களிலும் அணி வகுத்து நிற்கலாம். நாம் நுழையும்போது இரு புறத்திலிருந்தும் வந்து விழுந்தால் நம் கதி அதோகதிதான். நமது படையின் முன் பகுதி அழியும். பின் பகுதி பின்வாங்கும்.'

''தளபதி, வாயிற் கதவுகள் தகர்க்கப்பட்டதும் நம் படைகள் புயல் வேகத்தில் நுழைந்து நகருக்குள் ஊடுருவி விடும். எனவே பாண்டியர் படை தாக்க அவகாசமில்லை.''



''மன்னவா, புயல் வேகம் என்பது முடியாத காரியம். கதவுகள் தகர்க்கப்பட்டு தாறுமாறாக விழவும் அவற்றைக் கடந்து யானைகள் சென்ற பின்புதான் நமது புரவிப்படை பிரவேசிக்க வேண்டும். அது புயல் வேகமாய் இருக்காது. சாதாரணமாகத்தான் இருக்கும். ஆகவே உள்ளேயிருக்கும் பாண்டியர் படைகளால் எளிதில் தாக்கி அழிக்க முடியும்.'

'சேந்தா, நீ அனைத்தையுமே வெறும் ஊகத்தை வைத்துக்கொண்டு பேசுகிறாய். நம் செயல்கள் அனைத்தையுமே ஊகித்து விடுவதென்பதும் தகர்ப்பது என்பதும் எதிரிகளுக்கு எப்போதும் முடிந்துவிடக் கூடியதா? அதோடு ஊகிப்பது வேறு. செயல்படுவது வேறு. இரண்டையும் ஒருங்கே பெற்ற படைத்தலைவன் உள்ளே இல்லை. அதுகையைப் பற்றிய கவலை வேண்டாம். நெடுஞ்செழியனோ வெறும் சிறுவன்.'

'மன்னவா, எதிரியை மிகவும் பலமானவன் என்றெண்ணிப் போர்த்திட்டம் தீட்டுவதே சிறந்தது.'

'இல்லாத ஒன்றை இருப்பதுபோல் எண்ணி அஞ்சுவது பேதமை. அக்குணம் சேரர்களுக்குப் பொருந்தாத அம்சம்.'

'இல்லை என்று நினைப்பது ஊகம்தானே?'

'இல்லை உண்மை. பழையன் எப்போது உள்ளே இல்லையோ அங்கே எதுவும் இல்லை என்பதுதான் சரி'

கருவூர் சேந்தனுக்கு மன்னனின் திட்டமும் சிந்தாந்தமும் சரியானவைகளாய்த் தோன்றவில்லை. பழையன் ஒருவனை வைத்தே போர்த் திட்டங்களை வகுப்பதும் எதிரிகளை பலமற்றவர்களாய்க் கருதுவதும்

சிறந்த ராஜ தந்திரமாகாது என்று கருதினான். அதேசமயம் சேரன் மிகவும் பிடிவாதக்காரன் என்பதால் அவனிடம் தன் கருத்தை நிலைநிறுத்த முடியாமல் நின்றான். இதற்கிடையில் போரமைச்சர் ஒருவர் குறுக்கிட்டு 'காவற்காட்டை அழிப்பது பற்றியும் கோட்டைக் கதவுகளைத் தகர்ப்பது பற்றியும் சொல்கிறீர்கள். இரண்டிற்குமிடையில் இருக்கும் பயங்கர அகழி உங்களுக்குகெல்லாம் நினைவில் இல்லையா? இது சாதாரண அகழியல்ல. கோட்டைக்காக அகழி என்றில்லாமல் முதலைகளுக்கென்றே அகழி பராமரிக்கப்படுகிறது. இது முதலைகளின் சொர்க்கம். அதில் சிக்கியவர்களுக்கு உடனடியாக கிடைக்கக் கூடியதோ நரகம்' என்றார்.

'அதெல்லாம் பெரிய விஷயமில்லை. காவற்காட்டில் வெட்டும் மரங்களைப் போட்டு அகழிகளைத் தூர்த்து விடலாம். இரவோடு இரவாக அவ்வேலையை எளிதில் செய்ய முடியும்' என்று சொல்லிக்கொண்ட இரும்பொறை, 'ஆமாம். சோழ நாட்டிலிருந்து ஏதாவது செய்தி உண்டா?' என்று வினவினான்.

'உண்டு' என்று குறுக்கிட்டது ஒரு புதுக்குரல்.

அதையடுத்து பிரவேசித்தான் ஒரு புதியவன். அவனைக் கண்டதும் சேரமானின் கண்கள் விரிந்தன வியப்பால்.

◈◈◈

முரசு இருபது

# பெருநற்கிள்ளி

சேரமானின் கண்கள் மட்டுமல்ல; அங்கே இருந்த அனைவரது கண்களுமே வியப்பால் விரிந்தன புதியதாய் பிரவேசித்த அந்த மனிதனைக் கண்டு.

பாசறையில் இருந்த அனைவரையும் வியப்பில் ஆழ்த்திய மனிதனுக்குப் பிராயம் ஐம்பது இருக்கலாம். ஆனால் ஒற்றை நாடியான உடலும், சுருக்கம் விழாத சதைகளும், மார்பிலும் தோளிலுமாய் காட்சியளித்த வடுக்களும் அவனுக்கும் முதுமைக்குமிருந்த நீண்ட இடைவெளியைப் புலப்படுத்தின. சிவந்த உடலும், மீசையற்ற முகமும், பொற்கழல்கள் துலங்கிய கரங்களும், கால்களும், பட்டுப் போர்வையை போர்த்திருந்த அழகும் அவனையொரு தேவ புருஷனாக்கியிருந்தன. ஒற்றை நாடியான உடலாய் இருந்தாலும் அவன் வந்து நின்ற தோரணை உடலுக்கு கம்பீரத்தைச் சேர்த்தது. அந்த கம்பீரமானது பரம்பரையான சொத்து என்று கூறுவதுபோல் நீண்டவாள் அவனது இடையிலே தொங்கியது. விரிந்த கூந்தலை வரிந்துகட்டி நீண்ட கிரீடம் அணிந்திருந்தான் அவன். அக்கிரீடத்தில் பதிக்கப் பட்டிருந்த விலையுயர்ந்த கற்கள் பாசறையில் விழுந்த சூரிய ஒளியில் பட்டு பாசறை மனிதர்களின் கண்களைக் கூச வைத்தன. கண்களில் ஒருவித ஒளி வீசியபடியே இருந்தது. இதழ்களில் புன்னகை ஒளிர்ந்தபடி இருந்தது.

அவனைக்கண்டு வியந்த சேர மன்னன் உடனடியாக எழுந்துபோய் அவனது கரங்களைப் பற்றிக் கொண்டான். 'வாருங்கள், வாருங்கள். சோழ நாட்டிலிருந்து செய்தியை எதிர்பார்த்தேன். தாங்களே வந்து விட்டீர்கள். வந்து அமருங்கள்' என்று தன் மகிழ்ச்சியைத் தெரிவித்த அவன் தனக்கு அருகிலிருந்த பேராசனத்தில் அமர வைத்தான். யாரை முன் நிறுத்தி சேர மன்னன் படையெடுப்பை மேற்கொண்டானோ-யாருடைய புகழை உயர்த்தப் பழையனைச் சிறைப்படுத்தி பாண்டியனை எதிர்க்கத் துணிந்தானோ அக்காரண புருஷனும், சிபிச்சக்கரவர்த்தி, மனுநீதிச் சோழன், கரிகாலன் போன்ற மாபெரும் மன்னர்களின் பரம்பரையில் வந்தவனும், முடி சூடிய நாளிலிருந்து நாட்டிற்கு புகழ் தேடமுற்பட்டவனும், புயல் போல் செல்லும் புரவியையும் போர்ப் பயிற்சி பெற்ற யானைகளை உடையவன் என்று புறநானூற்றுப் பாடலில் பாராட்டப்பட்டவனும்* பிற்காலத்தில் வெற்றிகரமாக ராசசூய வேள்வி நடத்தி தன் பெயருடன் அதை இணைத்துக் கொண்டவனும், உறையூர் பகுதிகளுக்கு மன்னனாய் விளங்கியவனுமான சோழன் பெருநற்கிள்ளி சோழமானின் அன்பை புன்னகையோடு ஏற்றவாறு வந்து ஆசனத்தில் அமர்ந்தான்.

'சொன்னபடியே வந்து விட்டீர்கள். மிகவும் மகிழ்ச்சி' என்று மனம் விட்டு தெரிவித்துக் கொண்டான் சோழ மன்னன்.

இதைக் கேட்டு நகைத்த சேரன் இரும்பொறை 'ஏன், அதில் சந்கேம் இருந்ததா உங்களுக்கு?' என்று கேட்டான்.

* புறநானூறு 228



'சந்தேகம் வர நியாயமில்லை. அசம்பாவிதம் ஏதாவது நடந்து விடலாமல்லவா? ஆகவேதான் சொன்னேன்'

'மகிழ்ச்சி. அப்படியெதுவும் உண்டாகவில்லை. சரி உணவருந்துகிறீர்களா?'

'உண [illegible] உணவைத் தேடியா பாசறைக்கு வருவேன? [illegible] தெல்லாம் முடிந்துவிட்டது சேரமன்னா. போர் விவக[illegible]ம் பற்றிப் பேசலாம்.'

இவ்வாறு மன்னர்கள் இருவரும் சம்பிரதாய பேச்சுக்களை முடித்தபின் தன்னுடைய போர்த்திட்டம் பற்றி விளக்கிச் சொன்னான். அதோடு அத்திட்டத்தில் இருந்த சிரமங்களைப் பற்றி கருவூர் சேந்தன் கூறியவற்றையும் எடுத்து உரைத்தான்.

விவரங்கள் சொல்லி முடிக்கப்படும்வரை குறுக்கிட்டு ஏதும் பேசாதிருந்தான் பெருநற்கிள்ளி. பிறகு கேட்டான். 'கோட்டைக்குள் பாண்டியரது படை எவ்வளவு இருக்கும்?'

'கணிசமாய் இருக்கலாம் என்று நினைக்கிறேன்'. என்றான் இரும்பொறை.

'கணிசமாய் என்றால்? நம் படை அளவிற்கு இருக்குமா?'

'இருக்கலாம் என்று ஊகம்தான். நம் படையை விட அதிகமிருக்காது என்று நம்பலாம்.'

'உள்ளே யார் யார் இருக்கிறார்கள்?'

'மன்னன்தான்'

'தளபதிகள்?'

'கோட்டைத் தளபதி அதுகை இருக்கிறான் குறிப்பிடுகிற மாதிரி. அவ்வளவுதான்'

'பழையன்?'

'பழையனா? அவனைப்பற்றி செய்தி உங்களுக்குத் தெரியாதா சோழரே? அவன் என் சந்தனக் கோட்டையில் இருக்கிறான். போர் முடியும் வரை அவனை விலக்கி வைப்பதுதான் சாதகமானது. ஆபத்தில்லாதது என்று நான்தான் அவனைச் சிறைப்பிடித்தேன்'

'அப்படியா? உன் சாகசம் இணையற்றது சேர மன்னா. உன் செயல் இப்போதே நமக்குப் பாதி வெற்றியை அளித்துவிட்டது என்றே கருதலாம். போகட்டும். இப்போது நான் கேட்பதற்கு பதில் சொல். நாம் பாண்டிய மன்னனின் நிலையில் இருந்தால் கோட்டை முற்றுகையைச் சமாளிக்க என்னென்ன நடவடிக்கைகளை எடுப்போம்?'-

'அந்த ஊகம் நமக்கெதற்கு?'

'மிகவும் அவசியம். போரில் இறங்க நம் திட்டங்களை மட்டும் நாம் நம்பிக் கொண்டிருக்க முடியாது. எதிரியின் திட்டங்களை ஊகித்து அதற்கு ஏற்பவும் தயார்ப் படுத்திக்கொள்ள வேண்டும்.'

'சோழரே, பாண்டியன் அனுபவமில்லாதவன். அவனுக்கு இது கன்னிப்போர். அதுகை வீரன்தான். என்றாலும் முன் யோசனை இல்லாதவன். பழையனும் இல்லாத நிலையில் இவ்விருவரும் சேர்ந்து என்ன திட்டம் தீட்டிவிட முடியும் பிரமாதமாக?'



'அலட்சியம் வேண்டாம் இரும்பொறை. அனாவசிய நம்பிக்கையைவிட அனாவசிய அவநம்பிக்கை ஆபத்தானது. முதலிலிருந்து சற்று யோசிப்போம். கோட்டை முற்றுகையிடப் படுகிறதென்றால் முதலில் முற்றுகையைத் தாங்குவதற்குரிய உணவு சேமிப்பைத் துவக்குவோம். ஆயுத எண்ணிக்கைளை அதிகரிப்போம். படைகளைப் பலவாறு திரட்டுவோம். இவை பொதுவான ஆயத்தங்கள். புத்திசாலிகளாய் இருந்தால் மக்களுக்கு போர்ப் பயிற்சி அளித்து அவர்களையும் தயார் படுத்துவோம் இல்லையா?'

'ஆம்'

'சேர மன்னா, கோட்டையை எதிரிகள் எவ்வாறெல்லாம் தாக்கலாம் என்றும் அதை எப்படியெல்லாம் முறியடிப்பது என்றும் யோசிப்போம் அல்லவா?'

'ஆம்'

''இப்போது சொல்லுங்கள். நமது தாக்குதலைப் பாண்டியன் எப்படித் தகர்க்க முயல்வான்?''

இதற்கு கருவூர் சேந்தன் பதில் கூறலானான்.

'ஐயா, கோட்டையின் முக்கிய வெளி அரண்கள் அகழியும் காவற்காடும். அவற்றை உள்ளேயிருந்து கொண்டு அவன் காக்க முடியாது. எனவே உள் அரண்களைத்தான் பலப்படுத்துவான். அந்த வகையில் கோட்டை மதில்கள் எந்நேரமும் போர் சன்னத்துடன் இருக்கும். அதற்குக் காரணமே எதிரி மதிலை நெருங்கிவிடக்கூடாது என்பது தான். மதிலைக் காக்கும்

விதத்தைப் பொறுத்துதான் கோட்டை காக்கப்படுவதும் வீழ்வதும் இருக்கிறது. பாண்டியன் சம்பிரதாய ரீதியில் போரிட முடியுமானால் மதில்களில் உள்ள துளை மாடங்கள் மூலம் அம்பெய்து நம்மைத் தலைகாட்ட முடியாமல் தடுப்பான். மீறி வருபவர்களை மதில்மேலுள்ள பொறிகளை இயக்கி விட்டு அழிப்பான். அதையும் மீறினால் எண்ணெய்க் கொப்பரைகளைக் கவிழ்ப்பான். ஆனால் சேரமா மன்னரது போர் நடவடிக்கை ஆரம்பித்ததுமே இம்முயற்சிகளுக் கெல்லாம் இடமில்லை என்பதை எளிதில் ஊகித்துக் கொள்ள அவனால் முடியும். எனவே நம்மை கோட்டைக்குள் வர அனுமதித்து உள்ளிருந்தபடி உக்கிரமான தாக்குதலைச் செய்வான். அத்தாக்குதல் போர் சம்பிரதாயங்களை மீறி வெறும் கொலைமுயற்சியாய் இருந்தாலும் வியப்பதற்கில்லை. நமது படைகள் உள்ளே நுழைய வேண்டிய அவசரத்தில் கவனமின்றி வரும் போது தயாராக உள்ளே இருக்கும் பெரும் பாண்டியர் படை வெளித் தாக்குதலை நடத்தும். மதிலின் உட்புறம் உள்ள தாழ்வான தளத்தில் உள்ள விற் பொறிகள் இயங்கி சரமாரியாக அம்புகளைப் பொழியலாம். இவற்றை யெல்லாம் மீறி நம் படைகள் முன்னேறினால் ஒரு வேளை நகருக்குள் இருக்கும் படைகள் நம்மைச் சந்திக்கும். அப்போது நாம் தப்பவே முடியாது. இப்படி மூன்று வாசல்களிலும் நடந்தால் நாம் மிகுந்த ஆபத்திற்கு உள்ளாவோம். இப்படி நாம் தத்தளிக்கும் போது மதிலின் மீது வீரர்கள் தோன்றி வெளியிலும் தாக்குதல் நடத்தி நம்மைப் பிரிப்பார்கள். நமக்கு வெற்றி வாய்ப்பு கிடைக்காது.'



சேரர் தளபதி கூறியதையடுத்து ஒருவருக்கொருவர் சிலாகித்துக் கொண்டார்கள்.

'ரொம்பவும் சரி. தளபதி சொல்வது போலத்தான் பாண்டியன் நடந்து கொள்வான். அப்படி நடந்து கொண்டால் நம் கதி அதோ கதி தான்'' என்றார்கள்.

சோழ மன்னன் பேச முற்பட்டு 'மொத்தத்தில் நமது போர்த்திட்டம் பாண்டியன் எதிர்பார்க்கக் கூடிய ஒன்று. இல்லையா?' என்று கேட்டான்.

எல்லோரும் அதை ஒப்புக் கொள்வது போல் தலையசைத்தார்கள்.

'எதிரி ஊகிக்கிற மாதிரி போர்த்திட்டம் தீட்டுவது பலவீனத்திற்கு அடையாளம் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?' என்று இரண்டாவது கேள்வியைக் கேட்டான் சோழன்.

அதற்கும் அங்கிருந்தோர் தலையை ஆட்டினார்கள்.

'எதிரியிடம் பலவீனங்களை எதிர்பார்த்து அதைப் பயன்படுத்தி வெற்றி வாய்ப்பைத் தேடுவதை விட எதிரிக்கு நம் பலத்தைக் காட்டி தோல்வியடையச் செய்வது சிறப்பாக இருக்கும் அல்லவா?'

சோழனின் இந்த மூன்றாவது கேள்வியைக் கேட்டு 'உண்மை' என்றார்கள் தளபதிகள்.

'ஆகவே இந்த அடிப்படையில் நம் நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ளலாம். சேர மன்னா, நான் சொல்வதை யோசித்துப்பார். நீ விரும்புகிற மாதிரியே காவற்காட்டை அழிக்கலாம். அதேசமயம் ஒருமரம் கூட இல்லாதமாதிரி

முற்றிலும் அழித்து கோட்டையின் மூன்று முன்புறங்களிலும் வெட்ட வெளியாக்குவோம். கோட்டையிலிருந்து தொடுக்கப்படும் அம்பு நம்மீது விழக்கூடிய தூரத்திற்கு அப்பால் நாம் அணிவகுத்து நிற்போம். கோட்டை வாசல் கதவுகளைத் தகர்த்து நாம் உள்ளே நுழையப் போகிறோம் என்ற எண்ணமே பாண்டியர்களுக்கு வரக்கூடாது. நமது எண்ணம் என்னவென்றே அவர்களுக்குத் தெரியக்கூடாது. நாம் உடனடி தாக்குதல் செய்வோம் என்று அவர்கள் எதிர்பார்க்கிற மாதிரி ஆயத்தங்களைச் செய்து அவனை நம்ப வைக்கவேண்டும். அவனும் உடனடி நடவடிக்கையில் இறங்கி தாக்கத் தயாராய் இருப்பான். நாம் ஏதும் செய்யாமல் இருக்கவேண்டும். பிறகு திடீரென படைகளை இப்படியும் அப்படியும் நகர்த்தி புதிய முயற்சியை செய்வது போல் காட்ட வேண்டும். ஆனால் முன்னேறக் கூடாது. இப்படி இரண்டு நாட்கள் செய்தால் அவனிடம் குழப்பமும் அசிரத்தையும் உண்டாகும். அந்த நிலையில் ஒரு நாள் இரவு நேரத்தில் திடீர்த் தாக்குதலை மேற்கொள்வோம். சத்தமின்றி சேர நாட்டு தூசிப் படைகளை* அனுப்பி மதில்களில் ஏறவிடுவோம்.

அக்காலத்தில் சேரர்களிடம் 'தூசிப்படை' என்றும் 'கூலிப்படை' என்றும் இரு பிரிவுகள் இருந்தன. ஏறக்குறைய முரட்டுத்தனம் நிறைந்த படையினராய் இருந்தது அப்பிரிவு. அண்டை நாடுகளில் புகுந்து தொல்லையளிப்பவர்களான இவர்கள் மக்களை கொள்ளையடித்தும் சூறையாடியும் படைகள் முன்னேறுவதற்கான வழியை உருவாக்கித் தருவார்கள். [illegible] காலங்களிலும் முற்றுகைக் காலங்களிலும் தேவையான [illegible] துணிகர காரியங்களிலும் இவர்கள் இறங்குவார்கள்.

-A study of the literature of the cera country by Dr.C. BALASUB[illegible]N



அந்தத் தூசிப்படைகளின் திறமை உலகறிந்தது. அவர்கள் திரும்பட மேலேறி அங்கே உள்ள வீரர்களைத் திடீரெனத் தாக்குவார்கள். விற்பொறிகளை அழிப்பார்கள். எண்ணெய் கொப்பரைகளை உட்புறமே கவிழ்ப்பார்கள். தீயுருண்டைகளை நாமும் வெளியி லிருந்து சரமாரியாக உள்ளே வீசுவோம். பெரும் குழப்பம் ஏற்படும். அந்த நேரத்தில் யானைகளைச் செலுத்தி வாசல் கதவுகளை இடிக்கலாம். அப்படி இடித்தால் உள்ளே உண்டான குழப்பமான நிலையில் பாதுகாப்பு குறையும். நாம் கதவுகளை எளிதில் தகர்த்து உள்ளே நுழையலாம். இருட்டு நேரமாதலால் நமக்குச் சற்று சாதகம்தான். இத்தனை குழப்பங்கள் நடக்கும்போது நம் வீரர்கள் பெருமளவில் மதில்மேலேறி போரில் ஈடுபட்டால் கணிசமான அழிவை உண்டாக்கலாம். வாசலில் நுழையும் நம் படைகள் உள்ளே நிற்கும் எதிரிகளை அழித்துக்கொண்டே பாம்பு போல் ஊர்ந்து உள் சுவற்றின் பக்கங்களுக்கு நகர்ந்தால் பாண்டியர் படையை நகரவே முடியாமல் செய்து மதில் சுவற்றோடு இறுக்கி விடலாம். விடிவதற்குள்ளாகவே பாண்டியரின் வாழ்வு முடிந்துவிடும்' என்றான்.

'அதாவது, பலவித ஆயத்தங்கள் செய்து எதிரியைக் குழப்ப வேண்டும். பிறகு எதிர்பாராமல் தாக்க வேண்டும். அப்படித்தானே?''- என்று வினவிய சேரமன்னன் ''இந்தத் திட்டத்திலும் சிக்கல்கள் இல்லாமலில்லை'' என்றான்.

''கவலை வேண்டாம். திட்டத்தைத் தந்தவரே சிக்கல்களை அவிழ்ப்பார்'' என்றார் பெருநற்கிள்ளி.

'நீங்கள் தானே திட்டத்தை அளித்திருக்கிறீர்கள்?'-

''இல்லை. அதை அளித்தவன் ஒரு சூரன். சிறிது நேரம் பொறுங்கள். அவனே இங்கு வந்து சேருவான்''-

''யார் அந்த சூரன்?''- என்று அனைவரும் தங்களைத் தானே கேட்டுக் கொண்டார்கள்.

சிறிது நேரமானதும் அந்த சூரன் அங்கே வரவும் செய்தான்.

அவனைக் கண்டதும் ''நீயா?''- என்று விளித்தான் இரும்பொறை.

கடகடவெனச் சிரித்தான் அச்சூரன்- பாசறையே அதிர்வது போல்.

◈◈◈

## முரசு இருபத்தொன்று

# எழினி

போர்த்திட்டங்களை வகுத்தவர் சிறிது நேரத்தில் வருவார் என சோழன் பெருநற்கிள்ளி அறிவித்தபோது சேரன் யானைக் கண்சேய் உட்பட பலரும் 'அவன் யாராக இருப்பான்' என்றும் 'தற்போது எங்கிருக்கிறான்' என்று மெல்லாம் எண்ணத் தலைப்பட்டார்கள்.

அவர்கள் எண்ணிக் கொண்டிருந்த அதே நேரத்தில் வையையாற்றங்கரையில் இருந்த மகளிர் நீராடும் மாடங்கள் நிறைந்த தென்மருத முன்துறையில் அரசகுமாரியின் நீராட்டு கட்டமொன்றில் தான் இருந்தான் அந்த மனிதன். அவன் தனியாக இருக்கவில்லை. கட்டுடல் கொண்ட பெண்ணொருத்தியுடன்தான் இருந்தான். போர்க் காலமாய் இல்லாதிருந்தால் இந்தத் தென் மருத முன்துறை இப்படி வெறிச்சோடிப் போயிருக்காது. பெரும்பாலான நகர மாந்தர்களை அங்கே பார்க்கலாம். அவர்களின் நீராடும் நேர்த்தியைப் பார்க்கலாம். கலையழகு சேர்ந்தால் நீராடல் கூட சிறப்பாய் அமையும் என்பதற்கான அத்தாட்சியைப் பார்க்கலாம். வையையின் சிற்றலைகளோடு போட்டி போடும் பூவையரின் சிரிப்லைகளைப் பார்க்கலாம். நீராட வேண்டியிருப்பதால் ஆற்றுக்கு வந்த

மாதிரியல்லாமல் ஆறிருப்பதால் நீராட வந்த மாதிரி ஒப்புயர்வற்ற குதூகலம் வயது வித்தியாசமின்றி அனைவரிடையேயும் கொடி கட்டிப் பறப்பதைக் காணலாம். எங்கும் ஓரே ஆர்ப்பாட்டமாய் இருக்கும்.

தற்போதோ நிலைமை அவ்வாறில்லை. எதிரிகளை முன்னிட்டு கோட்டைக் கதவுகள் என்று மூடப்பட்டனவோ அன்றிலிருந்து வையை தனிமைப்படுத்தப்பட்டிருந்தது. நீராடுவதற்குக் கட்டிளம் பெண்கள் வராததால் ஆற்றின் கரையோர மரங்களில் கொஞ்சும் கிளிகளும், குரல் கொடுக்கும் குயில்களும் இல்லை. வையையில் நீரோடு சேர்ந்தோடும் வளமான மீன்களை வாய்களால் கொத்தி விளையாடும் நாரைகளையும் காணோம். மருதத்துறை படிகளில் நடமாடும் தோகை மயில்களும் பேடை அன்னங்களும் கூட மறைந்துவிட்டிருந்தன. மாறாக ஓரிரு ஆந்தைகள் மட்டும் படிகளிலும் மாடங்களின் விளம்புகளிலும் அமர்ந்துகொண்டு அச்சுறுத்தும் பார்வையை வீசிக் கொண்டும் பட்டாசு வெடிப்பது போல் அவ்வப்போது கத்திக் கொண்டும் இருந்தன.

யாரும் விரும்ப முடியாத இச் சூழலை மிகவும் விரும்பி அதிர்ஷ்டமாய் கருதிய அம்மனிதன் கேட்பாரற்றிருந்த அரச மக்களின் மாடத்திலிருந்த கல்லாசனத்தில் சாய்ந்து கொண்டிருந்தான். கரடியும் மயிலும் சேர்ந்தாற் போல் தோன்றக் கூடிய நிலையில் இருந்த அவர்கள் அங்கு நிலவிய ஏகாந்தமான சூழ்நிலையில் ஏராளமான இன்ப உணர்வுகளைப்



பெற்றவர்களாய் லயித்துக் கிடந்தார்கள். காட்டு புஷ்பம் போல் அதிக செழிப்பையும் வளர்ச்சியையும் பெற்றிருந்த அப்பெண் நாண உணர்வை நெடுங்காலத்திற்கு முன்பே விட்டு விட்டாள் என எண்ண வைக்கும் விதத்தில் விதவிதமான ஆடைகளை குறைவாகவும் அரை குறையாகவும் அணிந்து கொண்டு அங்கங்களை அம்மனிதனுக்கு அள்ளித் தருவதில் வள்ளல் தன்மையோடிருந்தாள். கள்ளன் கையில் கிட்டிய கொள்ளைப் பொருளைப் போல் அக்கிள்ளை கிட்டியிருந்ததால் உள்ளமெல்லாம் இன்ப வெள்ளம் பொங்க அந்த மனிதன் அவளை வாரி அணைத்து இன்பங்களின் அகராதிக்குப் புது அர்த்தங்களையும் விளக்கங்களையும் புலப்படுத்திக் கொண்டிருந்தான். இடம் எதுவானாலும் இன்பம் ஒன்றுதான் என்று பறைசாற்றுவது போல் இடம் பொருள் ஏவல் பற்றிய நினைவோ கவலையோ இல்லாமல் அனுபவ ஆழ்கடலில் நீந்திக்கொண்டிருந்தான். அகால வேளையில் ஆரணங்கை அனுபவிக்கும் வினோத நிலையில் பலவாறான அங்க விளையாட்டுக்களை முடித்தபின் ஆற்றில் இறங்கி நீராடினான். அலுப்புத் தீர நீராடி மேலேறி வந்து ப்ரவியின் மீதிருந்த மூட்டையை அவிழ்த்து புத்தாடைகளை எடுத்து அணிந்தான். காட்டு மலரான அப்பெண்ணை ஏறெடுத்தும் பார்க்காமல் அப்புரவியில் ஏறி கோட்டையின் மேற்புறமிருந்த பாசறையை நோக்கிச் சென்றான். சேரர் படை வளைத்திருந்த பகுதியில் காத்திருந்த இரு வீரர்கள் அவனது புரவியைப் பெற்றுக் கொண்டு அழைத்துச் சென்றார்கள். முடிவில் அவன் சேர மன்னனின்

பாசறையில் போய் நின்றதும் 'நீயா?'... என்று சேர மன்னன் வினவியதும் கடகட வெனச் சிரித்தான்.

அவனது வரவு இரும்பொறைக்கு வேப்பங்காயாய் இருந்ததென்றால் அவனது சிரிப்போ விளக் கெண்ணையாய் இருந்தது.

எனவே அவனிடம் எதுவும் பேசாமல் சோழ மன்னனின் பக்கம் திரும்பி, 'சோழரே, இவன் ஏன் இங்கு வந்தான்?' என்று வினவினான்.

'போர்த்திட்டம் வகுத்தவனைப் பற்றி இப்படிக் கேட்பது அசம்பாவிதமானது' என்றான் பெருநற்கிள்ளி.

'இவனா போர்த் திட்டத்தை வகுத்தான்?' என்று கேட்டபடி அவனை நோக்கினான் இரும்பொறை.

முரட்டுத்தனமான கொள்ளைக்காரனைப் போல் காட்சியளித்த அந்த மனிதன் சர்வ அலட்சியமாக நின்றான் கைகளை மடக்கி மார்பில் கட்டியபடி. கலைந்து கிடந்த கூந்தலும், புண்பட்டு தழும்புகள் ஏறிய முகமும் அவனது கொடூர தோற்றத்திற்குப் போதுமானதாய் இருந்தாலும் அவன் சிரித்தபோது திறந்த வாயில் முன்பற்கள் இரண்டு இல்லாதால் அவனது முகம் மிக பயங்கரமாய் இருந்தது பேயைப் போல். விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களை அவன் அணிந்திருந்தாலும் காட்டெருமைக்குச் சிங்காரிக்கப்பட்டது போல் பொருத்தமில்லாமலிருந்தது. அவனது முகம் பயங்கரத்தை அளித்ததென்றால் அவனது தோரணை அவன் எதற்கும் அஞ்சாத அலட்சியப் பேர்வழி என்பதை புலப்படுத்தின.



அந்த முரடனை இப்படி அலசுவது போல் பார்த்த இரும்பொறை 'சோழரே! போர்த் திட்டம் வகுப்பதை இவனது பொறுப்பில் விட்டுவிட்டீர்களா?' என்று வினவினான் ஏதோ விபரீதத்தை எதிர்பார்ப்பது போல்.

சோழமன்னன் இயல்பாகவே பேச முற்பட்டு 'இவன் கூறியிருப்பது ஓர் உபாயம். அவ்வளவுதான். மற்றபடி போர்த்திட்டங்களை வகுப்பது சூழ்நிலையைப் பொறுத்து அமையும். இவன் என் நண்பனாயிருக்கிறான். போரில் நமக்கு உதவுவதாய் வாக்களித்து முன் வந்திருக்கிறான். இவனை அலட்சியப்படுத்த வேண்டியதில்லை' என்றான்.

சேரன் விடவில்லை. ''சோழரே, நீங்கள்தானா பேசுவது? இவன் செய்த செயல் உங்களுக்கு மறந்து விட்டதா? சமயம் பார்த்துக் காலை வாரிவிட்ட இவனையா நம்புகிறீர்கள்? அதுவும் சோழருக்கு வஞ்சனை செய்த இவனையா சேர்த்துக் கொள்கிறீர்கள்?''- என்று கேட்டான்.

இதற்கு சோழன் பதில் சொல்லவில்லை. அந்த மனிதனே குறுக்கிட்டு ''ஐயா, சேரமன்னரே, நீர் எதைச் சொல்கிறீர் என்பது எனக்குப் புரிகிறது. சில காலத்திற்கு முன்னால் புகார் சோழருக்கு யானை வேட்டையில் பங்கெடுத்துக் கொள்வதாக வாக்களித்த நான் அவ்வாறு பங்கேற்காமல் போய்விட்டேன். அதனால் சோழ மன்னர் வெகுண்டு போய் தன் படைத் தலைவனான மத்தியைப் படைகளுடன் அனுப்பினார். அவனும் என்னுடன் போரிட்டு மிகவும் அநாகரீகமான முறையில் என் பற்களைப் பிடுங்கி தன் கோட்டை வாயிற் கதவில்

பதித்துக் கொண்டான்.* இதை வைத்துக் கொண்டு என்னை வசை பாடுகிறீர்கள் இல்லையா?''- என்று கேட்டான்.

அவனது கேள்வியை செவிமடுத்த சேர மன்னன், ''எழினி!'' என்று பெயரிட்டு அழைத்து ''நீ செய்தது நம்பிக்கை துரோகமில்லையா? காலை வாரி விட்ட கயமை இல்லையா? இந்தச் செய்கை உன் மீது நம்பிக்கையையும் மதிப்பையையும் அளிக்கும் என்று எதிர்பார்க்கிறாயா?'' என்று கேட்டான்.

'ஐயா, பற்பல சம்பவங்கள் பல இடங்களில் நடக்கின்றன. அதற்கெல்லாம் அப்போது நிலவும் சூழ்நிலைகளும் அசந்தர்ப்பங்களும் காரணமாகின்றன. அதை வைத்துக்கொண்டு ஒரு மனிதனின் தரத்தை நிர்ணயித்து விடக்கூடாது'- என்றான் தகடூரின் சிற்றரசனான எழினி.

'வேறு எதை வைத்து எடை போட வேண்டும் என்கிறாய்? சமயத்தில் காலைவாரி விடுபவனை உத்தமன் என்று கணிக்கச் சொல்கிறாயா? எழினி, நீ சோழருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்ததோடு நின்றிருந்தால் கூட உன் செயல் ஏதோ அசம்பாவிதம் என்று எண்ணிக் கொள்ளலாம். ஆனால் உன் அயோக்கியத்தனம் அதோடு

* இது சரித்திரப் பூர்வமான நிகழ்ச்சி. அகநானூற்றில் பாடல் எண் 211, 36 ஆகியவற்றில் இதனைக் காணலாம்.

இவன் தகடூரின் தலைவன் என்றும் கடையெழு வள்ளல்களின் ஒருவனான அதியமான் அஞ்சியின் வழியில் வந்தவன் என்றும் சொல்லப்படுகிறது.

1800 ஆண்டுகளுக்கு முன் தமிழகம்.

by- வி. கனகசபை பிள்ளை - பக்கம் 148



நிற்கவில்லை. என் கொங்கு நாட்டின் பக்கத்து நாட்டவனான நீ தகடூரில் இருந்து கொண்டு என்ன செய்தாய்? கொங்கு எல்லைகளிலும் உம்பற் காட்டிலும்* திரிந்து கொங்கு சேரரின் யானைகளைக் களவாடினாய். இது தைப் புலப்படுத்துகிறது''- என்று கேட்டான் யானைக்கண் சேய்.

இதைக் கேட்டுப் புன்முறுவல் செய்தான் எழினி, ''மன்னவா, நீங்கள் சற்று யோசித்து விட்டு இதைச் சொல்லியிருக்கலாம். அண்டை நாட்டெல்லையில் திரிவதும் யானைகளைக் களவாடுவதும், கொள்ளை யிடுவதும் என் பிறவிக்குணமல்ல. உண்மையில் இவற்றையெல்லாம் நான் கற்றதே சேரர்களிடமிருந்து தான். சேரரின் கூலிப்படையின் நடவடிக்கைகளைத் தான் சிற்சில சமயங்களில் நானும் செய்கிறேன்.* அக் கூலிப்படையை நீங்கள் அங்கீகரித்து வளர்ப்பது உண்மையானால் என் செயல் கண்டிக்கப்படக் கூடியது தானா சொல்லுங்கள். மன்னவா, என் பழைய நடவடிக்கைகளைக் கொண்டே தற்போதைய நிலைமையை கவனிக்க வேண்டாம். நானின்று உதவ வந்திருப்பது உண்மை. எந்த யானைகளைக் களவாடிய

* உம்பற்காடு என்பது தற்போது பொள்ளாச்சி வட்டத்தில் இருக்கும் ஆனைமலை வட்டாரத்தை குறிக்கும். தகடூர் என்பது இன்றைய தர்மபுரி.

* Page-51
'A study of the literature of the cera country'
by-Dr. C. Balasubramanian.

தாகச் சொல்கிறீர்களோ அவற்றை மிகவும் திறம்பட பழக்கித் திருப்பித் தாக்கும் **போர்க்கலையில் பயிற்சி யளித்திருக்கிறேன். அந்த யானைகளைக் கொண்ட விசேஷப் படையொன்றையும் உருவாக்கியிருக்கிறேன். அவை இப்போரில் உதவக் காத்திருக்கின்றன. அவைகளை வைத்தே போர்த்திட்டத்தையும் தீட்டித் தந்தேன். என்மீது நம்பிக்கை வைத்தால் விளக்கத் தயார்''- என்று சொல்லி நிறுத்தினான்.

அவனது விளக்கம் சேரமன்னனை ஓரளவிற்குச் சமாதானப்படுத்தி வைத்தது. அவன் மீது சற்று நம்பிக்கை யையும் உண்டாக்கியது. எனவே அவனும் திட்டத்தைக் கேட்க இசைந்தான்.

'ஐயா, சோழ மன்னர் ஏற்கனவே தெரிவித்துள்ளபடி எதிரியைக் குழப்புவதும் திடீரெனத் தாக்குவதும் சிறந்த காரியங்கள். சாத்தியமாகக் கூடியவை. நமது வீரர்கள் இரவில் மதில் மீதேறி பாண்டியர் வீரர்களை வெட்டி குழப்பத்தை உண்டாக்கும்போது நான் எனது விசேஷ யானைப்பிரிவை இயக்கி முப்புற வாயில்களையும் எளிதில் தகர்ப்பேன். என் யானைகள் வெறும் மரத்தண்டுகளைக் கொண்டு கதவுகளை இடிப்பது மட்டுமின்றி அவற்றைச் சிதைக்கும் முயற்சிகளை யெல்லாம் செய்யும். கதவுகள் சிதைந்து விழுந்ததும் அவற்றை இழுத்து வெளியேற்றும் சில

** Retaliative Elephants - இத்தகைய யானைப் பிரிவு சேரர்படையில் இருந்தன.

Page 43-44 'A study of the literature of the cera country' by Dr. C. Balasubramanian



நிமிடங்களிலேயே. இதனால் வாயிலில் தடை இருக்காது. அவ்வாறு கதவுகளை அப்புறப்படுத்தும் யானைகள் உள்ளே இருக்கும் பாண்டியர் படைகளில் புகுந்து தாக்கும். அம்புகள் உடலில் தைத்தாலும் பின்னடையாமல் எய்தவரைத் திருப்பித் தாக்கும் ஆற்றல் பெற்றவை அவை. இப்படி அவை வாயிலில் புகுந்து இரு புறமும் தாக்கும் போது நீங்களும் சோழ மன்னரும், கருவூர் சேந்தனுமாய் புரவிப்படையை இயக்கி புயல் வேகத்தில் நுழையுங்கள். நுழைந்த பின் இருபுறம் விசிறிபோல் விரிந்து பாண்டியர் படையை நசுக்குங்கள். பல வழித் தாக்குதலில் - இரவில் - பாண்டியர் படை சிக்குண்டுத் தவிக்கும், வெற்றி நமக்கு உறுதி!''

எழினியின் போர்த்திட்டம் சேர மன்னனுக்கு உண்மையிலேயே பிடித்தமானதாகவும் சிறப்பான தாகவும் இருந்தது. அத்திட்டத்தில் பங்கேற்கும் விசேஷ யானைப் படையைப் பற்றி சேரனுக்கு நன்றாகவே தெரியுமாதலால் அவை திட்டத்தின் உயிர் நாடியாய் அமையும் என்று திட்டமாய் நம்பினான். சேரநாட்டில் பலமுறை இந்த விசேஷப் படைகளின் நடவடிக்கையைப் பார்த்திருந்தான். மேலும் சேர நாட்டு கூலிப்படை மற்றும் தூசிப்படையின் அட்டகாசங்களும் அவனுக்குத் தெரியாமலில்லை. எனவே போர்த் திட்டம் நன்றாக பலப்பட்டுவிட்டதாய்க் கருதினான்.

எழினியின் கடந்த காலச் செயல்கள் நம்பிக்கைக்கு இடம் தராது என்பது உண்மைதான் என்றாலும் அவன் வீரம் பற்றியோ தந்திர புத்தியைப் பற்றியோ சேரமானுக்கு என்றும் அவநம்பிக்கை கிடையாது. காலை வாரி

விடுவது, கொள்ளைகளில் ஈடுபடுவது, பெண்கள் விவகாரங்களில் மெய்மறப்பது ஆகியவை அவனது குணங்களல்ல என்பதும் அவ்வப்போது நடைபெறும். அசம்பாவிதங்களே என்பதும் அவன் அறிந்ததுதான். இருப்பினும் தான் ஈடுபடும் பாண்டியர் போர் பெரிய காரியமாதலால் அதில் இவ்வெழினி சேர்ந்து காலைவாரி நட்டாற்றில் இழுத்து விட்டால் பெரும் கேடாகிவிடுமே என்ற தயக்கம் காரணமாகத்தான் அவனைக் கண்ட வினாடியிலிருந்து மூர்க்கத்தனமாய் எதிர்த்தான் இரும்பொறை. ஆனால் எழினி அளித்த திட்டம் ஏற்றமாய் இருந்ததாலும் அதை அவனிருந்து செயல் படுத்தினால் சிறப்பாய் இருக்கும் என்பதாலும் தன் எதிர்ப்புகளையும் அபிப்ராயங்களையும் ஒதுக்கிவிட்டு அவனைப் பாராட்டி ஏற்றுக்கொண்டான். 'போர் வெற்றிகரமாய் முடியும்வரை இவன் நம்முடன் இருக்கட்டும். முடிந்தபின் மீதமிருக்கும் பற்களையும் உடைத்து முடமாக்கி அனுப்பி விடுவோம்' என்று உள்ளுக்குள் எண்ணிக் கொண்டான் சேரன்.

அவனது கனவு பெரிதாய் விரிந்தது.

தான் ஒரு பக்கம் ஓர் இயக்கமாய் அமைய தன்னோடு பெரு வீரனான சோழனும், தந்திரசாலியான எழினியும், அஞ்சா நெஞ்சனான கருவூர் சேந்தனும் இருக்கும் நிலையை எண்ணிப் பார்த்த அவனுக்கு வெற்றியில் சந்தேகமே உண்டாகவில்லை. 'பழையனும் இல்லாத நிலையில் சிறுவன் நெடுஞ்செழியனை அழிக்க இத்தகைய போர் வேண்டுமா?' என்று கேட்டுக்கொண்ட அவன் 'இருக்கட்டும். தற்போது கொடுக்கிற அடி இனி



பலதலை முறைகளுக்குப் பாண்டிய வம்சமே காணாமல் போய்விட வேண்டும். பாண்டியரைப் பூண்டோடு அழித்துவிட வேண்டும்' என்று தன் கேள்விக்கான பதிலையும் சொல்லிக் கொண்டான்.

அதற்குப் பிறகு காவற்காடு அழிக்கப்பட்டது முற்றிலுமாக. திட்டப்படியே போர் நாடகத்தையும் அடுத்த இரண்டு நாட்களுக்குச் செய்தான் இரும்பொறை. இரண்டாம் நாள் இரவு திடீர் தாக்குதலைச் செய்ய ஏற்பாடாகியது.

இந்த நிலையில்தான் சற்றும் எதிர்பாராத பேரிடி விழுந்தது சேரமானின் தலையில்.

இடியைக் கொண்டு வந்தவனின் முகம் விளக்கெண்ணையாய் இருந்தது. அவன் பேசிய வார்த்தைகள் பாசறையைக் கலக்கின.

'மன்னவா, பாண்டியர் படைத்தலைவன் பழையன் இப்போது கோட்டைக்குள் வந்து விட்டான்''.

◈◈◈

## முரசு இருபத்திரண்டு

# சந்தனக்கோட்டை அதிபதி

மதுரைக் கோட்டைக்குள் வந்து விட்டதாகச் சொல்லப்பட்ட பாண்டியர் படைத் தலைவன் பழையன் கருவூர் சந்தனக் கோட்டையிலிருந்து தப்பியிருந்தான். அது மட்டுமல்ல. சேரர்களுக்குப் பெரும் நஷ்டத்தையும் உண்டாக்கியிருந்தான். எப்படி?

அன்று சந்தனக் கோட்டையில் மேகலையுடன் பேசிக் கொண்டிருந்தபோது வெடிச் சத்தமொன்று கேட்டதல்லவா? அதையடுத்து அங்கே பிரவேசித்தான் படியூர் நிர்வாகியான நன்னன். அவனது பிரவேசம் பெரும் அமர்க்களமாய் இருந்தது. ஏதோ வெற்றி வீரன் நகரப் பிரவேசம் செய்யும் போது நிகழும் ஆர்ப்பாட்டத்தைப் போல் வாணவேடிக்கைகளும் தோல்வாத்திய ஒலிகளுமாய் அமளிதுமளியான பின்னே உள்ளே நுழைந்தான் அவன். அவனுடன் வந்த வீரர்கள் திரும்பிச் சென்றார்கள்.

நேராக பழையனின் அறைக்கு வந்தான் நன்னன். உள்ளே மிகவும் அசதியோடு பழையன் படுத்திருந்ததைக் கண்டான். அறைச் சுவற்றில் கரியால் எழுதப்பட்டிருந்த கவிதைகளையும், கசங்கிப் போன செடியைப் போல் மேகலை, ஒரு மூலையில் சுருண்டு கிடந்ததையும் கண்டு வெற்றிப் பெருமிதம் கொண்டான். ''டேய் பழையா, என்னிடமா விளையாடினாய்? உன் நிலையைப் பார்த்தாயா? இப்படியே சில நாட்கள் வைத்திருந்தால்



உனக்குப் பைத்தியம் பிடிக்கும். அப்போதுதான் உன் திமிர் அடங்கும்''- என்று கறுவியும் கொண்டான்.

அடுத்த நிமிடம் அவற்றையெல்லாம் மறைத்துக் கொண்டு ''என்ன பழையா? நலம்தானே? இங்கே வசதியாகத்தானே இருக்கிறது?'' என்று வேண்டுமென்றே சீண்டினான்.

பழையன் அரைத் தூக்கத்தில் இருந்து தலையை உயர்த்தி கண்களைக் கசக்கியபடி நன்னனை நோக்கினான். கண்கள் கூசின. குறுநில மன்னனைப் போல் எண்ண வைக்கும் அளவிற்குக் காட்சியளித்தான் நன்னன். விலையுயர்ந்த ஆடை ஆபரணங்கள் அவனுக்குப் பெரும் தோரணையை அளித்திருந்தன. சிறையின் அறையிலிருந்த நந்தா விளக்கு சிந்திய இதமான ஒளியில் அவனது உடைகள் பளபளத்து அறையைப் பிரகாசப்படுத்தின.

''என்ன பதிலையே காணோம்? ஏதாவது வசதிக் குறைவா?''- என்று மீண்டும் கேட்டான் நன்னன் அவனது வாயைக் கிளறும் ஆசையுடன்.

பழையன் பதில் சொல்ல அவசரப்படவில்லை. ''வாரும் நன்னரே. கௌரவக் குறைவில்லை என்றால் அமருங்கள்''- என்றான் அரைச் சோம்பலைக் காட்டியபடி.

''கௌரவக் குறைவா? பாண்டியரின் பிரதான படைத்தலைவர் - தமிழகமே மதிக்கும் பெருவீரர் - மகா பராக்கிரமசாலியான நீங்களே இங்க அமர்ந்திருக்கும் போது நான் அமர்வதில் கௌரவக் குறைவு எப்படி வரும்?''- என்று விஷம வார்த்தைகளை உதிர்த்துவிட்டு

அமர்ந்து கொண்ட நன்னன் மீண்டும் தன் பழைய கேள்வியின் மீதான ஆர்வம் குறையாத நிலையில், ''என்ன பழையா, வசதியோடுதான் இருக்கிறாய் போலிருக்கிறது?'' என்றான்.

''என்ன வசதி இருந்தென்ன நன்னரே? இருக்கிற இடம் என் மாளிகையில்இல்லையே! உங்கள் சிறையில் அல்லவா?''- என்றான் பழையன்.

''அதாவது-''

''எரிமலைக்குள் மரகதக் கட்டில் போட்டு என்ன பயன்? யாரால் அதில் படுத்து சந்தோஷப்பட முடியும்?''-

''உண்மைதான். சிறைப்பட்டவனுக்கு என்ன வசதியளித்தாலும் மகிழ்ச்சியாய் இருக்காதுதான். இதை நீ புரிந்து கொண்டது நல்லது''-

''நன்றி''-

''நன்றியா? எதற்குப் பழையா?''-

'மிகவும் சிரமமான பாடத்தைக் கற்பித்ததற்காக'

பழையன் வேதனையில் பேசுகிறானா விஷமமாகப் பேசுகிறானா என்று புரியவில்லை நன்னனுக்கு. ஏதோ கேட்க முற்பட்ட அவன் மேகலையைப் பார்த்து விட்டு அப்போதுதான் கவனித்த மாதிரி பாவனை செய்தான்.

'அட, மேகலை இங்கேயா இன்னும் இருக்கிறாய்? நீ படும் கஷ்டங்களை பாவம் அவள் ஏன் படவேண்டும்? ஏதோ சேரமன்னர் அன்று அனுப்பினார் உன்மீது பரிதாபப்பட்டேன். அதற்காக இங்கேயே இருக்க வேண்டுமா என்ன? யாரங்கே?'- என்று இரைந்தான்.



இரண்டு வீரர்கள் வந்ததும் 'மேகலையை உடனடியாக அழைத்துச் செல்லுங்கள். அவள் எங்கு போக விரும்புகிறாளோ அங்கு அழைத்துப் போய் பத்திரமாய் விட்டுவிடுங்கள். அவளுக்கு எந்த ஆபத்தாவது ஏற்பட்டால் நீங்கள் சிரச்சேதம் செய்யப்படுவீர்கள்' என்றான்.

சில நிமிடங்களில் மேகலை அழைத்துச் செல்லப் பட்டாள்.

அவள் சென்றபின் நன்னன் மீண்டும் பேச்சைத் தொடர முற்பட்ட போது காவலன் ஒருவன் வந்து 'ஐயா, நம்மவர் ஒருவன் புலியை உயிரோடு பிடித்திருக்கிறான்'- என்றதும் மீசையின் மீது கையைப் போட்ட நன்னன், 'சேர வீரர்கள் புலியைப் பிடிப்பதென்பது சாதாரண விஷயம். இதைப் போய் ஒரு விஷயமாக என்னிடம் சொல்ல வந்தாயே எப்படி?' என்று கேட்டான்.

காவலனுக்கு நன்னனின் கேள்வி வியப்பாய் இருந்தது. 'ஐயா, புலிகளை வேட்டையாடுவது வேறு. உயிரோடு பிடிப்பது வேறு' என்று தெரிவித்துக் கொண்டான்.

நன்னன் அலட்சியத்தோடு அவனை நோக்கி 'ஒரு புலியைப் பிடித்ததற்கே உனக்கு இவ்வளவு பெருமையென்றால் பாண்டிய நாட்டிலிருந்து நான்கு சிங்கங்களை ஒரே நேரத்தில் உயிரோடு கொண்டு வந்ததை என்னவென்று சொல்லுவாய்?' என்று கூறி அதற்கு அர்த்தம் சொல்வது போல் பழையனைப் பார்த்தான்.

காவலனுக்கு அர்த்தம் புரிந்தது மட்டுமல்ல அருவறுப்பாக இருந்தது நன்னன் தன் சுய பிரலாபத்தை

இவ்வளவு பச்சையாகப் பேசியது. எனவே பதில் பேசாமல் இருந்தான். அந்த மௌனத்தை அங்கீகாரமாக எடுத்துக் கொண்ட நன்னன் 'சரி சரி புலிபிடித்தவனை நாளை வரச்சொல் பரிசளிக்கிறேன். அதோடு எதற்கும் ஒரு முறை அவன் பிடித்து வந்ததைச் சரியாகப் பார். காட்டுப்பூனையாக இருக்கப் போகிறது'-என்றான்.

சேரர் வீரர் பற்றிச் சிறப்பாய் பேசிய நன்னனே அதைப் பற்றித் தற்போது கேலி பேசுவதைக் கண்டு வெறுப்படைந்த காவலன் 'ஐயா, கருவூர் பிரமுகர்கள் இருவர் காத்திருக்கிறார்கள். பத்து நாட்களுக்கு முன் இச்சிறைக் கட்டிடச் சீர்திருத்தம் பற்றி மன்னர் சொல்லி யிருந்தார்களாம். அதுபற்றித் தங்களுடன் பேச வந்திருக்கிறார்கள்'' - என்றதும் ''என்னால் இப்போது பேசமுடியாது. வேறு வேலைகள் நிரம்ப உள்ளன. இரண்டு நாட்கள் கழித்து வரச்சொல். பொறுப்பேற்றதும் தான் எத்தனை வேலைகள்?''- என்று முணுமுணுத்து விட்டுக் காவலனை அனுப்பி வைத்த நன்னன், ''உனக்குத் தெரியுமா பழையா?" நான் படியூர் நிர்வாகி மட்டுமல்ல. சந்தனக் கோட்டைத் தலைவனுமாகி விட்டேன். இன்று தான் மன்னர் நியமனம் செய்தார்''... என்றான் பெருமையோடு.

இதை கேட்டதும் 'ஐயோ'- என்று திகைத்தான் பழையன்.

''ஏன் அச்சப்படுகிறாய் பழையா?'' வினவினான் நன்னன்.

''நன்னரே, எனக்கிருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் போய்விட்டது''-



'என்ன அது?'-

''இங்கிருந்து தப்பிவிடலாம் என்று கொஞ்சம் நம்பி இருந்தேன். வீரர்களை ஏமாற்றலாம் என்று தீர்மானித்திருந்தேன். இப்போது நீங்கள் இதன் தலைவராகி விட்டதால் என் நம்பிக்கையில் கல் விழுந்து விட்டது. போர் முடியும் வரை என்னை இங்கே தேக்கி நிறுத்துவது உங்களுக்கு நல்ல பெயரைத் தரும் பட்சத்தில் உயிரைக் கொடுத்தாவது என்னை இங்கேயே மடக்கி வைக்க முயல்வீர்கள்''

''பழையா, உண்மையாகத்தான் சொல்கிறாயா?''- என்று கேட்டான் நன்னன். அவனுக்கு பழையன் தன்னைப் புகழ்வது ஒரு புறம் பெருமையாகவும் மறுபுறம் சந்தேகமாகவும் இருந்தது.

ஆனால் தற்போது பழையன் சொன்ன பதில் நன்னனின் சந்தேகத்தை தீர்த்தது.

''ஐயோ, நான் பேசத்தான் முடியும். ஆனால் நம்புவதும் சந்தேகிப்பதும் உங்களைப் பொறுத்தது. அதோடு என்பேச்சை இந்த நிலையில் யார் நம்பினால் என்ன, நம்பா விட்டால் என்ன?''- என்றான் பழையன்.

''பழையா, நீ எதற்கும் அஞ்சாதவன். நீ போய் அவ நம்பிக்கை அடைவதாகப் பேசுவதுதான் பொருத்தமாய் இல்லை. நம்ப முடியவில்லை''-

''நன்னரே, வீரம் என்பது எல்லா இடங்களிலும் காட்டிவிடக் கூடியது என்று நினைக்கிறீர்களா? வெட்டுப் பாறையில் கிடப்பவன் என்ன வீரத்தைக் காட்டமுடியும்?

நஞ்சு புகட்டப்பட்டவன் வீரனாய் இருந்து என்ன பயன்? என் வீரமும் சந்தர்ப்பங்களைப் பொறுத்துதான். நான் பாண்டியர் படைத்தலைவன்தான். ஆனாலும் என் சொந்தபந்த பாசங்கள் இருக்கின்றன. நானிங்கே வீரத்தைக் காட்ட முற்பட்டால் அங்கே ஆபத்து வந்துவிடும்''-

நன்னனுக்குப் பழையனின் பேச்சில் நம்பிக்கை வந்தது. அவன் பேசுவது எத்தனை உண்மை என்பதும் புரிந்தது. அதனால் சற்றே நெகிழ்ந்த அவன் ''பழையா, உனக்காக நான் பரிதாப்படுகிறேன்'' என்று கூறிவிட்டு ''இன்று காலை ஒற்றை முரசு ஒலித்திருக்குமே, கேட்டாயா?' என்று வினவினான்.

'கேட்டேன்' என்றான் பழையன்.

'அதன் அர்த்தம் தெரியுமா?'

'தெரியாமலென்ன? போர் நிகழும் காலங்களில் படைகள் நகர்வதை உணர்த்தும் வகையில் படையுடன் செல்லும் பொருநர்கள் கொட்டும் ஒற்றைப்பறையொலி* அது'

---

* பொருநர் என்றால் போர்ப்பாடகர் எனலாம். இவர்கள் படையின் ஒரு பிரிவினராய் இருந்து சிறு முரசினை ஏந்திச் செல்வர். அவற்றில் குறுங்கால்கள் கட்டப்பட்டிருக்கும். அதனை ஒலித்தால் அது படையெடுத்துச் செல்வதைப் புலப்படுத்தும்.

-புறநானூறு பாடல் 382

பக்கம் 231. 1800 ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகம்' by-வி. கனகசபை



'வேறென்ன புரிந்து கொண்டாய்?'

'சேரர் படை புறப்பட்டு விட்டது மதுரையை நோக்கி'

'மிகவும் சரி' என்று ஒப்புக் கொண்ட நன்னன் 'பழையா' என்று வாஞ்சையுடன் அழைத்து ''எல்லாமே திட்டமிட்டபடி நடக்கிறது. உன்னைப் போர் அரங்கிலிருந்து நீக்கியாகிவிட்டது. சேர மன்னரும் படையோடு புறப்பட்டு விட்டார். போரில் அவர் வெற்றி பெறப் போவதும், வெற்றிக்குப் பின் நீ கழுவேற்றப் படப் போவதும் நிச்சயம். இது தேவைதானா?'' என்று வினவினான்.

''இதற்குச் சேரமன்னர் அல்லவா பதில் சொல்ல வேண்டும்?''-

''பழையா, சேரர் படையெடுப்பு பற்றி உன்னை யாரும் கேட்கவில்லை. அதைப்பற்றி உன் கருத்தும் தேவையில்லை எனக்கு. நான் கேட்பது உன் சாவைப் பற்றியது. மாவீரன் என்று பேரெடுத்த நீ சிறைப்பட்டு மாற்று நாட்டு மன்னனால் சாகப் போகிறாயே இது அவசியம் தானா என்று கேட்டேன்''-

'அது தலைவிதி நன்னரே. அதை மாற்ற முடியாது'

'முடியும்'

'எப்படி?'-

'நீ மதியுள்ளவன்'-

'அதனால்?'

'மதியால் வெல்லலாம் விதியை'

'புரியவில்லை'-

''பழையா, நீ சாக வேண்டியவன் அல்ல. சீரும் சிறப்புமாய் வாழ வேண்டியவன். அதற்கு வழி வெறும் பிடிவாதத்துடன் இங்கிருப்பது அல்ல. வா. சேர மன்னரிடம் அழைத்துச் சொல்கிறேன். அவரோடு தோள் நின்று போரிடு. பாண்டிய மன்னனை உன் வாளாலேயே வெட்டி வீழ்த்து. உன் நிலை நிச்சயம் உயரும். இது உறுதி''-

''ஐயா, உங்களிடம் குறுவாள் இருக்கிறதா?''-

நன்னன் இக்கேள்வியால் சற்றே குழம்பி ''ஏன்? அதற்கென்ன? இருக்கிறது''- என்றான் தடுமாறி

'எத்தனை குறுவாள்கள் இருக்கின்றன?'

'நான்கு'

'அவற்றில் ஒன்றை எடுங்கள்'

'எதற்கு பழையா?'-

'எடுங்கள் நன்னரே. சீக்கிரம் எடுங்கள்'-

நன்னன் தன் இடையிலிருந்து ஒரு குறுவாளை எடுத்ததும், ''அதை என் மார்பில் பாய்ச்சுங்கள். தாமதிக்காதீர்கள்''- என்றான் பழையன்.

நன்னனுக்கு எதும் புரியவில்லை. 'பழையா, நீ என்ன சொல்கிறாய்?' என்று கேட்டான்.

'நன்னரே, என்னை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை. இத்தனை நான் சகோதரனைப் போல் மன்னரோடு வாழ்ந்துவிட்ட நான் என் வாளால் அவரை



வீழ்த்துவதைவிட உங்கள் வாளால் மாள்வதே நல்லது'

'பூ! இவ்வளவு தானா? நான் என்னமோ ஏதோ என்று நினைத்து விட்டேன்' என்று கூறி இடிபோல் சிரித்தான் நன்னன்.

பிறகு சாவகாசமாகப் பேசத்தொடங்கி ''பழையா, பழைய கதை நமக்கெதற்கு? பிழைக்கும் வழியைப் பேசுவதை விட்டு பயனற்றப் பேச்சுக்களை ஏன் பேசுகிறாய்?- என்று கேட்டான்.

'ஐயா, சற்று இருங்கள்'- என்று சொல்லிவிட்டு எதையோ செய்ய முற்பட்டவனைப் போல் எழுந்த பழையன் விளக்கு எரிந்து கொண்டிருந்த கம்பத்தருகே சென்றான். அவன் என்ன செய்யப் போகிறான் என்பது தெரியாத நிலையில் இடித்த புளி போல் நின்றிருந்தான் நன்னன்.

பழையனோ எந்தவித அவசரமோ பதட்டமோ இன்றி கம்பத்தில் செருகியிருந்த பந்தத்தை எடுத்தான். நன்னனிடம் வந்தான். ''ஐயா, இந்தப் பந்தத்தைக் கவனியுங்கள்''- என்றான்.

நன்னனுக்குக் குழப்பமாய் இருந்தது. ''எதை கவனிக்கச் சொல்கிறாய்?''- என்று கேட்டான்.

'இதைத்தான்'- என்ற பழையன் அடுத்த வினாடியிலேயே சிறிதும் எதிர்பாராத விதமாய் பந்தத்தை நன்னனின் முகத்தில் ஓங்கி அழுத்திவிட்டான்.

'ஆ! ஐயோ' - என்று ஓலமிட்டு அலறினான் நன்னன். பந்தம் அணைந்து இருள் சூழ்ந்தது. அதே சமயம் பழையன் சடாரென குனிந்து நன்னனின் குறுவாளை

எடுத்து அவனது நெஞ்சில் அழுத்தி ''நன்னா, அலறாதே. மீண்டும் அலறினால் அது மரண ஓலமாகிவிடும். சொல்வது போல் செய். காவலனை பந்தமெடுத்து வரச் சொல்'' - என்று லேசான குரலில் மிரட்டினான்.

ஒரே வினாடியில் நிலைமை தலைகீழாகி விட்டதை நம்பவே முடியவில்லை நன்னனால். பந்தம் தன் முகத்தில் அழுத்தப்பட்டதால் உண்டான அவஸ்தை ஒருபுறமும் பழையனின் குறுவாள் நெஞ்சிலே குறுகுறுத்ததால் உண்டான மரணபயம் மறுபுறமும் அவனை ஆடவொட்டாமல் செய்துவிட்டன. பந்தம் அவிந்து போய் இருளும் புகையும் வேறு சூழ்ந்து விட்டதால் சுயமாய் எதையும் செய்யவோ சிந்திக்கவோ முடியாமல் போன நன்னன் 'யாரங்கே, பந்தமொன்று கொண்டு வா''... என்று இரைந்து விட்டு ''பழையா, இதென்ன வேலை? நீ செய்வது வீரம்தானா?''- என்று கேட்டான் ஆற்றாமையால்.

பழையன் அவனது கேள்விக்குப் பதில் சொல்ல வில்லை ''நன்னா, உன் உடலில் உள்ள குறுவாட்களை மரியாதையாக எடுத்துக் கீழே போடு. கொஞ்சம் பிசகினாலும் நெஞ்சு பிளந்து விடும்''- என்று கூறி குறுவாளை மேலும் அழுத்தினான்.

ஏற்கெனவே முகத்தில் ரணகாயம் பட்டு புகையால் கண்கள் எரிய அவஸ்தையில் கிடந்த நன்னன் தற்போது பழையனிடம் முரண்பட முயலாமல் குறுவாட்களை எடுத்து 'தட் தட்' என அறை மூலையில் எறிந்து விட்டு ''எதற்காக பந்தத்தை அணைத்தாய்? இப்போது கொண்டு வரச் சொல்கிறாய்?''- என்று இரைந்தான்.



இதற்கும் பழையன் பதில் சொல்லவில்லை. மெதுவாக அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டு குறுவாளைத் திடீரென நெஞ்சிலிருந்து நீக்கி நன்னனின் அங்கிக்குள் நுழைத்து அவனது இடுப்பை துறுதுறுக்கும்படி அழுத்திக் கொண்டு 'நன்னா'... என்றழைத்தான்.

இதற்கிடையில் பந்தமொன்று கொண்டு வந்து ஏற்றப் பட்டது. அதை ஏற்றி வைத்த காவலன் நன்னனும் பழையனும் காதலர் போல் அருகருகே சாய்ந்து அமர்ந்து கொண்டிருப்பதைக் கண்டு வியந்தான். பிறகு அணைந்து கிடந்த பந்தத்தையும் அது கிடந்த இடத்தையும் கண்டு வியந்தான். பின் 'தலைவரே, இப்பந்தம் இங்கு ஏன் வந்தது? ஏன் அணைந்தது?'' என்று கேட்டான்.

இதற்கு நன்னன் பதில் கூறுமுன் பழையன் குறுக்கிட்டு 'தலைவர் இதற்கெல்லாம் உனக்குப் பதில் கூறவேண்டிய அவசியமில்லை. போய் ஒரு ஓலையும் எழுத்தாணியும் தலைவர் முத்திரையும் கொண்டு வா' என்றான்.

காவலன் பழையனை ஒரு முறை பார்த்து விட்டு 'எனக்கு நீங்கள் கட்டளையிட முடியாது'- என்று தெரிவித்துக் கொண்டான்.

'இது உன் தலைவரது கட்டளைதான் தெரியுமா?'- என்றான் பழையன்.

'அதைச் சொல்ல தலைவருக்கு வாயிருக்கிறது'- என்றான் காவலன்.

'இப்போது அவர் அதைத் திறக்க மாட்டார்'... என்று பழையன் சொன்னதும் 'ஏன்?'... என்று வினவிய காவலன் தற்போதுதான் நன்னனின் முகத்தைச் சரியாகக் கவனித்தானாதலால் 'தலைவரே, இதென்ன உங்கள் முகம் இப்படி இருக்கிறது?''... என்று கேட்டான்.

''மடையா அதைப் பற்றி உனக்கென்ன? போய் இவர் கேட்டதைக் கொண்டுவா''... என்று இரைந்தான் நன்னன். அவனுக்கு வாள் முனையிலிருந்து விடுதலை கிடைத்தால் போதுமென்றிருந்தது.

விரைவிலேயே ஓலைகொண்டு வரப்பட்டு செய்தி தயாரிக்கப்பட்டது. அதை முத்திரையிட்டு அனுப்பிய பின் 'எழுந்திரு'- என்றான் பழையன்.

'எங்கே போக வேண்டும்?'-எரிச்சலோடு கேட்டான் நன்னன்.

''கவலை வேண்டாம். நான் அழைத்துச் செல்கிறேன்''- என்று சொன்ன பழையன் கோட்டை வாயிலுக்கு வந்தபின் வாயிற்கதவைப் பூட்டும்படி கட்டளையிட்டான் நன்னனுக்கு. பூட்டப்பட்ட சாவியை வாங்கி இடையில் செருகிக் கொண்ட பழையன் வெளியே நின்றிருந்த நன்னனின் தேரில் அவனோடு ஏறி அமர்ந்து கொண்டான்.

எந்தவிதமான விஷமத்திற்கும் இடமளிக்காமல் நன்னனை மடக்கிக் கொண்டு செல்வதாகத்தான் நினைத்தான் பழையன். ஆனால் அவனையும் அறியாத விஷமம் ஒன்று நடந்துவிட்டது. தேரேறும்போது நன்னன் செய்துவிட்ட அந்த விஷமம் விரைவிலேயே பிரச்சனையைத் தோற்றுவித்தது பழையனுக்கு.

முரசு இருபத்திமூன்று

# நன்னனின் பொல்லாத வேளை

காவலனை எழுத்தாணியையும் ஓலையையும் கொண்டு வரச்சொல்லி அனுப்பி பின் 'நன்னா' என்றழைத்தான் பழையன்.

பெரும் எரிச்சலில் இருந்தான் நன்னன். என்னென்னவோ கோட்டை கட்டியிருந்த நிலையில் போய் சந்தனக் கோட்டை தலைகீழாக்கி விட்டதே என்ற வேதனை அவன் நெஞ்சை அழுத்தியது. சந்தனக் கோட்டையின் அதிபதியான வேளை நல்லவேளை என்று கருதி அந்த சந்தோஷத்தில் புலிபிடித்த வீரனைப் பற்றியும் கட்டிடச் சிரமைப்புப் பற்றியும் பேசும் போதெல்லாம் பெரும் தோரணையைக் காட்டிப் பழையனை அசத்தி விட்டதாக எண்ணிக் கொண்டிருக்கையில் அதே பழையன் சாதுவைப் போல் பேசி தன்னை அசத்தி ஆடவொட்டாமல் செய்து சந்தனக் கோட்டையின் அதிபதியானவேளை உண்மையில் பொல்லாதவேளை என்று நிரூபித்துவிட்ட மாதிரிச் சம்பவங்கள் நேர்ந்து விட்ட விதம் அவனைத் துன்புறுத்தியது. 'எதற்காக இவனைச் சந்திக்க வந்தோம்? பேசாமல் நம் வேலையைப் பார்த்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா?' என்றெண்ணிக் கொண்டு 'எப்படி இவனது பேச்சில் நான் மயங்கிப் போனேன்? அதுவும் இவனது திறமையைப் பற்றி முழுவதும் அறிந்த நான் எப்படி இவன்

வெளிப்படுத்திய பரிதாபத்தை நம்பினேன்? என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு 'ம். எல்லாம் என் கெட்ட வேளை' என்று சமாதானமும் சொல்லிக் கொண்டான்.

இப்படி எண்ணத்தால் உண்டான மனப்புண்களாலும் பந்தத்தால் உண்டானத் தீப்புண்களாலும் தவித்துக் கொண்டிருந்த நிலையில் பழையன் அழைக்கவே மிகுந்த வெறுப்புடன் 'என்ன?' என்றான் நன்னன். 'ஐயா' என்றும் 'நன்னரே' என்றுமெல்லாம் அழைத்துத் தன் செவிகளை குளிரவைத்திருந்த அதே பழையன் தற்போது மரியாதை யில்லாமல் 'நன்னா' என்றழைத்தபோது ஈட்டியால் குத்துவது போலிருந்தது நன்னனுக்கு.

'நன்னா'-என்று மீண்டும் அழைத்த பழையன் 'அறிவாளியாய் இருப்பதும் அறிவை உபதேசிப்பதும் எவ்வளவு உபயோகமாய் இருக்கிறது பார்த்தாயா?' என்று கேட்டான்.

நன்னனின் எரிச்சல் அதிகமாகியது. 'என்ன உளறுகிறாய்?'- என்று சீறினான்.

'உடம்பை அதிகமாக அலட்டிக் கொள்ளாதே நன்னா. உடம்பு அளவுக்கதிகமாக அசைந்தால் வாள் முனையில் அழுந்தி விடும்'- என்று தெரிவித்துக் கொண்ட பழையன். 'நீ அறிவாளி. அறிவை எனக்குப் போதித்தாய்' என்றான்.

'நானெங்கே போதித்தேன்?'

'பிழைக்கும் வழியைப் போதிக்கவில்லையா?'

'அதற்கென்ன?'



'அறிவாளியாய் இருந்து உபதேசித்த அது இப்போது உனக்கு எப்படிப் பயன்படுகிறது பார்'

'எனக்கா?'

'ஆமாம் நன்னா. நீ இப்போது குறுவாளின் முனையில் இருக்கிறாய். ஆகவே பிழைக்கும் வழியைக் கடைப்பிடிக்கத்தானே வேண்டும்?'

'எப்படி?'

'காவலன் ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வருவான். அதில் நீ எழுத வேண்டும்'

'யாருக்கு? சேர மன்னருக்கா?'

'அவருக்கெதற்கு நன்னா? அவர்களெல்லாம் பெரியவர்கள். நாம் நம் அளவு சமமானவர்களுக்கு எழுதிக்கொண்டால் போதும்'

'வேறு யாருக்கு?'

'வணிகத் தலைவர் எட்டிச் சாததனுக்கு'

'அவனுக்கேன் எழுத வேண்டும்?'

'இதென்ன நன்னா, படியூர் விஷயத்தை மறந்து விட்டாயா நீ?'

'படியூர் விஷயமா?'

'ம். சந்தனக் கோட்டை அதிபதியானதும் எல்லாம் மறந்துவிட்டது போலிருக்கிறது. படியூரில் அந்த கடல் கொள்ளைக்காரன் டைரியஸுக்கு நான் வாக்களித்தது நினைவில்லையா?'

'நீ வாக்களித்ததற்கு நானென்ன செய்வது?'

'படியூர் நிர்வாகியான உன்னைத் தவிர வேறு யார் உதவ முடியும்? படியூர் நிர்வாகியான நீ இந்த விஷயத்தில் படியூரின் வணிகத் தலைவன் எட்டிச் சாத்தனை தவிர வேறு யாருக்கு ஓலை எழுத முடியும்?'

'நானென்ன எழுதுவது?'

'அப்படிக் கேள். படியூரில் அங்காடிகள் மற்றும் சுரங்கங்கள் ஆகிய எல்லாவற்றிலும் உள்ள நீலமணிக் கற்களையும் மணிகளையும் இன்றே டைரியஸிடம் ஒப்படைக்க வேண்டும் என்றும் அது சேரமன்னனின் உத்தரவு என்றும் எழுதி அனுப்பு. இன்றைக்குள் அவை டைரியஸிடம் போய்ச் சேர்ந்து விடவேண்டும் நன்னா'

இதைக் கேட்டுப் பெரிதும் கோபமடைந்த நன்னன், 'பழையா நீ என்ன விளையாடுகிறாயா என்னிடம்?' என்று இரைந்தான்.

'வாளை இடையில் அழுத்தியிருப்பது எப்படி விளையாட்டாக முடியும் நன்னா?'

'என் உயிரே போனாலும் எழுத மாட்டேன்'

'ஏன்?'

'படியூரின் அனைத்துச் செல்வங்களையும் இழப்ப தென்பது கொங்கு நாட்டின் எதிர்காலத்தையே இழப்பது போல். தெரியுமா? அதைப் போய் கேவலம் ஒரு கொள்ளைக்காரனுக்கு தானமளிப்பதை பைத்தியக்காரன் தான் செய்யமுடியும். அதோடு பழையா, யார் செல்வத்தை யாருக்கு யார் அளிப்பது? உனக்கும் படியூருக்கும் என்ன சம்பந்தம்?'



'டைரியஸுக்கு வாக்களித்திருக்கிறேன்'

'அது உன் பைத்தியக்காரத்தனம். நானா பொறுப்பேற்க முடியும்? நாளைக்கு இச்சேர நாட்டைக் கூட இப்படி அக்கொள்ளைக்காரனுக்குத் தானம் தருவதாகச் சொல்லிவிட்டு சேரமன்னனிடம் வந்து நிற்பாயா ஓலையும் எழுத்தாணியுமாய்?'

'சரி. புறப்படு நன்னா'

'எங்கு?'

'நீ விரும்பியதை விட'

'நான் விரும்பியதா?'

'ஆமாம், உயிரை விட விரும்பினாய் அல்லவா? வா போகலாம். அந்த டைரியஸிடமே கொண்டு போய் விட்டு விடுகிறேன். அவன் விருப்பப்படி உயிரைப் போக்கட்டும்'

இதைக் கேட்டதுமே நன்னனின் முகத்தில் கிலி படர்ந்தது. டைரியஸிடம் போவதென்பது நரகத்தைத் தேடிச் செல்வது போன்றது என்பதை அவன் உணர்ந்திருந்ததால் செய்வதறியாமல் திகைத்தான் அவன்.

அதைக்கண்ட பழையன், 'நன்னா நான் வாக்களித்து விட்டால் அதை நிறைவேற்ற[illegible] விடமாட்டேன். டைரியஸுக்குப் படியூர் மணிகளை அளிப்பதற்கு நீ ஓலை எழுதித், தராவிட்டால் எனக்கு வேறு வழியில்லை என்று எண்ணிவிடாதே. ஒரே வழியை நம்பி ஏமாந்து நிற்பவனல்ல பழையன். இன்றில்லை என்றாலும் ஒரு நாள் டைரியஸ் படியூரைச் சூறையாடாமல்

விடமாட்டான். அந்த நிலை வரும்போது உன்னையும் சூறையாட அவன் தவறமாட்டான் என்பதை நினைவில் வைத்துக் கொள். அவனைத் தடுக்கவோ அழிக்கவோ உன்னால் முடியாது. அவன் இருப்பதும் படியூரின் மீது கண் பதித்திருப்பதும் சேரமன்னனுக்குத் தெரியாதவை அல்ல. இருந்தாலும் ஏன் அவன் மீது கை வைக்கவில்லை? அவனைத் தொடச் சேரனே அஞ்சுகிறான். அவனைச் சீண்டுவது தீயைத் தூண்டுவது போன்றது என்பதை அறிந்தே விலகி யிருக்கிறான். இப்படி மன்னனே தொட விரும்பாத கொள்ளைக்காரனை நீ எதுவும் செய்ய முடியாது. மன்னனால் தடுக்க முடியாததை நன்னனால் தடுக்க முடியாது. நான் உன்னை ஓலை எழுதும்படி சொல்வது பிழைக்கும் வழியைச் சொல்வதாக உணர்ந்துகொள். உயிரைக் காத்துக்கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இக்காரியத்தைச் செய்வது உனக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. மன்னன் உன்னை மன்னிக்கவும் இடமளிக்கிறது படியூர் செல்வங்கள் கிடைத்துவிட்டால் டைரியஸ் இங்கு மீண்டும் தலைகாட்ட மாட்டான்.'- என்று இடித்துரைத்தான்.

'பழையா, எனக்கு உபதேசிக்கிற நீ உன் காரியத்தை யோசித்துப பார்த்தாயா? மாவீரன் என்று மண்டலம் போற்றும் நீ வாள் முனையில் என்னை மிரட்டிக் கொண்டும் படியூர் செல்வங்களை தானம் செய்யும் படியும் சொல்கிறாயே, இதென்ன தர்மம்?'-

'நன்னா, தர்மத்தைப்பற்றி பேச நீயும் சேரமன்னனும் லாயக்கற்றவர்கள். தர்மத்தின் இலக்கணம் பொதுவானதேயன்றி உனக்கொன்று எனக்கொன்று அல்ல. சேர



மன்னனும் வீரன்தான். அந்த வீரத்தை அவன் எப்படிக் காட்டினான் என்பதை மறந்து விடாதே. பாண்டிய மன்னரை வீழ்த்த எண்ணிச் சதிச் செயலில் ஈடுபட்டு என்னைக் கடத்தினானே சேரமன்னன், அது தர்மமானால் என் செயலும் தர்மம்தான். என்னைக் கடத்துவதில் ஒன்றுமறியாதப் பெண்களையும் வயதானவர்களையும் கருவிகளாகப் பயன்படுத்தினாயே நீ, அது தர்மம் என்றால் என் காரியமும் தர்மம்தான்'-

'சேரன் அதர்மம் செய்தான் என்று பாண்டியனும் அதர்மம் செய்வது உகந்ததா?'-

''ஆட்சியாலும் மரபாலும் சேரரும் பாண்டியரும் வேறுபட்டிருக்கலாம். ஆனாலும் இருவருமே மனிதர்கள் தான். அரச காரியங்களில் மோதல் வரும்போது அதர்மத்திற்கு அதர்மத்தால் பதில் தருவதென்பது ராஜதந்திரமே தவிர தவறல்ல. நீயும் சேர மன்னனும் இந்த நீசச் செயலில் இறங்காமல் இருந்திருந்தால் நான் ஏன் உன்னிடம் வருகிறேன்? படியூர் விஷயத்தில் தலையிடுகிறேன்? அதோடு நீ என்னைச் சிறை வைத்திருக்கிறாய் பாண்டிய மன்னரிடமிருந்து பிரிக்கும் பொருட்டு. பாண்டிய மன்னரோடு இருக்க வேண்டியதோ என் கடமை. இந்த நோத்தில் உன்னிடம் தர்மம் பேசியோ நியாயம் கேட்டோ நான் போக முடியுமா இங்கிருந்து? மகாபாரத அரசியலைப்படி நன்னா. கௌரவர்கள் இழைத்த அநீதிக்கும் அதர்மத்துக்கும் வாசுதேவன் பதிலுக்குப் பதில் அதர்ம நெறிகளை செயல்படுத்தினான். இல்லையென்றால் பாண்டவர்கள் வெற்றி பெற்றிருக்கவும் முடியாது. கௌரவர்களின்

காட்டாட்சிக்கு முடிவு கட்டியிருக்கவும் முடியாது. அன்று பாண்டவர்கள் செய்ததை இன்று பாண்டியர்கள் செய்ய வேண்டியதாகிறது''-

நன்னன் இதற்கு மேல் பேசவில்லை.

ஓலையும் எழுத்தாணியும் வந்தபின் பழையன் கூறிய படியே செய்தியைப் பொறித்து முகவரியைப் பதித்துக் குழலில் இட்டு முத்திரை வைத்தான்.

''முக்கியமான செய்தியைக் கொண்டு செல்லும் பிரதானத் தூதுவனை அழை நன்னா. சந்தனக் கோட்டைக்கே அப்படியொருவன் இருப்பானே? அவனை அழைத்து ஓலையைக் கொடு. இன்றிரவு காரியங்கள் முடியவேண்டும். முடிந்ததாக டைரியஸ் மூலம் இங்கு செய்தி வந்தபின் நாம் போகலாம். அதுவரை இங்கு ஓய்வெடுப்போம். உமக்கும் களைப்பாக இருக்கும். தீப் புண்களுக்கு வேறு மருந்து போட வேண்டுமல்லவா?''-

ஃ ஃ ஃ

ஒருவாறு ஓலைச் செய்தி பழையன் விரும்பியபடி எட்டிச் சாத்தனுக்கு அனுப்பப்பட்டது. பிறகு நன்னனின் தீக் காயங்களுக்கு மருந்து போடப்பட்டது. இருவரும் உணவும் அருந்தினார்கள். இவ்வளவும் குறுவாள் நன்னனின் இடையில் அழுந்திய நிலையிலேயே நடந்தன. பிறகு ''எழுந்திரு நன்னா. புறப்படுவோம்'' என்றான் பழையன்.

''எங்கே? டைரியஸிடமிருந்து இன்னும் செய்தி வரவில்லையே?''- என்று வினவினான் நன்னன்.



''அதனாலென்ன, நாம் புறப்படுவோம்''- என்று கூறியபடி நன்னனை எழுப்பிய பழையன் தனது இடது கையை அவனது அங்கியில் மறைத்தபடி இடையைத் தழுவிய நிலையில் புறப்பட்டு சந்தனக் கோட்டையின் வாயிலருகே வந்ததும் ''நன்னா, இச் சந்தனக் கோட்டையில் உனது ஆட்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்?''- என்று கேட்டான்.

'எனக்கெப்படித் தெரியும்? இன்றுதான் பதவிக்கு வந்திருக்கிறேன் நான்' அலுத்துக் கொண்டான் நன்னன்.

'பரவாயில்லை. விசாரித்து சொல் வாயிலில் நிற்கும் வீரனை'-

'டேய், சந்தனக் கோட்டையில் இன்று பணியில் எத்தனை பேர் இருக்கிறார்கள்?' என்று வீரனைக் கேட்டான் நன்னன்.

''இருபது பேர் ஐயா''- என்று வீரன் பதிலளித்ததும் ''அவர்கள் அனைவரையும் இங்கே வரச் சொல் நன்னா''- என்றான் பழையன்.

''முட்டாள், ஏன் மரம் போல் நிற்கிறாய்? போய் கூப்பிட்டுத் தொலையேன்'' என்று வீரனிடம் எரிந்து விழுந்தான் நன்னன்.

அடுத்த சில நிமிடங்களில் இருபது வீரர்கள் வந்து நின்றார்கள்.

அவர்களை எண்ணிப் பார்த்து விட்டு ''சரி. கணக்கு சரியாக இருக்கிறது'' என்று சொல்லிக் கொண்ட பழையன் அவர்களை நோக்கி ''இங்கு நடந்ததை

யாராவது வெளியே செய்தியனுப்பியிருக்கிறீர்களா?'' என்று வினவினான்.

'இல்லை'- என்றார்கள் அவர்கள்.

''ஒவ்வொருவராய் வந்து நன்னனின் தலையில் அடித்து சத்தியம் செய்யுங்கள்'' என்றான் பழையன்.

சத்தியம் செய்ய முதல் ஆள் நகர்ந்ததுமே ''நில். பொய் சத்தியம் செய்து என்னைக் கொன்று விடாதே. எனக்கும் தெரியாமல் எவனாவது செய்தி அனுப்பியிருக்கிறீர்களா?'' என்று இரைந்தான் நன்னன்.

''நீங்கள் இருக்கும் கதியில் உங்கள் உத்தரவின்றி நாங்கள் எதைச் செய்ய முடியும் ஐயா? தலைவரின் உயிர் சாதாரணமானதல்லவே?''- என்று ஒருவன் கூறினான், பணிவா விஷமமா என்று திட்டமாய் புரிந்து கொள்ள முடியாத விதத்தில்.

'தன் போதாத வேளை-தன் நிலை இவ்வளவு கேவலமாகிவிட்டது' என்று மெளனமாய் புலம்பிய நன்னன் ''சரி சரி. சீக்கிரம் செய்து தொலையுங்கள்'' என்றதும் இருபது பேரும் அவனது தலையைச் சொட்டையாக்காத குறையாக அடித்து சத்தியம் செய்தார்கள்.

'உங்களைத் தவிர வேறு யாராவது இருக்கிறார்களா?'- கேட்டான் பழையன்.

'இல்லை படைத்தலைவரே'-

'சரி. வாயிற்கதவின் சாவியை நன்னனிடம் கொடுங்கள்'



அவர்கள் சாவியைக் கொடுத்தபின் 'நீங்கள் உள்ளே செல்லுங்கள்' என்றான் பழையன். அவர்கள் போனபின் நன்னனிடம் வினவினான்.

'நன்னா, இந்தச் சந்தனக் கோட்டையை வெளியே பூட்டி விட்டால் உள்ளே இருப்பவர்கள் வெளியே வரமுடியாதாமே, உண்மையா?'

'ஆம்'

'நல்லது. கதவைப் பூட்டு'

ஏதோ பேச முற்பட்ட நன்னன் பேச்சை விட்டுவிட்டு கதவைப் பூட்டினான்.

'நன்னா'

'என்ன?'-

'மேகலையை எங்கே அனுப்பினாய்? உண்மையைச் சொல். அவளுக்கு ஏதாவது நேர்ந்திருக்குமானால் உன்னை அணு அணுவாகக் கொல்வேன். சேர இனத்தைப் பூண்டோடு அழித்து விடுவேன்.'

'என்னை நம்பு பழையா. விரும்பும் இடத்திற்கு அவளை அனுப்பும்படித்தான் கட்டளையிட்டிருக்கிறேன். இது உண்மை'

'நல்லது. உன் தேர் எங்கிருக்கிறது?'-

'அதோ'-

'சாரதி இருக்கிறானா?'

'அதிலேயே இருப்பான்'

'சரி. வா போவோம்'

'எங்கே?'

'படியூருக்குத்தான்'

ஏதும் பேசாமல் பலத்த சிந்தனையுடன் நடந்தான் நன்னன். வேறு வழியில்லாமல் பழையன் சொற்படி நடந்து வந்தானே தவிர உண்மையிலேயே படியூர் செல்வங்களை டைரியஸிடம் ஒப்படைக்க அவனுக்கு விருப்பமே இல்லை. ஒருவிதத்தில் அச்செல்வங்களை அடையும் ஆசை அவனுக்கே இருந்ததால் அவற்றை இழக்க விரும்பவில்லை. அதைக் காப்பாற்ற வேண்டுமானால் முதலில் பழையனிடமிருந்து விடுபட வேண்டும். அவனது பிடியோ எமப்பிடியாய் இருந்ததால் அவனிடமிருந்து சுதந்திரமடைவது குதிரைக் கொம்பு தான் என்பதை உணர்ந்து என்ன செய்வதென்று அறியாமல் தேரை நோக்கி நடந்தான். தேரருகில் சென்ற போது தற்செயலாகத் தன் கைவிரலைக் கவனித்த அவனுக்குப் புதிய சிந்தனை பிறந்தது. கோட்டைக்கு அப்புறமாய் இருந்த மலையையும் அதன் மீதிருந்த சேரர் காவல் கூடத்தையும் அதில் எரிந்து கொண்டிருந்த தீபத்தையும் கவனித்தான். அவனுக்குள் தெம்பு பிறந்தது. சாரதியை எழுப்பித் தேர்த்தட்டில் உட்கார வைத்த பின் பழையனோடு தேருக்குள் அமர்ந்த பின் தனது மோதிரக் கையை அசதியில் உயர்த்துவது போல் உயர்த்தினான் நன்னன். தேர் புறப்பட்டது. உயர்த்திய கையை சில நிமிடங்களுக்கு அவன் தாழ்த்தவே இல்லை. மோதிரத்தில் இருந்த படியூரின் மிகச் சிறந்ததும் உயர்ந்ததுமான நீலக்கல் பிரகாசமாய் சுடர் விட்டது.



அதற்கான பலனும் விரைவிலேயே கிட்டியது அவனுக்கு. பழையன் அதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. படியூருக்குச் சென்றபோது டைரியஸ் மிகவும் ஆபத்தான நிலையில் இருந்தான். அவனைச் சுற்றி சேர வீரர்கள் அம்பு வலை அமைத்திருந்தார்கள். எந்த நிமிடமும் அவன் உயிர் போகக் கூடியதாய் இருந்தது.

◈◈◈

## முரசு இருபத்து நான்கு

# படியூர் போர்

தேரில் ஏறியதுமே பழையனின் சிந்தனை அடுத்த கட்ட நடவடிக்கை குறித்துச் சென்று விட்டது. சந்தனக் கோட்டையை விட்டு வெளியேறிவிட்ட பின் அவன் சிக்கல் எதையும் எதிர்பார்க்கவில்லை. அதோடு குறுவாள் முனை நன்னனின் இடையிலேயே அழுத்திக் கொண்டிருந்தால் எந்த விபரீதமும் நடக்க வாய்ப்பில்லை என்று கருதினான். எல்லாவற்றுக்கும் மேலாக சேர மன்னன் படையோடு புறப்பட்டுவிட்டதும் அதனால் மதுரைக் கோட்டைக்கு உண்டாகக் கூடிய கெடுபிடியுமே அவனை ஆட்கொண்டுவிட்டன. மன்னர் திறமைசாலி தான் என்றாலும் தனித்து இயங்குவது கஷ்டம் என்றும் தளபதி அதுகை எளிதில் உணர்ச்சி வசப்படக் கூடியவனாதலால் அவனை அதிகமாக நம்ப முடியாது என்றும் கருதினானாதலால் தான் உடனடியாக மதுரைக் கோட்டைக்குத் திரும்ப விரும்பினான்.

ஆனால் நன்னனின் நிலை முற்றிலும் வேறாக இருந்தது. அவனது சிந்தனையெல்லாம் தன் உயிரைப் பற்றியும் படியூர் நீலமணிகளைப் பற்றியே இருந்ததால் பழையனிடம் சிக்கியது முதல் அவ்விரண்டையும் காப்பாற்றுவதிலே கவனமாய் இருந்தான். எனவே அதற்கான வாய்ப்புகளை எதிர்பார்த்துக் கொண்டே இருந்தான். அந்த வாய்ப்போ-அதற்கான அதிர்ஷ்டமோ



தேரை நெருங்கும் வரை அவனுக்குக் கிட்டவில்லை. தேரை நெருங்கிய போதே தன் கையிலிருந்த நீலக்கல் மோதிரம் அவனுக்கு நினைவிற்கு வந்தது. அந்த நினைவே அவனுக்குத் தப்பிவிட்ட சந்தோஷத்தை அளித்ததால் அம்மோதிரத்தை மெச்சிக் கொள்ளவும் செய்தான். மோதிரத்தில் இருந்த நீலக்கல் மிகவும் பெரமானது மட்டுமின்றி பிரகாசம் மிக்கதாய் இருந்தது. இரவுக் காலங்களில் அதையோர் ஒளி விளக்காகவே பயன்படுத்தப் போதுமானதாகையால் தற்போது அதை தன் ஆபத்தைக் களையும் சாதனமாக்கிக் கொள்ள நன்னன் தீர்மானித்தான். கைகளை உயரே தூக்கித் தேரின் பின்புறமாய் பிடித்தால் மோதிரத்தின் நீலக்கல் வெளிப்படுத்தும் ஒளியானது சந்தனக் கோட்டையின் பின்புறமுள்ள மலையின் மீதுள்ள காவல் கூடத்திற்குத் தெளிவாகப் புலப்படுமாதலால் அவ்வாறே செய்தான் அவன். தற்செயலாக அவனப்படி கைகளை உயர்த்தியதை சிந்தனை வயப்பட்டிருந்த படைத்தலைவனும் கவனிக்க வில்லை.

நீலக்கல்லின் நீல ஒளியினை மலையில் காவற் கூடத்திலுள்ள சேர வீரர்கள் கண்டால் நீலமணி புழங்கும் படியூருக்கு ஆபத்து என்பதைப் புரிந்து கொள்வார்கள் என்றும், அதையொட்டி படைப்பிரிவு ஒன்று விரைவாக அங்கு சென்று நிலைமையைக் கண்டறிந்து டைரியலையும் இதர கொள்ளைக்காரர்களையும் வளைத்துக் கொள்ளும் என்றும், பிறகுதான் அங்கு சென்ற பின் டைரியஸின் நிலையைக் காட்டியே பழையனிடமிருந்து விடுபடலாம் என்றும், பின் ஒரே சமயத்தில்

பழையனையும் டைரியஸையும் வெட்டி வீழ்த்தி விடலாம் என்று பெரும் கனவைக் கண்டான் நன்னன்.

கனவு இனிப்பாய் இருந்தது. வென்று விடக் கூடியதாயும் தோன்றியது. எனவே அதுவரை குடி கொண்டிருந்த பயம் அகன்று தெம்பு பிறந்தது அவனிடம் அதை மறைத்துக் கொள்ள முடியாமல் காட்டிக் கொள்ள விரும்பி 'படைத்தலைவரே'- என்றழைத்தான். பழையனுக்கு அது காதில் விழவில்லை. மீண்டும் நன்னன் அவ்வாறு அழைத்ததும் சிந்தனை விடுபட்ட அவன் ''ம் என்ன?''- என்று தூக்கத்திலிருந்து எழுந்தவன் வினவுவது போல் கேட்கவே, ''என்ன படைத்தலைவரே, எந்த உலகத்தில் இருக்கிறீர்'- என்று கேட்டான் நன்னன்.

சற்றே தெளிந்த பழையன் ''நன்னா, இதென்ன திடீர் மரியாதை?''- என்று கேட்டான சாதாரணமாக.

''சந்தர்ப்பங்கள் மரியாதைகளை உண்டாக்குகின்றன படைத்தலைவரே''- என்று கூறினான் நன்னன்.

''அப்படி என்ன விசேஷமான சந்தர்ப்பம் வந்து விட்டது?''-

''படைத்தலைவரே, என் கதி இப்போது முடிவு செய்யப்பட்டு விட்டது''- என்றான் நன்னன் பீடிகையுடன்.

'எப்படிச் சொல்கிறாய்?'-

''சந்தனக் கோட்டையில் இருக்கும்வரை தப்பி விடமுடியும் என்ற நம்பிக்கையில் இருந்தேன். எனவே உங்களை மதிக்க முற்படவில்லை. ஆனால் விஷயங்களெல்லாம் தற்போது ஏறக்குறைய முடிந்து விட்டன.



சிறிது நேரத்தில் நாம் படியூரை அடைவோம். உங்கள் எண்ணம் அங்கு நிறைவேறியிருக்கும். அதற்குப் பின் என்னைச் சிறையிலே தள்ளி விடுவீர்கள். இந்த நிலையில் வீண்பேச்சு பேசுவதிலோ மதிப்பில்லாமல் நடப்பதிலோ பயனில்லை. ஆகவேதான் மரியாதை மாறியிருக்கிறது. இது தவறா?''-

நன்னனின் பேச்சைக் கேட்டு பழையன் வியந்தான். ஏறக்குறைய சந்தனக் கோட்டையில் சிறைப பறவையாய் இருந்த போது அவனிடம் பேசியது போலவே தன்னிடம் அவன் தற்போது பேசுவதாகத் தோன்றவே அந்த மாற்றத்திற்கு என்ன காரணமாக இருக்க முடியும் என்று யோசித்தான். எந்த நிமிடத்திலும் உயிர் போய் விடக் கூடிய நிலையில் இருப்பவன், அதிலும் உயிர் மீது மிகுந்த பாசமும் பயமும் கொண்ட நன்னன் இப்படி எவ்வாறு சாதாரணமாய் பேச முடியும் என்றும் யோசித்தான்.

அவனது யோசனை-மற்றும் சந்தேகம் ஆகியவற்றைத் தீவிரப்படுத்துகிற மாதிரி அமைந்தது நன்னன் தொடர்ந்து பேசிய பேச்சு.

''படைத்தலைவரே, படியூருக்கு நாம் ஏன் போக வேண்டும்? பேசாமல் வேறெங்காவது சென்று விடுவோம்''-

இதைக் கேட்ட பழையன் 'ஏன் நன்னா'?- என்று வினாவினான்.

''பட்ட அவமானங்கள் போதும். அங்கு போய் டைரியஸின் முன்னால் மண்டியிட்டு நிற்கும் போவமானம் வேண்டாம் படைத்தலைவரே. அதை விட குறுவாளை அழுத்தி உயிரை நீக்கி விடுங்கள்-''

அவமானத்தைப் பற்றி நன்னன் பேசியது பழையனுக்கு வியப்பைத் தருவதாயிருந்தது. அசட்டு தைரியத்தில் ஈடுபடுவதும் அதனால் அவமான மடைவதுமே நன்னனின் வாழ்க்கையாய் இருக்கும் போது ஏதோ கவரிமானைப் போல் திடீரென தன்னைக் காட்டிக் கொள்ள அவன் முற்படுவது வேடிக்கையாய் இருந்தது. அவமானத்தை ஒரு பொருட்டாகவே கருதாமல் வீம்பை வளர்க்கும் நன்னனின் தற்போதைய போக்கு பழையனின் சந்தேகத்தை உறுதிப்படுத்தியது. இருப்பினும் காட்டிக் கொள்ளாமல் ''கவலைப்படாதே நன்னா. டைரியஸ் முன்னால் நீ மண்டியிடப் போவதாக யார் சொன்னது? அதோடு அங்கு நாம் போவது உன் ஒலை வேலை செய்கிறதா என்பதைக் காணத்தான். வேலை செய்கிறது என்பதைப் பார்த்து விட்டால் போதும். டைரியஸை சந்திக்கவும் வேண்டியதில்லை. படியூரின் நீலமணிகள் டைரியஸின் கைகளுக்குப் போனால் போதும்''- என்றான்.

''நீலமணிகள் டைரியஸின் கைகளுக்கு அவ்வளவு எளிதாய் போய்விடும் என்றா எதிர்பார்க்கிறாய்? ரொம்பவும் ஆசைப்பட்டு விடாதே பழையா. படியூர் போனதும் என்ன ஆகிறது பார். எனது ரொம்ப நாள் ஆசையான கொலையை அங்கு செய்கிறேன். கைவேறு கால் வேறாக வெட்டி காக்கைக்கும் கழுகுகளுக்கும் எறிகிறேன். அப்போது பேசு''- என்று உள்ளூரக் கறுவிக் கொண்ட நன்னன், 'சரி, உங்கள் இஷ்டம்'. என்று கூறிவிட்டு ''படைத்தலைவரே, குறுவாளை கொஞ்சம் விலக்கிக் கொள்ளுங்கள். உங்களிடமிருந்து நான் தப்பமாட்டேன். இது சத்தியம்'' என்றான்.





நன்னன் சத்தியம் செய்த நிலையில் மற்றவராய் இருந்தால் நம்பியிருப்பார்கள். ஆனால் பழையனோ தற்போது அதிக அவநம்பிக்கையே அடைந்தான். கடைந்தெடுத்த கயவனான நன்னன் சத்தியம் செய்வதைவிட பெரிய மோசம் வேறிருக்க முடியாது என்று கருதிய அவன், நன்னன் காட்டிய அலட்சியத்தைக் கண்டு மேன்மேலும் தன் சந்தேகத்தை உறுதிபடுத்திக் கொண்டான். படியூரின் மணிகள் மீது மோகம் கொண்ட நன்னன் அங்கு போக வேண்டாம் என்று சொன்னதும் அதற்கு மானஉணர்வைக் காரணம் காட்டியதும் பழையனின் மூளையைக் கூராக்கின. தற்போது படியூரின் நிர்வாகி தப்ப முயல மாட்டேன் என்று சத்தியம் செய்ததும் ஏதோ சதி உருவாகி விட்டது என்று முடிவு செய்தான் பழையன். அதற்காக நன்னனின் வேண்டுகோளை நிறைவேற்றத் தயங்கவில்லை. தேரில் பயணம் செய்யும் நிலையில் தன்னிடமிருந்து தப்பக் கூடியவன் இனிமேல் தான் பிறக்க வேண்டும் என்ற கருத்து கொண்ட பழையன் குறுவாளை இடையிலிருந்து நீக்கிவிட்டு அதே சமயம் 'நன்னா, உன் உடைவாளைக் கொடு'- என்று கேட்டு அவனது நீண்ட வாளை வாங்கி தன் இடையில் செருகிக் கொண்டான். நன்னன் அதைப் பற்றிக் கவலைப் படவில்லை.

❖ ❖ ❖

நன்னன் நினைத்த மாதிரியே நிகழ்ச்சிகள் நடந்தன. அவனது நீலக்கல் மோதிர ஒளி காவற் கூட வீரர்களை விரைவாகச் செயல்பட வைத்தது. நீல ஒளி படியூரின் ஆபத்தை உணர்த்தவே அவசர காலப் படையின் பிரிவொன்று அரபுநாட்டுப் புரவிகளில் புயல் போல்

புறப்பட்டு பிரளயம் போல் படியூரைச் சூழ்ந்தது. சுமார் 200 புரவி வீரர்கள் அடங்கியபடை படியூருக்குச் செல்லும் முன்பே நன்னனின் ஓலை சென்றிருந்தது. ஓலையைக் கண்ட வணிகர் தலைவன் எட்டிச் சாத்தன் பெரும் குழப்பமடைந்தான். விலையுயர்ந்த கற்களின் அங்காடியைப் போய் கொள்ளைக்காரனிடம் ஒப்படைக்கச் சொல்லி மன்னர் உத்தரவிடுவது அவன் தன் வாழ்நாளிலேயே கேட்டறியாததாக இருந்தது. ஒரு கணம் ஓலைச் செய்தியைச் சந்தேகித்தான். ஆனால் மறுகணமே அதை விலக்கிக் கொண்டான் ஓலையில் இருந்த முத்திரைகள் சரியானவைகளாய் இருந்தன. அதோடு போர்க்காலங்களில் எதிர்பாராத கட்டளைகள் பிறப்பிக்கப்படுவது இயல்பாயிருந்த காரணத்தால் வேறிவழியின்றி படியூரையடுத்த மலைக்காட்டிலிருந்த டைரியஸை வரச் செய்து ஓலைச் செய்தியைச் சொன்னான். அவனுக்கும் அது விநோதமாய் இருந்தது. ஆனால் பழையனின் வார்த்தைகள் அவனுக்கு நினைவுக்கு வந்ததும் 'ஒரு வேளை அது சம்பந்தமாய் இருக்குமோ' என்றெண்ணிய அவன் ''எப்படியானால் என்ன?'' என்ற தீர்மானத்துடன் படியூருக்குத் தன் நூறு கொள்ளைக்கார சகாக்களுடன் வந்தடைந்தான்.

பெருஞ்செல்வம் அவனைத் தேடி வந்தாலும் அதை அலட்சியமாகப் பெற்றுவிட முயலாமல் தகுந்த எச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்கவே செய்தான் டைரியஸ். முதலில் எட்டிச் சாத்தனின் மூலம் நீலமணி கிடைக்கும் சுரங்கங்களின் இருப்பிடத்தைக் காட்டச் சொல்லி அங்கிருந்த மணிகளைத் திரட்டிப் பெரும் இரும்பு வண்டிகளில் ஏற்றினான். அதன் பின் அங்காடியில் உள்ள கடைகளுக்குப் பொறுப்பான எல்லா வணிகர்களையும் எட்டிச் சாத்தன் உட்பட சாத்தனின் கோடை மாளிகையில் அனுப்பிச் சிறை வைத்தான். அதன்பின் அங்காடியில்இருந்த செல்வங்கள் வண்டிகளில் ஏற்றப்பட்டன.



இந்த நிலையில்தான் சந்தனக் கோட்டைப் பகுதியிலிருந்து சேரர் படைப் பிரிவு பிரளயம் போல் படியூர் அங்காடியில் பிரவேசித்தது. இதைச் சற்றும் எதிர்பாராத கொள்ளைக்காரர்கள் ஆயத்தமாவதற்குள் தாறுமாறாகத் தாக்கப்பட்டார்கள். சில நிமிடங்களிலேயே நான்கைந்து கொள்ளைக்காரர்களின் பிணங்கள் விழுந்தன. பத்துக்கும் மேற்பட்ட வீரர்கள் டைரியஸை வளைத்துக் கொண்டார்கள். மற்றவர்களை சேர வீரர்கள் கைது செய்தார்கள். இந்நிலையில் நன்னனின் தேர் அங்கு பிரவேசித்தது.

படியூரை நெருங்கும் முன்பாகவே பழையபடி நன்னனின் இடையில் குறுவாளை அழுத்திக் கொண்டான் பழையன். ஆனால் இது அர்த்தமற்றுப் போகும் விதத்தில் அங்காடியில் நிலவிய காட்சி அவனை அசர வைத்தது. நன்னனின் பேச்சுக்களால் அவனுக்குள் சந்தேகம் மூண்டது உண்மைதான் என்றாலும் இப்படியொரு விபரீதத்தில் அது முடியும் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

அதே சமயம் அனைத்தையும் எதிர்பார்த்த நன்னன் மகிழ்ச்சியடைந்து பழையபடி தன் விஷமத்தைக் காட்டி ''கண்டாயா பழையா? இருப்தியாக இருக்கிறதா?''- என்று வினவினான்.

பழையனோ அவனுடன் அனாவசியமாகப் பேச முற்படாமல் அங்கிருந்தவர்களின் நிலை, எண்ணிக்கை ஆகியவற்றை நோக்கினான். இதற்கிடையில் சேரர் படைப் பிரிவின் தலைவன் பழையனிடம் வந்து ஏதோ பேச முற்பட்டபோது நன்னன் குறுக்கிட்டு 'குறுவாளை 'இடையில் அழுத்திக் கொள் பழையா. அங்கே சேர வீரர்கள் டைரியஸைக் கொல்வார்கள். பிறகு வீரர்கள் என்னைக் கொல்வார்கள்''- என்று கூறி கடகடவென சிரித்தான். பிறகு சேரர் வீரர் தலைவனிடம் ''அதிகா, நீயே போய் உன் வாளால் டைரியஸைக் கொல்'- என்று கூறவும் வீரர் தலைவனான அதிகன் டைரியஸை நோக்கிச் சென்றான்.

மிகவும் ஆபத்தானதும் கோபப்படக்கூடியதுமான நிலைகளில் சிவக்கக் கூடியதான பழையனின் முகம் தற்போது தணல் போலாயிற்று. சுமார் பதினைந்தடி தூரத்தில் வீரர்களுக்கிடையில் சிக்கிக்கிடந்த டைரியஸை நோக்கினான். சற்று தூரத்தில் கொள்ளைக்காரர்களை வளைத்துக்கொண்டு சேர வீரர்கள் நிற்பதையும் கவனித்தான். பிறகு அவனது கண்கள் டைரியஸை நோக்கின ஏதோ செய்தி சொல்வது போல். டைரியஸின் கண்களும் பழையனின் முகத்தைக் கவனித்தன.

அடுத்த நிமிடம் தன்னிடமிருந்த நன்னனின் குறுவாளை இடையிலிருந்து சரேலென எடுத்து டைரியஸைச் சூழ்ந்திருந்த வீரர்களில் ஒருவனின் கழுத்தில் மின்னல் வேகத்தில் எறிந்ததும் அவன் மரண ஓலமிட்டுவிழவும், மற்ற வீரர்கள் திகைத்துப் போய் 'ஹா' என்ற கூக்குரலிட்டுத் திரும்பவும் அந்த நிமிட நேரத் திருப்பத்தைக் கவனித்த டைரியஸ் வாள் வீச்சைப் போல் வீரர்கள் வியூகத்திலிருந்து விலகி சேர வீரன் ஒருவனை அப்படியே தூக்கி மற்றவர்கள் மேலெறிந்து அதனால் கிடைத்த சந்தர்ப்பத்தில் தன் பெருவாளை எடுத்து மிகவும் மூர்க்கத்தனமான போரில் ஈடுபட்டான்.



குறுவாளை எறிந்த பழையன் ஒரு நிமிடம் கூடத்தாமதிக்காமல் தனது வலது கையால் வாளை உருவிக்கொண்டு இடது கையால் நன்னனைப் பிடித்து இழுத்துக் கொண்டு டைரியஸைச் சூழ்ந்த வீரர்களின் மீது பாய்ந்தான் இடிபோல். மூர்க்கத்தனமான டைரியஸின் தாக்குதலும் திறமை மிகுந்த படைத்தலைவனின் வாள் வீச்சும் சேர வீரர்களை சிறிது நேரத்திலேயே பிணமாக்கின. இத்தனைக்கிடையிலும் நன்னனை எமப்பிடியாகப் பிடித்துக்கொண்டும், தாறுமாறாக இழுத்து அவனையே ஒரு கவசமாகவும் பயன் படுத்திக்கொண்டான் பழையன்.

இந்த திருப்பம் நடந்த அதே நேரத்தில் தூரத்தில் சேர வீரர்களுக்குகிடையில் இருந்த கொள்ளைக்காரர்களும் வெடியைப் போல் தடாலென இருபுறங்களிலும் தாக்கி தங்கள் கொலைத் தொழிலைக் காட்டவே அவர்களை மடக்கியிருந்த சேர வீரர்கள் எதிர்பாராத தாக்குதலால் திணறியதோடு மட்டுமின்றி நன்னன் இருந்த இடத்திற்குச் செல்ல முடியாமலிருந்தார்கள். போரின் உக்கிரத்தை அறிந்த சேரர் படைப்பிரிவின் தலைவனான அதிகன் டைரியஸைத் தாக்கிக் கொண்டிருந்த செயலிலிருந்து விடுபட்டு அருகிலிருந்த அங்காடியில் பாய்ந்தது மட்டுமின்றிச் சங்கொன்றை ஊதவும் செய்தான்.

மறுகணம் சேர வீரர்கள் தப்பினால் போதும் என்ற அளவில் அங்காடியை விட்டு ஓடினார்கள். அதிகனைப் பிடிக்க முற்பட்ட டைரியஸைத் தடுத்தான் பழையன். சிராய்ப்பு காயங்கள் பட்டும் சித்தம் தடுமாறியும் மயக்கமடைந்து விட்ட நன்னனை அங்காடி வாசலில் கிடத்திவிட்டு இருவரும் அங்கேயே அமர்ந்தார்கள். பிறகு நன்னனுக்கு மயக்கம் தெளிவிக்கப்பட்டது. தெளிந்த பின் அவன் மேற்கொள்ள வேண்டிய பணியைப் பற்றித் தெரிவித்தான் பழையன். "போயும் போயும் என் கதி இப்படியா ஆகவேண்டும்?" என்று தன் விதியை எண்ணி நொந்து கொண்டான் நன்னன்.

◈◈◈

முரசு இருபத்தைந்து

# சேரமான் சீற்றம்

சேரர் படைப்பிரிவின் தலைவன் அதிகனின் அபய சங்கினையடுத்து சேர வீரர்கள் உயிர் தப்பினால் போதுமென ஓடிவிட்ட நிலையில் அப்படியூர் அங்காடி அலங்கோலமாய் இருந்தது. கொள்ளையர் தரப்பில் இருபது பேர்களும் சேரவீரர்கள் தரப்பில் ஐம்பதுக்கு மேற்பட்டவர்களும் மாண்டு கிடந்தார்கள். எஞ்சி நின்ற கொள்ளையர்கள் அப்பிணங்களைப் பற்றிக் கவலைப் படாமல் ஒரு மணியையும் விட்டு வைக்காமல் அனைத்தையும் தங்கள் வண்டிகளில் திரட்டி பத்திரப்படுத்தினார்கள். எட்டிச் சாத்தனும் இதர வணிகர்களும் சேர வீரர்களோடு ஓடிவிட்டதால் தங்கள் ஆத்திரத்தை அவனது மாளிகையின் மீது காட்டி அதைத் தரைமட்டமாக்கினார்கள். நீலமணி சுரங்கங்கள் சிதைத்து தூர்க்கப்பட்டன. அங்காடி கடைகள் பிய்த்தெறியப் பட்டன. மொத்தத்தில் வெளிநாட்டவரும் வியக்கும் படியூரானது சுடுகாடுபோல் காட்சியளித்தது. இரவு வெகுநேரம் ஓடிவிட்டபடியால் சுற்றுப்புறம் மிகவும் அமைதியாகி விட்டிருந்தது. அந்த அமைதிக்கிடையில் ஓரிருவர் எழுப்பிய மரணக்கூச்சல் மிக பயங்கரமாய் சில நிமிடங்களுக்கு ஒலித்தது. அதற்கு பதிலளிப்பது போல் ஓரிரு நரிகள் அண்டைக் காட்டிலிருந்து ஊளையிட்டன.

பிரதான அங்காடி ஒன்றில் அமர்ந்திருந்த பழையனிடம் மிகவும் விசுவாசமாகவும் மதிப்பாய் நடந்து கொண்டான் கடற்கொள்ளைக்காரனான டைரியஸ்.

''படைத்தலைவரே, சொன்னபடியே வாக்கை காப்பாற்றியது மட்டுமின்றி உயிரையும் காப்பாற்றி யிருக்கிறீர்கள். இதை என் வாழ்நாள் வரை மறக்க மாட்டேன். என்துணையோ உதவியோ எப்போது தேவைப்பட்டாலும் அழையுங்கள். தட்டாமல் வருகிறேன். சதி செய்து கெடுக்கப் பார்த்த முட்டாள் நன்னனால் இன்று சேர வீரர்கள் விட்டுச் சென்ற அரபு நாட்டுப் புரவிகளும் எனக்குக் கிடைத்து விட்டன. மொத்தத்தில் எதிர்பாராத செல்வத்துடன் திரும்புகிறேன் நான் உங்கள் உதவியால்''... என்று சொன்ன அந்த யவனன் ''தயவு செய்து இந்த மடையனை என்னோடு அனுப்பிவிடுங்கள். இவனை எங்கள் உம்பற் காட்டிற்குக் கொண்டு போய் தோலை உரித்து தேக்கு மரத்தில் தொங்கவிட வேண்டும்''... என்று கேட்டுக் கொண்டான்.

''இல்லை டைரியஸ். இவன் இப்போது எனக்குத் தேவை. இவனால் ஆகவேண்டிய முக்கியக் காரியம் இருக்கிறது. எனக்குத் தேரை விரைவாக ஓட்டும் ஆள் ஒருவன் உடனடியாகத் தேவை. அதற்கு இப்போது உதவி செய்தால் போதுமானது''- என்றான் பழையன்.

''இது உதவியே அல்ல. கடமை. எங்களில் எறக்குறைய எல்லோருமே பொறிகளை அமைப்பதிலும் வல்லவர்கள். கடல் கொள்ளையராக இருந்தாலும் நிலக் கொள்ளைகளையும் புரிவதால் புரவியேற்றம் முதல்



அனைத்துக் காரியங்களையும் கற்றுக் கொண்டிருக் கிறார்கள். ஆகவே நிச்சயம் செய்கிறேன்'' என்று கூறிய டைரியஸ் அதற்கான ஆளைத் தேர்ந்தெடுத்ததோடு பழையன் கொண்டு வந்த தேரையும் பழுது பார்த்து பயணத்தின் போது தேவைப்படும் உணவையும் சேகரித்து வைத்தான்.

இதற்கிடையில் நன்னனின் மயக்கம் தெளிந்தது. கண் விழித்தவன் திருதிருவென்று விழித்தான். கண் சரிவர தெரியாமலிருக்கவே ''நான் எங்கிருக்கிறேன்?'' என்று முணுமுணுத்தான்.

'நரகத்தில் இருக்கிறாய். கண்ணைக் கசக்கி விட்டுப் பார் தெரியும்' என்று இடிபோலச் சொன்னான் டைரியஸ்.

நன்னனும் அவ்வாறே செய்துவிட்டு நிமிர்ந்து பார்த்த போது சாட்சாத் யமனைப்போல் டைரியஸ் அமர்ந்திருப் பதை அறிந்ததும் தானிருப்பது நரகம்தான் என்று கருதி யவனாய் ''வேண்டாம் யமதர்மா. வேண்டாம். என்னை விட்டுவிடு' என்று அலறினான்.

இதைக் கேட்டு டைரியஸ் உட்பட அனைவருமே சிரித்தபோதுதான் தானிருக்கும் இடம் தெளிவாகத் தெரிந்தது நன்னனுக்கு. இரண்டு தூண்கள் போல் அமர்ந்திருந்த அவர்களுக்கிடையே புழு போல் சிக்கித் தவித்தான் அவன். அவன் மனம் திக்பிரமையடைந்து கிடந்தது. நடந்து போன நிகழ்ச்சிகளை ஒருமுறை எண்ணிப் பார்த்தபோது கிலி உண்டாயிற்று அவனுக்கு. அந்த கிலியில் 'தான் எப்படி இன்னும் உயிரோடு இருக்கிறோம்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்ளவும் செய்தான்.

தேரில் இருந்த பழையன் மின்னலைப் போல் குறுவாளை வீசிவிட்டு தன்னையும் இழுத்துக் கொண்டு வேங்கையைப் போல் சேர வீரர்கள் மேல் பாய்ந்து போரிட்டதை எண்ணிப் பார்த்த அவனுக்கு 'இப்படியும் நடக்குமா?' என்று தோன்றியது. கற்பனையில் மட்டுமே நடக்கக்கூடும் என்று கருதத்தகுந்த காரியம் கண் முன்னால் நடந்ததை நம்பமுடியவில்லை அவனால். அதோடு பழையன் தன் சரீரத்தை அத்தனை அனாவசியமாக இழுத்துக் கொண்டு பிடியை விடாமல் புரட்டி எடுத்தபடி போரிட்டதை நினைத்தபோது 'இவன் மனிதனே அல்ல' என்று தீர்மானிக்க வேண்டியதாயிற்று.

பழையனைப் பற்றி எண்ணிப் பேதலித்த அவன் எதிரேயிருந்த கொள்ளையர்களையும் அவர்களுக்குப் பக்கத்தில் படியூர் செல்வங்களைத் தாங்கிய பெரும் இரும்பு வண்டிகளையும் பார்த்தான். குடல் எழும்பி தொண்டைக்கு வந்துவிட்ட மாதிரி இருந்தது அவனுக்கு. தன் உயிரே போவது போலவும், சேரநாட்டின் எதிர் காலமே போவது போலவும் இருந்தது அது. 'இந்தப் பெரும் நஷ்டத்திற்கு சேரன் இரும்பொறையிடம் என்ன பதில் சொல்லப் போகிறோம்?' என்ற கேள்வி வேறு எழுந்து அவனைக் கலக்கியது.

இதற்கிடையில் டைரியஸும் கொள்ளைக்காரர்களும் படைத் தளபதியிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு போனார்கள். அதைக் கண்டு 'டைரியஸ், நீ செய்வது உனக்கு நல்லதல்ல. சேர நாட்டின் கௌரவத்தையே எடுத்துச் செல்கிறாய். இது உன்னைச் சும்மா விடாது'- என்று இரைந்ததும் டைரியஸ், உடனடியாக பதிலேதும் பேசவில்லை.



புரவியில் இருந்தபடி அவனை எட்டி உதைத்து விட்டு 'உன்னைப் போன்ற முட்டாளிடம் நம்பிக்கை வைத்திருக்கிறானே மன்னன், அதைத் தவிர வேறு அகௌரவம் என்ன இருக்கிறது சேர நாட்டிற்கு? பிழைத்துப்போ'... என்று ஏசிவிட்டு அகன்றான்.

அவன் போனபின் பேச முற்பட்ட பழையன் 'என்வாக்கை காப்பாற்றிவிட்டேன் படியூர் தலைவரே. படியூர் செல்வங்களை ஒப்படைத்து விட்டேன் சொன்னது போல். அது மட்டுமல்ல. சந்தனக் கோட்டை காவல் வீரன் ஒருவனிடம் நானாகத் தப்ப மாட்டேன் என்று சொன்னதற்கு ஏற்ப நானாகத் தப்பாமல் உன்னை வைத்தே வெளியேறினேன். இனியும் நீதான் எனக்கு உதவி செய்யப் போகிறாய்''- என்று விஷமமாயும் நிதானமாயும் சொன்னான்.

நன்னனுக்கு வாழ்க்கையே கசந்தது. 'இன்னுமென்ன என் உதவி உனக்கு?'- என்று அலுப்போடு கேட்டான்.

'இனிமேல்தான் உன் பங்கும் பொறுப்பும் அதிகமாகிறது. நாமிப்போது தேரில் மதுரைக்குச் செல்கிறோம். எந்தக் கோட்டையிலிருந்து என்னை வெளியேற்றினாயோ அந்தக் கோட்டைக்கு நீயே இருந்து வழியனுப்பிவை. உன் தவறுக்கு நீயே பரிகாரம் செய்துவிடு'- என்று கூறிய பழையன் கடுமையான குரலில் 'நன்னா ஒன்று நினைவில் இருக்கட்டும். மதுரையை நெருங்கிய பின் பழையபடி விஷமத்தில் ஈடுபட்டாயென்றால் பலமுறை உன் உயிரைக் காத்த நான் பாரபட்சமின்றி வெட்டி வையையில் எறிந்து விடுவேன். ஞாபகம் இருக்கட்டும்' என்று இடித்துரைத்தான்.

நன்னனுக்கு உலகமே இருண்ட மாதிரி இருந்தது. தன் கதி இப்படியா ஆக வேண்டும் என்று தன்னை மிகவும் நொந்து கொண்டான்.

பிறகு தேரில் அவர்களது பயணம் தொடர்ந்தது. பயணத்திற்கு இடையில் தேரை பொதினிக்குச் செலுத்தி மேகலையைப் பற்றி விசாரித்துக் கொண்டான் பழையன். மேகலை மதுரைக்குச் சென்றுவிட்டாள் என்பதை அறிந்த பின் அன்று மாலைவரை அங்கேயே இருந்துவிட்டு பின் பாசறை இருந்த மேற்குப் பக்கமாய் போகாமல் வடக்குப் புறமாய் வையையாற்றுக் கரைப்பக்கமாகவே சென்றது தேர். அங்கிருந்த திருமருத முன்துறையருகே வந்ததும் தேரை நிறுத்தினான் பழையன். அடுத்த வினாடியே அவனது தேரை சேர வீரர்கள் சூழ்ந்து கொண்டார்கள். 'உயிரின் மீது ஆசையிருந்தால் வாட்களைப் போட்டு விட்டு மெதுவாக இரண்டு பேரும் இறங்குங்கள். தவறினால் நரகத்தை இங்கேயே பார்க்கும்படி இருக்கும்'- என்றான் அவர்களில் ஒருவன்.

கோட்டையை முற்றுகையிட்டிருக்கும் சேர வீரர்கள் படைசூழாமல் இருக்கும் வடக்குப்புறத்தில் ஆற்றங் கரையை அவ்வப்போது கண்காணிக்கிறார்கள் என்பதையும் அவர்களில் சிலரிடம் தற்போது சிக்கியிருக்கிறோம் என்பதையும் உணர்ந்து கொண்ட பழையன் நன்னனின் இடையில் பழையபடி அழுத்திக் கொண்டிருந்ததை மேலும் சற்று அழுத்திக் கொண்டு. 'முட்டாள். தேரில் வந்திருப்பது யாரென்று பார்த்து விட்டுப் பேசு. உளறியதற்காக உன்வாயை வையையில் போய் கழுவிக் கொள்'-



இதைக் கேட்டதுமே முன்துறை மாடத்திலிருந்த பந்தம் ஒன்றை எடுத்து உயர்த்தி ஒரு வீரன் தேரில் நோக்கியதும், 'தெரிந்ததா? படியூர் தலைவர் சேரமானின் போர்த்தூதுவர், சந்தனக் கோட்டை அதிபதி விஜயமாகியிருக்கிறார்'- என்றான் பழையன்.

'இவரை நாங்கள் பார்த்ததில்லை'- என்றான் ஒரு வீரன்.

'அதற்காக இவர் ஒவ்வொருவரிடமும் வந்து காட்சி தரவேண்டும் என்கிறாயா? போங்கள். போய் உங்கள் வேலையைப் பாருங்கள்' என்றான் பழையன்.

வீரன் அசரவில்லை.

'ஐயா எங்கள் வேலையைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறோம்' என்றான்.

'சேரமான் போர்த்தூதுவரை மரியாதையின்றி கேள்வி கேட்பதுதான் உங்கள் வேலையா?' என்று கேட்டான் பழையன்.

'ஐயா, இவர் சேரமான் போர்த்தூதுவர் என்பதற்கு அத்தாட்சி இல்லையே?'- கேட்டான் வீரன்.

'இதோ பார் இப்போதாவது நம்புகிறாயா?'- என்று கூறிய. பழையன் நன்னனின் கைவிரலைச் சுட்டிக் காட்டினான். அதில் பளபளத்த நீலக்கல் மோதிரத்தைக் கண்டபின் வீரர்களுக்குச் சந்தேகம் தீர்ந்தது. இருப்பினும் ஒருவன் 'தலைவர் பேசமாட்டாரா?' என்று ஒரு கேள்வியைக் கேட்டதும்'-

'நான் பேசினால்தான் நம்புவாயா? முட்டாள். யார் உனக்கு இந்த வேலையை கொடுத்தது? போய் உங்கள் வேலையைப் பாருங்கள்'... என்று குறுக்கிட்டு இரைந்தான் நன்னன்.

'இன்னும் அரை நாழிகையில் தலைவர் வந்து விடுவார். மன்னரிடம் சொல்லுங்கள்' - என்றான் பழையன்.

இதற்குபின் அங்கு நிற்கவோ கேள்வி கேட்கவோ இடமில்லாத நிலையில் வீரர்கள் சென்றார்கள் அப்பகுதியைவிட்டு.

அவர்கள் போனபின் நன்னனின் முத்திரை மோதிரத்தை வாங்கிக்கொண்டான் பழையன். பிறகு தேரோட்டியை அழைத்து திருமருதத்துறையில் இருந்த பந்தம் ஒன்றை எடுத்து கோட்டையை நோக்கி இருமுறை ஆட்டிவிட்டு வானத்தில் தூக்கி எறியும்படி சொன்னான். அது போல் இரண்டுமுறை செய்யும்படி சொன்னான். தேரோட்டியும் அவ்வாறே செய்து பந்தங்களை அசைத்து வானத்தில் எறிய அவை ஆற்றில் வந்து விழுந்தன.

அதற்குப் பின் தேரோட்டியை அங்கிருந்து போகும்படி சொன்னான் படைத்தலைவன்.

பிறகு நன்னனுடன் இறங்கி ஆற்றங்கரைக்கு வந்தான். அங்கே படகுகள் பல நின்றிருந்தன. யானைமுகம் கொண்டும், குதிரை முகங்கொண்டும், சிங்கமுகம் கொண்டுமாய் பற்பல விதமான படகுகள் கட்டிப் போடப்பட்டிருந்தன. அவற்றில் அரிமுக அம்பியில் இருவரும் ஏறினார்கள். படைத்தலைவனின் நடவடிக்கை



ஒவ்வொன்றும் பெருந்திகிலை உண்டாக்கியிருந்தன நன்னனிடம். குழப்பம் மிகுந்தவனாய் பயணம் செய்தான். படகு சிறிது தூரம் சென்றதும் 'நன்னா' என்றழைத்த பழையன் 'நன்றாகக் கேட்டுக் கொள். சதியாலும் வெறும் பொறாமையாலும் பேராசையாலும் பேரரசுகளை வீழ்த்த முடியாது என்று போய்ச் சொல் சேர சோழ மன்னர்களிடம். பாண்டிய மன்னரை சிறுமைப்படுத்த எண்ணிச் சின்னாபின்னப்பட வேண்டாம் என்று சொல்' என்று கூறி ஆற்றில் அவனைத் தள்ளிவிட்டுத் தானும் குதித்து நீரில் மறைந்தான்.

⁂ ⁂ ⁂

இவ்வாறு பாண்டியர் படைத்தலைவனை மிகவும் பத்திரமாகக் கொண்டு வந்துவிட்ட பரிதாபமான கதையை சேரன் பாசறையில் சேரமன்னன் யானைக்கண் சேயிடம் ஈரம் சொட்டச் சொட்ட வந்து பைத்தியக்காரனைப் போல் நன்னன் சொல்லி முடித்ததும் ''யாரங்கே இவனை உடனே என் கண்ணெதிரில் கழுவேற்றுங்கள்'' என்று கட்டளையிட்டான் சேரமன்னன்.

அடுத்த கணம் அவன் காலில் விழுந்து இறைஞ்சினான் நன்னன்.

'மன்னவா, பிரபோ! என்னை மன்னித்து விடுங்கள். என்னைக் காப்பாற்றுங்கள்.'

சேரனின் கோபம் பெரிதாயிற்று. 'உன்னை ஏன் காப்பாற்ற வேண்டும்? எல்லா திட்டங்களையும் கவிழ்த்துவிட்ட உனக்குக் கழுகொம்புதான் ஏற்றது' என்று சீறினான்.

'மன்னவா, அவன்... அந்தப் பழையன் பெரும் சாகசக் காரனாய் இருக்கிறான். அதனால்தான் ஏமாந்து விட்டேன்' புலம்பினான் நன்னன்.

''முட்டாள். அவன் சாகசக்காரன் என்பதால்தானே அவனை அகற்றினேன்? அவனைப் போய் கொண்டு போன மாதிரியே கொண்டு வந்து விட்டிருக்கிறாயே?'- இரைந்தான் மன்னன்.

'பிரபோ, என் உயிரைப் போக்கிவிடுவதாக மிரட்டியதால் வேறு வழியில்லாமல் போய்விட்டது எனக்கு. மன்னித்துவிடுங்கள்'-

'நீ இருந்து என்ன சாதிக்கப் போகிறாய்? உன் உயிர் அப்படி என்ன உயர்ந்ததென்று எண்ணி அவனுக்கு இசைந்தாய்? நீ செத்தால்தான் என்ன குடியா முழுகிவிடும்?'-

'மன்னவா, பழையனைத் தப்பவிட்டதற்கான பரிகாரத்தை நானே செய்கிறேன். ஏற்கெனவே செய்துவிட்டேன். இன்னேரம் நடந்தே இருக்கும். போரே நின்றாலும் நிற்கும்'-

'மடையா என்ன உளறுகிறாய்?'- சீறினான் மன்னன்.

'போர் நிற்குமா? எப்படி? மந்திரத்தாலா?'- என்று புதுக்குரல் ஒன்று அங்கே பிரவேசித்தது. அதையடுத்து பிரவேசித்தான் புதிய மனிதன் ஒருவன். அவனைக் கண்டதும் இருமன்னர்களுமே எழுந்து வரவேற்றார்கள்.

◈◈◈

முரசு இருபத்தாறு

## பராசரன்

சேரமன்னனும் சோழ மன்னனும் ஒரு சேர எழுந்து நின்று மரியாதை செலுத்திய மனிதன் பெரும் அரசகுலத்தவனல்ல. வெறும் அந்தணன்தான். ஆனால் பெரும் தோரணை அவனுக்கிருந்தது. பிராயம் எழுபதைக் கடந்திருந்தான். ஆனால் முதுமைக்குரிய சோர்வோ தள்ளாமையோ அவனிடம் இல்லை. குடுமி தொங்கிய தலையும் திருநீறு துலங்கும் நெற்றியும், முப்புரி நூல் தவழும் மார்பும், மகர குண்டலங்கள் பூண்ட காதுகளுமாய் காட்சியளித்த அம்மனிதன் செக்கச் செவேலென்ற நிறத்தைப் பெற்றிருந்தான். வெண் பட்டாடை அணிந்து மார்பின் குறுக்கே பச்சை நிறப் பட்டுப் போர்வையை சார்த்திக் கொண்டு பெரிய தீட்சண்யமான கண்களுடன் அவன் வந்து நின்றவிதம் அர்த்த சாஸ்திர விற்பன்னரான சாணக்கியரை நினைவுபடுத்தியது. அவனது தோரணை ஒரு வித தனி அந்தஸ்தை அளித்ததோடு மன்னர் இருவருக்கும் சிறிதும் அஞ்சாதவன் என்பதையும் உணர்த்துவதாய் இருந்தது. உள்ளே சிறிது நேரத்தில் கொண்டு வந்து போடப்பட்ட மர ஆசனத்தில் அமர்ந்து கொண்டு இரு மன்னர்களையும் வாழ்த்தினான் அந்த மனிதன்.

''சரியான நேரத்தில் வந்தீர்கள்! உங்களிடமிருந்து செய்தி வரவில்லையே என்று சற்று கவலைப்பட்டுக்

கொண்டிருந்தோம். இன்றிரவு போரைத் துவக்கி விட திட்டமும் தீட்டப்பட்ட நிலையில் நீங்கள் வராமலிருந்தால் பெரும் குறையாகவே இருக்கும். சென்று வந்த சேதி என்ன?''- வினயமாக வினவினான் சேரன் இரும்பொறை.

சேர நாட்டுப் பெருவேந்தர்களான நெடுஞ் சேரலாதன், பல்யானைச் செல்கெழு குட்டுவன், செல்வக் கடுங்கோ வாழியாதன் ஆகிய மூவரது காலத்திலும் வாழ்ந்து வேதம் ஓதுவதில் வல்லவனாய்த் திகழ்ந்து, அவர்களது அவையில் அந்தணர்களுடன் வேத விவாதம் செய்து வாகை சூடி மூன்று வேந்தர்களாலும் பாராட்டையும் பரிசையும் பெற்று மிகவும் மதிக்கப் பட்டவனாய் இருந்த பராசரன்* என்னும் அந்தணரான அம்மனிதர் சேரனின் கேள்வியையடுத்துப் புன்முறுவல் கொண்டார்.

வேத நூல் வித்தகரான அவர் சேரநாட்டு மன்னர்கள் மட்டுமின்றிச் சோழராலும் பாண்டியராலும் கூட மிகவும் மதிக்கப்பட்டார். அறிவும் திறமையும் அவரை ஒரு மன்னனுக்கோ மரபுக்கோ சொந்தம் கொண்டாட முடியாமல் தமிழகம் முழுவதற்குமே பொதுவானவராய் வைத்திருந்ததால் அனைவருமே அவரிடம் நட்புரிமை பாராட்டினர். பல்வேறு மன்னர்களுக்கிடையில் அவர் சமாதான தேவதையாயும் தூதுவராயும் விளங்கினார். அந்த விதத்தில் தங்கள் தாயாதியரான சேர நாட்டு மன்னனிடம் தூதனுப்பி பதில் செய்திக்காகக்

* கொங்கு நாட்டு வரலாறு By மயிலை. சீனி வேங்கடசாமி. பக்கம் 84-85



காத்திருந்தான். அவரைத் தற்போது கண்டதும் அதுபற்றி வினவியபோது புன் முறுவல்கொண்ட அவர் ''சேரமன்னா, தூதுச் செய்தி இனி எப்படி இருந்தால் என்ன? நான் பாசறைக்குள் நுழைந்த போது போர் நின்றாலும் நிற்கும் என்று யாரோ சொல்லக் கேட்டேனே?'' என்றார்.

''அது இந்த முட்டாள் உளறிய வார்த்தைகள். பொருட்படுத்த வேண்டாம்'' என்றான் இரும்பொறை.

''யாரிவன்? இவன் உடலெல்லாம் ஏன் காயங்களாக இருக்கின்றன?''

''இவன் படியூர் நிர்வாகி. சந்தனக் கோட்டையின் தலைவனாக நியமித்தேன். அதற்குப் பரிசாக அதில் சிறை வைத்திருந்த பழையனை தப்ப விட்டுவிட்டு அவனிடம் புண்பட்டு வந்திருக்கிறான் மடையன்?-''

''பழையனா? பாண்டியப் படைத்தலைவனா? அவன் ஏன் சிறைப்பட்டான்?''-

''நாங்கள் சிறையெடுத்தோம், போரிலிருந்து அவனை அப்புறப்படுத்த''-

''ஏன்?''-

'பராசரரே, அவனிருந்தால் போர் சிரமமாகி விடும்'

''சேரனின் வீரம் என்னாயிற்று? தனி ஒரு மனிதனுக்கு அஞ்சுகிறார்களா கொங்கு வீரர்கள்?''

''நடந்தது போகட்டும். அதோடு அகற்றப்பட்ட பழையன் இந்த முட்டாளாலேயே சேர்க்கப்பட்டு விட்டான். இனி அதைப் பற்றிய பேச்சேதற்கு?''

''நல்லதாகப் போயிற்று. ஒருவனுக்கு அஞ்சி அவனைச் சிறை வைத்துவிட்டு நீ போரிட்டு வெற்றி பெற்றிருந்தாலும் அது பாராட்டக்கூடியதாய் இருந்திருக்காது''

''போகட்டும் ஐயா. சேரமன்னன் கோதை மார்பனிடம் தூது போனீர்களே என்னாயிற்று? சோழ மன்னரின் ராஜசூய யாகத்திற்கு மதிப்பளித்தானா? அவரை அங்கீகரிக்கச் சம்மதித்தானா? அவன் எதிர்ப்பு நீங்கியதா?''

''இல்லை மன்னா. அவன் சம்மதிக்கவில்லை. 'சம்மதமானால் ராச சூயத்தை நான் நடத்துகிறேன். கொங்கு சேரனையும் சோழனையும் எனக்குப் பணியச் சொல்லுங்கள்' என்றான் கோதை மார்பன்''-

''இது எதிர்பார்த்ததுதான். ஆமாம், பாண்டியனைப் பற்றி அவன் அபிப்ராயம் என்ன?''-

''அவன் அனாவசியமாக அபிப்ராயங்களைச் சொல்வதில்லை''-

''நல்லது. பாண்டியனை முறியடித்த கையோடு வஞ்சிக்கும் போக வேண்டியதுதான்'- என்று சொல்லிக் கொண்ட யானைக்கண்சேய், 'தங்கள் வரவாலும் இந்த முட்டாளின் செய்தியாலும் என் திட்டம் மாறிவிட்டது பராசரரே. இன்று இரவிலேயே துவக்குவதாக இருந்த போரை ஒத்திப்போட வேண்டியதாகிறது. போர்த் திட்டம் மாற வேண்டியிருக்கிறது. இதற்கிடையில் சம்பிரதாயம் ஒன்றிருக்கிறது. அதைத் தாங்கள்தான் நிறைவேற்ற வேண்டும்'' என்றான்.



'எதைச் சொல்கிறாய்?'-

'போருக்கு முன்னால் தூதனுப்பி செய்தியறிவிப்பது சம்பிரதாயம். நீங்கள் பாண்டியனுக்குத் தூதாக என் பொருட்டுச் சென்று வரவேண்டும்'-

'இன்னும் நீ அவனுக்குத் தெரிவிக்கவில்லையா? ஏன்?'-

'அவன் சிறுவன்'-

இதைக் கேட்டு மீண்டும் புன்முறுவல் கொண்ட பராசரர், 'அவன்தான் சிறுவனாயிற்றே, பின் ஏன் நீங்கள் இருவரும் வந்திருக்கிறீர்கள்? ஒருவர் போதாதா? ஒருவர் தான் ஏன்? உன் படைத்தளபதியை அனுப்பியிருந்தால் போதுமல்லவா?' என்று கேட்டார்.

'ஐயா, பாண்டியனிடம் தூதனுப்பினால் அதை அவன் ஒப்புக் கொள்ளப் போவதில்லை.'

'பின் எதற்காகத் தூது? சம்பிரதாயம்?'-

''பராசரரே, இந்தப்போர் தூது அனுப்பினாலும் சரி, அனுப்பாவிட்டாலும் சரி - பாண்டியன் ஒப்புக் கொண்டாலும் சரி, மறுத்தாலும் சரி - நிச்சயம் நடந்தே தீரும். இருந்தாலும் பலமான காரணம் ஒன்றை அமைத்துக் கொண்டால்தான் நாளை நம்மைச் சரித்திரம் பழிக்காமல் இருக்கும். அந்தக் காரணத்தை எதற்கும் பேருக்காவது பாண்டியனுக்குத் தெரியப்படுத்திவிட விரும்புகிறேன் நான்.'-

'தெரிந்த காரணம் தானே?'-

'இல்லை. புதுக்காரணம் ஒன்றை உருவாக்கியிருக்கிறேன்.'

'புதுக்காரணமா?'

'ஐயா, சோழரின் ராஜசூயத்தைக் காரணமாக வைத்திருந்தேன். அதைக் கோதை மார்பன் மறுத்த மாதிரித்தான் நெடுஞ்செழியனும் மறுக்கப் போகிறான். அதைக் காட்டிப் போர் புரிவதில் சிறப்பேது? ஆகவேதான் புதுக்காரணத்தைக் கண்டுபிடித்திருக்கிறேன். இதற்காக நான் செய்யும் போர் பழித்தற்குரியதாகாது'-

'அப்படியானால் இப்போர் சோழனின் ராஜசூய யாகத்திற்காக இல்லையா?'-

'அடிப்படை அதுதான். அதில் மாற்றமில்லை. பாண்டியன் விஷயத்தில் மட்டுமே சற்று மாற்றம். சிறுவனிடம் போய் யாகத்தைக் காட்டி மறுப்பைப் பெற்று போர் புரிவதைவிட புதுக்காரணத்திற்காகப் போர் புரிந்தால் நிச்சயமாய் அது சிறப்பானதாகவே இருக்கும்'-என்று கூறிய இரும்பொறை புதுக்காரணத்தையும் சொன்னான்.

அதைக் கேட்டும் பராசரரின் முகம் சுருங்கியது. 'இது நியாயமில்லை'- என்றார் சங்கடத்துடன்.

'போரே நியாயமற்றதுதான் பராசரரே'-என்றான் சோழன்.

'போர் அரச மரபு. ஆனால் பொய் அப்படிப் பட்டதல்ல'-சுட்டிக் காட்டினார் பராசரர்.



'அரச காரியங்களில் எல்லாமே அடக்கம் என்பது வேத விற்பன்னரான உங்களுக்குத் தெரியாதா? பொய்யைவிடக் கொடிய நிகழ்ச்சிகள் அரசியலில் நடந்ததில்லையா?'

பராசரர் சேரனை அருவருப்புடன் பார்த்துவிட்டு 'பெருநற்கிள்ளி, உன் அபிப்ராயம் என்ன?' என்று சோழ மன்னனிடம் கேட்டார்.

'ராஜசூயம் நடத்த வேண்டும் என்பதுதான் என் லட்சியம் ஐயா. அதிலிருந்துச் சிறிது மாற்றமில்லை'-என்றான் பெருநற்கிள்ளி.

'முடிவுதான் முக்கியம். வழிமுறைகள் அல்ல. அப்படித்தானே? ஆகா! பொய்யைச் சுமக்கும் பணி எனக்கா வரவேண்டும்? சரி, உண்மைக்காரணமாய் இருந்தால் உங்கள் சார்பில் நானே வாதாடுவேன். ஆனால் இந்தப் பொய்க் காரணத்தை உங்கள் செய்தியாய் அறிவிப்பேன். அவ்வளவுதான்' என்றார் பாரசரர்.

'அது போதும்'-என்றான் சேரமன்னன்.

பொழுது விடிந்தபின் தூதனுப்புவது என்று முடிவான பின் பராசரர் இரவைக் கழிப்பதற்கான வசதிகளைத் தனிக்கூடாரம் ஒன்று அமைத்து செய்து தந்தான் சேரன்.

பிறகு நன்னனை அழைத்து 'எதோ உளறினாயே, என்ன அது?' என்று விசாரித்தான் இரும்பொறை.

''மன்னவா, மதுரைக் கோட்டைக்குள் நம்மவள் ஒருத்தி இருக்கிறாள். சமயம் பார்த்து மன்னனைத் தீர்த்து விட அவளுக்கு உத்திரவிட்டிருக்கிறேன்''- என்றான் நன்னன்.

''போர் நாளைக்கு துவங்கப் போகிறது. இந்த நேரம் வரை மன்னன் மாண்டு போனதாகச் செய்தி இல்லை. இனி எப்போது உன் உத்தரவு நிறைவேறப் போகிறது முட்டாள்?''-

''கோபம் வேண்டாம் பிரபு. உள்ளே இருப்பவள் யார் தெரியுமா? கருவூர் கணிகை விழியழகி. நம் வேண்மாட அரண்மனையில் இருப்பவள்''-

இதைக் கேட்டு உண்மையிலேயே வியந்த சேர மன்னன் 'அவளா'- என்றான்.

''ஆம் மன்னவா. அவள் திறமையைப் பற்றி உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை. மன்னனைக் கொல்ல வேண்டும் என்பது லட்சியம். முடியாமல் போனால் முக்கியஸ்தர்களைக் கொல்வது கொள்கை. அதற்கும் வழியில்லை என்றால் கணிசமான நஷ்டத்தையாவது ஏற்படுத்த வேண்டும் என்பது கட்டளை. இதில் எது நிறைவேறினாலும் நமக்கு லாபம் தான்''-

சேரமன்னன் உண்மையிலேயே இதைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தான். கருவூர் கணிகையும் பேரழகியும் சாகசக்காரியுமான விழியழகியின் திறமையை அவன் அறிந்திருந்தான். ஏற்கெனவே அவள் பல அரசியல் லாபங்களை அவனுக்கு ஈட்டித் தந்திருந்தாள். அவளைத் தான் மறந்துவிட்ட நிலையில் நன்னன் ஞாபகம் வைத்திருந்து நல்ல வேளையாகப் பணியில் இறக்கியிருப்பதை எண்ணி ''பரவாயில்லை. நன்னன் முழு முட்டாளில்லை. அரை முட்டாள்தான். என்று



சொல்லிக் கொண்டு, ''நன்னா, நீ செய்துள்ள இக்காரியம் நல்லபடியாக முடியவேண்டும். இல்லையென்றால் இப்போது மன்னித்த உன்னை அப்போது நிச்சயமாகக் கழுவேற்றுவேன்'' என்று கூறிவிட்டு தலைகீழாகி விட்ட நிலையைச் சற்று யோசிக்கத் துவங்கினான்.

அப்போது சோழ மன்னன் குறுக்கிட்டு ''சேர மன்னா, போர்த்திட்டத்தை மாற்றி விட்டதாகச் சொன்னாயே பராசரரிடம். உன் நோக்கம்தான் என்ன?''- என்று கேட்டான்.

அந்த நேரத்தில் தகடூர் தலைவனான எழினியும் உள்ளே பிரவேசித்து 'போர்த்திட்டத்தை மாற்றி விட்டீர்களாமே ஏன்? எல்லாம் ஆயத்தமான நிலையிலா மாற்றம்? என்னாயிற்று?'' என்று வினவினான்.

சேர மன்னனிடம் பெருமூச்செறிந்துவிட்டு 'சோழரே, என் திட்டமும் எழினியின் திட்டமும் பழையன் இல்லாத நிலைக்களத்தை வைத்துத் தீட்டப்பட்டவை. தற்போது நிலைக்களம் மாறிவிட்டது. உள்ளே பழையன் இருக்கிறான். எல்லாவிதத்திலும் அவனால் நம் முயற்சிகளைக் குலைக்க முடியும். அவனிருக்கும் பட்சத்தில் நம் திட்டம் இன்றிரவு நடக்குமானால் பேரழிவு உண்டாகும்' என்றான்.

'தாமதிப்பதில்தான் பேரழிவு இருக்கிறது. உடனடியாக நம் திட்டம் நிறைவேறினால் ஆதாயம் நிச்சயம் கிடைக்கும். நமது தாக்குதலை பாண்டியர் எதிர்பாராத நேரமிது. பழையனும் இதற்குள் ஆயத்தமாகி விட முடியாது. ஆகவே திட்டத்தைக் கைவிடாமல் நிறைவேற்றுவோம்'- என்றான் எழினி.

'வெறும் ஆர்வத்தால் வெற்றி கிட்டிவிடாது எழினி, பழையன் வெறும் கையோடு வந்திருக்கமாட்டான். திட்டத்தோடுதான் வந்திருப்பான். அதோடு பராசரர் வந்த பின் புது யோசனை பிறந்தது எனக்கு. ஆகவேதான் திட்டத்தை மாற்றிக் கொண்டேன். காலையில் அவர் தூது சென்று வரட்டும். புதுத்திட்டத்தைப் பிறகு தீட்டுவோம்.'-

சோழ மன்னன் அரைதிருப்தியோடு இருந்தான். எனவே 'சேர மன்னனா, நமது இலட்சியமே இந்த ஆரம்ப வெற்றியில் தான் இருக்கிறது. இதை யாரும் மறந்துவிடக் கூடாது'- என்றான்.

'அதற்குப் பாதகம் வந்துவிடவில்லை சோழரே. உங்களுக்கு உதவ மனமுவந்து வந்த நான் பின்வாங்கிவிட மாட்டேன். என்னை நம்புங்கள். போர் நடவடிக்கையில் இறங்கிவிட்ட நிலையில் கொங்கு நாட்டின் முதுகெலும்பான படியூர் செல்வங்கள் அனைத்தையும் நன்னனால் இழந்த நிலையிலும் இங்கு நான் தோள் கொடுக்க நிற்கிறேனே, இது உங்களுக்கு அவநம்பிக்கையையா கொடுக்கிறது?' என்று உருக்கமாய் கேட்டான் யானைக்கண்சேய்.

அந்நேரத்தில் குறுக்கிட்ட நன்னன், 'ஐயா, பழையன் மட்டும் ஆபத்தானவன் அல்ல. கோட்டையும் மிக ஆபத்தானது. மதிலில் உள்ள பொறிகள் யவனர்களால் அமைக்கப்பட்டது. அவற்றை இயக்குபவர்களும் அவர்கள்தான். மதில்களின் காவல் அவர்கள் பொறுப்பில் இருக்கிறது. அவர்களது போர்முறை மேல்நாட்டு போர் முறையைச் சார்ந்தது. முறியடிப்பது எளிதல்ல. அதோடு



கோட்டையின் வெளிமதிலை மட்டும் கணக்கில் கொள்ளாதீர்கள். உள் மதில் ஒன்றுண்டு'-என்றான்.

அவனது தகவல் புதியதாய் இருக்கவே 'இது உண்மையா?'- என்று அனைவருமே ஒரு சேரக் கேட்டார்கள்.

அதற்கு பதில் சொல்வது போல அந்த அர்த்தராத்திரியில் உலகமே அதிர்வது போல் பேரோசை ஒன்று கேட்டது.

◈◈◈

முரசு இருபத்தேழு

# தூதா? சூதா?

இரவு நேரத்தில் திடீரென பயங்கரமான பேரொலி கேட்டதும் குழம்பிப் போன பாசறைப் பிரமுகர்கள் கோட்டையை நோக்கினர். அங்கே உயர்ந்திருந்த காவல்கூடம் ஒன்றில் பலதீபங்கள் ஏற்றப்பட்டு பிரகாசமாயிருந்த மேடையொன்றின் மீது மிகப்பெரிய பேரிகையொன்று வைக்கப்பட்டு அதை ஐந்து பேர் சுற்றிலும் நின்று கொண்டு இடைவிடாமல் ஒலியெழுப்பினார்கள். சுற்றிலும் இருள் சூழ்ந்திருக்க, காவற்கூடம் மட்டுமே ஒளிவெள்ளத்தில் இருக்க அங்கே நடந்த இந்நிகழ்ச்சி ஏதோ அமானுஷ்ய காரியம் போலிருந்தது. முரசை ஒலித்த ஐந்து உருவங்களும் பிசாசு போல் தோன்றின. மலையொன்றைப்புரட்டி வந்து பேய்கள் ஒலி செய்வது போன்ற பிரமையை அளித்த அக்காட்சியைக் கண்டபின் குழம்பிப் போன சேரமன்னன் கோட்டையைப் பற்றி அறிந்தவனான நன்னனை நோக்கி 'இதென்ன?'- என்று கேட்டான்.

'பாண்டிய முரசு'-என்று அச்சத்துடன் வார்த்தைகளை உதிர்த்தான் நன்னன்.

'அப்படியொரு முரசு உண்டா? அதிலென்ன விசேஷம்? இந்த அர்த்த ராத்திரியில் ஏன் முழக்குகிறார்கள்?' கேட்டான் சேரமன்னன்.



''மன்னவா, அங்கே ஒலிக்கும் பஞ்சமுகப் பேரிகை பற்றி ஓரிரண்டு விஷயங்களைக் கேட்டிருக்கிறேனே தவிர ...மை எனக்குத் தெரியாது. அப்பேரிகை பாண்டியர்களால் மிகவும் கௌரவமான அடையாளமாய் கருதப்பட்ட ஒன்று. அதை யார் எப்போது எதற்காக நிர்மாணித்தார்கள் என்பது திட்டமாகத் தெரியாது. ஆனால் போர் நிச்சயமாகி விட்டால் இது முழக்கப்படும் என்றும் போர் அறிவிப்பிற்கான அதிகாரப்பூர்வமான அடையாளம் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறேன். பாண்டிய மன்னன் சற்றுமுன் வரை கூட நிச்சயமில்லாத நிலையில் இருந்திருக்கலாம். பழையன் போய்ச் சேர்ந்தவுடன் தெளிவுபெற்று போரை நிச்சயம் செய்து இப்பாண்டியர் பேரிகையை ஒலித்திருக்கலாம்'' என்றான் நன்னன்.

இதைக் கேட்டதும் ஏதோ நினைவிற்கு வந்தவனைப் போல் ''நன்னா, பழையன் உன்னைத் தள்ளிவிட்டு ஆற்றில் குதித்துவிட்டதாய்ச் சொன்னாயே- எந்த வழியாக கோட்டைக்குள் போயிருப்பான்? என்று கேட்டான் சேர மன்னன்.

''தெரியாது பிரபு, ஆற்றங்கரையில் இருந்தபடி பந்த அடையாளங்களைக் காட்டினான். ஒருவேளை அதைக் கொண்டு பாண்டியர்கள் யாரேனும் ஆற்றங்கரை ஓரத்தில் எங்கேனும் நூலேணியை இறக்கி மேலேற்றியிருக்கலாமோ என்னவோ?''-

''அப்படி அவன் ஏற முயன்றால் நமது கண்காணிப்புக் குழு அம்பெய்து கொன்றுவிடலாம் அல்லவா?''

'அது முடியாது மன்னவா. ஏனென்றால் ஆற்றுக்கு அக்கரையில் இருக்கும் போதே நமது கண்காணிப்புக்குழு வீரர்களை நாங்கள் இருவருமாக அதட்டிப் பேசி விரட்டி விட்டோம். அப்படியே வேறொரு குழுவினர் வந்தாலும் சரி மறுகரையையோ அதையொட்டிய மதிலில் நூலேணி இறக்கப்படுவதையோ கண்டாலும் இந்த கும்மிருட்டில் காணமுடியாது. குறிபார்த்து அம்பெய்வது கடினம். ஆற்றின் அகலம் கோட்டைப்பகுதியில் மிகவும் அகலம்.'

இந்த அளவிற்குத் தெளிவாகப் பேசும் நன்னன் பழையனிடம் எப்படி ஏமாந்தான் என்று கேட்டுக் கொண்ட சேர மன்னன் கோட்டையைப் பற்றி அவன் கூறிய தகவலின் விவரத்தையும் அறிந்து கொள்ள விரும்பி, 'சரி நன்னா. முரசு முழங்கினாலும் முழங்காவிட்டாலும் போர் நடைபெறுவது நிச்சயம். கோட்டைக்குள் உள்மதில் இருப்பதாகச் சொன்னாயே, அதன் விவரத்தைச் சொல்'... என்றான்.

'மன்னவா, வெளிமதிலுக்கு உள்ளே நூறடி தள்ளி உள் மதில்கள் நான்கு பக்கமும் இருக்கின்றன என்று கேள்விப்பட்டிருக்கிறேன். வெளி மதிலைப்போலவே உள் மதிலிலும் மாடங்கள், துளைகள், தளங்கள் ஆகியவை உண்டு. இரண்டு மதில்களுமே ஒரே நேரத்தில் இயங்கமுடியும். நாம் கோட்டைக் கதவுகளைத் தகர்த்து புயல்போல் உள்ளே நுழைந்தால் உள்மதிலிலிருந்து பயங்கரமான தாக்குதல் நடைபெறும். அதுவும் இரவு நேரத்தில் நாமப்படி நுழைந்தால் பாதுகாப்பான உள் மதில்களிலிருந்து சௌகரியமாக அவர்களால் தாக்கமுடியும். நாம் இருமதில்களுக்கும் இடையில் சிக்கி அழியத்தான் வேண்டும்'- என்று விளக்கிய நன்னன்



கடைசியாக 'மதில்கள் பலமானவை. அங்கே இயங்குபவர்கள் யவனர்கள். இது மிகவும் முக்கியம்'... என்று தெரிவித்தான்.

விவரங்களைக் கேட்டபின் எழினியின் பக்கமாகத் திரும்பிய சேரமன்னன் ''கேட்டாயா எழினி விவரங்களை? தற்செயலாகக் கிடைத்த இவ்விவரங்கள் எவ்வளவு முக்கியமானவை பார். நமது திட்டம் துவக்கப் பட்டிருந்தால் நன்னன் கூறிய அழிவுதானே நிச்சயம்? போர்க்காலங்களில் கடைசிவரை தகவல்கள் கிடைக்கும். ஆகவே நாம் அவசரப்படக் கூடாது'' என்று கூறினான். பிறகு அவர்கள் ஓய்வெடுக்கச் சென்றார்கள்.

மறுநாள் பராசரர் முறைப்படி அழைத்துச் செல்லப்பட்டார். புரவி வீரர்கள் இருவர் வெண்கொடி ஏந்திக்கொண்டு பக்கத்தில் வர சேரநாட்டு யானை ஒன்றின்மீது அம்பாரிகட்டி அதில் அமர்ந்தவண்ணம் கோட்டை வாசலை அடைந்தார். அவர் இன்னாரென காவலருக்கு அறிவிக்கப்பட்டது. அவரைப் பற்றி பாண்டிய நாட்டவரும் அறிந்தே இருந்ததால் வேறெதும் விசாரிக்காமல் கதவைத் திறந்து உள்ளே விட்டனர். அவர் அரண்மனைக்கு வருவதற்கு முன் மன்னனுக்குச் செய்தி அறிவிக்கப்பட்டது. அந்த நேரத்தில் அவை கூடியிருந்தது. அங்கே மன்னரின் குருநாதர் மாங்குடி மருதனார் இருந்தார். பாண்டியர் கோட்டைத் தளபதி அதுனையும் பூரண அரச உடையில் உபதளபதிகளும் இடம் பெற்றிருந்தார்கள். பழையன் மட்டும் இல்லை.

தூதுவரை உரிய மரியாதைகளுடன் அழைத்து வரும்படி சொல்லிய மன்னன் குருநாதரிடம் வினவினான்.

'குருநாதரே, படைத்தலைவர் சொன்ன விவரப்படி தூது எதுவும் அனுப்ப சேர மன்னன் விரும்பவில்லை என்றல்லவா அறிந்தோம்?'-

'உண்மைதான். பராசரனின் வரவு ஒருவேளை சேரனின் மனதை மாற்றியிருக்கலாம்.' என்றார் மாங்குடி மருதனார்.

'அதற்காக முற்றுகையை துவக்கிவிட்டுத் தூதனுப்புவது அறச்செயலாகி விடுமா? போரிடுவது என்று திட்டவட்டமாய் தீர்மானித்துக்கொண்டு போருக்காக இச்சம்பிரதாயத்தைச் செய்வது சரியானது தானா?'- சற்றே கோபமடைந்தவனாய்க் கேட்டான் மன்னன்.

'பொறு நெடுஞ்செழியா. பராசரர் வரட்டும். என்ன தான் சொல்கிறார் என்று பார்ப்போம்'-என்றார் புலவர்.

இதற்கிடையில் பராசரர் சிறப்பாக வரவேற்கப் பட்டார். அவ்வரவேற்பு அவருக்கே நம்பமுடியாத வியப்பாய் இருந்தது.

'வாருங்கள் மறையவரே. உமது வரவு எல்லோருக்கும் நல்லதாய் அமையட்டும்' என்றான் மன்னன்.

'நெடுஞ்செழியா, யாருக்குமில்லாத வரவேற்பு தூதுவனான எனக்கேன்?'- என்று தன் வியப்பை வெளிப்படையாகவே கேட்டார் பராசரர்.

'தங்களை வெறும் தூதுவராக மட்டும் நாங்கள் கருதவில்லை. என் பாட்டனார் மற்றும் தந்தையார் காலத்திலிருந்து அவர்களுக்கு அறிவுப் பாலூட்டிய பெருந்தகை நீங்கள். ஒருவகையில் இதோ இருக்கும் என் குருநாதர் மாங்குடி மருதனாரைப் போல் தாங்களும் என் குருநாதர். இவர் தமிழ்மொழி வித்தகரென்றால் தாங்கள் வடமொழி வித்தகர். இவ்விருமொழியும் பயிலும் நான் உங்கள் இருவரையுமே குருநாதர்களாகத்தான் கொள்கிறேன். அவர்களை வரவேற்பதிலும் வழியனுப்புவதிலும் சிறப்பு செய்வது இயற்கையானது தான்'-



இதைக் கேட்டு புன்முறுவல் கொண்ட பராசரர் மாங்குடி மருதனாரை நலம் விசாரித்துவிட்டு 'நக்கீரர் எங்கே?' என்று வினவினார். அவர் திருப்பரங்குன்றம் சென்றிருப்பது பற்றிக் கூறியதும் தன் பணியைத் துவக்கத் தீர்மானித்த வேதவித்தகர் 'நெடுஞ்செழியா நான் சேர சோழ மன்னர்களிடமிருந்து தூதாக வந்திருக்கிறேன்'- என்றார்.

'ஐயா, தூதுவராய் தாங்கள் வந்திருப்பது எங்கள் பாக்கியம்தான். அதேசமயம் இத்தூது உண்மையிலேயே தூதா அல்லது சூதா என்று யோசிக்க வேண்டிய துர்பாக்கியமும் எனக்கு வந்திருக்கிறது'- என்றான் மன்னன்.

'எனப்படி?'- கேட்டார் பராசரர்.

'மறையவரே, தூது என்பது படைகளை நகர்த்துவதற்கு முன் அனுப்பப்பட வேண்டிய காரியம். படைகளை நகர்த்துவதென்பது தூது பயனில்லாமல் போய்விட்டபின் நடக்க வேண்டிய காரியம். இதுதான் முறையான சம்பிரதாயங்கள் அறச்செயல்கள். ஆனால் தங்களை அனுப்பியுள்ள சேர சோழர்கள் படை நடத்தி முற்றுகையைத் துவக்கி போருக்கான ஏற்பாடுகள் அனைத்தையும் முடித்துவிட்டு தூது விடுக்கிறார்கள்.

இதுதான் தூதின் இலக்கணமா? இது அவர்களின் போர் நோக்கத்தைக் காட்டுவதா அல்லது போர் தடுப்பு நோக்கத்தைக் காட்டுவதா? எதற்கு இது அடையாளம்?'-

'பாண்டியா, சேர சோழர்களும் உன்னைப் போலவே அறநெறியைத்தான் பேசி என்னை அனுப்பி யிருக்கிறார்கள்'-

'அதென்ன பராசரரே? சொல்லுங்கள் தெரிந்து கொள்கிறோம்'-

'பாண்டியா, சேரமன்னன் ஏற்கனவே பலமுறை உனக்குத் தூதனுப்பி விட்டானாம். உன்னிடமிருந்து பதிலேதும் இல்லையாம்.'

'அப்படியா? என்ன காரணத்திற்காகத் தூதனுப்பப் பட்டதாம்?'

'நெடுஞ்செழியா, கொங்கு நாட்டிற்குச் சொந்தமான உம்பற்காட்டில் பாண்டியர்கள் சிலகாலமாய் ஊடுருவி யானைகளைக் களவாடியிருக்கிறார்களாம். உனது படை பலத்தைப் பெருக்குவதற்காக நீ இப்படிச் செய்வது ஒரு புறமிருந்தாலும் சேரர்களின் கௌரவச்சின்னங்களான யானைகளை களவாடியது சேரரின் கௌரவத்தையே களவாடியதாக நினைத்து அவற்றைத் திருப்பித் தந்து விட்டு இனி அது போன்ற களவில் ஈடுபடுவதில்லை என்று உறுதிமொழியளிக்கும்படி சேர மன்னன் விடுத்த தூதுச் செய்திகளை நீ புறக்கணித்து விட்டாயாம். எனவேதான் படையெடுத்திருக்கிறார்கள். எதற்கும் கடைசி கணத்திலாவது நீ நியாயப்படி நடந்து கொண்டால் போரை நிறுத்திக் கொள்ளலாம் என்று தூதனுப்பி யிருக்கிறார்கள். இதற்கு உன் பதிலென்ன?'-



இதைக் கேட்டு உரக்கச் சிரித்தான் நெடுஞ்செழியன். அவனப்படிச் சிரித்து அவையோர் பார்த்ததில்லை. அதே சமயம் காட்சிக்கு அது சிரிப்பாய் தோன்றியதே தவிர உண்மையில் அது இகழ்ச்சியின் வெளிப்பாடே என்பதை உணர்ந்துகொண்ட பராசரர் சங்கடப்பட்டார். இந்நிலையில் பேசினான் மன்னன்.

'பராசரரே, உங்கள் தூதின் முடிவு இப்போது புரிந்து விட்டதல்லவா? இத் தூது எத்தனை அர்த்தமற்றதென்பது தெரிந்துவிட்டதல்லவா? போர் நடத்தியே ஆக வேண்டும் என்று திட்டவட்டமாக முடிவுகட்டியவனைத் தவிர வேறு யாரால் இப்படியொரு கடைந்தெடுத்த பொய்யைக் காரணமாக்கித் தூதனுப்ப முடியும்? இப்படியொரு பொய் மூட்டையை வேதவித்தகரான தாங்களா சுமந்து வரவேண்டும்? இந்தப் பொய்யின் மூலம் எதை எதிர்பார்க்கிறார்கள் சேர சோழர்கள், யானைகளையா? அல்லது என் சரணாகதியையா? இந்தப் பொய்யைக் கேட்டபின் சேர நாட்டு யானைகளை உண்மையிலேயே நான் களவாடியிருக்கக் கூடாதா என்று கூடத் தோன்றுகிறது மறையவரே. களவைப் பற்றிப் பேச அருகதை வேண்டாமா? என் பாட்டனாரைப் பற்றித் தங்களுக்குத் தெரியும். குற்றம் நேர்ந்து விட்டது என்று தெரிந்து விட்டதும் கொற்றம் துறந்து கூற்றத்தின் வாய்ப்பட்ட பாண்டியரின் மீதா களவுப் பழி சுமத்துகிறான் சேரன்? இந்தப் பழிக்காகவே போரிடலாமே ஐயா?'

'பொய்யை நீங்கள் சுமந்து வந்த போதும் உண்மை உங்களுக்குத் தெரியாமல் இருந்திருக்காது. இந்தப் போர் ஏன் உருவானது என்பதற்கான காரணமே வேறு. சோழன்

நடத்த விரும்பும் ராஜசூயத்திற்காகத் தன்னைப் பெருவேந்தனாய் அனைவரும் அங்கீகரிக்க வேண்டும் என்ற ஆசையில் முயன்றான். பலர் அங்கீகரித்தார்கள். விடுபட்டது நானும் சேரன் கோதை மார்பனும்தான். அவனிடம் நீங்கள் தூது போனீர்கள். ஆனால் என்னிடம் எந்தவிதமான தூதும் இல்லை. தூதனுப்ப விரும்பவுமில்லை. காரணம் நான் சிறுவன். சிறுவனிடம் தூதனுப்புவது அவமானம். ஆகவே துச்சமென நினைத்து படையெடுத்தாகிவிட்டது. சொல்லுங்கள் ஐயா. இதுதானே உண்மை?'-

இப்படி ஆவேசமாய் மன்னன் பேசி முடித்ததும் பராசரர் சற்றே அமைதியாகப் பேசினார்.

'மன்னவா, நீ கூறியதே உண்மையான காரணம் என்று இருக்கட்டும். சேர சோழர்களின் மதிப்பீடு தவறு என்றும் வைத்துக்கொள். தமிழரின் பொது நன்மைக்காக நீ ஒத்துழைக்கக் கூடாதா?'

'பொது நன்மையா?'

'பாண்டியா! இந்தத் தமிழ் மண்டலத்தை சேரனென்றும், சோழனென்றும், பாண்டியனென்றும் தனித்தனி மன்னர்களென்றும் நூறு பேர் ஆள வேண்டுமா? உங்களுக்குள்ளேயே பூசலும் சண்டையும் அவசியமா? உங்களுக்குள் மூளும் போரினால் அழிவது யார்? தமிழர்தானே! இதை ஏன் தடுக்கக் கூடாது? சோழன் பெருநற்கிள்ளி இதைத்தடுக்க முயல்கிறான். அதற்கு ஏன் [illegible]எவரும் ஒத்துழைக்கக் கூடாது?'-

'ஐயா, வேதவித்தகரான உங்களுக்கு நான் உணர்த்த என்ன இருக்கிறது? சோழனின் முயற்சி நீங்கள் சொல்வது



போல் தமிழரின் பொது நன்மைக்காக என்றிருந்திருந்தால் சிறுவன் என்ற அபிப்ராயம்கொண்டு என்னை உதாசினப் படுத்த வேண்டியதேன்? ஒரு குடைக்கீழ் தமிழகம் வருவது தமிழருக்கு நல்லதென்ற தீர்மானம் உண்மையாக இருக்குமானால் அதற்குப் படை திரட்டி முற்றுகையிட்டுக் கொண்டுதான் தூதனுப்புவார்களா? அதுவும் தங்களைப் போன்றவர்களிடம் பொய் மூட்டையைச் சுமக்கச் சொல்வார்களா? தமிழகத்தை ஒரே மன்னன் ஆளும் உயரிய நோக்கம் உள்ளவர்கள் பொய்ச் செய்தி கூறி தூதனுப்பியது ஏன்? மறையவரே, சோழரது முயற்சியின் பின்னணி பெருந்தன்மையல்ல. வேறு. அது என்ன என்பதை என் வாயால் உச்சரிக்க நான் விரும்பவில்லை.

''அதோடு ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தி விட நான் விரும்புகிறேன். தமிழகத்தில் சேர சோழ பாண்டியர் என்று தனித்தனி ராஜ மரபுகள் உண்டாகி நெடுங்காலம் ஆகி தனித்தனி தன்மையுடன் வளர்ந்து விட்டன. அவற்றை ஒன்றாக்குவதோ தமிழகம் ஒரு மன்னனுக்குக் கீழே ஆளப்படுவதோ இப்போதைக்கு முடியாது. அதற்கு நெடுங்காலம் ஆக வேண்டும். அதோடு சேர சோழ பாண்டியர் மட்டுமல்ல. தமிழகத்தை இன்னும் பல மன்னர்கள் துண்டு துண்டாக ஆண்டு கொண்டிருக்கிறார்கள். ஒன்று சேர்க்க முயற்சிக்கும் சோழர்களிலேயே பல பிரிவுகள் இருப்பது உங்களுக்குத் தெரியும். ஆகவே பொது நன்மை என்று நீங்கள் கூறினீர்களே? அது சோழனின் முயற்சியால் சாத்தியமாவதை விட பல்வேறுபட்ட மன்னர்களுக்கிடையே ஒற்றுமை நிலவுவதால் எளிதாக சாத்தியமாக முடியும். அதை உருவாக்க யாரும் முயலலாம். பல தரப்பட்ட

மன்னர்களைத் தனக்கு அடங்கி வாழும்படி ஒருவர் முயற்சிப்பதை விட பல தரப்பட்ட மன்னர்களைத் தங்களுக்குள் ஒற்றுமையுடன் வாழ்வதற்கு முயற்சிப்பதே சரியானது''-

''போர் தான் உன் முடிவா பாண்டியா?''-

''போரை முடிவு செய்து கொண்டு வந்திருப்பவர்கள் சேர சோழர்கள். நான் நினைத்தாலும் அது நிற்கப் போவதில்லை. அதோடு இச்சேரன் ராஜசூயத்தைக் காரணம் காட்டி படையெடுத்திருந்தால்கூட நான் போரைத் தவிர்க்க முயன்றிருப்பேன். ஆனால் அவன் என் படைத் தலைவனை சதிசெய்து கடத்திப்போய் சிறை வைத்திருந்தான். இது யானைக் களவு போன்ற பொய்ச் செய்தியல்ல. உண்மை என்பது அனைவருக்கும் புரிந்திருக்கும். இது வீரன் செய்யக் கூடிய காரியமா?''

'பழையனின் மீதுள்ள அச்சத்தால் செய்யப்பட்ட தவறு'-

'பழையன் தப்பி விட்டதால் இது வெறும் தவறு என்கிறீர்கள். அவனும் தப்பாமல் போரிலும் நான் தோற்றுப் போனால் படைத் தலைவருக்கு இச் சேரன் மகுடம் சூட்டுவானா? கழுவில் மாட்டுவானா? பராசரரே நன்றாகக் கேட்டுக் கொள்ளுங்கள். போர் நிச்சயம். என்னைச் சிறுவன் என்றும் பெரிய படைகளை வைத்திருப்பதால் என்னை எளிதில் அழித்து விடலாம் என்று மனப்பால் குடித்து வந்திருக்கும் சேர சோழரை சிதறி ஓடும்படி போரிட்டு அவர்களது முரசுகளை நான் கைப்பற்றுவேன். அப்படிச் செய்யத் தவறினால் மக்கள் என்னைக் கொடியவன் என்று இகழட்டும். இதோ



புலமையில் சிறந்த குருநாதாரான மாங்குடி மருதனாரும் இதர புலவர் பெருமக்களும் என்னைப் புகழாமல் இந்நாட்டை விட்டே நீங்கட்டும். என் சுற்றத்தார் விலகி நான் பிச்சை எடுத்து வாழும் இரவலனாகட்டும். இது சத்தியம்*''... என்று அவையும் அரண்மனையும் அகிலமும் அதிரும்படி வெஞ்சினம் உரைத்தான் பாண்டியன் நெடுஞ்செழியன்.

அதற்குப் பின் பேசுவதற்கு ஏதுமில்லை என்று உணர்த்துவதுபோல் அமைந்தது நெடுஞ்செழியனின் பேச்சு. பராசரர் எழுந்தார்.

'நல்லது பாண்டியா. உன் முடிவு என்ன என்பதைத் தெரிந்து கொண்டேன். உன் குருநாதரின் முடிவும் இது தானா?' என்று கேட்டு விட்டு மாங்குடி மருதனாரைப் பார்த்தார்.

புலவரின் முகத்தில் புன்சிரிப்பு எழுந்தது.

'பராசரரே, வடமொழி வித்தகரும் வேதவிவா தருமான தங்களுக்கு மகாபாரதமும் கீதையும் தெரிந்த விஷயங்கள். அவைகளில் இல்லாத எதுவும் இங்கே நடைபெறவில்லை. அதே சமயம் தர்மம் வெல்லாமல் போகப் போவதுமில்லை.' என்றார்.

அவரிடம் பாரதம் பற்றியோ கீதையைப் பற்றியோ விவாதிக்க பராசரர் தயாராக இல்லை. தன்னைப்போல் வெளிப்படையாக கருத்து தெரிவிப்பதை விட்டு விட்டு

* நெடுஞ்செழியன் உரைத்த இவ்வெஞ்சினம் சரித்திரப் பூர்வமானது. இவனது வெஞ்சினம் நெடுஞ்செழியனின் பாடலாகவே புறநானூற்றில் (பாடல் 72) இடம் பெற்றிருக்கிறது.

அவர் புதிர் போட்டுப் பேச வேண்டியது அவசியம்தானா என்று யோசித்த அந்த வேத வித்தகர் 'இந்தத் தமிழ் புலவர்களெல்லாம் விஷமிகள். மன்னர்களை கைப் பொம்மைகளாக்கி விடும் வித்தகர்கள்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு 'வருகிறேன் புலவரே. வருகிறேன் நெடுஞ்செழியா. யாரால் போர் நடை பெறுவதானாலும் சரி-எனக்கென்னவோ இதனால் வருத்தம்தான். தர்மம் வெல்லட்டும்'... என்றவாறு விடைபெற்றுச் சென்றார்.

அவர் செல்லும் வரை தத்தளித்தபடி காத்திருந்த காவலாளி ஒருவன் அவைக்குள் நுழைந்து கோட்டைத் தளபதி அதுகையிடம் ஏதோ சொல்லவும் பதட்டமடைந்த அவன் உடனே அவையை விட்டு நீங்கினான். அடுத்து அக்காவலாளி மன்னனிடம் அச்செய்தியைச் சொன்னான்.

மன்னனின் முகம் சிவந்தது.

'இது உண்மையா?'- என்று இரையவும் செய்தான்.

◈◈◈

## முரசு இருபத்தெட்டு

# பெண் கோட்டை

'உண்மைதான் பிரபு. நம் சுரங்க ஆயுத சாலையில் இருந்த போர் ஆயுதங்களெல்லாம் காணாமல் போய்விட்டன'- என்றான் காவலாளி.

'இதற்கென்ன அர்த்தம்?'-சினத்துடன் வினவினான் மன்னன்.

காவலாளியின் உடல் நடுங்கியது. 'ஆயுதங்கள் களவு போய்விட்டன' என்றான் பதட்டமான குரலில்.

'நீ தானே ஆயுத சாலையின் தலைவன்?'

'ஆம். பிரபு'

'உன்னை அறியாமல் எப்படி களவு நேர்ந்தது?'

'பிரபு, களவு போன பிறகுதான் எனக்குச் செய்தியே வந்தது'-

'அப்படியானால் நீ காவல் புரியவில்லையா?'

'இல்லை'-

'ஏன்?'

'காவலை அவர் மாற்றிவிட்டார்'

'யார்?'

'கோட்டைத் தளபதி'

'அதுகையா?'-

அவர் புதிர் போட்டுப் பேச வேண்டியது அவசியம்தானா என்று யோசித்த அந்த வேத வித்தகர் 'இந்தத் தமிழ் புலவர்களெல்லாம் விஷமிகள். மன்னர்களை கைப் பொம்மைகளாக்கி விடும் வித்தகர்கள்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு 'வருகிறேன் புலவரே. வருகிறேன் நெடுஞ்செழியா. யாரால் போர் நடை பெறுவதானாலும் சரி-எனக்கென்னவோ இதனால் வருத்தம்தான். தர்மம் வெல்லட்டும்'... என்றவாறு விடைபெற்றுச் சென்றார்.

அவர் செல்லும் வரை தத்தளித்தபடி காத்திருந்த காவலாளி ஒருவன் அவைக்குள் நுழைந்து கோட்டைத் தளபதி அதுகையிடம் ஏதோ சொல்லவும் பதட்டமடைந்த அவன் உடனே அவையை விட்டு நீங்கினான். அடுத்து அக்காவலாளி மன்னனிடம் அச்செய்தியைச் சொன்னான்.

மன்னனின் முகம் சிவந்தது.

'இது உண்மையா?'- என்று இரையவும் செய்தான்.

◈◈◈

முரசு இருபத்தெட்டு

# பெண் கோட்டை

'உண்மைதான் பிரபு. நம் சுரங்க ஆயுத சாலையில் இருந்த போர் ஆயுதங்களெல்லாம் காணாமல் போய்விட்டன'- என்றான் காவலாளி.

'இதற்கென்ன அர்த்தம்?'-சினத்துடன் வினவினான் மன்னன்.

காவலாளியின் உடல் நடுங்கியது. 'ஆயுதங்கள் களவு போய்விட்டன' என்றான் பதட்டமான குரலில்.

'நீ தானே ஆயுத சாலையின் தலைவன்?'

'ஆம். பிரபு'

'உன்னை அறியாமல் எப்படி களவு நேர்ந்தது?'

'பிரபு, களவு போன பிறகுதான் எனக்குச் செய்தியே வந்தது'-

'அப்படியானால் நீ காவல் புரியவில்லையா?'

'இல்லை'-

'ஏன்?'

'காவலை அவர் மாற்றிவிட்டார்'

'யார்?'

'கோட்டைத் தளபதி'

'அதுகையா?'-

'ஆம்'

'எதற்காக?'-

'பிரபு, சுரங்க ஆயுதச்சாலைக்கான வழி நம் அரண்மனையில் இல்லை. மீனாட்சியம்மன் ஆலயமான வெள்ளியம்பலத்தில் இருக்கிறது. யார் வருவதனாலும் அங்கிருந்துதான் வரவேண்டும். ஆலயத்தில் முன்பொரு நாள் தங்கள் உயிருக்கு ஆபத்து வந்தபின் ஆலய கண்காணிப்பு பற்றித் தாங்கள் ஏதோ சொன்னீர்களாம். அதையடுத்து அங்கே காவலைப் பலப்படுத்தவும் அதே சமயம் அக்காவல் ரகசியமாக இருக்கவும் விரும்பி என்னையும் இதர காவலர்களையும் நீக்கிவிட்டுப் பெண் வீரர்களை நியமித்தார் அவர். அவ்வீரர்களைச் சாதாரண உடையில் உலவி கண்காணிக்கும் படியும் தேவைப்படும் நேரத்தில் எங்களை உதவிக்கு அழைக்கும்படியும் உத்திரவிட்டிருந்தார். சற்று முன்தான் ஆயுதக் களவு பற்றிய செய்தி பெண் வீரர்கள் மூலம் எனக்குத் தெரிய வந்தது'-

எதற்கும் கலங்காதவனான பாண்டிய மன்னன் இச்செய்தியைக் கேட்டுச் சற்று கவலைப்படவே செய்தான் ஆயுதங்களின் எண்ணிக்கையை நினைத்தும் அவை களவாடப்பட்ட நேரத்தை நினைத்தும். ஆயுதங்களை உற்பத்தி செய்து கொள்வதொன்றும் பெரிய வேலை இல்லை என்றாலும் அதற்கான நேரம் இல்லை என்பதே அவனது கவலைக்கு வித்தாயிற்று. தன் உயிருக்கு ஆலயத்தில் ஆபத்து நேரிட்டதிலிருந்து கோட்டைக்குள் எதிரி இருக்கிறான் என்ற சந்தேகம் அவனுக்கிருந்ததும் அதனால் விபரீதங்கள் எந்த



நிலையிலும் உண்டாகலாம் என்ற உணர்விருந்ததும் உண்மைதான். ஆனால் அச்சந்தேகம் இவ்வாயுதங்களைப் பற்றிச் சிறிதும் இல்லாமலிருந்தது அவை ரகசியமாக சேர்க்கப்பட்டிருந்ததால். அந்த ரகசியம் எதிரிக்குத் தெரிந்து போனதால் உண்டான வியப்பை விட எதிரி அவ்வாயுதங்களை தீவிரமான கண்காணிப்புகளை மீறி களவாடிச் சென்றதுதான் அவனுக்கு அதிக வியப்பாய் இருந்தது. மொத்தத்தில் தன் ஊகங்களைவிட பெரிய சக்தி கொண்டவனாகவே எதிரி இருக்கிறான் என்ற எண்ணத்திற்கு வந்த நெடுஞ்செழியன் கோட்டைத் தளபதி அதுகையை எண்ணி கொஞ்சம் வருத்தப்பட்டான். அவ்வருத்தம் பழையனின் நினைப்பால் உடனடியாகவே மறைந்தது. செய்தி கொண்டு வந்த காவலனிடம் பழையனை அழைத்து வருமாறு கட்டளையிட்டுவிட்டு அவையிலிருந்து வெளியேறினான்.

❖ ❖ ❖

இதே நேரத்தில் பழையன் கோட்டைப் புரத்திலும் நகரிலும் சுற்றி போர் ஆயத்தங்களைக் கவனித்தான். தன் கவனிப்பை ரகசியமாக செய்யக்கருதிய அவன் வைத்தியனைப் போல வேடமிட்டுக் கொண்டு செய்தான். போர் ஆயத்தங்கள் அனைத்துமே குறை சொல்ல முடியாத வகையில் சிறப்பாக இருந்ததைக் கண்டான். பாண்டியர்கள் போரில் ஈடுபட்டு நீண்ட நாட்கள் ஆகியிருந்ததாலோ அல்லது போரில் ஈடுபடவிருக்கும் மன்னன் உத்வேகம் அளிப்பவனாய் இருந்ததாலோ என்னவோ வீரர்களிடம் சோர்வென்பது இல்லாமலிருந்தது. எந்தப் பிரிவில் பார்த்தாலும் வீரர்கள்

மகிழ்ச்சியாகவும் ஆர்வமாகவும் இருந்தார்கள். உடனடியாக வாளை உரசும் வேகமும் ஆசையும் அவர்களிடம் பெருகியிருந்தன. ஆசையை அடக்க முடியாத காளையர்கள் பலர் தங்களுக்குள்ளேயே வாட்போரிட்டு பயிற்சியைப் போல் செய்து கொண்டிருந்தார்கள். போர் குறித்து மட்டுமில்லாமல் தன்னைப் பற்றிய ஆர்வமும் திருப்தியும்கூட அவர்களிடையே ஓங்கியிருந்ததைக் கண்டான் பழையன். பலரிடம் தன்னைப் பற்றி விசாரிக்கவும் செய்தான். சேரனிடமிருந்து தான் தப்பி கோட்டைக்குள் வந்து விட்டதையும் போரில் தான் கலந்து கொள்வதையும் சொல்லி வீரர்கள் மகிழ்ச்சியுற்றார்கள். தனது வரவு அவர்களுக்குப் புதுத் தெம்பு அளித்திருப்பதைக் கவனித்து அவன் 'சேர மன்னனைப் பாராட்டத்தான் வேண்டும் எல்லாவற்றையும் நன்றாக கணித்துத்தான் என்னைச் சிறை செய்திருக்கிறான்'- என்று கூறிக் கொள்ளவும் செய்தான்.

வெற்றிக்கு முதல்படி வீரர்களின் மனோபாவம். அதில் நம்பிக்கையும் உற்சாகமும் நிரம்பி வழிந்தால் வெற்றி வாய்ப்பு வராமல் போகாது என்பதால் பழையன் தற்போது நிலவும் நிலையைக் கண்டு திருப்தியே அடைந்தான். இந்த நம்பிக்கையும் உற்சாகமும் வீரர்களிடம் மட்டுமின்றி மக்களிடையே இருந்ததையும் காண முடிந்தது அவனால். மக்கள் அவர்களைத் தொல்லைகளாகக் கருதாமல் தங்கள் உறவினர்களைப் போலவும் நண்பர்களைப் போலவும் கருதி உபசரித்தார்கள். அவர்களின் தினசரி தேவைகளை மக்களேகவனித்துக் கொண்டார்கள். அதற்கு சாட்சியாக வணிகர் வீதிகளிலிருந்து உணவு வண்டிகள் அவ்வப்



போது செல்வதைக் கண்டான் பாண்டியர் படைத் தலைவன். இரவு நேரங்களில் மக்கள் பாசறைகளுக்குச் சென்று வீரர்களோடு உரையாடி சல்லாபித்தார்கள். வெற்றி வாய்ப்புக்களைப் பற்றி வினவிக் கொண்டார்கள்.

வீரர்களையும் மக்களையும் கவனித்த பழையன் போர் ஆயுதங்கள், பொறிகள், வாகனங்கள் ஆகியவற்றைப் பற்றியும் அறிந்து கொண்டான். போர் துவங்கும் நேரத்தில் அவ்வப்போது உண்டாகும் நிலைமையை ஒட்டி படைகளை அணிவகுக்கவோ, முன்னேறவோ அல்லது பின் வாங்கவோ, பிரிந்து சென்று தாக்கவோ அவ்வப்போது கட்டளை பிறப்பிப்பதற்கு உதவியாக போர் முரசுகள் வைக்கப்பட்டிருந்த இடங்களையும் பார்த்தான். அவை இருந்த இடங்களைப் பற்றியும் குறைசொல்ல முடியவில்லை. ஒருவேளை எதிரிப்படை உள்ளே நுழைய நேரிட்டாலும் இம்முரசுகளை அழிப்பது எளிதாக அமையாத விதத்தில் அவை உயர்ந்த இடங்களில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன.

ஒருவாறு போர் ஏற்பாடுகளையெல்லாம் பார்வையிட்ட பின் தன் வேடத்தைக் களைந்துவிட்டு புரவியேறி வணிகர் வீதிக்கு வந்தான். அங்கேயிருந்த குறிப்பிட்டதொரு மாளிகைக்குப் போய் உள் தாளிட்டிருந்த கதவை மூன்று முறை தட்டிவிட்டு சிறிது நேரம் அங்கேயே நின்றான். மாளிகைக்குள் நுழைய கையாள வேண்டிய ரகசிய முறையாக அவ்வாறு பழையன் செய்ததும் உள்ளேயிருந்து உலோகப் பாத்திரமொன்று கீழே விழும் ஓசை கேட்டது. அதைக் கேட்டதும், 'நல்லது. சரியான விடை கிடைத்துவிட்டது. உள்ளே போக வேண்டியதுதான்' என்று சொல்லிச்

கொண்ட அவன் மாளிகையின் பின்புறத்திற்குச் சென்று மாளிகைச் சுவற்றையொட்டிய மாமரத்தின் மீது விடு விடுவெனஏறி மாளிகைச் சாளரத்தைப் பற்றி உள்ளே குதித்தான். அவன் எதிர்பார்த்த மாதிரி சாளரத்தையடுத்த மாடியறைக் கதவு திறந்திருந்தது. சிரமமில்லாமல் உள்ளே சென்று படிகளில் இறங்கி மாளிகையின் கூடத்திற்கு வந்த போது 'வருக வருக உமது வரவு நல்வரவாகட்டும்' என்று கனிவான வரவேற்புக் கிடைத்தது. அதையளித்த புலவர் கூடத்தில் வெளிப்பட்ட மறுகணமே எதிர்பாராத சம்பவங்கள் நடைபெற்றுவிட்டன.

புலவர் தோன்றிய அடுத்த கணம் கூடத்தில் நாற்புறங்களிலிருந்தும் சுமார் பத்துவீரர்கள் உருவிய வாட்களுடன் தோன்றினார்கள். புலவரின் வாய் மூடப்பட்டு அகற்றப்பட்டார். பழையனை அவ்வீரர்கள் சூழ்ந்துகொண்டார்கள்.

அவர்களில் ஒருவன் சற்றே சிரித்து ''என்ன படைத்தலைவரே, நீங்கள் என்னை எதிர்பார்க்கவில்லை இல்லையா?''- என்று கேட்டான் ஒருவித பெருமிதத்துடன்.

பழையன் அதை கவனிக்காத மாதிரி இருக்கவே பேச்சைத் துவக்கிய வீரன் 'என்ன உங்கள் காதில் விழவில்லையா?'- என்று கேட்டதும் பழையன் தெளிந்த வனைப்போல் தலையை ஆட்டிக்கொண்டு 'என்ன கேட்டீர்கள்?'- என்று வினவினான்.

வீரனுக்குக் கொஞ்சம் சலிப்பு உண்டாயிற்று. 'நீங்கள் எதிர்பார்த்தது எங்களையெல்லாம் இல்லை அல்லவா?'- என்று கேட்டான் மீண்டும்.



'எதிர்பார்த்தேன், ஆனால்'- என்று பழையன் இழுத்ததும்-

'எதிர்பார்த்தீர்களா? எங்களையா? எப்படி? மந்திர சக்தியாலா?'... என்று விஷமமாய்க் கேட்டான் வீரன்.

'தந்திர சக்தியால்'- என்று சொல்லிய பழையன் தொடர்ந்து சொன்ன ஒரு பதிலைக் கேட்டதும் வீரர்கள் அனைவரும் அதிர்ந்து போனார்கள்.

சர்வ சாதாரணமாகச் சொன்ன பழையன் தொடர்ந்தான்.

'உங்களை எதிர்பார்த்துத்தான் வந்தேன் ஆனால் ரொம்பவும் குறைவாக இருக்கிறீர்கள்'-

அதிர்ச்சியிலிருந்து சற்றே மீண்ட வீரன் 'குறைவாக இருக்கிறோமா? பத்துப் பேர் இருக்கிறோம் படைத் தலைவரே' என்றான்.

'நூறுக்கு மேல் எதிர்பார்த்தேன்' என்றான் பழையன்.

'நீங்கள் எதிர்பார்த்ததற்கு எது அத்தாட்சி?'... கேட்டான் வீரன்-

'ஏற்கனவே சொல்லிவிட்டேன். அது மட்டுமல்ல வேறொரு அத்தாட்சியும் உண்டு' என்று சொன்ன பழையன் திடீரென தன் குறுவாளை இடது கையால் எடுத்து வீரனின் தோளில் பாய்ச்சி விடவும் அந்தத் தாக்குதலால் 'ஹா' என்று ஓலமிட்டபடி வீரன் விழவும், அடுத்த நிமிடம் மாளிகையே அதிர்வது போல் கூடத்தின் பலகணிகளில் நாற்புறமும் சுமார் ஐம்பது பாண்டிய வீரர்கள் தோன்றவும், அவர்களது கைகளில் வில்லும் அம்பும் இருக்க, அவற்றின் குறி கூடத்தில்

இருந்தவர்களை நோக்கவும் எல்லாமே ஏதோ மாயாஜாலம் போல் நடந்தன சில வினாடிகளில்.

'கண்டாயா சேர நாட்டு வீரனே? உங்களில் நூறு பேராவது இருப்பீர்கள் இங்கே வருவீர்கள் என்று எதிர்பார்த்துதான் எனக்குப் பின்னால் ஐம்பது வீரர்களை ரகசியமாக வரச்சொல்லிவிட்டு மாளிகைக்குள் நுழைந்தேன். ஆனால் நீங்கள் மிகவும் குறைவாக இருக்கிறீர்கள். உங்கள் விவேகமும் குறைவாகத்தான் இருக்கிறது. இல்லையென்றால் புலவர் வாயை மூடிய கையோடு என்னை நீங்கள் தீர்த்திருக்க வேண்டும் அல்லவா? இப்படியா என்னிடம் வரட்டுப் பேச்சு பேசிக் கொண்டிருப்பீர்கள்? நீங்களென்ன உங்கள் சேரமன்னனே இப்படித்தானே விவேகம் கெட்டு இருக்கிறான்? என்னைக் கொல்ல வந்த பின் பேச்செதற்கு? பிரலாபம் எதற்கு?'... என்று பேசிய பழையன் 'தொடக்கத்திலிருந்தே குறுக்கு வழியைத்தான் பிழைக்கும் வழியாய் கடைபிடித்து வருகிறான் சேரமன்னன். சேரநாட்டு வீரம் எங்கு போயிற்றோ தெரியவில்லை. போய் நீங்களாவது கண்டு பிடியுங்கள். உங்களை அவனிடமே அனுப்பி வைக்கிறேன்'- என்று சொல்லியபின் வேறு சில விவரங்களை அவர்களிடமிருந்து கேட்டறிந்து விட்டு தன் வீரர்களை அழைத்து அவர்களையெல்லாம் பத்திரமாக சேரர் பாசறைக்கு அனுப்பி வைக்கும்படி கட்டளையிட்டான். தோளில் காயம்பட்டவனுக்கு முதலுதவியும் செய்தனுப்பும்படி சொன்னான்.

அனைவரும் அங்கிருந்து சென்ற பின் உள் அறைக்குச் சென்று சாத்திக் கிடந்த கதவைத் திறந்து புலவரை



வெளியே அழைத்து வந்தான். அதே போல் வேறொரு அறையில் அடைப்பட்டுக்கிடந்த மேகலையையும் விடுவித்தான்.

வெளியே வந்த புலவர் கல்லாடனார் ''ம். படைத் தலைவரால் நன்மை ஏற்பட்ட காலம் போய் விட்டது. இப்போதெல்லாம் பெரும் தொல்லைதான்'' என்றார் விஷமமாக.

''எந்தத் தொல்லை புலவரே?''- கேட்டான் படைத் தலைவன்.

''இந்த வீரர்களிடம் சிக்கிக்கொண்டது தொல்லை யில்லாமல் சுகவாசமா? படைத்தலைவரின் வரவு நன்மைக்கு என்றுதான் எண்ணியிருந்தோம். ஆனால் உங்கள் வரவோ எங்களுக்கு ஆபத்தாகிவிட்டது. நீங்கள் வரவிருக்கிறீர்கள் என்றறிந்து அவர்கள் வந்துவிட்டார்கள் உங்களை மடக்க. அதற்கு முன்னேற்பாடாக எங்களை மடக்கிவிட்டார்கள். மதுரையில் இருப்பது பாதுகாப்பானது என்ற எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்''-

''மகா வீரர்கள் சதியிலும் சூழ்ச்சியிலும் இறங்கினால் என்ன செய்வது புலவரே?''-

''ஆகா. நீங்கள் எப்போது சதியில் இறங்கினீர்கள்?''- விஷமமாகக் கேட்டார் புலவர்.

''சேர சோழ மன்னர்களைச் சொல்கிறேன் புலவரே. வீரர்களான அவர்கள் வீரத்தையா காட்டுகிறார்கள்? சதி-சூழ்ச்சி-குறுக்கு வழி இவைதானே அவர்களது பேராசைக்கான தடங்களாக இருக்கின்றன? அதில் பெண்கள் வேறு ஈடுபடுத்தப்படுகிறார்கள். இந்த

நிலையில் குழப்பம் எற்படுவதும் சில கெடுதல்கள் தோன்றும் என்பதும் இயற்கை தான் என்பது புலவருக்குத் தெரியாதா? அதோடு என் வரவால் தொல்லை உண்டானது என்கிறீர்களே-அது தற்காலிகமானது தான். அவர்களை எதிர்பார்த்து தானே நான் வந்தேன்? அதனால் தான் சதிகாரர்கள் சிக்கினார்கள்? சதிகளும் தெரிந்தன. என்னால் யாருக்கும் ஒரு குறையும் வராது புலவரே. கவலை வேண்டாம். இந்தச் சேரனும் சரி அவன் வீரர்களும் சரி எதற்கெடுத்தாலும் சிறை செய்வதில் தானே முனைப்பாய் இருக்கிறார்கள்? இருக்கட்டும். போரில் இந்த சேரனைப் பிடித்து மதுரையிலேயே சிறை வைத்திருக்கிறேன். நீங்கள் பார்த்து சிரிக்கும்படி சிறை வைக்கிறேன்''...

'அது நடக்கும்போது நடக்கட்டும். இப்போது நீ சிறை செய்ய வேண்டிய நபர் வேறொருவர் இருக்கிறார். அவரைக் கவனி' என்று கூறி மேகலையை நோக்கினார் புலவர். அவளோ தலையைக் குனிந்து கொண்டாள்.

'சந்தனக் கோட்டையிலிருந்து வந்து சேர்ந்த இவளை இங்கேயே சிறைபோல் வைத்திருந்து இன்றுவரை காப்பாற்றிவிட்டேன். இனிமேல் காக்க வேண்டியது உங்கள் பொறுப்பு நீங்கள் காக்கவேண்டிய கோட்டை இப்பெண் கோட்டை மட்டுமல்ல, படைத்தலைவரே. பாண்டிய சாம்ராஜ்யம் என்னும் அறக்கோட்டையும் கூட, ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். நான் வருகிறேன்'- என்று கூறிவிட்டு வெளியேறினார் புலவர்.

பழையன் மேகலையை நோக்கினான்.

மேகத்திலிருந்து சந்திரன் வெளிப்பட்டது.

முரசு இருபத்தொன்பது

# பந்தமும் சொந்தமும்

மேகத்திலிருந்து சந்திரன் வெளிப்பட்டது.

மேகலை முதலில் தலையைக் குனிந்திருந்ததால் அவளது முகம் தெரியவில்லை. கரிய கூந்தல் தான் கார்மேகம் போல் தெரிந்தது. தலையை உயர்த்தியபோது கூந்தல் பின்னால் மறையவே பளிச்சென்று முகம் நிலவு போல் காட்சியளித்தது.

புலவர் என்னும் கார்மேகம் விலகியதால் மேகலை என்னும் சந்திரன் வெளிப்பட்டது.

புலவரோடு அச்சம் என்னும் மேகம் மறைந்து விட்டதால் மேகலையின் காதல் என்னும் சந்திரன் வெளிப்பட்டது.

தட்டுவதற்கான விரல்கள் தொட்டதும் ஒலிக்கும் மேளம் போல்-

காதலனின் அருகாமை கிட்டியதுமே ஒட்டுதல் உண்டாகி பரவசமும் உருவாகி விட்டதால் மேகலை காதற் பிழம்பாய் காட்சியளித்தாள்.

காதல் பொங்கும் கன்னியர் முகம் இப்படித்தான் இருக்கும் என்பது போலவும் இதைவிடச் சிறப்பாக விளங்க முடியாது என்பதை நிரூபிப்பது போலவும் இருந்தது அவளது தேன்வடியும் நிலவு முகம்.

மலர்ந்த மலர் மயங்கிக் கிடந்த மாதிரி அவளது ஒளிர்ந்த முகத்தில் காதல் மயக்கத் துளிகள் துளிர்த்து சுந்தரக் களையைத் தந்திருந்தது.

காதலால் அவள் முகம் சோபையுற்றதா அல்லது அவளது முகத்தால் காதல் சோபை பெற்றதா என்று பிரித்துரைக்க முடியாத விதத்தில் சௌந்தர்ய வனப்புடன் விளங்கினாள் மேகலை.

சேர வீரர்களிடம் சிறிது நேரம் சிறைப்பட்டிருந்ததால் உண்டாகியிருந்த சோர்வு தடயமற்றுப்போன வெட்ட வெளி போல் மாறிவிட்டிருந்ததால் தெம்பு உண்டாகி அவள் முகத்திற்குத் தனிச் செழிப்பை அளித்திருந்தது.

சேர வீரர்களால் அடைபட்டிருந்தாலும் அந்த அடைவு தன் காதலனால் உடைபட்டிருந்ததால் காதலானது மடைதிறந்த வெள்ளமாய் வெளிப்பட்டு அவள் இதயத்தில் பிரளயத்தை உண்டாக்கி விட்டிருந்ததால் அவள் உணர்ச்சித் தத்தளிப்பில் இருந்தாள்.

மனம் விரும்பும் ஆடவனால் பாதுகாக்கப்படும் சந்தர்ப்பங்கள் எந்த பெண்ணுக்கும் பூரிப்பை அளிக்கும் தான். இங்கே மேகலைக்கு அப்படியொரு சந்தர்ப்பத்தை அளித்த பழையன் வெறும் காதற்காளை மட்டும் அல்லன் என்பதாலும் பெரும் படைத் தலைவன் - அதுவும் மாற்று நாட்டு மன்னர் அஞ்சும் மாவீரன் என்பதாலும் பூரிப்பு பல பரிமாணங்களை அடைந்து எல்லையை இல்லையென ஆக்கிவிட்டிருந்தது.

போதாத குறைக்குப் பொல்லாத புலவர் அவனிடம் 'நீ சிறைப்படுத்த வேண்டியது இப்போது இவரைத்தான்' என்று வேறு சொல்லிவிட்டுப் போயிருந்ததால் தேனில்



மிதக்கும் வண்டிற்கு கள்ளும் புகட்டினாற் போன்றதொரு அபரிமித போதை அவளை ஆட்கொண்டிருந்தது.

நல்லவேளையாக அவள் கீழே விழுவதற்கு முன்பாகவே தன் அணைப்பில் ஆட்படுத்திக்கொண்ட பழையன், 'என்னால் உனக்கு நிரம்பத் தொல்லைகள். இல்லையா மேகலை? என்மீதுள்ள பகையை எதிரிகள் உன் மீதல்லவா காட்டுகிறார்கள்? என்னை மடக்க விரும்புபவர்கள் முதலில் உன்னை மடக்கி விடுகிறார்களே! என்ன சொல்கிறாய்?''. என்று கேட்டான்.

அவள் பதிலேதும் சொல்லாததால் பழையனே தொடர்ந்து, 'இதற்காகத்தான் சொல்வார்கள் படைத் தலைவர்களையும், தளபதிகளையும், அரச குலத்தவர்களையும் பெண்கள் காதலிக்கக் கூடாது என்று. இவர்களைக் காதலிக்கும் பெண்கள் எதிரிகளுக்குத் தூண்டில்களாகி விடுகிறார்கள்?'- என்றான்.

அவள் இப்போதும் பதில் பேசாததால் 'உன் தந்தை என்னையும் உன்னையும் சேர்த்து வைக்க விரும்பாததற்கு இதுகூட காரணமாக இருக்கலாம் அல்லவா? நீ போதாதென்று அவரையும் அல்லவா தூண்டிலாக்கி விடுகிறார்கள் இந்த எதிரிகள்? வயதான காலத்தில் பகைவர்களின் கைப்பொம்மையாய் வாழ அவருக்குத் தெம்பு எது? தெளிவு எது? என்று கேட்டான் பழையன்.

அவள் இந்த நிலையிலும் வாயைத் திறக்காததால் 'ஏன் மௌனமாய் இருக்கிறாய் மேகலை? பிரிந்தவர் கூடும்போது பேசுவது தேவையற்றது என்று முடிவு செய்துவிட்டாயா? அல்லது பேசுவதைவிட

பயனுள்ளதைச் செய்வது நல்லது என்று சொல்கிறாயா? என்ன சொல்கிறாய் தூண்டிலே?''- என்று கேட்டான்.

அவள் வாயை மூடிக்கொண்டே இருந்தாள். 'உன்னைத் தூண்டிலாகப் பயன்படுத்துவது உனக்கும் உன் தந்தைக்கும் தொல்லையாக இருக்கலாம். ஆனால் அவர்களது அந்தமுயற்சி நம்மிருவரது பிணைப்பின் சக்தியை அவர்களுக்கு உணர்த்தி வைத்திருப்பதை எண்ணிப் பார். சேரர்களுக்குத் தெரிந்த உண்மை உன் தந்தைக்கு மட்டும் ஏன் தெரியவில்லை? பருவமடைந்து விட்ட உன்னை இன்னுமா சொந்தம் கொண்டாடிக் கொண்டிருக்கிறார் அவர்? அது எத்தனை நாட்களுக்கு முடியக் கூடியது? மேகலை-இன்று உன்னைத் தூண்டிலாக்கி காரியங்களில் ஈடுபடுகிறார்களே சேரர்கள்- இவர்களின் முற்கால மன்னனொருவன் இந்த விஷயம் பற்றி என்ன அழகாகப் பாடியிருக்கிறான் தெரியுமா?* பெற்றோருக்கும் அவர்களது மகளுக்கும் உள்ள சொந்தம் பற்றி சொன்ன அவனது கருத்தில் தான் எத்தனை தெளிவு? தன் பிரிய மகள் தான் விரும்பும் ஆடவனுடன் எங்கோ

* இப்பாடல் சேரமன்னன் பெருங்கடுங்கோ என்பவனால் பாடப்பட்டது.

புலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என் செய்யும்?
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே!
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்?
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே!
ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாமென் செய்யும்?
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே!



சென்று விட்டாள் என்ற சந்தேகத்தில் அவளைத் தேடிச் செல்கிறான். வழியில் வருகிறவர்களையெல்லாம் விசாரிக்கிறான். பெண் தன் காதலனுடன் சென்றிருப்பது உண்மைதான் என்பதை அறிந்த அவர்கள் பெண்ணைத் தேடும் பெற்றோரிடம் 'ஐயன்மீர், எந்த இயல்பை யொட்டி மகளைத் தேடிப் போகிறீர்கள்? மகளைப் பற்றிய கவலை இனி உங்களுக்கு எதற்கு? பருவமடைந்த அவள் இனி உங்களுக்குப் பயன்படப் போவதில்லை. பயனற்ற அவளைத் தேடிப் போவதேன்? மலையில் வளரும் சந்தன மரங்கள் மலைக்குப் பயன்படுவதுண்டா? கடலில் பிறக்கும் முத்து கடலுக்குப் பயன்படுவதுண்டா? யாழில் தோன்றும் இசை அதைக் கேட்போருக்கல்லாமல் யாழுக்குப் பயன்படுகிறதா? அப்படித்தான் உங்கள் மகள். அவள் வளரும் வரைதான் உமக்குச் சொந்தம். அதற்குப் பின் அவளது சொந்தமும் வேறு. அவள் பயன்படும் இடம் வேறு' என்றார்கள். கேட்டாயா மேகலை? இது தெரியாமலா போய்விட்டது உன் தந்தைக்கு?'- என்று வினவினான்.

தற்போதும் அவள் மௌனம் சாதிக்கவே 'மேகலை மேகலை!' - என்று தூங்குபவளை எழுப்புபவன் போல் அழைத்தான் பழையன்.

உண்மையில் அவளும் உறங்கி விழிப்பவளைப் போல்தான் தெளிந்தாள். காதலனின் பேச்சு ஒவ்வொன்றும் அவளது நரம்புகளை மீட்டி இசையாக இழைய விட்டுக்கொண்டிருந்ததால் அதில் தன்னையே இழந்துவிட்ட காரணத்தால் அவன் அவளைத் தெளிய வைக்க வேண்டியிருந்தது.

தெளிந்து விழித்தவளைக் கண்டுச் சிரித்த அவன் 'இதென்ன மேகலை, தூங்கிவிட்டாயா என்ன? ம். உன்னைப் பேச வைக்கவே நிரம்பப் பேசினேன் நான். ஆனால் அந்தப் பேச்சோ உன்னை உறங்கவே வைத்து விட்டது. உயிருக்கு உயிராக அன்பு செலுத்தும் பெண்கள் காதலன் பேசும்போது உறங்கித்தான் விடுவார்கள் போலிருக்கிறது. உன்னால் எனக்குப் பயனில்லை. வேறு ஆளைப் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்' - என்றான் வம்புக்கிழுப்பதுபோல்.

அவள் மெல்லச் சிரித்தாள். கடைக் கண்ணால் அவனைப் பார்த்தாள். பின் 'பார்த்துக் கொள்ளுங்களேன். யார் வேண்டாம் என்றார்கள்?' - என்றாள்.

'அப்படியானால்?... இவ்வளவு தானா நீங்கள்?' -

'நீங்கள் என்றால்?' -

'பெண்களைத்தான். அப்பாவியாய் இருந்தவனை வம்புக்கிழுத்து, காதலைப் பற்றிச் சொல்லி வைத்து, அவனைக் காதலிக்கவும் செய்து, பாதியில் ஒதுங்கிக் கொள்வது - இதுதான் இப்பெண்களின் வேலையா இங்கே?' -

'ஒதுங்கிக் கொள்வதாகச் சொன்னது நீங்கள் தானே? உயிருக்குயிரான காதலரின் விருப்பத்திற்கு இணங்குவது அன்பு கொண்டவளின் கடமைதானே?'

''ஆகா. நீ இணங்குவதற்கு இந்த விருப்பம் தானா கிடைத்தது? ஆனால் மேகலை - ஒன்றைத் தெரிந்து கொள். மதுரை மாநகரில் எனக்குப் பெண் கொடுக்க எத்தனை குடும்பங்கள் இருக்கின்றன தெரியுமா?' -



'பெரிய குடும்பமாகி விடப்போகிறது. கவனமாக இருங்கள்' -

'நான் பொய் சொல்வதாக நினைக்கிறாயா?' -

'நான் ஏன் அப்படி நினைக்கவேண்டும்?'

'இதற்கென்ன அர்த்தம்?'

'ஒதுங்கிப் போகப் போவதாக முடிவு கட்டி விட்ட நீங்கள் பொய் சொன்னால் என்ன? உண்மை சொன்னால் என்ன? ஒதுங்குபவர் எப்படிப் போனால் தான் என்ன?'...

'அப்படியெல்லாம் செய்யமாட்டேன் என்ற தைரியத்தில் பேசுகிறாய். நானும் நிச்சயம் அப்படியே செய்துவிடுவேன். ஆனால் புலவர் ஒரு கடமையை எனக்குச் சொல்லிவிட்டுப் போய்விட்டார். கடமையை நிறைவேற்றவில்லை என்ற அவச்சொல்லுக்கு ஆளாக நான் விரும்பவில்லை' -

'அதென்ன கடமை?' -

'உன்னைச் சிறைப்படுத்தச் சொல்லியிருக்கிறார். பெரியவர் சொல்லிய கடமை. தவறமுடியாது' -

இதைக் கேட்டு உள்ளூர சிரித்துக்கொண்ட மேகலை 'நல்ல கடமை உணர்வு தான்' - என்றாள்.

'அதிலென்ன சந்தேகம்?'

'கடமை உணர்வு இருக்கும்போது ஒதுங்கிப்போய் விடுவதாகப் பேசுவது எந்த நியாயத்தில் சேருமாம்? இதுதான் பாண்டியர் படைத் தலைவர்களது பண்பா?'...

சற்றே தடுமாறிய பழையன் பிறகு சமாளித்துக் கொண்டு, 'பழகுபவர்கள் மாறும்போது பண்பும் மாறும்

தான். அதற்கென்ன இப்போது? நீ இன்று அதிகம் பேசிவிட்டாய். நான் கடமையை நிறைவேற்றினால் மட்டும் போதாது. உனக்குத் தண்டனையும் தரவேண்டும்' என்று கூறி சிறைக்கான கெடுபிடிகளை அதிகமாக்கினான்.

அவனளித்த சிறை எத்தனை பயங்கரமானது என்பதை உணர்ந்தாள் அவள். அது மட்டுமல்ல. தண்டனை யளிப்பதில் அவன் எத்தனை மூர்க்கமானவன் என்பதையும் அறிந்தாள். ஆனால் அவ்விரண்டுமே அவளுக்கு மிகவும் இன்பகரமாய் இருந்தன. வாழ்நாள் முழுதும் தொடரக் கூடாதா என்ற ஏக்கத்தை அளிக்கக் கூடியதாய் இருந்தன. அதே சமயம் அவை தான் விரும்புவதுபோல் தொடர வாய்ப்பில்லை என்பது புரிந்தாலும் விரைவிலேயே சிறையும் தண்டனையும் விலகிவிடும் என்பதாலும் அவனது சிறையை அவளாகவே மேன்மேலும் கடுமையாக்கிக் கொண்டு தண்டனையைக் கேட்டுக்கேட்டு பெற்றாள்.

சலிப்பற்ற இன்பங்களை ஒரு கட்டத்தில் கட்டாயமாக விலக்கிக் கொண்டான் பழையன் - உலகம் என்பது வெறும் காதல் மட்டுமே அல்ல என்பதை உணர்ந்து கொண்டதால். அதை அவளுக்கும் ஞாபகப்படுத்த விரும்பி, 'மேகலை, நாளை போர் மூளப்போகிறது'- என்றான்.

'ம்' என்று தலையை அசைத்தாள் அவள்.

'பகைவர்கள் பலர் சூழ்ந்திருக்கிறார்கள்'- என்று பழையன் மேலும் தொடர்ந்தான்.

அதற்கும் அவள் தலையை மட்டுமே அசைத்தாள்.



'அவர்கள் அனைவருமே மூர்க்கமானவர்களாய் இருக்கிறார்கள். வெற்றியை விட அழிவை அதிகம் விரும்புகிறார்கள். பாண்டியர் குலத்தையே நிர்மூலமாக்க முனைந்திருக்கிறார்கள். அதனால்-'

'ம்'-

'போர் பயங்கரமாக இருக்கும்'-

'ம்'-

'மன்னருக்கு இது கன்னிப்போர்'

'ம்'

'இப்போரில் நான் ஆற்றவேண்டிய பல பணிகளில் அவருக்கு இழுக்கு நேராமல் காக்க வேண்டிய பணி மிகவும் பெரியது. அதற்காக நான் உயிரைச் சிந்த வேண்டியிருக்கலாம். அப்படி ஏதேனும் நடந்து விட்டால் நீ கண்ணீர் சிந்தக் கூடாது'-

'படைத்தலைவரே'-

'சொல் மேகலை'-

'கண்ணீர் சிந்தக் கூடாது என்கிறீர்களே அது ஏன்?'

'வீரனின் மனைவி-அல்லது காதலி கண்ணீர் சிந்தலாமா மேகலை?'-

'படைத்தலைவரே, கண்ணீர் என் வருகிறது தெரியுமா?'-

'ஏன் இப்படிக் கேட்கிறாய்?'-

'படைத்தலைவரே, பெண் யாருக்கு வாழ்க்கைப் பட்டாலும் பெண்தான். யாரை நேசித்தாலும் பெண்தான்.

அவள் கணவனை இழந்தாலும் காதலனை இழந்தாலும் மனமொடிந்துதான் போவாள். மனமொடிந்த எவளும் கண்ணீர் சிந்தாமல் இருக்க முடியாது. வீரரை விரும்பும் பெண் என்பதால் அவள் இதயம் கல்லாகி விடுமா?'

'மேகலை' - என்று ஏதோ பேசத்துவங்கினான் பழையன்.

அதற்குள் அவளே தொடர்ந்தாள்.

'படைத்தலைவரே, உங்கள் உயிர் மீது உங்களுக்கு நம்பிக்கையில்லாமல் இருக்கலாம். ஆனால் எனக்கு இல்லாமல் போகவில்லை. போரில் நீங்கள் நிச்சயம் வெற்றி பெறுவீர்கள். என் கழுத்தில் நிச்சயம் மாலையிடுவீர்கள்'-

'அது நடக்காத காரியம்'- என்றபடி அப்போது அங்கே பிரவேசித்தார் மேகலையின் தந்தை.

◈◈◈

முரசு முப்பது

# பாண்டியர் ஜாலம்

தந்தையைக் கண்டதும் தலையைக் குனிந்தபடி மௌனமாய் நின்று விட்டாள் மேகலை.

வந்தவரின் முகம் ருத்ரகாரமாய் இருந்தது. கண்கள் நெருப்புக்களாய் கொந்தளித்துக் கிடந்தன. ஒருவித வேகம் இருந்தது அவரது அசைவிலும் வார்த்தை உச்சரிப்பிலும். அனாவசியமாகப் பேசிக் கொண்டிருக்க விரும்பாத அவர் பழையனை நோக்கி அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்.

''பழையா, இவளை மணக்கலாம் என்ற வீண் கனவு காணாதே. இவளிடம் அது பற்றிய ஆசைகளையும் வளர்க்க வேண்டாம். இவளுக்கும் உனக்கும் மணம் நடக்காது''-

''ஏன்?''- நிதானமாகவே கேட்டான் பழையன்.

'இவளுக்கு மணமகனைப் பார்த்தாகி விட்டது'

'யாரவர்?'

'சேர மன்னர் யானைக் கண்சேய்'

'பெரிய இடம்'

'ஆம். இவளை மணக்க மன்னரும் ஒப்புக் கொண்டு விட்டார்''

''ஒப்புக் கொள்ளாமலென்ன? கரும்பு தின்ன கூலியா வேண்டும். ஆனால்-''

'ஆனாலென்ன?'

'மன்னரை மணக்க மேகலை விரும்பவில்லை போலிருக்கிறதே?'

'அதைப் பற்றி கவலை இல்லை'

'கவலை இல்லை என்றால்?'

'அவள் விருப்பத்தைப் பொருட்படுத்தப் போவதில்லை என்று பொருள்'

'இதற்குப் பெயர் திருமணமா?'

'பெயர் எதுவானாலும் காரியம் ஒன்றுதான். மன்னரை மணப்பதென்பது பாக்கியம். இதில் இவளது விருப்பம் தேவையில்லாத ஒன்று'-

'பதவியையா உங்கள் மகள் மணக்கப் போகிறாள்? விரும்பாதவனை மணந்து வாழ்வில் எதை அவள் அடைய முடியும்?'

'உன்னை மணப்பதால் அடையக் கூடிய சுகத்தை விட நூறு மடங்கு சுகத்தை நிச்சயம் அவள் அடைவாள்'

'சேர மன்னர் போரில் விழ்ந்து விட்டால்?'-

'பழையா, ரொம்பவும் கர்வப்படாதே. நீ என்ன காலனா பிறரது ஆயுளை முடிவு கட்ட? சேர மன்னரின் வீரம் சாமான்யமானதல்ல'-

'உங்களை வண்டிக்காரராக்கி எங்களை சிறை யெடுத்த போதே அதைக் கண்டேன்'



'அதை வைத்துக் கொண்டு போரை முடிவு செய்து விடாதே. அது வேறு இது வேறு'-

'சேர மன்னர் நீண்ட நாட்கள் வாழட்டும். அவர் சாக வேண்டுமென்பது என் விருப்பமல்ல. முடிவாகத் தீர்மானித்து விட்டதற்காகக் கேட்டேன். அவர் மாண்டு விட்டால் மேகலையின் கதி என்ன?'

'நீ மாண்டு விட்டால் இவள் கதி என்ன ஆகும்?'

'நான் போய் விட்டால் பிரச்சனை இல்லை. பிறகு உங்களிஷ்டம்'

'சேர மன்னர் வீழ்ந்தாலும் அதுதான் முடிவு'...

'அதாவது'

'சேரர் போனால் சோழர் இருக்கிறார்'

'சோழர் போனால் எழினி இருக்கிறானோ?'-

'பழையா, என் மகளை அரசகுமாரனுக்கு நிச்சயம் மணமுடிப்பேன். அதில் சந்தேகம் வேண்டாம்'

'ஐயா, அவள் ஜீவனுள்ள பெண். சந்தைப் பொருளல்ல. திருமணம் ஒரு வியாபாரமும் அல்ல.'

'ஏற்கனவே சொல்லிவிட்டேன். யார் எந்த பெயரில் அழைத்துக் கொண்டாலும் நடக்கப்போகும் காரியம் என்னவோ ஒன்றுதான்'-

'ஒரு தந்தை இப்படியும் பேசமுடியுமா?' என்று தனக்குத்தானே கேட்டுக்கொண்ட பழையன் 'வெறும் அந்தஸ்திற்காகப் பெண்ணைப் பலியிடும் இவனும் ஒரு தந்தையா?' என்று கேட்டுக் கொண்டான். பிறகு அவரை

நன்றாக ஏறெடுத்துப் பார்த்து ஆணித்தரமான குரலில் சொன்னான்.

'பெற்றவர் என்ற முறையில் மகளின் மீது உங்களுக்கு உரிமை உண்டென்றால் அவளது அன்பைப் பூரணமாகப் பெற்றவன் என்ற முறையில் எனக்கும் உரிமை உண்டு. அந்த உரிமையில் சபதமாகவே சொல்லிக் கொள்கிறேன். உங்கள் மகளாகவே முன்வந்து என்னை மறுத்தாலொழிய அவளை மணக்காமல் நான் விடமாட்டேன். இதற்கு நீங்கள் என்ன... அச் சேர மன்னனாகட்டும்- சோழ மன்னனாகட்டும்-ஏன் இந்த பூமண்டலமே தடையாக நின்றாலும் சரி... உடைத்தெறிவேன். மணந்து நிற்பேன்'...

'இது சூளுரையல்ல பழையா. பைத்தியக்காரப் புலம்பல்'...

'பொறுத்திருந்து பாருங்கள். வருகிறேன்'... என்று கூறிவிட்டு மாளிகையிலிருந்து வெளியேறினான் பழையன்.

⁂ ⁂ ⁂

மாளிகையை விட்டு வெளியேறிய பழையனுக்குச் சிறிது நேரத்திலேயே மன்னனின் அழைப்பு வரவே அவனைச் சந்திக்க அரண்மனைக்குச் சென்றான்.

அரண்மனை மாடத்தில் உலவிக் கொண்டிருந்த மன்னன் பழையனைக் கண்டதுமே சற்றே உணர்ச்சி வசப்பட்டவனாய், 'இதென்ன படைத்தலைவரே, எங்கே போய்விட்டீர்கள்? விபரீதம் ஒன்று நடந்து விட்டதே தெரியுமா? நம் கோட்டைத் தளபதி அதுகையின் கவனக்



குறைவு. இல்லை இல்லை... அதிக கவனத்தால் வெள்ளியம்பல ஆயுத சாலையில் இருந்த ஆயுதங்களெல்லாம் களவு போய் விட்டன' என்று படபடப்புடன் சொன்னான்.

பழையனின் முகத்தில் புன்முறுவலே படர்ந்தது. இதைக் கேட்டு. 'கவலை வேண்டாம் மன்னவா. எல்லாம் பத்திரமாக இருக்கின்றன' என்று நிதானமாகத் தெரிவித்துக் கொண்டான்.

'பத்திரமாக உள்ளதா? அப்படியானால் களவு போனது?' - குழப்பமுடன் கேட்டான் மன்னன்.

'களவு போனது உண்மை. அவை பத்திரமாக இருப்பதும் உண்மை' என்றான் பழையன்.

'அதெப்படி சாத்தியம்?'-

''மன்னவா, நான் நன்னனிடமிருந்து விடுபட்டு வையையில் குதித்து ரகசிய நிலவறை மூலம் வெள்ளியம்பலத்திற்கு வந்து கொண்டிருந்த போது அங்கிருந்து வண்டி வண்டியாக படையாயுதங்கள் வந்து கொண்டிருந்தைக் கண்டு விசாரித்தேன். தளபதி அதுகையின் உத்தரவின் பேரில் ஆயுதங்கள் வையையாற்று நிலவறைக் கிடங்கிற்குக் கொண்டு செல்லப்படுவதாக அறிந்தேன். போர் மூளவேண்டிய நிலையில் ஆயுதங்கள் அந்தக் கிடங்கிற்கு எடுத்துச் செல்லப்படுவது போர் ஆயத்தங்களில் ஒன்று என்பதால் எனக்குச் சந்தேகம் எதுவும் தோன்றவில்லை. அதுகை மிகவும் தீவிரமாய் இருக்கிறான் என்று உள்ளூர அவனை வாழ்த்திக் கொண்டேன். ஆனால் நிலவறையில் மேலும்

நடந்து வெள்ளியம்பல பாதாள அறைக்குப் போன போது அங்கே ஆயுதங்களைப் பிரித்து எற்றிக் கொண்டு போகும் வேலைகளை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்த நபர் ஒரு பெண்ணாய் இருந்ததைக் கண்ட போதுதான் லேசான சந்தேகம் துளிர்விட்டது. முக்கியமான வேலையை பெண்ணொருத்தி முன்னின்று நடத்தியதை நம்பத் தயங்கினேன். அப்போதுதான் அவள் உங்களுக்கு வெள்ளியம்பலத்தில் ஏற்பட்ட கொலை முயற்சி பற்றிக் கூறினாள். அதையொட்டி உண்டாக்கப்பட்ட பாதுகாப்பு நடவடிக்கையில் அதுகை தான் தன்னை நியமித்ததாகவும் கூறினாள். மேலும் தன்னோடு பெண்கள் பலரையும் காவலுக்கு நியமித்த விவரத்தை தெரியப்படுத்தினாள். பேச்சை வைத்துக்கொண்டு அவளைச் சந்தேகிக்க முடிய வில்லை என்றாலும் எனக்கென்னவோ அவநம்பிக்கை இருந்து கொண்டே வந்தது. முழுக்க முழுக்க பெண்களை நம்பி ஒப்படைக்கக் கூடிய காரியமாய் அது தோன்றாததால் அதுபற்றிய உண்மையை அறிந்து கொள்ள அங்கேயே மறைந்து கொண்டேன் நான். என்னை அப்பெண் அறிந்திருக்கவில்லை. ஓர் உபதளபதி என்று நான் அறிமுகப்படுத்திக் கொண்டிருந்தேன். இதற்கிடையில் ஆயுதங்கள் அனைத்தும் அகற்றப் பட்டிருந்தன. அப்போது நான் அப்பெண்ணுக்கு அதிர்ச்சி வைத்தியமளித்தேன். அதுகை ஆயுதங்களை மாற்ற உத்தரவு எதுவும் பிறப்பிக்கவில்லை என்று கூறி மன்னன் அழைப்பதாகச் சொன்னேன் அவளிடம். அவளிடம் திடீரென பீதி உணர்வு உண்டாயிற்று. பிறகு வருகிறேன் என்றாள். கையோடு அழைத்து வரும்படி உத்திரவு என்றேன். அவள் தயங்கினாள். திடீரென உடைவாளை



உருவி என்னை வெட்டிப் போட பாய்ந்தாள். என் போர் முறைகள் சிலவற்றைக் காட்டி அவளை மடக்கியதும் தான் யார் என்ற விவரத்தைச் சொன்னாள். கருவூர் வேண்மாடத்து கணிகையான விழியழகி அவள். சதி செய்து சாதனை புரிய சேர நாட்டிலிருந்து நன்னனால் அனுப்பப்பட்டவள். வெள்ளியம்பலத்தில் தங்களைக் கொல்ல முயற்சித்தவளும் அவள்தான். அம்முயற்சி தோற்றுவிடவே நமது தோல்விக்கு உதவக் கூடிய வழி வகைகளைத் தேடியிருக்கிறாள். இந்நிலையில் அதுகையின் மூலம் வெள்ளியம்பலத்தில் காவல் பதவி கிடைத்தது. அதோடு ஆயுத கிடங்கு பற்றிய ரகசியமும் தெரிந்தது. சந்தர்ப்பத்தைத் திறமையாகப் பயன்படுத்திக் கொண்டாள். ஆயுதங்கள் அனைத்தையும் நிலவறை மூலம் வையையாற்று நிலவறைக்கு கொண்டு போய் விட்டால் அங்கிருந்து அவைகளை சேர சோழர் பாசறைக்குக் கொண்டு போய் விடலாம் என்றும், அதன் மூலம் பாண்டியரின் ஆயுதபலம் முற்றிலும் போய்விடும் என்றும், முதுகெலும்பற்ற நிலையில் நம்மை முறியடிக்கச் சேரனுக்கு எளிதாக இருக்கும் என்று திட்டமிட்டாள். தன் பதவியைப் பயன்படுத்தினாள். அதுகை ஆணையிட்ட மாதிரி சொல்லி எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டு காரியத்தில் இறங்கினாள். இந்த நிலையில்தான் நான் கவனித்தேன். எப்படியும் அந்த ஆயுதங்களை நாம் கொண்டு போக வேண்டியிருக்கும் என்பதால் எல்லா ஆயுதங்களும் மாற்றப்படும் வரை காத்திருந்து அவளை மடக்கினேன். இப்போது ஆயுதங்கள் எல்லாம் வையையாற்று நிலவறைக் கிடங்குகளில் பத்திரமாய் இருக்கின்றன.

அவற்றை யமன் காவல் காக்கிறான்-''

'யமனா?'-

'ஆம். அவனை ஏமாற்றுவதோ வெல்வதோ எதிரிகளுக்கு கஷ்டம்'

'யாரவன்?'-

'உதயணன். என் நண்பன்'-

'உன் நண்பனா? என்ன பதவியில் இருக்கிறான்?'

'பதவி எதிலும் இல்லை. பதவியை அளித்தால் ஏற்க மறுக்கிறான். காவல் புரிவதைக் கடமையாகக் கொண்டவன். எனக்காக உயிரையும் தரத்தக்கவன். யவனர் போர் முறைகளையும் பொறிவகைகளையும் செயல்படுத்தும் தீரன். அவனை காவலுக்கு வைத்துவிட்டேன்'-

உதயணனைப் பற்றி மன்னன் புரிந்து கொள்ள முடியாவிட்டாலும் அப்போது அவனைப் பற்றி மேலும் விசாரிக்க முற்படாமல் 'விழியழகியை என்ன செய்தாய்?' - என்று கேட்டான்.

'செய்துள்ள காரியம் விசாரணையின்றி மரண தண்டனை விதிக்கப் போதுமானதென்றாலும் பாண்டியர் நீதிக்காக அவளைத் தண்டிக்க நான் அனுமதிக்கவில்லை. தண்டனை பெறும் வரை சிறையிடுவது மரபுதான் என்றாலும் பெண் என்ற காரணத்தால் சிறையிடவில்லை- வந்த இடத்திற்கு விரட்டுவது அபாயம் என்பதால் அதையும் செய்யவில்லை'

'விட்டுவிட்டாயா?'-



'ஆம் மன்னவா. ஒரு பெண்ணுக்கு அஞ்சி வாழ வேண்டிய நிலையில் மன்னவர் இல்லை. பெண்ணொருத்தியைச் சமாளிக்க முடியாத நிலையில் பாண்டியரும் இல்லை. இப் பழையனும் இல்லை.'

''உண்மைதான் படைத் தலைவரே. ஆயுதங்களை அவள் கடத்தியிருந்தாலும் நான் சோர்ந்து விடமாட்டேன். என் கவலைக்குக் காரணம் அதுகையின் தனி சிந்தனை தான். என்னைக் கேட்காமல் எந்த ஆணையும் பிறப்பிக்க வேண்டாம் என்று சொல்லியிருந்தும் வெள்ளியம் பலத்திற்குப் பிரத்தியேகக் காவலை ஏற்படுத்தி அப்பெண்ணையும் நியமித்திருக்கிறான். இவனது செயல் பலரிடமும் வளர்ந்தால் விளைவு மோசமாகி விடுமல்லவா?'-

'அதிக அக்கறை உணர்வு அவன் அறிவை மறைத்து விட்டது மன்னவா. மற்றபடி அவன் சிறந்த வீரன். விசுவாசம் மிக்கவன். அவனிடம் நான் சொல்லிக் கொள்கிறேன். இனி இந்த நிலை வராமலிருக்கவும் வழி செய்கிறேன். கவலையை விடுங்கள்.'

உண்மையிலேயே மன்னனுக்குத் தற்போது கவலை நீங்கவே செய்தது. பழையனின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு எந்தவித வித்தியாசத்தையும் பாராமல் ''நண்பா, உன்னைச் சிறையெடுத்த சேரன் சோழனோடு வெளியே இருக்கிறானே, உன் உத்தேசம் என்ன?'- என்று வினவினான்.

படைத் தலைவன் என்ற வித்தியாசமின்றி தோளில் கையைப் போட்டதோடு 'நண்பா' என்று தோழமையுடன் அழைத்து மிகவும் முக்கியமான விஷயத்தை மிகவும்

சாதாரணமாயும் நிதானமாயும் மன்னன் கேட்டதைக் கண்டு ஒரு வித நெகிழ்ச்சியும் மகிழ்ச்சியும் அடைந்த படைத்தலைவன், 'சற்று வெளிச்சத்துக்கு வாருங்கள்'- என்றான்.

இருவரும் பாண்டில் விளக்கொன்றின் அருகே சென்றதும் இடையிலிருந்து பட்டுச் சீலையொன்றை எடுத்து விளக்கடியில் வைத்தான் பழையன். அவன் விளக்குவதற்கு முன்பாகவே மன்னனின் கண்கள் திட்டத்தைப் புரிந்து கொண்டதற்கு அறிகுறியாகப் பளிச்சிட்டது. அதைக் கண்ட படைத்தலைவன் 'மன்னருக்குப் புரிந்து விட்டதல்லவா?'- என்றதும் 'மிகவும் துணிகரமான திட்டம்'... என்றான் மன்னன்.

'மிகவும் ஆபத்தானதும் கூட'- என்றான் பழையன்.

'மொத்தத்தில் பாண்டியருக்கு உகந்த திட்டம்' என்றான் மன்னன்.

'துணிவுக்குத் துணிவு. ஆபத்துக்கு ஆபத்து. அதே சமயம் மக்களுக்கும் பாதுகாப்பு' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட மன்னன் போர் துவங்க வேண்டிய நேரம் பற்றி விவாதித்து விட்டு அந்தப்புரத்திற்குச் சென்றான்.

பழையன் அன்றிரவு நெடுநேரம் வரை உபதளபதிகளிடம் பல்வேறு திட்டங்களை விவாதித்துக் கொண்டிருந்தான். இதற்கிடையில் அதுகை அவனைச் சந்தித்து தன்னால் நேர்ந்த விளைவுகளைச் சொல்லி மிகவும் வருந்தினான். தளபதி பதவிக்கே தான் லாயக்கில்லை என்று புலம்பினான். 'மன்னரை எந்த



முகத்தோடு பார்ப்பது?' என்று கவலைப்பட்டபோது 'தனியாக வேறு முகம் தேவையில்லை. இதுவே போதும்' என்றபடி அங்கே காட்சியளித்தான் மன்னன். அதுகையைப் பேச விடவில்லை. 'தளபதி, தவறுகள் எல்லோருக்கும் சகஜம். அதை உணர்ந்து கொண்டாலே போதுமானது. தளர்ந்து விடவேண்டியதில்லை. பாண்டியத் தூண்களில் ஒன்றான நீர் கல்தூணாக உயர வேண்டிய வேளையில் உடையலாகாது. வைர நெஞ்சையும் வீர வாளையும் ஆயத்தப்படுத்துங்கள்' என்று கூறிவிட்டு படைப் பகுதிகளுக்கெல்லாம் ஒரு முறை சென்று பார்த்தான். அவனது வரவு அதுகைக்கு மட்டுமல்ல. அனைவருக்குமே தேனாய் இனித்தது. தெம்பாய் உயர்ந்தது.

மறுநாள் காலை - சேர சோழர்கள் கண் விழித்த போது கண்முன்னே பெரும் ஜாலத்தைக் கண்டார்கள். பாண்டியர் ஜாலமோ என்று மருண்டார்கள்.

◈◈◈

முரசு முப்பத்தொன்று

## கோட்டைப் போர்

கோட்டையை முற்றுகையிட்டிருந்த எதிரிகள் விடியற்காலை நேரத்தில் பேரிடி போன்றதொரு பேரோசை கேட்டதும் சிலிர்த்தெழுந்து நோக்கிய போது மேலைக்கோட்டை வாயிலில் பெரும் மாயாஜாலம் ஒன்று நிகழ்ந்ததைக் கண்டார்கள். கோட்டை வாயிற் கதவு திடீரென பேரொலியுடன் திறந்து கொண்டன. அதையடுத்துச் சிறிதும் எதிர்பாராத வகையிலும் நம்ப முடியாத வகையிலும் கதவுகளைப் பிணைத்திருந்த கோட்டைச் சுவர்களே பக்க வாட்டத்தில் விலகி பெரும் இடைவெளியைக் கொடுத்தன. 'இதென்ன மாயம்? கோட்டைச் சுவர் நகருவது எப்படி சாத்தியம்? இதுதான் பாண்டிய ஜாலமோ?' என்று அவரவர்களும் கேள்விகளை எழுப்பி பதில் சொல்வதற்கு முன் பிரளய கலக்கம் உண்டானது போல் அந்த கோட்டை வாயிலின் அகன்ற இடைவெளியிலிருந்து போர் யானைகள் மிக பயங்கரமாக ஓடிவந்தன படைகளைநோக்கி. அந்த யானைகளின் மீது வீரர்கள் யாருமில்லை. எதிர்பாராத நேரத்தில் மூர்க்கமாக வந்த அந்த யானைகளை அழிக்க முற்படும் முன் அவை முந்திக் கொண்டன. பூச்செடிகளின் மீது மலைகள் பெயர்ந்து மோதினாற் போல் முன்னணி வீரர்கள் மீது பலமாக மோதி கண்டபடி துவம்சம் செய்தன அந்த



யானை மலைகள். மதங்கொண்ட விலங்குகளைப் போல் அவை மூர்க்காவேசமாக துவம்சம் செய்த அதே நேரத்தில் மேலும் ஒரு யானைப்பிரிவு அவற்றுக்குப் பின்னால் வந்தது. அவற்றின் மீது பூரண கவசமணிந்த வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் யானைகளைத் திறம்பட இயக்கி அவற்றைப் படைகளின் இடையே ஊடுருவிச் செல்லவும் அதனால் கிடைத்த இடைவெளியில் பாண்டியர் புரவிப்படையொன்று மேகத்திரளைக் கிழித்து வெளிப்பட்ட மின்னல் கொடிபோல் தோன்றி புயலாய் முன்னேறி எதிரிப்படையின் பின்புறத்திற்கு ஊடுருவியது. அப்படையின் முகப்பில் பூரண கவசமணிந்து அமர்ந்திருந்தான் பாண்டிய மன்னன். எதிரிப் படையை அவன் புரவிப் படையுடன் ஊடுருவிய போது வாழ்த்தொலிகள் பெரியதாய் எழுந்தன.

மேலே சொன்ன நிகழ்ச்சிகள் ஏதோ சாவகாசமாக நடைபெறவில்லை. நடந்திருந்தால் இன்னேரம் அழிந்திருக்கும். ஆனால் கச்சிதமாக திட்டமிடப்பட்டு மயிரிழை பிசகாமல் சில கணங்களுக்குள் நடந்து விட்டன. இதற்குப் பின்பே சுதாரித்துக் கொண்டன மேலைவாயில் முன் நின்றிருந்த சேரர் படை. சுதாரிப்பு உண்டான சில நொடிகளிலேயே வில் வீரர்கள் அம்பு மழையை உருவாக்கினார்கள். அக்காரியத்தில் முன்யோசனை இல்லாமல் போயிற்று. தங்களை நோக்கி வந்த யானைகளை வீழ்த்தும் ஆவேசத்தில் அவற்றின் மீது அம்பு மழையைத் தொடுத்ததும் அவஸ்தைக்கு ஆளான அவைகள் கண்மூடித்தனமாகப் படை வீரர்களை அழித்து நாசம் செய்யத் தொடங்கின. பல யானைகள் பயங்கரமாகப் பிளிறி தாறுமாறாக ஓடின.

இதற்கிடையில் தன் படைகளுக்குப் பின்புறம் வந்து விட்ட பாண்டிய மன்னனையும் அவனது புரவிப்படை களையும் அழிக்கத் தன் படைகளின் பின்புற அணிகளுக்கு உத்திரவிட்டான் யானைக்கண்சேய். அவனது சின்னஞ் சிறு கண்கள் மிகுந்த கோபத்தைக் காட்டின. தன்னைச் சிறிது நேரத்தில் ஏமாற்றிவிட்ட பாண்டியன் நெடுஞ்செழியனை அழிக்கும் ஆவேசத்தில் பலவிதமான கட்டளைகளை தளபதிகளுக்கு இட்டுவிட்டு பின்புற அரங்கை அடைந்தான் அவன். அங்கே வெள்ளிக் கவசமணிந்தபடி புரவியில் அமர்ந்திருந்த பாண்டியனின் மீது பெரு வேகத்துடன் தன் குறுவாளை எடுத்து வீசினான். குறுவாள் குறிதவறாமல் போய் விழுந்து வீழ்த்தியது.

''ஒழிந்தான் பாண்டியன்' என்று ஆவேசப்பட அவன் முயன்றபோது மேலைக் கோட்டை வாயில் பகுதியில் சேர மன்னனைக் குழப்பும் அரவங்கள் எழுந்தன.

'பாண்டிய மாமன்னர்...'

'வாழ்க வாழ்க'

'சக்கரவர்த்தி நெடுஞ்செழியர்'

'வாழ்க வாழ்க'

'கூடல் கோமான்'

'பகையறுக்க வந்த புரவலன்'

'வாழ்க வாழ்க'

இந்த அரவங்களை அடுத்து மேலைத் திசையில் சூரியன் உதித்தாற் போல் பளபளக்கும் கவசத்துடன்



இளங்கன்றின் துள்ளலுடன் புரவியில் வெளிப்பட்டான் நெடுஞ்செழியன். அவனுக்கு முன்னும் பின்னுமாகப் புரவிப்படை வெகு வேகமாக வந்தது. சேரர் படையின் முன்புறத்தில் தாக்குதலைத் தொடங்கியது.

சேர மன்னனுக்கு ஒருகணம் ஒன்றுமே புரியவில்லை. பைத்தியம் பிடித்து விட்டமாதிரி இருந்தது அவனுக்கு. தான் சற்றுமுன் பாண்டிய மன்னனை குறுவாள் வீசி வீழ்த்தி விட்டபின் எப்படி கோட்டை வாசலில் முளைத்தான் என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டான். தான் நன்றாக ஏமாற்றப்பட்டு விட்டோம் என்பது சில கணங்களிலேயே புரிந்தது அவனுக்கு. தான் சற்று முன்பு வீழ்த்தியது வெறும் கவசமாகத் தான் இருக்க வேண்டும் என்றும், தனது வீரர்களை ஏமாற்ற வெற்றுக் கவசமொன்றைப் புரவியில் ஏற்றி வாழ்த்தொலிகளை எழுப்பியிருக்கிறான் பாண்டியன் என்றும் உணர்ந்து கொண்டான். ஒரு கணம் அதற்காக வெட்கப்பட்டான். சில கணங்களிலேயே அவனது பிறவிக் குணம் தலையெடுத்தது. வீரர்களுக்குரிய உணர்வு பெருக்கெடுத்தது. தான் சேரமன்னன் என்ற அரச உணர்வு அவனைத் தட்டிக் கொடுத்தது. கையிலிருந்த போர்ச் சங்கை எடுத்துப் பலவிதமாக ஊதினான். அதையடுத்து படை நிலைகளில் பற்பல மாறுபாடுகள் உண்டாயின.

திடீரென உண்டான மாறுபாடுகள் சீராய் இருந்ததையும் இது சேரர் படைகளுக்குள் ஒரு விதக் கட்டுக்கோப்பை உண்டாக்குவதையும் கண்டான் நெடுஞ்செழியன். சேரனின் நெஞ்சுரம் அவனுக்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தது. விரைவிலேயே படை அணிகள் ஓர் ஒழுங்குக்கு

வந்துவிடும் என்று உணர்ந்த அவன் அதற்கு இடமளிக்க விரும்பாமல் கைகளை ஆட்டி சில சைகைகளைச் செய்தான். அதையடுத்து பேரிகை சில ஒலித்தன. உடனே அவனது புரவிப்படையும் பின்புறத்தில் இருந்த புரவிப் படையும் சூறாவளியாயின. பாம்புபோல் வளைந்து மின்னல் கீற்றுகள் போல் ஆங்காங்கே ஊடுருவின. இந்த ஊடுருவல் சேரனின் முயற்சியைக் குலைத்தது.

சங்குகளை ஊதி தனது படைகளில் இருந்த யானைப் படை, குதிரைப்படை, காலாட்படை, விற்படை ஆகிய வற்றைப் பிரிக்க முயன்றான் சேர மன்னன். அப்படிப் பிரித்து விட்டால் ஓர் ஒழுங்கிற்கு அவை வந்து விடும் என்றும் பிறகு அணி வகுத்துப் போரிட எளிதாய் இருக்கும் என்றும் நினைத்தான். அதைப் பாண்டிய மன்னன் குலைத்து விடவே தன் யோசனையை மாற்ற முற்பட்டு மேலைக் கோட்டை வாயிலை நோக்கினான். வாயிற்கதவுகள் திறந்திருக்கவில்லை. கோட்டைச் சுவரும் பிரம்மாண்டமான இடைவெளி கொடுத்து விலகியிருக்கவில்லை. பழையபடி நெருங்கியிருந்தன. கதவுகள் மூடியிருந்தன. மேலே தளத்தில் வீரர்கள் பலர் நிறுத்தப்பட்டிருந்தார்கள். எண்ணெய்க் கொப்பரைகள் காய்ச்சப்பட்டுக் கொண்டிருந்ததால் புகை உண்டாகத் தொடங்கியிருந்தது. எனவே அங்கே செய்வதற்கு எதுவும் இல்லை என்று உணர்ந்த சேரன் தெற்கு வாயிற்புறத்தில் இருந்த சோழர் படைகளை அழைக்க உத்தேசித்து கொம்புகளை இருமுறை முழக்கச் செய்தான்.

சேரனின் கொம்பொலியைக் கேட்டு தெற்கு வாசற் புறமிருந்த சோழ மன்னன் பெருநற்கிள்ளி தன் புரவிப் படைகளை மேலை வாயிற் பகுதியை நோக்கி



நகரவிட்டான். யானைகளை மட்டும் வாசற்படியிலேயே நிறுத்திவிட்டு புரவிப் படைகளைப்பின் தொடர்ந்தான். அவனது புரவிப்படை முற்றிலுமாக நகர்ந்ததும் தெற்கு கோட்டை வாயில் திறந்தது. பாண்டியர் படைத் தலைவனான பழையனின் தலைமையில் சீராக அணிவகுக்கப்பட்டு நிதானமாக வெளிபட்டது மகத்தான கோசர் படை.

இக் கோசர் படை பாண்டியரது படைப்பிரிவில் மிகவும் சிறப்புப் பெற்றதாய் இருந்தது. இப்படை பழையனின் தலைமையில் இயங்கி மகத்தான சாதனைகளைப் புரிந்து வந்தது. இக் கோசர்கள் சொன்ன சொல் தவறாத பண்பாளர்களாய் இருந்ததால் 'சத்யபுத்ரா' என்று அழைக்கப்பட்டனர். பேரரசரான அசோகர் தென்னிந்தியாவை நோக்கி படையெடுத்து வந்தபோது அவரால் முறியடிக்க முடியாமல்போன பேரரசுகளில் ஒன்று சத்யபுத்ரர்களுடைய அரசு என்று அவரது கல்வெட்டு கூறுகிறது. இப்படி அசோகராலேயே முறியடிக்க முடியாத வல்லரசாய் இக்கோசர்கள் தற்போது கர்நாடகாவில் உள்ள மங்களூரையும் அதைச் சார்ந்த பகுதிகளையும் கொண்ட துளு நாட்டில் இருந்து வந்தனர். காலம் செல்லச் செல்ல இவர்களுக்கு பற்பல நாடுகளுக்குச் சென்று வாழும் ஆசை உண்டாயிற்று. அதையொட்டி தமிழகத்தில் நுழைந்து நாடோடிகளாய் திகழ்ந்தார்கள். போர்க்கலையைப் பயின்று வல்லவராய் விளங்கினார்கள். தமிழகத்தில் ஆங்காங்கே ஆண்ட சிற்றரசுகளில் ஊழியம் செய்தார்கள். ஒரு நிலையில் நாடோடி வாழ்வை வெறுத்து கீழைக் கடற்கரைப் பகுதியையடுத்த செல்லூருக்கு அருகிலிருந்த நியமத்தில்

நிலையான வாழ்வை மேற்கொண்டார்கள். அந்த நிலையில்தான் பாண்டிய மன்னனாக முடிசூடிய நெடுஞ்செழியன் அவர்களது சிறப்புகளை உணர்ந்து தன் படைப்பிரிவு ஒன்றாக அவர்களை அமைத்து அப்பிரிவை பழையனின் தலைமைக்கு உட்படுத்தினான்.*

இக்கோசர்கள் கொங்கு நாட்டிற்கு வந்து குடியேறிய போது அவர்கள் வாழ்ந்த இடம் கோசர்புத்தூர் என்று வழங்கப்பட்டது. இவ்விடமே பிற்காலத்தில் மருவி கோயர் புத்தூராகியது. தற்போது கோயம்புத்தூர் என்றும் கோயமுத்தூர் என்றும் அழைக்கப்படுகிறது.**

இக்கோசர்கள் வடபாரதத்தை ஆண்ட கனிஷ்கரின் மரபினரான குஷான்களே என்றும் அறிஞர் சிலர் கூறுகின்றனர்.*** இது எந்த அளவிற்கு உண்மையானது என்பது தெரியவில்லை. ஒரு வேளை துளு நாட்டில் குடிபெயர்வதற்கு முன் வட இந்தியாவில் இருந்திருக்கலாம்.

எது எப்படியானாலும் கோசர்களின் போர்த் திறமை மிகவும் சிறப்பாக இருந்தது என்பதைச் சந்தேகத்திற் கிடமின்றித் தெரிவிக்கின்றன சங்ககால நூல்கள்.

* கோசரைப் பற்றிய இக் குறிப்புகளையும் மேலும் பல விவரங்களையும் கா. கோவிந்தனின் 'சங்க கால அரசர் வரிசை எண் 2' பக்கம் 109-112 காணலாம்.

** கொங்கு நாட்டு வரலாறு - மயிலை வேங்கடசாமி பக்கம் 63-65

*** 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' (1956) பக்கம் 97

by வி. கனகசபை



எது எப்படியானாலும் கோசர்களின் போர்த் திறமை மிகவும் சிறப்பாக இருந்தது என்பதைச் சந்தேகத்திற் கிடமின்றித் தெரிவிக்கின்றன சங்க கால நூல்கள். பகைவரை வெல்வதிலோ கொல்வதிலோ தப்பாத வாட்களை உடைய கோசர்கள் என்று பாண்டியனின் குருநாதரான மாங்குடி மருதனார் பின்னால் மதுரைக் காஞ்சியில்* சிறப்பிக்கப்பட்ட கோசர் படை பதட்டமின்றி மிகவும் சீராக வெளிப்பட்டது. படையின் முகப்பில் இருந்த வில் வீரர்கள் கொடுமையான நஞ்சு தீட்டிய அம்புகளைத் தொடுத்து வெளியே இருந்த சோழர்களது யானைகளின் மீது எய்தார்களாதலால் அவை அத்தாக்குதலுக்கு இரையாகி பெரியதாகப் பிளிறியவாறு திரும்பி ஓடின. அம்புத் தாக்குதல் இடைவிடாமல் தொடர்ந்ததால் மிக் வேகமாக ஓடிய யானைகள் அவைகளுக்கு முன்னால் சென்ற சோழன் பெருநற்கிள்ளியின் படை மீதே போய் மோதி சின்னா பின்னம் செய்யத் தொடங்கின. இந்த நிலையில் முன்னேறி வந்த பழையன் தன் வாளை இருமுறை ஆட்டவும் கோசரின் புரவிப்படை யானைகளை விட்டு பக்கங்களில் விலகி சோழர் படையை இருபுறமும் தாக்கத் தொடங்கியது. தாக்குதல் சீராகவும் உறுதியாகவும் இருந்தது. பழையன் சற்றே வேகமாக முன்னேறி சோழர் படையின் ஆரம்ப நிலையைத் தாக்கவே பெருநற்கிள்ளி சேரர் படைக்கு உதவ முடியாத நிலையில் பழையனை எதிர்கொண்டான்.

* 'கடந்தடு வாய்வாள் இளம்பல் கோசர்'
வரி 773 மதுரைக்காஞ்சி

சிறிது நேரத்திலேயே கூடல்பறந்தலையில் போர்க்களம் மும்முரமாகியது. கோசர்களின் வரவு இதர பாண்டிய வீரர்களை உசுப்பி விட்டதால் அனைவருமே காலருத்ரகளானார்கள். சோழ மன்னனை பழையனே எதிர்கொண்டு எதிர்த்தான். சிதறிக்கொண்டிருந்த சேரசோழ படைகளை பாண்டிய வீரர்கள் பலமாக எதிர்க்க முனைந்தார்கள். போரின் நிலையும் போக்கும் கோட்டையின் கிழக்கு வாசல் புறத்தில் இருந்த எழினிக்குத் தெரியவந்தது. மிகவும் வேதனையும் கொதிப்பும் அடைந்த அவன் தனக்குப் பின்னால் இருந்த சேரர் தூசிப்படையை நோக்கினான். அவனுக்குள் புதியதிட்டம் ஒன்றும் உருவாயிற்று.

## முரசு முப்பத்திரண்டு

# பாண்டிய வெற்றி

சேர சோழர் படைகளின் கதி மோசமாகிக் கொண்டே வருவதாகக் கேள்விப்பட்டபோது எழினிக்கு ஒருபுறம் வருத்தமாகவும் மறுபுறம் வெறுப்பாகவும் இருந்தது. தற்போதைய கதிக்குச் சேரமன்னனே காரணம் என்று கருதினான் அவன். தான் கூறியபடியே திட்டத்தை ஏற்று செயல்பட்டிருந்தால் இந்தநிலை வந்திருக்காது என்பது அவன் அபிப்ராயமாய் இருந்தது. வெற்றியைக் குறிக்கோளாகக் கொண்டவன் வேகமாகச் செயல்பட வேண்டும் என்பதும் எதிரிக்கு அதிக அவகாசம் தரக்கூடாது என்பதும் போர் சித்தாந்தங்களாக இருக்கும் போது அதை முற்றிலுமாகக் கைவிட்டு தன்னையே பெரிதாக எண்ணி நிலைமையைக் கெடுத்துக் கொண்டதாகவே சேரனைக் கருதினான் எழினி. அதோடு அவனது திட்டங்கள் அனைத்தும் பாண்டியர் படைத்தலைவன் பழையனைச் சுற்றியே மாறி மாறி தீட்டப்பட்டு வந்தன. இது பெரிய பலவீனம் என்பதே எழினியின் கருத்தாய் இருந்தது. பழையனின் பராக்கிரமம் பிரசித்தமானதுதான் என்றாலும் போர் அரங்கில் நிலைமை ஒரே சீராக இருக்காது என்பதும், அங்கே பழையன் ஒருவன் மட்டுமே எதையும் சாதித்து விட முடியாது என்பது சாதாரண உண்மைகளாய் இருக்கும்போது சேரனின் திட்டங்கள் ஏன் பழையனையே மையமாகக் கொண்டன என்று தனக்குத்

தானே கேட்டுக்கொள்ளவும் செய்தான். சரியான தீர்க்க தரிசனம் இல்லாத இச்சேரன் எந்த தைரியத்தில் இப்போரை முன்னின்று நடத்த முன் வந்தான் என்றும், இவனைப் போய் சோழன் பெருநற்கிள்ளி எப்படி நம்பினான் என்றும் சந்தேகித்த அவன் சோழ மன்னனுக்காக வருந்தவும் செய்தான். இந்த நிலையில் சேரன் ஆணைக்காகக் காத்திருக்க அவன் தயாராக இல்லை. அவனது பொறுமை பறி போயிற்று. நிலைமை முற்றிலுமாக சீர்கெட்டபின் சேரனுக்கு உதவுவதென்பது விழலுக்கு இறைத்த நீராகத்தான் இருக்கும் என்று கருதிய எழினி தானாகவே செயல்படத் தீர்மானித்தான். சேரனை விடத் தன்னிடமிருந்த தூசிப்படைகள் மீது அவனுக்கு அதிக நம்பிக்கை இருந்ததால் தனக்கு முன்னாலிருந்த கிழக்குக் கோட்டை வாயிலைத்தாக்க உத்தேசித்து உரிய கட்டளைகளைத் தன் யானைப்படை வீரர்களுக்கிட்டான்.

அடுத்த நிமிடம் தூசிப்படைகள் வேகமாக இயங்கின. கோட்டை வாயிலின் முகப்பில் புகைமண்டலம் உருவாக்கப்பட்டது. கோட்டை மதிலில் இருப்போரின் கண்களை மறைக்க. புகை மண்டலத்தைத் திரையாகப் பயன்படுத்தி கவசமணிந்த தூசிப்படையினர் கிழக்குக் கோட்டைச் சுவரையடுத்த அகழியில் நச்சுப் பொடியினைக் கவிழ்த்தார்கள் முதலைகளைச் சாகடிக்க. காவற்காட்டு முகப்பு மரங்கள் வெட்டப்பட்டு அவை அகழியில் போடப்பட்டன அகழியைக் கடக்க. இந்த சமயத்தில் கோட்டையின் மீதிருந்த பாண்டியர் படை சும்மாயிருக்கவில்லைதான். அம்பு மழையைப் பொழியவே செய்தார்கள். ஆனால் புகைமண்டலம் உருவாகியிருந்ததால் அவர்களால் குறி வைக்க



முடியவில்லை. படுபவர்கள் மீது படட்டும் என்று எய்த வண்ணம் இருந்தார்கள். அப்படி வந்து விழுந்த அம்புகள் கவசமணிந்த தூசிப் படையினரை அவ்வளவாகத் தாக்கவில்லை. அதோடு தூசிப்படையினர் கீழிருந்தபடி மதிலின் தளத்தை நோக்கி இடைவிடாமல் அம்புகளையும் நச்சு தோய்ந்த கற்களையும் வீசவே தளத்தில் பாண்டிய வீரர்கள் உறுதியாக நின்று போரிட முடியவில்லை. எனவே துளை மாடங்களையே அவர்கள் அதிகம் நம்பவேண்டியிருந்தது. இதற்கிடையில் எழினியின் கட்டளையின் பேரில் கூலிப்படையினரின் ஒரு பிரிவினர் தங்களிடமிருந்த மூங்கில் கூடைகளைத் திறந்து அதிலிருந்து கொடிய சர்ப்பங்களை கோட்டை மதிலை நோக்கி வீசினார்கள் - மேலே நிற்கும் பாண்டிய வீரர்களை அழிக்க. பல பாம்புகளை மதிலுக்கு உட்புறமும் வீசினார்கள். உள்ளே இருக்கும் வீரர்கள் அலறி ஓட. பாம்பென்றால் படையும் நடுங்கும் அல்லவா? அதை மெய்ப்பிக்க முற்பட்டார்கள். முழுக்க முழுக்க தன் தூசிப்படைகளைக் கொள்ளைக்காரர்களைப் போல் இயக்கிய எழினி இதற்கிடையில் அகழியில் போடப்பட்ட காவற் காட்டு மரங்களால் உண்டான பாலத்தைப் பயன்படுத்தி தன் யானைகளை அனுப்பினான். பயிற்சி பெற்ற யானைகள் மரத்தண்டுகளாலும் பாறைகளாலும் கதவுகளை மூர்க்கமாகத் தாக்கின. தன்மீது வந்து வீழ்ந்த அம்புகளைப் பிடுங்கிக் கோட்டை மதில் மீது வீசியெறிந்து விட்டுத் தாக்குதலைச் சளைக்காமல் தொடுத்தன அந்த யானைகள். மூர்க்கமான அத்தாக்குதலால் கோட்டைக் கதவு உடைந்து விழுந்தது. அதையடுத்து பாறைகள் உடைந்து சரிவது

போல் யானைகள் உள்ளே பிரவேசித்தன. அதே சமயம் எதிர்பாராத அதிசயங்கள் பல தொடர்ந்தன.

யானைகள் புகை மண்டலத்தின் ஊடே கோட்டை வாயிற் கதவுகளை இழுத்து வெளியே எறிந்து விட்டு உள்ளே நுழைந்த சிறிது நேரத்திலேயே மேலை வாயிலில் நடந்தது போல் கோட்டைச் சுவர்கள் அகல வாட்டத்தில் ஒதுங்கி பெரிய இடைவெளியைக் கொடுத்தது. இடைவெளி அதிகமானதும் யானைகளும் அதிக எண்ணிக்கையில் உள்ளே நுழைந்தன. ஆனால் உள்ளே பிரவேசித்த சில நிமிடத்திலேயே தரை பிளந்தது. பிளந்ததால் உண்டான பிரம்மாண்டமான பாதாளத்தில் யானைகள் தடால் தடாலென வீழ்ந்தன. பல மரண ஓலமிட்டன பெரிதாய். பல முதலைகள் வாய்விட்டுப் பிளிறின. பல அப்பாதாளத்தில் கசிந்த நச்சு நீரைப் பருகி அமைதியாய் மாண்டன. ஒன்றின் மேல் ஒன்றாய் விழுந்து மலைகள் மோதியது போல் மோதி உருண்டதால் கோட்டைப் பகுதியில் இடியோசைகள் உண்டாயின.

பாதிக்கும் மேற்பட்ட யானைகள் இவ்வாறு கண் மூடித்தனமாய் மோதி நுழைந்தது பாதாளத்தில் விழுந்து மாண்டதைக் கண்ட எழினி பெருவியப்படைந்தான். கோட்டைச் சுவர் நகரும் விந்தையை அவன் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. புகை மண்டலத்தை உண்டாக்கி விட்டிருந்த காரணத்தால் கோட்டைச்சுவர்கள் சத்தமின்றி நகர்ந்து இடைவெளி அளித்ததைச் சரியான நேரத்தில் அவனால் கவனிக்க முடியவில்லை. முடிந்திருந்தால் யானைகளை உள்ளே நுழைய விடாமல் தடுத்திருப்பான். ஆனால் அவன் போட்ட புகைத் திரை அவனுக்கே இடைஞ்சலாக அமைந்தது.



சுவர் விலகியது ஒருபுறம் இருந்தாலும் உள்ளே நுழைந்த யானைகள் எப்படி அழிந்தன என்பது முதலில் பெருவியப்பாய் இருந்தது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அந்த விபரீதத்தையும் உணர்ந்து கொண்டான். கோட்டை வாயிலின் உட்புறம் பெரிய பாதாளம் தோண்டப்பட்டு பொய்யாக மூடி மூடப்பட்டிருக்க வேண்டும் என்றும், அந்த ஏற்பாடு உள்ளே நுழையும் எதிரிப்படையை முற்றிலுமாகச் சமாதி கட்டுவதற்காகவே என்றும் உணர்ந்து கொண்டான். அதோடு சுவற்றின் உட்புறமும் அகழி இருக்கவேண்டும் என்றும் அதில் உள்ள முதலைகளிடமும் சில யானைகள் சிக்கியிருக்க வேண்டும் என்றும் புரிந்தது அவனுக்கு.

மற்றொரு கேள்வியும் எழுந்தது அவனுக்கு. 'கோட்டையின் வெளிமதிற் சுவற்றைப் போல் உள் மதிலும் நாற்புறமும் உண்டென்று சொன்னானே நன்னன், அதெங்கே போயிற்று?' என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டான். வெளி மதில் சுவர் நகர்ந்தமாதிரி உள் மதிலும் கணிசமான அளவிற்கு நகரக்கூடியதாய் இருக்க வேண்டும் என்றும், இப்படிக் கோட்டைச் சுவற்றையே நகர்த்தும் அளவிலான எதிர்பார்க்க முடியாத ஏற்பாடுகள் கோட்டையைக் காவல் புரியும் யவனர்கள் வேலையாகத்தான் இருக்க வேண்டும் என்று முடிவு செய்தான். ஆகா! கோட்டைக் காவல் யவனர்களுடையது என்ற விவரத்தை முதலில் ஊகிக்காமல் போனோமே! ஊகித்திருந்தால் ஓரளவிற்கு எச்சரிக்கையாக இருந்திருக்கலாமே! நம்மைவிட பயங்கரமானவர்களாக அல்லவா இருக்கிறார்கள் பாண்டியர்கள்? பெருமளவிலான யானைகளையும் தூசிப்படை வீரர்களையும் ஒரு

பாண்டிய வீரனைக்கூட வீழ்த்தாமல் பலிகொடுத்து விட்டோமே! இனி என்ன செய்வது?' என்று பலவாறு குழம்பினான் எழினி.

சதியானாலும் சரி - போரானாலும் சரி போர் தர்மங்களைவிட கொள்ளையர் சாமார்த்தியத்தையே அதிகம் பயன்படுத்தும் வழக்கம் கொண்டவனும் அந்த நடைமுறையில் ஓரளவு வெற்றியும் கண்டவனுமான தகடூர் தலைவன் தடுமாறி நின்ற இந்நிலையில் பேரிடி விழுந்த மாதிரி வேறொரு சம்பவமும் நடந்தது. யானைகள் மாண்டு குழப்பம் உண்டாகிக் கொண்டிருந்த நேரத்தில் தெற்கு வாசலைத் திறந்து கொண்டு பாண்டியரின் யானைப் பிரிவொன்றும் விற்படை பிரிவு ஒன்றும் வெளிப்பட்டு எழினியின் எஞ்சிய தூசிப் படைகளைப் பின்புறம் தாக்கின. வில் வீரர்கள் அம்புகளை யானைகள் மீது சரமாரியாகத் தொடுத்தார்கள். புகை மண்டலம் பெருமளவு விலகிவிட்ட நிலையில் யானைப்படை பிரிவிற்குத் தலைமை வகித்து வந்திருந்த தளபதி அதுகை தாக்குதலை மும்முரப்படுத்தினான்.

பின்புறத்திலே துவங்கிய மும்முரமான தாக்குதலால் எழினியின் யானைப் படை பின் வாங்கவும் முடியவில்லை. முன்னேறிப் போய் கோட்டை வாயிற்புற பாதாளத்தில் விழ மட்டுமே முடியக்கூடியதாய் இருந்தது. போதாத குறைக்கு மதில்மீது பாண்டிய வீரர்கள் தோன்றி எழினியின் படை மீது அம்புத்தாக்குதல்களைத் தொடங்கினார்கள். இருபுறமும் இடிபடும் நெருக்கடியை உணர்ந்தான் எழினி. தனக்குச் சமாதி கட்டிக் கொள்ள அவன் விரும்பவில்லை. முன்னெச்சரிக்கையும் முன்னேற்பாடும் இல்லாமல் ஈடுபட்டதால் உண்டான



அசந்தர்ப்பத்தை வேறொரு சந்தர்ப்பத்தால் சரிசெய்து கொள்ளத் தீர்மானித்து சற்றே விலக முற்பட்டபோது தனக்கு முன்னால் போராயத்தமுடன் அதுகை நெருங்கியிருப்பது தெரிந்தது.

மறுகணம் இரு யானை வீரர்களும் யானை மீதிருந்த படியே போரிட்டுக் கொண்டார்கள். அந்நிலையில் மேலை வாயிற் புறத்தே பாண்டிய மன்னனை வாழ்த்தும் கோஷமும் கொம்பொலியும் கேட்டதால் போர் ஒரு முடிவிற்கு வந்துவிட்டதை உணர்ந்தான். இனியும் போர் புரிய விரும்பாமல் தன் இடையில் இருந்த குறுவாளை எடுத்து திடீரென அதுகையின் இடது தோளில் எறிந்து விட்டு போர்க்களத்திலிருந்து விலகினான். யானையின் அம்பாரியிலிருந்து சாயவேண்டிய நிலையில் அதுகையின் வலது கையிலிருந்து கதாயுதம் பறந்தது. எழினியின் தலைக் கிரீடத்தைப் பெயர்த்துக் கொண்டு விழுந்தது. எழினி வெகு லாவகமாக யானையை இயக்கித் தப்பித்தான்.

ஃ ஃ ஃ

எழினி நடவடிக்கையில் இறங்கியிருந்த அதே நேரத்தில் மேலை வாயிற் புறத்தில் சேரர் படைக்கும் பாண்டியர் படைக்கும் கடுமையான போர் நடைபெற்றுக் கொண்டிருந்தது. சிதறிக் கிடந்த சேரரின் படைகளை ஒழுங்குபடுத்த சேரமன்னன் இரும்பொறை எடுத்த முயற்சியை பாண்டியன் நெடுஞ்செழியன் குலைத்து விட்டதாலும், பாண்டிய வீரர்கள் திட்டமிட்டபடி நடந்து அணிகுலையாமல் போரிட்டதாலும் சேரர்கள் நிலை திருப்திகரமானதாக இல்லை. நெடுஞ்செழியனும் தனது

கன்னிப் போரைச் சிறப்பிக்கும் உத்வேகத்துடன் இருந்ததால் அவனது வாள்வீச்சு மின்னல் வீச்சாயிருந்தது. காணுமிடமெல்லாம் தோன்றியது அவன் புரவி, அவனது எண்ணத்தை உணர்ந்து கொண்டாற்போல் ஒத்துழைத்தது. பளபளக்கும் கவசமும் தேஜஸ் துலங்கும் முகமுமாய் கதிரவனின் குமாரனைப் போல் அக்காலை வேளையில் போர்க்களத்தைக் கலக்கிய இளம்பாண்டியன் அப்போரின் அடிப்படையான இரும்பொறையைச் சந்திக்க எண்ணி அவனைத் தேடினான். அவனோ எங்கும் புலப்படவில்லை. அவனப்படி காணப்படாதது சேர வீரர்களுக்கே ஒருவித குழப்பத்தை அளித்ததால் அவர்களது போர் முறைகளில் உறுதியில்லாமலிருந்தது. அதோடு சோழர் படைகளுக்கு அழைப்பு விடுக்கப்பட்டும் அவை வந்து சேராததாலும் பிறகு அப்படைகள் பழையனால் கத்தரிக்கப்பட்டு விட்ட விஷயம் தெரிந்து விட்டதாலும் சேர வீரர்கள் சோர்வு அடைந்தனர்.

கிழக்கு வாயிற் புறத்திற்கு அருகில் அமைந்த போர்க்களத்தில் இறங்கியிருந்த பழையனின் அணுகுமுறை வித்தியாசமானதாய் இருந்தது. அவன் சர்வ நிதானமாகப் போர் புரிந்தான். ஆனால் தாக்குதல் உறுதியாய் இருந்தது. விளையாடுவது போல் வாளை வீசினாலும் வாள்பட்ட இடத்திலெல்லாம் சோழர்கள் கூற்றத்தின் வாய்ப்பட்டு விழுந்தார்கள். இகழ்ச்சியான சிரிப்புடன் வளைய வளையப்போய் வாள் வீச்சை நடத்தினான் பாண்டியர் படைத்தலைவன். அவனுக்குக் கீழ் இயங்கிய கோசர் படை காலன் படை போல் இயங்கியது. கடுமையான போர் பயிற்சி பெற்றிருந்த



அக்கோசர்கள் அப்பயிற்சியை நிறைவேற்றுதற்கு அப்போர்க்களம் சரியான இடமாக அமைந்து விட்டதால் பரம திருப்தியுடன் போரிட்டார்கள்.

சோழர் படையின் நடுவே புகுந்து அதை இரண்டாகப் பிளந்துவிட்ட நிலையில் சோழ மன்னனை எதிர் கொண்டான் பழையன். போரின் நிலையை ஓரளவிற்கு அறிந்து கொண்டிருந்த பெருநற்கிள்ளி ஒருபுறம் கவலையடைந்தாலும் நம்பிக்கையையோ துணிவையோ இழக்க விரும்பாமல் பழையனை கடுமையாக எதிர்த்தான். ராச சூய வேட்கை அவனது ரத்தத்தைச் சூடாக்கியது. அரசகுல வீரம் பொங்கி எழுந்தது. அவற்றால் உண்டான உத்வேகத்தை வாள் வீச்சில் காட்டி பழையனின் வாளைச் சந்தித்தான் அவன். சோழமன்னனின் போர் சிறப்பாக இருந்தது மட்டுமின்றி ஓரிரு முறை தன்னைத் தடுமாறவும் வைத்ததைக் கண்ட பாண்டியர் படைத் தலைவன் அதுவரை அலட்சியமாகவும் விளையாட்டாகவும் நடத்திக் கொண்டிருந்த போர் முறையை மாற்றி ருத்ராவேசம் கொண்டு வேங்கையெனப் பாய்ந்தான். சோழனின் வாள்வீச்சு இதே ரீதியில் தொடர்ந்தால் அது சோழ வீரர்களுக்குப் புதுத்தெம்பை அளித்து விடும் என்றும், தளர்ந்து கிடக்கும் அவன் படை ஒழுங்கிற்கு வந்து வேகத்தைப் பெற்றுவிடும் என்றும், அந்நிலை உருவாகிவிட்டால் ஆபத்தாகி விடும் என்றும் உணர்ந்து கொண்ட பழையன் சங்கொன்றை ஊதியதும் கோசர் படை இருமருங்கிலும் வளைந்து சோழர் படையை நொறுக்கத் தொடங்கியது. பழையன் தனது கனமான வாளை அனாயாசமாகச் சுழற்றி சோழ மன்னனின் நீண்ட

வாளைத் தாக்கினான். அவனது புரவி முன்னங் கால்களைத் தூக்கியும் எம்பிக் குதித்தும் அவனுக்கு ஈடுகொடுத்தது. சில சமயங்களில் அவ்விருவரது புரவிகளும் கூட மோதின. அப்படிப்பட்ட சமயமொன்றில் தனது கனத்த வாளை சற்றே பின்னுக்கு இழுத்து பெருநற்கிள்ளியின் மார்புக் கவசத்தில் பழையன் ஓங்கி அடித்ததும் நிலை தடுமாறிய சோழ மன்னன் புரவியினின்று விழுந்தான். அந்த நிலையில் பழையன் கீழே குதித்து சோழனின் புரவியைப் பிடித்திழுத்துக் கொண்டு சோழனை வீழ்த்திவிட தன் கோடாரியை எடுத்தபோது சேரர் படை முகாமிலிருந்து கொம்பொலியும் சங்கொலியும் மிகப்பெரிய ஓசையில் மாறி மாறி ஒலித்தன. சேர சோழப் படைகள் கோட்டையின் வட கிழக்குப் பக்கமாக விலகி வையையை நோக்கிப் பின் வாங்கி ஓடவும் முற்பட்டன. கோசர் படை வீரர்கள் சோழ மன்னனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவனது புரவியை கோசர்களிடம் ஒப்படைத்த பழையன் தன் கோடாரியை இடையில் செருகிக் கொண்டான். சோழ மன்னனை நோக்கி 'சோழ மன்னரே தங்களைக் கொல்ல விருப்பமே இல்லாமல் தான் கோடரியை எடுத்தேன். விருப்பமற்ற அச்செயல் நல்ல வேளையாகச் சமாதானச் சங்கொலியால் நடைபெறாமல் போய்விட்டது. ஆகவே சொல்லிக் கொள்கிறேன். சேர மன்னரின் பேச்சைக்கேட்டு அதர்மத்தில் இறங்காதீர்கள். நாளைய சரித்திரம் உங்களைப் புகழ வேண்டுமானால் அதற்கு வழி தர்ம நெறியேயன்றிச் சேரன் பின் செல்வதல்ல. போய்வாருங்கள்'- என்று கூறி படைப் புரவியொன்றைக் கொடுத்தான்.



மிகவும் அவமானப்பட வேண்டிய ஒரு நிலையில் தன் புரவியை இழந்து பழையனளித்த புரவியில் ஏறி போர் அரங்கை விட்டு நிதானமாகச் சென்றான் பெருநற்கிள்ளி.

சேர சோழ படைகள் இப்படி ஆற்றை நோக்கிப் பின் வாங்கியதும் போர்க்களம் மிகப்பயங்கரமாக காட்சியளித்தது. பாண்டிய மன்னனை வாழ்த்தும் வெற்றி கோஷங்கள் வானளவு ஒலித்து அடங்கிவிட்ட நிலையில் சாகவிருந்த வீரர்களின் மரண ஓலங்களும் விலங்குகளின் பிளிறல்களும் அக்கூடல் பறந்தலையை அதிர வைத்தன. அந்த ஓலங்கள் காலனுக்கு மட்டுமின்றி கழுகுகளுக்கும் அழைப்பாக அமைந்ததால் கணக்கற்ற கழுகுகள் போர் அரங்கில் பிரவேசித்து கார்கால மேகம் போல் விண்ணை அடைத்தன. எத்தனை உடல்கள் விருந்துக்குக் கிடைக்கும் என்று கணக்கிடுவது போல் கழுகுகள் பல வானில் வட்டமிட்டுக் கொண்டிருக்கையில் 'உண்ண வேண்டிய நிலையில் கணக்கெதற்கு?' என்று தீர்மானித்து விட்ட மாதிரி சில கழுகுகள் சிறகடிப்பதை விட்டுவிட்டு தரையில் இறங்கி உயிரற்ற உடல்களை கொத்தத் துவங்கின. உடலைவிட்டு நீக்கப்பட்ட தலைகள் சிலவற்றை சில கழுகுகள் உருட்டிய விதம் பறவைகள் பந்தாடுவது போல் இருந்தது. ஒரு சில கழுகுக் குஞ்சுகள் அவ்வாறு பந்தாட விரும்பி தலைகளை நெருங்கிய போது அந்த மனிதத் தலைக்குரிய முகத்தில் பிதுங்கி கிடந்த கண்கள் மிகவும் பயங்கரமாய் இருந்ததால் அவைகளை நெருங்கப் பயந்து சற்று தள்ளியே அமர்ந்து கொண்டு விழித்தன. அவற்றைக்கண்டு சிரிப்பது போல் அங்கே பிரவேசித்திருந்த நரிகள் சில உடல்கள் சிந்திய ரத்தத்தை வேகவேகமாகக் குடிக்க முற்பட்டன. தங்களுக்குரிய

பங்கை இந்த நரிகள் அபகரிப்பதைக்கண்டு பொறாமையடைந்த கழுகுகள் சில பல இடங்களில் நரிகளைத் தாக்கவும் முற்பட்டதால் புதிய போரொன்று அங்கே உருவாயிற்று. சில இடங்களில் அளவுக்கதிகமாக ரத்தத்தைப் பருகிவிட்ட நரிகள் நிறைமாத கர்ப்பிணிகளைப் போல் உப்பிய வயிற்றுடன் நடக்கவும் சிரமப்பட்டு நகர முற்பட்டபோது கழுகுகள் உபத்திரவம் செய்ததால் அதற்கு அஞ்சி அவை இறந்து கிடந்த யானைகளின் மறைவில் பதுங்க முற்பட்டன. ஒரு சில நரிகள் தரையில் விழுந்து புரண்டு தத்தளித்தன. பிண மாமிசம் அருந்திய கழுகுகள் சில யானைகளின் உடல்கள் மீது ஆங்காங்கே அமர்ந்த விதமானது சிறிய கோபுரங்களின் மீதிருந்த ஒற்றைக் கலசத்தைப் போலிருந்தது. உயிர் போகாமல் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த வீரர்கள் சிலர் இந்த அட்டகாசத்தைக் கண்டு சகிக்காமல் காலனின் வரவுக்காகப் பிரார்த்தனை செய்து கொண்டார்கள். ஒரு சிலருக்கோ இந்தப் பறவையின் நடவடிக்கைகள் கூற்றத்தின் வாய்க்குப் போய் கொண்டிருந்த நிலையிலும் ரசிக்கத் தக்கதாய் இருந்தன. அப்படி ஊசலாடிக் கொண்டிருந்த உயிர்கள் சில அப்போர்க்களத்தை நோக்கி வந்து கொண்டிருந்த பேய்களைக் கண்டு நடுங்கியே உடலை விட்டுப் பிரிந்தன. ஏறக்குறைய கதிரவன் முளைத்து கணிசமான நேரம் கடந்து விட்டதால் சூரிய ஒளியானது போர் அரங்கில் வெள்ளொளியைப் பாய்ச்சி போரின் பயங்கரத்தைப் பறைசாற்றியது.

இதற்கிடையில பாண்டியர் படை கோட்டையின் கிழக்கு வாசலுக்கு முன்பே திரண்டன. காயமுற்ற வீரர்கள்



யார் தரப்பினராய் இருந்தாலும் வைத்திய சிகிச்சையின் பொருட்டு கோட்டைக்குள் கொண்டு செல்லப் பட்டார்கள். உயிரற்ற சடலங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் நீக்கப்பட்டன. அவைகளை வீர அடக்கம் செய்யும் காரியங்களை பழையனே நேரில் இருந்து கவனித்துக் கொண்டான். கோட்டையின் பாதுகாப்பு பழைய நிலைக்கு வரவேண்டிய ஏற்பாடுகளை அதுகையின் கட்டளையின் பேரில் உபதளபதியொருவன் கவனித்துக் கொண்டான். மூன்று மாலை பாண்டியன் நெடுஞ்செழியன் முன் வந்து இறந்த வீரர்களுக்கான அஞ்சலியைச் செய்தான். வைத்திய சிகிச்சை பெறுபவர்களின் உயிரைக் காக்க அனைத்து முயற்சிகளையும் செய்யக் கட்டளையிட்டான். போர் அரங்கம் தூய்மையாக்கப்பட்டது. அதைக் காண விரும்பியது போல் வானத்தில் சந்திரன் வெளிப்பட்ட போது பாசறையில் இருந்த பாண்டிய மன்னனிடம் சேர சோழர்கள் சார்பில் தூது வந்திருப்பதாகச் செய்தி வந்தது.

◈◈◈

முரசு முப்பத்து மூன்று

# சேரமான் தந்திரம்

மனிதனின் ஆசைகள் கணக்கற்றவை. அவற்றின் பரிமாணங்களும் அளவற்றவை. அந்த ஆசைகளுக்கான காரணங்களில் நியாயங்களும் இருக்கலாம். ஆனால் அவற்றால் உண்டாகும் பிரச்சனைகளில் சம்பந்தமில்லாதவர்களும் அப்பாவிகளும் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. இதை ஆசைப்படுகிறவர்களும் சரி அவதிப்படுபவர்களும் சரி உணர்ந்து தான் இருக்கிறார்கள். இருப்பினும் ஆசையிலிருந்தோ ஒதுங்கியிருக்க விரும்புகிறார்களா என்றால் இல்லை.

சேர மன்னனும் சோழ மன்னனும் படையெடுக்க ஆசைப்பட்டதிலும் பாண்டிய மன்னன் அவர்களை முறியடிக்க விரும்பியதிலும் நியாயங்கள் இருக்கலாம். ஆனால் அவர்களால் உண்டான போரில் வீரர்கள் என்ற பெயரில் அப்பாவி மக்கள் பலர் உயிரிழந்தார்கள். பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு ஆரம்ப வெற்றியை அளித்த கூடல் பறந்தலைப் போர்க்களம் அந்த வெற்றிக்குப் பின் மௌன ராகத்தில் சோகத்தைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. மதிக்கத் தக்க உயிரை இழந்துவிட்ட பின் உருப்படியான உடலைப் பெறாமல் கை வேறு கால் வேறுமாய் சதைப் பிண்டங்களாய் சிதைந்து விட்டவர்களும், பறவையினங்களின் விருந்துப் பொருட்களாய் ஆனவர்களும், ரத்த ஆற்றில்





மூழ்கியவர்களும் போர் அரங்கத்திலிருந்து அகற்றப்பட்டு அரங்கம் வையையாற்று நீரினால் கழுவப் பட்டிருந்தாலும் போரின் கோரத்தாண்டவத்திற்கான அடையாளங்கள் இருக்கத்தான் செய்தன. உடலுக்கு உண்டான காய்ச்சல் நீக்கப்பட்டாலும் காய்ச்சலால் உண்டான அவதியும் பலவீனமும் உடலை விட்டு எப்படி உடனடியாக நீங்கிவிடுவதில்லையோ-அப்படித்தான் இருந்தது போர்க்களம். குருதி ஆறு ஓடியதால் உண்டான செங்கறைக் கொப்புளங்கள் ஆங்காங்கே இருந்தன. பிண நாற்றம் அப்பிராந்தியத்தை விட்டு அகலவில்லை. பிணங்கள் அகற்றப்பட்டாலும் சொந்தம் கொண்டாடிய இடத்தைவிட்டு நீங்க விரும்பாதது போல் கழுகுகள் வானில் திரிந்தபடியே இருந்தன. விரும்ப முடியாத சூழ்நிலைதான் என்றாலும் பழகிவிட்ட காரணத்தாலோ என்னவோ அங்கிருந்த போர் வீரர்களுக்கும் தளபதிகளுக்கும் வெறுப்புக்குப் பதில் பெருமையாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.' அவரவர்களும் தங்கள் தாவடிகளில் கூடி தன் போர்முறைகளையும் எதிரிகளை வீழ்த்திய விதங்களையும் கூறி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். கடமையும் கடமைகளை நிறைவேற்றும் சந்தோஷமும் அங்கே எங்கும் பரவிக் கிடந்தது.

இந்த நிலையில் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனைச் சந்தித்த தளபதிகள் போர்க்கள விவரங்களைக் கணக்கிட்டுச் சொன்னார்கள். திட்டமிட்டுப் போர் புரிந்ததாலும், அந்த திட்டம் சரியாக அமைந்ததாலும், தவறாமல் நிறைவேற்றப்பட்டதாலும் பாண்டியர் தரப்பில் உயிர்ச் சேதமும் பொருட் சேதமும்

குறைவாகவே இருப்பதாக மன்னனுக்குத் தெரிவித்த தளபதிகள் போரில் காயமுற்ற வீரர்கள் சிகிச்சையின் பொருட்டு கோட்டைக்குள் கொண்டு செல்லப்பட்ட விவரத்தையும் சொன்னார்கள். தளபதி அதுகை தகடூர் தலைவன் எழினியால் தாக்கப்பட்டதைக் கேள்விப்பட்ட மன்னன் அவனது உடல் நிலை பற்றி விசாரித்தான். அதுகைக்கு எலும்பு முறிவு இல்லை என்றாலும் காயம் பலமாக இருப்பதாகவும், தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டு வருவதாகவும், அவன் பூரண குணமடைந்து போர் நடவடிக்கையில் ஈடுபட இருவாரங்கள் ஆகும் என்றும் தெரிவித்தார்கள். அதையடுத்து இறந்த வீரர்களுக்காக வீர அஞ்சலியைச் செலுத்தினான் மன்னன். அப்போது அந்தி சாய்ந்து அல்லி மலரத் துடித்தது.

சச்சரவு நடந்த பகுதியில் சாது பிரவேசித்தது போல் போர் நடந்த வானவெளியில் சந்திரன் பிரவேசித்தான். குருதி கொப்பளித்த இடமாதலால் அதிகமான இதம் தேவைப்படும் என்று தீர்மானித்தது போல் சந்திரப் பிரவேசத்தையடுத்து உண்டான குளிர்ச்சி வழக்கத்தை விட அதிகமாகவே இருந்தது. வையை நீரால் துடைக்க முடியாத பிண நாற்றத்தைப் போக்க விரும்பியது போல் அந்திநேரத் தென்றல் எங்கேயோ வீசிய மணத்தைச் சுமந்து வந்து கூடல் பறந்தலையில் பரப்பிய விதம் மிகவும் ஆறுதலாக இருந்தது. போர் முடிந்து வீரர்கள் ஒதுங்கி விட்டாலும் போர் யானைகளும் புரவிகளும் மனிதக் கட்டுப்பாட்டிற்கு இசையாமல் ஆங்காங்கே இரைச்சல்களை எழுப்பிக் கொண்டிருந்த விதமானது நடந்து முடிந்த போரை இசையால் சந்திரனுக்கு எடுத்தியம்புவது போல் இருந்தது. இந்த நிலையில்



மாமிச விருந்துக்காக வட்டமிட்டுக்கொண்டிருந்த பறவைகளும் நிலைமையைப் புரிந்துகொண்டதுபோல் மெல்ல மெல்ல விலகிச்சென்றன. கோட்டைக்கு அப்பால் தொலைவில் நீண்ட தூரம் வரை பந்தங்கள் தெரிந்து அங்கே சேர சோழ படைகள் தங்கியிருப்பதை உணர்த்தக் கூடியதாய் இருந்தன. போரில் தோல்வியுற்ற நிலையிலும் அதிகப்படியான சோர்வுக்கு ஆளான நிலையிலும் அப்பகுதியிலிருந்து ஆரவார ஒலிகள் எதுவும் இல்லை. சேர சோழ மன்னர்களின் மனநிலையைப் புரிந்துகொண்டு விட்டதாலோ என்னவோ போர் யானை முதலியன கூட அதிகமான ஒலியை எழுப்பாமல் எப்போதோ ஒருமுறை மட்டுமே முழங்கின.

இதே நேரத்தில் கோட்டைச் சுவற்றையொட்டிய பாசறையில் பாண்டிய மன்னன் தன் தளபதிகளுடன் ஆலோசனையைத் துவக்கினான். அடுத்த கட்ட நடவடிக்கையைப் பற்றி அவன் வினவிய போது அனைவருமே மறுநாள் காலை வெற்றி மாலை சூடி கோட்டைக்குள் பிரவேசிக்க வேண்டும் என்பதையே ஒட்டு மொத்தமாகச் சொன்னார்கள். அதை ஆமோதிப்பது போல் சேர சோழ மன்னர்களிடமிருந்து தூதுவன் வந்திருப்பதாகத் தெரிவித்தான் பணியாள்.

தற்போதைய தூது குறித்து சந்தேகிக்கவோ அலட்சியப்படுத்தவோ எதுமில்லையாதலால் தூதுவனை வரச்சொன்னான் நெடுஞ்செழியன்.

தூதுவன் இயல்பான பணிவுடன் பாண்டிய மன்னனை வணங்கினான். தூதுச் செய்தியை வாய் மூலமாகவே தெரிவித்தான்.

'ஐயா, போரின் முடிவுக்குப் பின் சேர மன்னரும் சோழ மன்னரும் மிகவும் மனம் நொந்திருக்கிறார்கள். போரின் காரணம் குறித்தும் மறுபரிசீலனை செய்ய விரும்பு கிறார்கள். அது சம்பந்தமாக மன்னர் இருவரில் யாரேனும் ஒருவர் தங்களை நாளைக் காலை சந்திக்க விரும்பு கிறார்கள். அதுவரை தங்கள் படை வீரர்களுக்குப் பாண்டிய வீரர்கள் தொல்லையேதும் தரவேண்டாம் என்றும் அமைதி காக்கவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறார்கள். தங்கள் பதிலை அறிந்து வரும்படி எனக்கு உத்தரவு.'-

செய்தியை அமைதியாகச் செவிமடுத்த நெடுஞ்செழியன் தற்போது கேட்டான்.

'தூதுவனே, உன் மன்னர்கள் இச் செய்தியை உன்வாய் மூலம் அனுப்பியதேன்? ஓலை கிடைக்கவில்லையா?'-

'பாண்டிய மன்னவா! காரணம் அதில்லை. அவமானப்பட்டிருக்கும் நிலையில் எழுத்து மூலம் செய்தியனுப்ப இரு மன்னர்களும் வெட்கப்படுகிறார்கள். அவர்களின் மனநிலை உங்களால் புரிந்து கொள்ள முடியாத தொன்றல்ல'-

''நல்லது தம்பீ. புறமுதுகிட்டோரின் வேதனை யொன்றும் புரிந்து கொள்ள முடியாததல்ல. நாளை அவர்கள் விருப்பப்படியே வரச் சொல்''-

'சேர சோழரின் யாரை வரச் சொல்வது?'

'இருவருமே வந்தாலும் கூட பாதகமில்லை'-

'நன்றி மன்னவா. நான் சென்று வருகிறேன்'-



தூதுவனின் வரவிலோ, அவன் தெரிவித்த செய்தியிலோ, அந்தச் செய்தியில் குறிப்பிடப்பட்ட வேண்டுகோளிலோ சந்தேகப்படக்கூடிய அம்சம் எதுவும் இல்லாதிருந்ததால் அது குறித்து யாரும் விவாதிக்க வில்லை. தூதுவனின் வரவு இதர ஆலோசனைக்கும் இடமில்லாமல் செய்து விட்டதால் பேச்சு அதோடு நின்றது.

மாறாகப் பாண்டியர் படையின் கணிசமான பிரிவு கோட்டைக்குள் கொண்டு செல்லப்பட்டு உள்ளே தகுந்த முறையில் நிறுத்தி வைக்கப்பட்டது. தேவையான அளவிற்கான படைகள் மட்டுமே கோட்டைச் சுவற்றுக்கு வெளியே பாசறையில் இருந்தன. இந்தப் படை நகர்த்தும் வேலையைத் தவிர வேறெதுவும் அந்த இரவுப் பொழுதில் நடைபெறவில்லை. மன்னனும் மற்றவர்களும் அமைதி யாகவே இரவுப் பொழுதைக் கழித்தார்கள்.

மறுநாள் பாசறையிலேயே தன் கடன்களைக் கழித்தான் மன்னன். போரில் பெற்ற வெற்றி கோட்டைக்குள் நன்றாகப் பரவி விட்ட நிலையில் மக்கள் தன் மன்னனுக்கு வெற்றி மாலையைச் சூட்டி வரவேற்கத் துடித்தார்கள். அனைவரையும் விட பாண்டிய அரசியான கோப்பெருந்தேவி தான் சூட்டிய மணமாலைக்கு அடுத்த வெற்றி மாலையைப் பெருமிதத்துடன் தன் உள்ளம் கவர்ந்த கள்வனும் கூடலர்கோமானுமான மன்னனுக்குச் சூட்டி மகிழ பெரிதும் துடித்தாள். அந்தத் துடிப்புணர்வுகள் அடிக்கடி செய்தியாக மன்னனுக்கு வந்தபடி இருந்தன. அதனால் மன்னனின் துடிப்பும் அதிகமாயிற்று. அதைச் செயல்படுத்தத் தூண்டுவது

போல் அவனது குருநாதர், மாங்குடி மருதனாரும், அவைக்களப் புலவர் பெருமக்களும் வந்து சேர்ந்தார்கள் பாசறைக்கு. ஆனால் சேர சோழ மன்னர் தரப்பிலிருந்து யாரும் வந்த பாடாக இல்லை. பொழுது விடிந்து வெகு நேரமும் ஆகிவிட்டது. பொழுது சாயவும் தொடங்கியது. மன்னனை கோட்டைக்குள் பிரவேசித்து மக்களின் வரவேற்பை ஏற்கும்படியும் பாண்டியர் அரண்மனை யிலேயே சேர சோழ மன்னர்களைச் சந்தித்துக் கொள்ளலாம் என்றும் சொன்னார்கள் புலவர்கள். நெடுஞ்செழியனுக்கு அதில் பூரண சம்மதமில்லை. பகைவர் படைகளை அரைகுறையாக விட்டு விட்டுச் செல்ல அவனுக்கு மனமில்லை. நல்ல வேளையாக சேர சோழ படை முகாமிலிருந்து வெண்ணிறப் புரவியொன்று கோட்டையை நோக்கி வந்தது. அதையடுத்து கருநிறப் புரவியொன்றின் மீது சேர மன்னன் தன்னந்தனியாகப் பாசறையை நோக்கி வேகமாக வந்தான். ஏறக்குறைய இரவு முகிழ்த்து விட்ட வேளையில் அவனப்படி தன்னந்தனியே பகைப்பாசறை நோக்கி வருவதைக் கண்ட அனைவருமே வியந்தார்கள். ஆனால் அவர்களது வியப்பு சில கணங்களிலேயே சிதைந்து போயிற்று.

புரவியில் தன்னந்தனியாக வந்தது சேர மன்னன் அல்ல என்பதும் சேர மன்னனைப் போன்ற பொம்மையே என்பதும் புரவியானது அருகில் வந்ததும் தெரிந்து கொண்டார்கள் பாண்டிய வீரர்கள். இயந்திர பொம்மை போல் இயங்கி நேராகப் பாசறைக்கருகே வந்து நின்றது புரவி. அப்புரவியின் மீது வைத்துக் கட்டப்பட்டிருந்த பொம்மையின் கழுத்தில் கரும்பலகையொன்று கட்டப் பட்டிருந்தது. அதில் சேரமன்னனின் செய்தியாகச் சில



வரிகள் எழுதப்பட்டிருந்தன. பலகையை பொம்மையின் கழுத்திலிருந்து கழற்றி எடுத்து வந்து மன்னனிடம் காட்டினார்கள் வீரர்கள். அதில் கீழ்க்கண்ட செய்தி அடங்கியிருந்தது.

'பாண்டியா, உன்னை ஏமாற்றி விட்டுச் செல்வதை நினைத்தால் வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் வருந்திக் கொண்டிருந்தால் காரியமாக்க முடியாது. சூழ்நிலைக்கேற்ப காரியங்களைச் செய்ய வேண்டியது அரசியலில் தவிர்க்க முடியாத ஒன்று. ஆகவேதான் பொய்த் தூதும், செய்தியும், அநேகமாக இச்செய்தி உனக்கு கிடைக்கும்போது நானும் சோழரும் எங்கள் படைகளும் கணிசமான தூரத்தைக் கடந்து விட்டிருப்போம். ஓடி ஒளிவதற்கல்ல. சரியான இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு உன்னைச் சந்திக்கத்தான். விரைவில் சந்திப்போம். அச்சந்திப்பு சாதாரணச் சந்திப்பாய் இருக்காது. சோழரின் வேள்விக்கு வழிவகுத்துத்தரும் சரித்திரச் சந்திப்பாய் இருக்கும். மற்றபடி இப்போரின் வெற்றியை எண்ணிப் பெருமைப்பட்டு விடாதே. நடந்து முடிந்தது போரே அல்ல. உனக்கு நாங்கள் அளித்த போர்ப் பயிற்சி அது. எங்களுக்கு அது ஒரு போர் ஒத்திகை. அவ்வளவுதான்.

- சேர மன்னன் யானைக் கண்சேய்

செய்தியை அறிந்ததும் பாசறையிலே இருந்த தளபதிகள் கொதித்தெழுந்தார்கள். ஆனால் எந்தவிதமான பதட்டம் அடையாமலிருந்தவர்கள் இருவர்தான். அவர்கள் நெடுஞ்செழியனும், பழையனும்தான்.

செய்தியைப் படித்தபின் மெல்லப் புன்னகை புரிந்த மன்னன் 'சிறுகதையாக இருக்கும் என்று பார்த்தேன். இது தொடர்கதையாகத் தான் இருக்கும் போலிருக்கிறது' என்று முணுமுணுத்து விட்டு பழையனைப் பார்த்தான்.

பழையனின் உதட்டிலும் ஒரு புன்னகை வெளிப்பட்டது - மந்திரப் புன்னகையைப் போல்.

மன்னன் சிலரை அழைத்து சேரனின் செய்திகள் எந்த அளவிற்கு உண்மை என்பதை அறிந்து வரும்படி கட்டளையிட்டு அனுப்பினான்.

போனவர்கள் வந்து தெரிவித்த செய்திகள் சேரனை நன்றாக இனம் காட்டின.

◈◈◈

முரசு முப்பத்து நான்கு

# இரண்டு செய்திகள்

கூடல் பறந்தலைப் போரில் தோற்றுப் போனாலும் அதை இறுதித் தோல்வியாகக் கருத சேரமன்னனான இரும்பொறை தயாராக இல்லை. ஒரு வகையில் இப்போரையும் தோல்வியையும் ஒரு ஒத்திகை போலவே கருதினான் அவன். எனவேதான் போர் முனையில் தன் தரப்பின் நிலைமை மோசமாகப் போய்க் கொண்டிருந்ததை உணர்ந்ததுமே போரை மேலும் வளர்த்துச் சேதத்தை அதிகரிக்க விரும்பாமல் சமாதானச் சங்கை ஊதி எஞ்சிய படைகளைப் பின் வாங்க வைத்து பெரும் சேதத்தைத் தவிர்த்துக் கொண்டான். போர் அரங்கிலிருந்து பழையனை நீக்கிவிட்டு தான் போட்ட திட்டம் பழையன் திடீரென வந்துவிட்ட பின் ஆட்டம் கண்டு விட்டதால் போரின் துவக்கத்திலேயே உள்ளூர அவனிடம் தயக்கமொன்று உருவாகிவிட்டிருந்தது. மற்ற எல்லோரையும்விட பழையனையும் அவன் ஆற்றலையும் அவன் மிக நன்றாக உணர்ந்திருந்தான். போர் அரங்கு அவன் ஒருவனால் மட்டும்கூட தலைகீழாகி விடும் என்று நம்பினான். எனவே தான் போர் துவங்கிய போதும் கோட்டைச் சுவர்கள் பக்கவாட்டத்தில் விலகியது. விலகியபோதும் அவனது நம்பிக்கை சற்றே விலகியது. ஆனால் அந்த நிலையில் போரைத் தவிர்ப்பதோ நிறுத்துவதோ முடியாத காரியம் மட்டுமின்றி

கௌரவமான காரியமாக இருக்காது என்று கருதி தன் பராக்கிரமத்தையும் சோழன் பெருநற்கிள்ளியின் வீரத்தையும் முன் வைத்து போரில் ஈடுபட்டான். போரின் நிலைமை போகப் போக தங்களுக்குப் பாதகமாக அமையத் தொடங்கியதுமே அவனது வஞ்சக நெஞ்சில் புதிய திட்டம் உருவாயிற்று. அதையொட்டியே சமாதானச் சங்கை ஊதி போர் நிறுத்தத்தைச் செய்தான். அதையடுத்து சேர சோழ படைகள் களத்திலிருந்து பின் வாங்கி கோட்டையின் வடகிழக்கே வையையாற்றின் கரையோரமாய் திரண்டன. திரண்ட நேரம் அந்தி சாய்ந்த நேரமாதலாலும் அப்படைகளைப் பாண்டியர் படைகள் சந்தேகிக்கவோ கண்காணிக்கவோ காரணமில்லாததாலும் அந்த நேரத்திலேயே தன் திட்டத்தை நிறைவேற்றிவிட முனைந்த இரும்பொறை தன் படைகளை வெகு வேகமாக வையையைக் கடந்து சோழ நாட்டை நோக்கி விரையச் செய்தான். போர்முடிந்த நேரமாதலால் அப்போது நிலவிய ஆரவாரத்தில் சேரசோழப் படை வையை ஆற்றைக் கடந்து நகர்ந்தது புலப்படவில்லை. கணிசமான படை அவ்வாறு கடந்த பின்பு சிறிய படைப் பிரிவு ஒன்றை மட்டுமே வையைக் கரையில் நிறுத்திக் கொண்டான். அதே சமயம் தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு அங்கே அவனது பெரும்படை முழுவதுமாகத் தங்கியிருப்பதாக எண்ண வைக்கும் வகையில் கணக்கற்ற தீபங்களை நெடுந்தூரம் வரை ஏற்றி வைத்தான்.

போரில் வெற்றி பெற்ற பாண்டியன் திடீரென தன் படைகளை ஏவி சேர சோழ படைகளை நிர்மூலம் செய்ய முயலலாம் என்பது சேரமன்னனுக்குத் தெரிந்திருந்தது.



அப்படி நடப்பது போர் வழக்கம் தான். தோற்றுப் போன பகைவரை மீண்டும் எழ விடாமலும் மேலும், மேலும் வளர விடாமலும் உடனடியாக மறுதாக்குதல் நடத்தி நிர்மூலமாக்கி விடுவது மன்னர்களின் இயல்புதான். ஆதலால் அதிலிருந்து தப்பவும், சோழநாட்டை நோக்கிப் பின் வாங்கும் தன் படைகளை பாண்டியன் உடனடியாகத் துரத்த முடியாமல் போகவும் திட்டம் தீட்டிய சேரன் தூதுவன் ஒருவனை பொய்ச் செய்தியுடன் பாண்டியர் பாசறைக்கு அனுப்பி வைத்தான்.

செய்தி என்னவோ பொய்தான். ஆனால் அப்போதைய சந்தர்ப்பத்திற்கு ஏற்றதாகவும் இயல்பான தாகவும் இருந்ததால் பாண்டியன் நம்பினான். நம்பியதோடு பதிலையும் கொடுத்து அனுப்பியிருந்ததால் தன் ஊகமும் திட்டமும் பலிப்பதை எண்ணி திருப்தியடைந்த சேரமன்னன் விடியற்காலைப் பொழுதுக்குச் சற்று முன்பாகவே தனது மீதிப் படைகளையும் வையையாற்றங்கரைக்கு அப்பால் அனுப்பிவிட்டு மேலும் சிற்சில தந்திர ஏற்பாடுகளையும் செய்து முடித்தான். அனைத்தும் முடிந்த பின்னரே தன்னைப் போன்ற பொம்மையொன்றைச் செய்து வெண்புரவியில் ஏற்றிக்கட்டி பாண்டியர் முகாமுக்கு அனுப்பிவிட்டு சோழ நாட்டுப் பாதையில் பயணமானான்.

❖ ❖ ❖

அவனது ஏற்பாடுகளைப் பார்த்துவிட்டு வந்த பாண்டிய வீரர்கள் நெடுஞ்செழியனிடம் சொன்னார்கள்.

'பிரபு, சேரமன்னன் இந்தச் சமயம்கூட சதித்திட்டத்தையே தீட்டியிருக்கிறான். அதைச் சிறப்பாகவும் தீட்டி செயல்படுத்தியிருக்கிறான். அவனது இத்திட்டம் போரில் சமாதானச் சங்கொலி எழுந்தபோதே தொடங்கியிருக்க வேண்டும். அப்போதே ரகசிய ஆணைகளைப் பிறப்பித்து தன் வீரர்களையும் ஆற்றைக் கடந்து அப்பால் சென்றுவிடும்படி செய்திருக்கிறான். சமாதானச் சங்கையடுத்து உண்டான ஆரவாரமோ பேராரவாரமாக இருந்திருக்கிறது. ஆகவே அவனது படைகள் ஆற்றைக் கடந்ததை யாரும் கவனிக்கவில்லை. அதோடு சங்கொலி எழுந்தபின் வேறு சந்தேகமெதுவும் உடனடியாக உண்டாக வாய்ப்பில்லை. மேலும் படைகளும் கோட்டைக்கு வெகு கணிசமான தூரத்தில் தான் கடந்திருக்கின்றன. கோட்டை மதிலில் உள்ளவர்களும் அதைச் சரிவர கண்டிருக்க முடியாது. கண்டிருந்தாலும் தோற்றுப் போனவர்கள் பின் வாங்கி ஓடுகிறார்கள் என்ற அளவில்தான் நினைக்க முடியுமே தவிர ஆழ்ந்த திட்டத்தின் அடிப்படையில் காரியம் நடப்பதாக எண்ண முடியாது. இப்படிப்பட்ட சாதகங்களை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு பெரும் பாலான படைகளை கடக்க வைத்திருக்கிறான் சேர மன்னன். ஆற்றைக் கடப்பதில் கூட சாமர்த்தியத்தைக் காட்டியிருக்கிறான். அவன் கடக்க விரும்பிய இடம் திருமருத முன்துறை. மருதமரங்கள் கரைமுழுக்க நிரம்பிக் கிடக்கும் இடம். ஒரு வகையில் அவனுக்கு அவை மறைவு அளித்திருக்கிறது. அதே சமயம் சற்றுத் தள்ளி வளர்ந்திருந்த மருத மரங்களை வெட்டி ஆற்றில் சாய்த்துப் பாலமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறான்.



ஆற்றுக்கு அப்பால் படைகள் நல்ல பிள்ளைகளைப் போல் நடித்து, பாண்டியர் போரில் தோற்றுப் போனதில் வெட்கப்படுவதுபோல் நாடகமாடி, நம்மைப் பொய்யாகப் புகழ்ந்து தமக்குத் தேவையான உணவுப் பொருள்களைக் கேட்டுப் பெற்று ஒருவிதக் குறைவுமின்றி சோழ நாட்டுப் பாதையில் பின் வாங்கி விட்டன.

'இந்த முயற்சிக்கு இடையூறு வராமலிருக்கவே தூதுவன் ஒருவனைப் பொய்ச் செய்தியுடன் நம்மிடம் அனுப்பி நம்மை எந்தவித நடிவடிக்கையிலும் உடனடியாக இறங்கவிடாமல் செய்திருக்கிறான். நிலவும் சந்தர்ப்பத்திற்கு அனைத்துமே பொருத்தமாக இருந்ததால் நாம் நம்பிக்கொண்டு நேற்றிரவு முதல் இன்று வரை மௌனமாக இருந்தோம். அவனும் அவனது படைகளும் முற்றிலுமாக அகன்றபின் தன்னைப் போன்ற பொம்மையை அனுப்பி ஏமாற்றி விட்டான். அந்த பொம்மை கூட இருந்தையூரில் செய்யப்பட்டது தான்.'

விவகாரங்களைக் கேட்டதும் பாசறையிலே இருந்த தளபதிகளும், போர் ஆலோசகர்களும் பெருங்கோப மடைந்தார்கள். சேரன் தங்களை ஏமாற்றி விட்டதை தாங்கிக் கொள்ள முடியாமல் தவித்த அவர்களுக்கு ஆத்திரம் உண்டாகி அதை வெளிப்படுத்தும் விதத்தில் கண்கள் கோவைப்பழங்களாகச் சிவந்தன. கொப்பளித்தன. சேரன் மட்டும் அப்போது அங்கே இருந்திருந்தால் அவர்களின் கண் பார்வையிலேயே எரிந்து போயிருப்பான். அப்படியொரு கோபவெறி அவர்களிடையே உண்டாகியிருந்தது.

ஆனால் அத்தகைய கோபத்திற்கோ ஆத்திரத்திற்கோ ஆளாகாமல் அமைதியாக இருந்தது மூன்று பேர் மட்டும் தான்.

அவர்கள்-

பாண்டியமன்னன், படைத்தலைவன் பழையன், குருநாதரான மாங்குடி மருதனார்.

யாரில்லை என்றாலும் பாண்டிய மன்னன் மட்டுமாவது நிச்சயமாக கொதித்தெழுவான் என்று எதிர் பார்த்ததற்கு மாறாக பரம நிதானத்தை அடைந்த அவன் ஏதோ கதையைக் கேட்டு ரசித்தவனைப் போல் மெல்ல சிரிக்கவும் செய்தான். அங்கே இருந்த அனைவரது முகங்களையும் ஒருமுறை நோக்கினான். அந்த முகங்களில் பெரும்பாலானவை எரிமலைகளாக இருந்ததால் அவர்களின் எண்ணம் எதுவாக இருக்கும் என்பதை அவனால் உணர்ந்து கொள்ள முடிந்தது. இருப்பினும் ஆலோசனை என்று வரும்போது வெறும் ஊகங்களையும் அனுமானங்களையும் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்பதால் அவர்களிடமே கேட்டான் என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று.

அனைவரும் ஒரே பதிலைத்தான் சொன்னார்கள். உடனடியாகப் புறப்பட்டுப் போய் சேர சோழ படைகளைப் பிடித்து நிர்மூலமாக்குவதுதான் ஒரே வழி என்று ஆணித்தரமாகத் தெரிவித்தார்கள். அந்த பதிலை மன்னன் ஊகித்திருந்ததால் தற்போது எந்தவிதமான சிரமத்திற்கும் ஆளாகவில்லை.

'என்ன குருநாதரே, சேரனும் சோழனுமாக எனக்குப் பெரிய வேலையைக் கொடுத்து விட்டார்கள்



போலிருக்கிறதே'- என்று வினவினான்.

'பெரிய வேலையல்ல செழியா. பெரிய பெயர் என்று சொல். உனக்குச் சரித்திரத்தில் பெரிய பெயரை உண்டாக்கித் தரத்தீர்மானித்து விட்டார்கள் அவர்கள்'- என்றார் மருதனார்.

'எப்படிச் சொல்கிறீர்கள்?'

'பின்னென்ன? போர் இக்கூடற் பரந்தலையோடு முடிந்துவிட்டிருந்தால் உனக்கென்ன பிரமாதமான பெயர் கிடைக்கப் போகிறது? மாறாகச்சிறு போரைப் பெரிதாக்கி வளர்த்து அதில் உனக்கு வெற்றியைத் தரப் போகிறார்கள் அவர்கள். அதன் மூலம் நீ பெரும் பேரை அடையப் போகிறாய்'-

இதைக் கேட்டு சற்றே சங்கடத்துடன் அசைந்த மன்னன் 'குருநாதரே, போரை இத்துடன் விட்டு விடத்தான் நான் தீர்மானித்திருந்தேன். ஆனால் சேரன் பழையபடி தன் வேலையைக் காட்டி என் தீர்மானத்தை மாற்றிவிட்டான். நான் வேறென்ன செய்யமுடியும்?' என்றான்.

'நெடுஞ்செழியா, சேரனும் சோழனும் மிகப் பெரிய ஆசையில்...அதாவது பேராசையில் படையெடுப்பைத் துவக்கியிருக்கிறார்கள். அந்தப் பேராசை இந்த ஆரம்ப கட்டத் தோல்வியால் எப்படி அழிந்து போகும்? பேராசையின் இயல்பே அதுதான். தோல்விகளாலும் தடைகளாலும் அதன் பயணம் நின்று விடுவதில்லை. மரண அடியை வாங்கும் வரை அது தொடரக் கூடியது. இங்கே பேராசைக்கார இரும்பொறை சதியையே அதிகம்

நம்புகிறவனாக இருக்கிறான். அப்படிப்பட்டவனின் செயல் வேறெப்படி இருக்கும்?'

'நல்லது குருநாதரே. என்னையும் என் குடிமக்களையும் துச்சமாக எண்ணி உண்டாக்கிய அவமானத்தைத் துடைக்கவும், நம்மீது பொய்க் காரணத்தைச் சுமத்தி பரிகாரம் கேட்க முற்பட்ட கயமைத் தனத்திற்காகவும் இப்போரை நான் துவக்கினேன். அது வெற்றியில் முடிந்தது. அந்த வெற்றியை அவமதிக்கிறான் சேரன். இதற்கு நான் கட்டாயமாக பதில் சொல்லித்தான் ஆகவேண்டும். பகைவர்களை இம்முறை பூண்டோடு அழிக்காமல் கோட்டைக்குள் திரும்ப மாட்டேன்'... என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லி நிறுத்திய மன்னன் தளபதிகளிடம் படை புறப்படுவது பற்றி மறுநாள் கூறுவதாகத் தெரிவித்தான்.

அதையடுத்து அனைவரும் அகன்றார்கள் பழையனைத் தவிர.

தற்போது அவனைப் பார்த்துக் கேட்டான் மன்னன்.

'ஏன் படைத் தலைவரே, நீங்கள் எதுவுமே சொல்லவில்லையே?'

இதைக் கேட்டுப் புன்முறுவல் கொண்ட பழையன் ''சொல்ல என்ன இருக்கிறது மன்னவா? நான் எதிர்பார்த்ததும் நீங்கள் விரும்பியதும்தானே நடந்திருக்கிறது?' என்றான்.

''என் மனத்தைப் புரிந்து கொண்டிருப்பது நீ மட்டும் தான் நண்பா. ஆகவேதான் நீ இல்லாது போனால் நான் தனிமையை உணர்கிறேன். உண்மையிலேயே சேரனின்



நடவடிக்கைகளைக் கண்டபோது அவனைப் பூண்டோடு ஒழித்துவிடுவதே என் தீர்மானமாயிருந்தது. போர் துவங்கியபோது அந்த விருப்பத்துடன்தான் செயல்பட்டேன். அது திடீரென முடிந்ததும் எனக்கு என்னவோ போலிருந்தது. என் விருப்பம் நிறைவேறாதோ என்று எண்ணினேன். நல்லவேளையாக சேரனே வழி வகுத்து விட்டான்''- என்று சற்றே நெகிழ்ந்து போய் கூறிய மன்னன், 'நீங்கள் எப்படி இதை எதிர்பார்த்தீர்கள்?'- என்று வினவினான்.

'மன்னவா, சேரன் என்னைச் சிறைப்படுத்த முயன்ற விதத்திலிருந்தே அவனது ஆதிக்க நோக்கம் மிகவும் உறுதியானது என்பது புரிந்தது. அதை நிறைவேற்றாமல் விடமாட்டான் என்று நம்பினேன். அதோடு நேற்றைய தோல்வி அவன் எதிர்பாராத ஒன்று. திடீரென ஏற்பட்டு விட்ட தோல்வியை அவன் முடிவான தோல்வியாகக் கருதமாட்டான் என்றும் பழிதீர்க்க முயலுவான் என்றும் நினைத்தேன். அது சரியாகப் போய்விட்டது'' என்றான் பழையன்.

''பின் ஏன் நீங்கள் சேரனின் சதி நாடகத்தை முறியடிக்காமல் இருந்துவிட்டீர்கள்?''- கேட்டான் மன்னன்.

'அவன் செய்தது சதி என்றாலும் அதன் பின்னணி பயம் தானே மன்னவா? நாம் திடீரெனத் தாக்கிவிட்டால் என்ன செய்வது என்று பயந்துதானே சதியில் இறங்கியிருக்கிறான்? அப்படி பயந்தவனைப் போய் - அதுவும் சமாதானச் சங்கை ஊதிப் பின்வாங்கியவனைப் போய் நாம் தாக்குவது நல்லதா? அதனால் உங்களுக்குச்

சிறப்பா வரும்? ஆகவேதான் நான் பேசாமலிருந்தேன். அவன் அப்படி எங்கே ஓடிவிட முடியும்? அவன் ஓடுவதே மீண்டும் நம்மைச் சந்திக்கத்தானே? அவனைத் துரத்தும் முன் நம் படைகளையும் கவனிக்க வேண்டாமா? அவசரத்தில் துரத்திப் போவதில் நிரம்ப சிரமங்கள் இருப்பது உங்களுக்குத் தெரியாதா? அவன் அவசியத்தால் அவசரமாக ஓடுகிறான். நமக்கு அவசியம் நிதானம் தானே?'-

'மகிழ்ச்சி படைத்தலைவரே. இரண்டாவது விஷயம் கோட்டைப் பாதுகாப்பு. நாம் பகைவரை நோக்கிப் புறப்பட்டு விட்டால் இக்கோட்டையைக் காப்பது யார்? தேவியிடம் அதிகாரத்தை வேண்டுமானால் அளிக்கலாம். காவலை யார் மேற்கொள்வது? அதுகை காயப்பட்டிருக் கிறான். பூரண குணம் பெற பல நாட்களாகும்'-

'கவலைப்பட ஒன்றுமில்லை மன்னவா. அதுகை குணமடையும்வரை நாலைக் கிழவன் கோட்டையை பாதுகாக்கட்டும். அவன் பெரு வீரன். அரண்மனைப் பகுதிகளை தற்போதிருக்கும் உதயணன் பார்த்துக் கொள்வான். அதுகை குணமடைந்தபின் நாலைக்கிழவன் நம்மோடு வந்த சேர்ந்து கொள்ளட்டும்'-

'அப்படியானால் நாளை நாம் புறப்படலாம் அல்லவா?'...

'புறப்படலாம். அது விஷயமாக என் திட்டம் ஒன்றிருக்கிறது. சம்மதமானால் ஏற்கலாம்'-

'படைத்தலைவரே, இதென்ன புதியதாக இருக்கிறது? நீங்கள் சொல்லும் திட்டங்களைப் பற்றி எனக்குத்



தெரியாதா? அவற்றை மறுத்து என்றாவது நான் செயல்பட்டிருக்கிறேனா? என்னை நீயல்லவா ஆட்டிப் படைக்கிறாய் பழையா?' என்று கேட்டுச் சிரித்த மன்னன், 'சேர சோழப் படைகள் அனேகமாக உறையூருக்குத்தான் போகும் என்று நினைக்கிறேன். அங்கே பலமான கோட்டை இருக்கிறது. அதை பாதுகாப்பாக வைத்துக் கொண்டு போரிட முயலலாம்'- என்றான்.

'நீங்கள் கூறியதில் முதல் பாதி சரி. அவர்கள் உறையூரை நோக்கித்தான் போகிறார்கள். ஆனால் அவர்கள் அங்கே நம்மைச் சந்திக்க மாட்டார்கள்''. என்றான் பழையன்.

'ஏன்?''-

'மன்னவா, உறையூர் சோழன் பெருநற் கிள்ளியின் இருப்பிடம். நம்மிடம் தோற்றோடும் அவன் தோல்விச் செய்தியுடன் தன் சொந்த ஊரில் பிரவேசிப்பதை விரும்பமாட்டான். ஒரு வேளை அங்கே நம்மைச் சந்திக்க முற்பட்டு தோல்வி கிடைக்குமானால் அது பெருத்த அவமானமாகப் போய்விடும். அதோடு உறையூர் கோட்டை பலமானதுதான். ஆனால் அதில் புகுந்து கொண்டு நம்மைத் தாக்குவது கடினம். அவர்கள் எங்கு சந்தித்தாலும் அச்சந்திப்பு சமவெளியில் தான் இருக்கும்.''

''அப்படியானால் அவர்கள் உறையூரையும் கடந்து போகக் கூடிய இடம்?''-

''அதைத்தான் இன்று காலையிலிருந்து யோசித்து வருகிறேன். என் ஊகம் சரியானால் அவர்கள் சந்திக்கக் கூடிய இடம் நீண்ட தூரத்தில் உள்ளதாகத்தான் இருக்க

வேண்டும். நம் ஒற்றர்களை முன்கூட்டியே அனுப்பி வைத்திருக்கிறேன். அவர்களில் ஒரிருவராவது இன்றிரவு திரும்புவார்கள். அப்போது என் ஊகம் எந்த அளவிற்குச் சரி என்பது தெரிந்துவிடும் மன்னவா. ஆகவே நீங்கள் பெரும்பகுதி பாண்டியர் படையுடன் சேரர் படை பின் வாங்கி ஓடிய வழியிலேயே உறையூருக்குச் செல்லுங்கள். அங்கேயும் அவன் இல்லையென்றால் உங்களுக்கு ஒற்றர் மூலம் செய்தி வரும். அதையொட்டி உறையூரை விட்டு தஞ்சை மார்க்கமாக வாருங்கள். நான் கோசர் படையுடன் சற்று கிழக்கே சென்று பின் வடக்காகத் திரும்கிறேன். ஏறக்குறைய நான் விரைவாகச் சென்றால் சேர சோழர் படைகளுக்கு முன்பாகப் போய்விடுவேன். நீங்கள் பின்புறமாக வாருங்கள். தகுந்த இடம் வந்ததும் நாம் இருபுறங்களிலிருந்து அவர்களைத் தாக்குவோம். அவர்கள் தப்ப முடியாது. உங்கள் புறப்பாடும் பயணமும் வெளிப்படையாக இருக்கட்டும். நான் ரகசியமாகச் செல்கிறேன் முடிந்தவரை. நான் வருவது எவ்வளவுக் கெவ்வளவு ரகசியமாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது. இல்லையென்றால் சேரன் பாதை மாறிவிடுவான். நமக்கிடையே சிக்கமாட்டான்''

படைத்தலைவனின் யோசனை பழுதின்றி இருந்ததால் அதை அப்படியே ஒப்புக் கொண்டான் மன்னன். அந்த ஆலோசனை பின்னால் பிற தளபதிகளுக்கு அறிவிக்கப்பட்டது. அதையடுத்து கோட்டைக்குள்ளிருந்து உணவுப் பொருள்கள் சேகரிக்கப்பட்டு உரிய மூடு வண்டிகளில் ஏற்றப்பட்டு பாதுகாக்கப்பட்டன. ஆயுதங்களும் அவ்வாறே ஆயத்தமாயின. போருக்கு முன்னால் கருவூர் கணிகை



விழியழகியால் களவாடப்பட்ட ஆயுதங்கள் அனைத்தும் வையையாற்று நிலவறையிலிருந்து எடுக்கப்பட்டு படைகளுடன் செல்ல தயார் செய்யப்பட்டன. இந்த ஏற்பாடுகளை பழையனே நேரில் இருந்து கவனித்துக் கொண்டான்.

இரவு நேரம் கழிந்து விடியல் வேளை காலடி வைத்த வேளையில் அரசி கோப்பெருந்தேவி கோட்டையை விட்டு வெளியேறி வந்து மங்கல கோலத்துடன் மன்னனை எதிர் கொண்டாள். அவன் அடைந்த ஆரம்ப வெற்றிக்குத் தன் அந்தரங்கப் பாராட்டைத் தெரிவித்து விட்டு இனி பெறவிருக்கும் வெற்றிக்கு ஆழ்ந்த விருப்பத்தையும் வெளிப்படுத்தினாள். கண்களில் நீரைச் சிந்தாமல் மன உணர்ச்சிகளை தளரவிடாமல் கடமை உணர்வோடு அவள் நடந்து கொண்ட முறை நெடுஞ்செழியனை மிகவும் பரவசப்படுத்தியது. அவளை ஆரத்தழுவி ஆதரவாகத் தட்டிக் கொடுத்தான். அவள் அவனை ஒரிரு நிமிடங்கள் வரை வைத்த கண் வாங்காமல் பார்த்துவிட்டு விருட்டென அகன்றாள். மன்னனுக்கு அப்போதே வெற்றி கிடைத்துவிட்ட மாதிரி இருந்தது.

கோப்பெருந்தேவி கோட்டைக்குள் சென்றபின் சில நொடிகளிலேயே பழையனின் ஒற்றர்களில் இருவர் வந்து தங்கள் செய்திகளாக இரண்டு செய்திகளைச் சொன்னார்கள். இரண்டுமே மோசமான செய்திகளாய் இருந்தன.

◈◈◈

## முரசு முப்பத்தைந்து

# மன்னனெனும் மாமனிதன்

ஒற்றர்கள் மிகவும் வேகமாகப் பயணம் செய்திருந்தார்கள் என்பதை அவர்களின் தோற்றமே புலப்படுத்தியது.

அவர்களில் முதல் ஒற்றன் பேசத்தொடங்கி 'மன்னவா படைத்தலைவர் கூறியபடி நான் இச்சேரசோழர்கள் செல்வதற்கு முன்பே உறையூருக்குப் போய்க் காத்திருந்தேன். அங்கே ஒரு வேடிக்கையைக் கண்டேன். இக்கூடற்பறந்தலைப் போரில் நாம் வெற்றிப் பெற்றிருந்தாலும் உறையூரில் வேறு விதமாக செய்தி வெளியிடப்பட்டிருந்தது. அதாவது இப்போரில் சேர சோழர்கள் வெற்றி பெற்று விட்டார்களாம். வெற்றி பெற்று இங்கே தங்கள் பிரதிநிதி ஒருவரை நியமித்துவிட்டு வடகிழக்கு திசையில் செல்கிறார்களாம். ஏன் தெரியுமா? நமது படைப் பிரிவு ஒன்று சிங்களர் உதவியுடன் சோழமண்டலக் கடற்கரையைத் தாக்கத் திட்டமிட்டிருப்பதால் அதை முடியறிடிக்க விரைந்து செல்கிறார்களாம். அவர்களின் இந்தப்போலி வெற்றியை நம்பி மக்களும் உறையூரை விழாக் கோலப்படுத்திக் கொண்டாடுகிறார்கள். ஒரே கூத்தாக இருக்கிறது மன்னவா'- என்றான்.



இதைக் கேட்டதும் 'சேரன் இரும்பொறை சிறந்த கற்பனாவாதி. இல்லையா படைத்தலைவரே? அவமானப்பட்ட போதும் அவனிடம் அழகான கற்பனைகள் உதிக்கின்றன. தோற்றுவிட்ட நிலையில் போய் செழிப்பான பொய்கள் உருவாகின்றன. அவனைப் போல் நான்கு பேர் இருந்து விட்டால் தமிழகமே பொய்யில் ஆழ்ந்துவிடும்' என்றான் மன்னன் படைத் தலைவனிடம்.

பிறகு ஒற்றனைப் பார்த்து 'அப்படியானால் அவர்கள் உறையூரை கடந்து கிழக்கில் போகப் போகிறார்களா?' என்று கேட்டான்.

'அப்படித்தான் தெரிகிறது மன்னவா. உறையூர் கோட்டையில் அவர்கள் நுழையவும் மாட்டார்கள் என்று தெரிகிறது. காவிரியைக் கடந்து வெகு வேகமாக கிழக்கில் அநேகமாகத் தஞ்சைக்குப் போய் விடுவார்கள் என்று தோன்றுகிறது'... என்று தெரிவித்த ஒற்றன் 'மிகவும் முக்கியமான விஷயம் மன்னவா. உறையூரில் தற்போது சேர சோழர்களின் விருந்தாளி ஒருவன் வந்து தங்கியிருக்கிறான்' என்றான்.

'விருந்தாளியா? யார் அது?'

'எருமையூரன்'...*

* எருமை என்பதில் வடமொழிச் சொல் மகிஷம் என்பது. மகிஷவூர் என்பதே எருமையூர் என்று வழங்கப்பட்டது. அகினி ஆற்றங்கரையில் அமைந்திருந்த இந்தச் சிற்றரசை ஆண்டவன் எருமையூரன் எனப்பட்டான். மகிஷவூர் என்பதே காலப்போக்கில் மைசூர் என்று மருவியது. இன்றைய மைசூரே சங்ககால எருமையூர்.

'எருமையூரனா?'

'ஆம் மன்னவா. கணிசமான படைகளுடன் வந்து தங்கியிருக்கிறான். கூடற் பரந்தலைப் போரில் உதவவே அங்கு வந்து தங்கியிருந்த அவனை உறையூரிலேயே இருக்கும்படிச் சேரனிடமிருந்து செய்தி வந்திருக்கிறது. அநேகமாக அவனுடன் சேரன் ஆலோசித்த பின்பே உறையூரை விட்டுப் போவான் என்று தெரிகிறது'

இச் செய்தியைக் கேட்டு மன்னனும் பழையனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

தற்போது இரண்டாவது ஒற்றன் முன் வந்து 'படைத்தலைவரே, நம் கோட்டைக்குள் இருந்த மேகலை அம்மையும் அவரது தந்தையும் தற்போது சந்தனக் கோட்டையில் சிறையிலிருக்கிறார்கள்'- என்றான்.

'என்ன, இது உண்மையா?'- என்று வெகுண்டு கேட்ட மன்னன் பழையனைப் பார்த்தான். அவனது முகம் சலனமற்றுக் கிடந்தது. அதைக் கண்டு வியப்புற்ற மன்னன் 'படைத்தலைவரே, ஒற்றன் சொன்னது உங்கள் காதில் விழவில்லையா? மேகலை மீண்டும் கவரப்பட்டு விட்டாளாம்' என்றான்.

அப்போதும் பழையன் பேசவில்லை. தன்னுடைய பேச்சுகூட கேட்காத நிலையில் பழையன் இருப்பதிலிருந்தே அவனது சிந்தனை மேகலையின்பால் போய்விட்டது என்பதை உணர்ந்த மன்னன் ஒற்றர்களை அனுப்பிவிட்டு படைத் தலைவனின் தோள்களைப் பற்றினான்.



''படைத்தலைவரே, கவலைப்படாதீர்கள். அவளுக்கு ஆபத்து ஏற்படாது. உடனே நீங்கள் போய் மீட்டு வாருங்கள்'' என்றான்.

பழையனுக்கு இப்போதுதான் நினைவு திரும்பியது. தன் நிலையை உணர்ந்து கொண்ட அவன் அதற்காக வெட்கப்பட்டுக் கொண்டான். பிறகு மன்னனிடம், 'போர் முடியும் வரை அவள் உயிருக்கு ஆபத்தில்லை மன்னவா. அவள் சந்தனக் கோட்டையிலேயே இருக்கட்டும். ஒருவகையில் அவள் அங்கே இருப்பது பாதுகாப்பானது. அங்கே அடைக்கப்பட்டு விட்டதால் இனி யாருக்கும் அலைச்சல் இல்லை'' என்றான்.

மன்னனின் முகம் லேசாக கோபத்தைக் காட்டியது.

''படைத்தலைவரே, என்ன பேசுகிறீர்கள்? சந்தனக் கோட்டையில் அவள் இருப்பது பாதுகாப்பு என்று சொல்லி விட்டாலே பாதுகாப்பாகி விடுமா? தனக்கு ஏற்பட்ட தோல்வியால் மனம் மாறி அச்சேரன் அவளுக்கு ஆபத்து விளைவித்து விட்டால்?''- கேட்டான் மன்னன்.

'ஒன்றும் ஆகாது மன்னவா. அவளை இப்போது கவர்ந்து போயிருப்பது கூட அவள் பால் என் கவனத்தைத் திருப்பவும் என்னை உங்களிடமிருந்து பிரிக்கவும்தான். நான் அங்கே போய் விட்டால் இருவரையும் சேர்த்து அழிப்பது சேரனுக்குச் சுலபம்''-

'பாண்டியர் படைத் தலைவரின் வீரம் எங்கே போயிற்று?'

'மன்னவா சேரன் வாள் வீசி என்னை அழிக்கப் போவதில்லை. பழையபடி சதியைத்தான் நாடுவான்'

'சதியை முறியடிக்கும் சாமர்த்தியம் படைத் தலைவருக்கு இல்லையா? அழிந்து போய்விட்டதா?'

'மன்னவா, கோபப்படாதீர்கள். ஒருத்தியின் நலனுக்காகப் போர் அரங்கைவிட்டு நானெப்படி ஓடமுடியும்? பாண்டியர் மானம் காக்கும் இப்போரை விட்டு விட்டு ஒருத்தியைக் காக்கவா நான் போவது?'

'படைத்தலைவரே, மேகலை யார்?'

'என்னைக் காதலித்து விட்ட துரதிருஷ்டமான பெண்'

'இல்லை பாண்டிய நாட்டு பிரஜை. நெடுஞ்செழியனின் சகோதரி. புரிந்து கொண்டீர்களா?'

'மன்னவா'

'அவள் கடத்தப்படுவதும் சிறை செய்யப்படுவதும் உங்கள் இருவருக்குமிடையே உள்ள விவகாரமல்ல. இது நமது நாட்டின் மானப் பிரச்சனை. என் மானப் பிரச்சனை தன்மானப் பிரச்சனை. அதைத் தீர்ப்பது மன்னனின் கடமை. தெரிந்து கொண்டீர்களா?'

'மன்னவா-நான்'

'இப்போர் கூட எனக்கு இப்போது பெரியதில்லை. ஏனென்றால் சேரனின் அவமான விளைச்சலுக்கு ஆரம்பத் தோல்வியை அளித்தாகி விட்டது. அடுத்த கட்ட நடவடிக்கை இன்றே முடிந்துவிடக் கூடியதில்லை. அதற்குப் பல நாட்களாகும். ஆனால் மேகலை கடத்தப் பட்டதால் உண்டாகியுள்ள மானப் பிரச்சனை உடனடியாக தீர்க்கப்பட வேண்டிய ஒன்று. அவள் மீட்கப்பட வேண்டும். உடனடியாக மீட்கப்பட வேண்டும்.



அதற்குப் பின்புதான் அதற்குக் காரணமானவர் மீது நடவடிக்கை எடுக்கலாம். முன்பு அவள் கவரப்பட்டபோது நீங்களாகவே மீட்டதால் எனக்கு வேலையில்லாமல் போய்விட்டது. இப்போது நீங்கள் தயங்குவதால் நானே சொல்கிறேன். போய் உடனடியாக மீட்டு வாருங்கள். முடியாதென்றால் நீர் படை நடத்திச் செல்லும். நான் போய் என் சகோதரியை மீட்கிறேன்'.

'மன்னவா, போர்த்திட்டம்...'

'நிறுத்தும். உடனடியாகக் கருவூர் போக வேண்டும் நீங்கள். இது அரசகட்டளை'

பழையனின் பேச்சுக்கே இடமளிக்காமல் கடமையை உணர்த்தும் கர்ம வீரனைப் போல் வார்த்தைகளைக் கொட்டிக் கட்டளையிட்ட மன்னன் அங்கிருந்து அகன்றான்.

பழையனின் இதயம் பரவசத்தால் ஆழ்ந்தது. மன்னனைப் பற்றி அனைத்தும் அறிந்தவன்தான் என்றாலும் அவனால் மனம் நெகிழாமல் இருக்க முடியவில்லை. 'நண்பா, நீ மன்னன் மட்டுமல்ல. மாமனிதன். உன்னால் உனக்குப் பெருமை இல்லை. எங்களுக்குத்தான் நீ நீடூழி வாழவேண்டும்' என்று அவனது அதரங்கள் முணுமுணுத்தன.

ஃ ஃ ஃ

கூடற்பரந்தலையில் பாண்டியரிடம் தோற்றோடிய சேர சோழர் படைகள் போர் முடிந்த கையோடு பின் வாங்கி ஓடியதால் உறையூர் போய்ச் சேருவதற்குள் ஓரிரவு ஏதேனும் ஓரிடத்தில் தங்கி இளைப்பாற வேண்டியிருந்தது.

படை வீரர்களின் அவசியத்தை சேர சோழ மன்னர்கள் உணர்ந்ததால் இளைப்பாற அனுமதி கொடுத்தார்கள். பின்வாங்கிய அப்படையின் வேலை அதோடு முடிந்துவிடவில்லையாதலாலும் மீண்டும் போரிட வேண்டியிருந்ததாலும் போர் வீரர்களைப் பக்குவப்படுத்த வேண்டிய இயல்பான அவசியத்தை உணர்ந்து இளைப்பாறச் சம்மதித்தான் சேர மன்னன் யானைக் கண் சேய். அதோடு அவனுக்கே கூடச்சற்று ஓய்வு தேவையாய் இருந்தது. மேலும் உறையூரை அடைவதற்கு முன்பாக சில ஆலோசனைகளை நடத்திவிட விரும்பினான் அவன். எனவே மதுரைக்கு வடகிழக்கே உறையூர் ராஜபாட்டையை அடுத்து இருந்த பெரு சமவெளி யொன்றில் கூடாரமடிக்கச் செய்தான்.

படைகள் நிம்மதியாக அங்கே இளைப்பாறின. வீரர்கள் அயர்ந்து உறங்கினார்கள். மிருகங்கள் கூட கால்களை நீட்டிப் படுத்து கண்களை மூடின. வையைக்கரை ஊரான இருந்தையூரிலிருந்து கொண்டு வந்திருந்த ஏராளமான உணவுப் பொருள்கள் பல நாட்களுக்குப் போதுமானதாய் இருந்ததால் அதற்கான வீண் அலைச்சல் இல்லாமல் போகவே கவலையின்றி கண்ணயர்ந்தார்கள் வீரர்கள்.

ஆனால் தங்களுக்கு முன்னால் இருந்த காரிய சித்தியை முன்னிட்டுச் சேர மன்னனும் சோழ மன்னனும் உறங்கவில்லை. கூடாரமொன்றில் வந்தமர்ந்த அவர்கள் ஆலோசனைக்காக தகடூர்த் தலைவன் எழினியையும் சில தளபதிகளையும் அழைத்திருந்தார்கள்.



அவர்கள் வந்து சேர்ந்தவுடன் தன் பேச்சைப் புலம்பலாகத் துவங்கினான் சோழன் பெருநற்கிள்ளி.

''ஆகா! எத்தனை மோசமான தோல்வி? சாதாரணமான ஒருவனிடம் போய் தோற்றுவிட்டு வந்திருக்கிறோமே! மிகவும் வெட்கமாக இருக்கிறது. ராஜசூயம் நடத்த விரும்பும் எனக்கு இது நல்ல சகுனமாகத் தோன்றவில்லை''.

இதைக் கேட்டு மெல்லச் சிரித்த சேரமன்னன், ''சோழரே, தற்காலிகத் தோல்விகளால் புது நம்பிக்கைகள் வரவேண்டுமே தவிர தளர்ச்சி வந்துவிடக் கூடாது'' என்றான்.

''சேர மன்னா, தோல்வியானது தற்காலிகமானதாய் இருந்தாலும் சரி நிரந்தரமானதாக இருந்தாலும் சரி அவமானத்திற்குரியது தானே?'' என்று கேட்டான்.

'சோழரே, அவமானம் என்பது துடைக்க முடியாத தொன்றல்ல. அதோடு நமக்கு வாய்ப்பே இல்லாமல் போய்விடவில்லை. வாய்ப்பிருக்கும் வரை இடைப் பட்ட தோல்விகளைத் பெரிதாகக் கருதவேண்டிய தில்லை. பெரிய ஓட்டம் ஒன்றுக்குப் புறப்பட்டு விட்ட ஒருவன் இடையில் இடறி விழுந்தால் அது முடிவான தோல்வியாகி விடமுடியாது. தடங்கல்கள் எந்தக் காரியத்திலும் உண்டு. அவைகளை எவ்வளவுக் கெவ்வளவு பொருட்படுத்தாமல் விடுகிறோமோ அதுதான் நம் போன்றவர்களுக்கு ஏற்றது'.

'பாண்டியனை தூசாக நினைத்து தோற்றிருக்கிறோம். குறைந்த பட்சம் அவனை அப்படி நினைக்காமலாவது இருந்திருக்கலாம்'.

'இல்லை சோழரே. பாண்டியன் சிறுவன்தான், அதிலொன்றும் எனக்குக் கருத்து வேறுபாடு கிடையாது. நாம் தோற்றுப் போனதற்குக் காரணமும் அவனல்ல'-

'நானே கேட்க வேண்டுமென்றிருந்தேன். நம் தோல்விக்கு என்ன காரணம்?'-

'யார் காரணம் என்று கேளுங்கள். இதோ இருக்கிறானே, இந்த எழினிதான்'-

'யார்? தகடூர்த் தலைவனையா சொல்கிறாய்?'

'இவன் தகடூருக்கு மட்டும்தான் தலைவன். அதை மறந்து விட்டதால்தான் இந்த நிலை நமக்கு?'

இங்கே குறுக்கிட்ட எழினி 'சேரரே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று கேட்டான்.

'ஏன், உனக்கொன்றும் புரியவில்லையா? நீ எங்களுக் கெல்லாம் தலைவன் என்றெண்ணிக் கொண்டு செயல்பட்டு விட்டாய். அது ஏன்?'-

'என்ன சொல்கிறீர்கள் ஐயா நீங்கள்? நான் உங்கள் தலைவனாக செயல்பட்டேனா? இதென்ன வேடிக்கை?'

'வேடிக்கையல்ல எழினி. விஷமம். படைகளை இயக்கும் விஷயத்தில் ஆணையிட வேண்டியது யார்? நான் அல்லது சோழர். அப்படி இருக்கும்போது போரின் இடையில் உன் இஷ்டப்படி இயங்கினாய். அதற்கு யார் கொடுத்தார்கள் அதிகாரம்? கட்டுப்பாட்டையும் கட்டுக்கோப்பையும் மீறி உன் இஷ்டத்திற்கு நீ நடந்து கொண்டதால் என்னால் இயங்க முடியாமல் போய்விட்டது. எனவேதான் சமாதானச் சங்கை ஊதினேன்'-



'தவறான குற்றச்சாட்டு சேரரே. நான் இயங்கிய சந்தர்ப்பத்தைக் கொஞ்சம் கவனியுங்கள். நீங்களும் சோழரும் கை ஓங்கியிருந்த சந்தர்ப்பத்தில் நானப்படி நடந்துகொள்ளவில்லை. உங்கள் கைகள் ஓய்ந்த நிலைக்கு வந்தபோதுதான்- உங்கள் அணிவகுப்பு சிதறியபோது தான் என் பலத்தைக் காட்ட முயன்றேன். நீங்கள் இருவரும் தளர்ந்துவிட்ட நிலையில் உங்கள் ஆணையை எதிர்பார்த்து நானென்ன கைகளைக் கட்டிக் கொண்டா நிற்கமுடியும்? அதற்காகவா நான் வந்தேன்? உங்களிடமிருந்து உத்தரவு எதுவும் வரவாய்ப்பில்லை என்று உணர்ந்தே செயல்பட்டேன். அது தவறா?''-

''செயல்பட்டு என்ன சாதித்து விட்டாய்? எங்களை விட மோசமான படைச் சேதத்தை அடைந்தாய். சிறந்த யானைகளை பலி கொடுத்தாய்'-

'போர்க்காலங்களில் வாய்ப்பைப் பயன்படுத்தத்தான் முடியும். ஆனால் விளைவுகளை உறுதியாக எதிர்பார்த்து விட முடியாது. கோட்டைச் சுவர்கள் பக்கவாட்டில் விலகுவதையும் உள்ளே பாதாளம் தோண்டப்பட்டிருப் பதையும் நானெப்படி எதிர்பார்க்க முடியும்? உங்களால்தான் முடியுமா? முடியவில்லை என்பதைப் பின்னால் அறிந்து கொண்டேன். நீங்களும்தான் ஏமாந்தீர்கள்'.

'முதலில் ஏமாந்தோம். அதையறிந்து நீ முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமா வேண்டாமா?'-

'கோட்டையின் ஒவ்வொரு பக்கமும் சுவர்கள் அப்படி இயங்கும் என்று யார் எதிர்பார்க்க முடியும்?

அதோடு நீங்கள் ஏமாந்த விஷயம் எனக்குப் போர் முடிந்த பிறகுதான் தெரியும்'.

'நீ போரிடவே லாயக்கில்லை. கோட்டையின் ஒருபுறம் நடப்பது மறுபுறம் தெரியாமல் போய்விடுமா? நீ அக்கறை எடுத்திருந்தால் தெரிந்து கொண்டிருக்கலாம். உன் அக்கறையும் எண்ணமும் வேறு. உன் பரம்பரை புத்தியைக் காட்டிவிட்டாய். போர் நிலைமையைப் பயன்டுத்தி கொள்ளையடித்துக் கொண்டு போவதே உன் எண்ணம். அதனால்தான் எங்களைப் பற்றியோ போரைப் பற்றியோ கவலைப்படாமல் உன் எண்ணப்படி செயல்பட்டிருக்கிறாய்'-

இதைக் கேட்டதும் பெருத்த கோபம் உண்டாயிற்று எழினிக்கு. ஏற்கெனவே விகார முகம் கொண்ட அவனுக்குத் தற்போது முகம் மேலும் விகாரமாகிப் பேய் போல பயங்கரமாகக் காட்சியளித்தது. ஏதோ காரசாரமாகப் பேச எத்தனித்தான். அவன் மட்டும் அப்போது பேசியிருந்தால் பாசறையில் ரத்தக் களறி உண்டாகியிருக்கும். நல்ல வேளையாகச் சோழ மன்னன் குறுக்கிட்டு, 'நிறுத்து எழினி. நாம் அடைந்தது தோல்வியே அல்ல என்று சொல்லிவிட்ட பின் அதற்குக் காரணம் யார் என்ன என்றெல்லாம் ஆராய வேண்டியதில்லை. அந்த ஆராய்ச்சிக்காக நாமே போரிட்டுக் கொள்ள வேண்டியதில்லை'- என்று கூறிவிட்டு சேரனுக்காகத் திரும்பி, 'இரும்பொறை, போனதைப் பற்றிவிடு. நாமிப்போது இருக்கும் நிலையொன்றும் மோசனமானதில்லை. சேதம் ஏற்பட்டிருப்பது உண்மைதான். பாண்டியன் நம்மைத் துரத்தி வராமல்



இருக்க மாட்டான். அவன் வருவதற்குள் நாம் உறையூர் சென்று பலப்படுத்திக் கொள்ளலாம். அவன் வந்து முற்றுகையிடட்டும். மதுரையில் அவன் காட்டிய சாமர்த்தியத்தைவிட அதிகமாகவே நாம் காட்டி நம் தோல்வியை வெற்றியாக மாற்றிக் காட்டுவோம்' என்றான்.

சேரமன்னனுக்கு இதில் சம்மதமில்லை.

''சோழரே, மதுரைக் கோட்டை வேறு. உறையூர் கோட்டை வேறு' என்றான்.

'ஏன், மதுரைக் கோட்டையை ஒட்டி வையை ஓடுகிற தென்றால் உறையூர் கோட்டையை ஒட்டிக் காவிரி ஓடுகிறது.''-

'அது ஒன்றுதான் ஒற்றுமை. வேறெதிலும் கிடையாது. மதுரைக் கோட்டைச் சுவர் விலகிய விதத்தைக் கண்டிருப்பீர்கள். அந்த இந்திர ஜாலம் உறையூரில் நடக்காது. மதுரைக் கோட்டை மற்றும் பொறிகளை இயக்குவது யவனர்கள். உறையூரில் இருப்பவர்களோ பழங்குடிகள். அதோடு மதுரைக் கோட்டையின் மூளை பழையன். இங்கே யாரும் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாகப் பாண்டியன் நம்மைத் துரத்தி வரும் போது நாம் போய் கோட்டைக்குள் புகுந்து கொண்டு போரிட எண்ணுவது நமது பாரம்பரை வீரத்திற்கு ஏற்றதல்ல. அவனது முற்றுகைக்குள் நாம் சிக்கிக்கொள்வது தற்கொலைக்கு ஒப்பானது. ஆபத்தானது. ஆகவே அது வேண்டாம்'

'பின்?'

'உறையூரையும் கடந்து கிழக்கில் போவோம்'

'கிழக்கில் என்றால் எங்கே?'

'அது பற்றி ஆலோசிக்கத்தான் ஒருவரை வரச் சொல்லியிருக்கிறேன். அநேகமாக அவர் இன்னேரம் உறையூருக்கு வந்திருப்பார்.'

'யாரவர்?'

சேரன் இதற்கு பதில் சொல்ல முற்பட்டபோது பாசறைக்குள் யாரோ வருவது போல் தோன்றவே- ''அவரே வந்து விட்டாரென்று நினைக்கிறேன்''- என்று சொல்லிக் கொண்டே சேர மன்னன் கூடாரத்தின் வாயிலை நோக்கினான்.

உள்ளே நுழைந்ததோ சேரன் எதிர்பார்த்த நபர் அல்ல. வேறொருவர்.

◈◈◈

முரசு முப்பத்தாறு

# உறையூர் மார்க்கம்

உறையூருக்குச் செல்லும் மார்க்கத்தில் கொடும்பாளுருக்கு அருகில் படைகளுடன் இளைப்பாறிய சேர மன்னன் இரும்பொறை தனக்கு உதவும் வகையில் ஒருவர் வருகிறார் என்றும் அவர் உறையூரை வந்து சேர்ந்திருப்பார் என்றும் தெரிவித்துக் கொண்டிருந்த நேரத்தில் அவனிருந்தப் பாசறையில் ஒருவர் நுழைந்தமே அவர் தான் எதிர் பார்த்த நபர் தான் என்றெண்ணி எழ முற்பட்ட போது உள்ளே நுழைந்தவனின் முகம் புலப்பட்டு விட்டதால் ஆசனத்திலேயே அமர்ந்தான்.

உள்ளே நுழைந்தவன் நன்னன்.

திடீரென நுழைந்த அவன் 'மன்னவா, முக்கியமான செய்தி.' என்று பரபரப்புடன் ஆரம்பித்ததும் அதைக் கேட்டுக் கொள்ளக்கூட பொறுமையில்லாமல் எரிந்து விழுந்தான் இரும்பொறை.

'முட்டாள். நீயும் உன் செய்தியும். உன்னை யார் இங்கே அழைத்தது? உன்னை இன்னுமா கழுவேற்ற வில்லை? டேய், யாரங்கே இந்த மடையனை உடனடியாகக் கழுவேற்றிவிட்டு எனக்குத் தகவல் சொல்லுங்கள்.'

முக்கியமான பேச்சு நடந்து கொண்டிருந்தபோது திடீரென நுழைந்த விட்டதாலும், நுழைந்தவன் தன்

நம்பிக்கைகளைச் சிதைத்து விட்ட நன்னன் என்பதாலும், அதோடு அவனது தோற்றம் புயலில் சிக்கி மீண்ட பராரியைப் போல் இருந்ததாலும் சகித்துக் கொள்ள முடியாமல் இப்படி வார்த்தைகளைக் கொட்டினான் சேர மன்னன்.

சிறிது தாமதித்தாலும் தலை போய்விடக் கூடிய நிலையாக இருந்ததால் பீதியடைந்த நன்னன், 'மன்னவா பொறுங்கள். செய்தியை கேட்டு விட்டு முடிவுக்கு வாருங்கள். நான் சொல்ல வந்தது பழையனைப் பற்றி' என்று அலறினான்.

பழையன் என்ற வார்த்தையைக் கேட்டதுமே நிதானத்திற்கு வந்து சேரமன்னன், 'என்ன அப்படிப்பட்ட செய்தியைச் சொல்ல வந்துவிட்டாய் அவனைப் பற்றி? சொல் சீக்கிரம்' என்று இரைந்தான்.

'மன்னவா, பழையனின் காதலி மேகலை. அவள் தந்தை இருவரையும் கவர்ந்து சந்தனக் கோட்டையில் அடைத்துவிட்டேன்.'-

சேரன் இதைக் கேட்டு உடனடியாக அசந்துவிட வில்லை.

'எப்போது நடந்தது இந்த வேலை?'- என்று கேட்டான்.

'போரின் போதுதான்'-

'போரின் போது உனது கடமையை நான்தானே வரையறுத்தேன்? அதில் அந்த வேலையைக் கொடுத்ததாக நினைவில்லையே'



'உண்மைதான் மன்னவா. தாங்கள் கொடுக்கவில்லை நான். ஆனால் நானாகத்தான் மேற்கொண்டேன்'

'அப்படியானால் வாளெடுத்துப் போர் புரியவில்லை?'

'வாள் வீச்சிற்குத்தான் மன்னர்கள் நீங்கள் இருக்கிறீர்கள். ஏராளமான வீரர்கள் இருக்கிறார்கள். அவர்களோடு வாள் வீசியிருந்தால் இப்போது இங்கே இருப்பவர்களில் ஒருவனாகத்தான் அமர்ந்து கொண்டிருப்பேன். அதில் என்ன லாபம்? ஆகவேதான் நானாகத் திட்டம் போட்டேன். போரில் கலந்து கொள்வது போல் கலந்து கொண்டு இறந்து போன பாண்டிய வீரனின் ஆடையை எடுத்து அணிந்து கொண்டு கோட்டைக்குள் சென்று மேகலையின் இருப்பிடத்தை அடைந்தேன். அங்கே உங்களைப் பெரிதும் நம்பும் அவளது தந்தையிடம் நாடகமாடினேன். தாங்கள் இருவரையும் உடனே அழைப்பதாய் பொய் சொன்னேன். போர் முடிந்ததும் மேகலையை மணக்கத் தாங்கள் விரும்புவதாகவும் அளந்தேன். நம்பினார். இருவரையும் மாறுவேடத்தில் வெளியே அழைத்து வந்தேன். போர் மும்முரத்தில் யாரும் எங்களைச் சந்தேகிக்கவில்லை. அதோடு பாண்டியர் கோட்டை விவகாரங்கள் எனக்கு நன்றாகத் தெரியுமாதலால் சிரமமில்லாமல் தப்பினேன். இருவரையும் சந்தனக் கோட்டையில் அடைத்துவிட்டு தங்கள் இருப்பிடம் தெரிந்து புயல்வேகத்தில் வருகிறேன். இரண்டு நாட்களாகச் சாப்பிடவும் இல்லை'-

சேரமன்னன் இதைக் கேட்டு அனுதாபப்பட்டு விடவில்லை. மாறாக 'இக்காரியத்தைச் செய்ததின் நோக்கமென்ன?' என்று கேட்டான்.

'நான் செய்த தவறுக்கு நானே பரிகாரம் செய்ய விரும்பினேன். என்னால் தப்பிவிட்ட பழையனை நானே சிக்க வைத்து உங்கள் நோக்கத்திற்கு வெற்றியைத் தர விரும்பினேன். மேகலையின் கதி இந்நேரம் பழையனுக்குத் தெரிந்திருக்கும். உடனே அவன் அங்கே போவான். அவனை அங்கே சிறை செய்வதற்கான அனைத்து ஏற்பாடுகளும் தயாராக இருக்கின்றன. இந்த முறை அவன் தப்ப முடியாது. அதைச் சிறப்பாக நான் செயல் படுத்த போகிறேன்'' என்று கூறி விட்டு பதிலுக்குக் கூடக் காத்திராமல் போய் விட்டான் நன்னன்.

சேர மன்னனோ! அவனைத் தடுக்கும் நிலையில் இல்லை. ஏற்கெனவே அவன் கனவுலகில் ஆழ்ந்து விட்டதால் சுற்றப்புறத்தையே சற்று மறந்து விட்டிருந்தான். பழையன் போர் அரங்கிலிருந்து நீக்கப் படுகிறான் என்ற ஒரு விஷயம் அவன் மனத்திலே கனவைக் கிளப்பிவிட போதுமானதாய் இருந்தது. எப்போதுமே அவனது மனம் பழையனை வைத்தே திட்டங்களைப் போட்டு வந்ததாலும், தனக்குரிய வெற்றிக்கான தடை பழையன்தான் என்று அசைக்க முடியாமல் நம்பியதாலும் நன்னனின் தற்போதைய முயற்சி அவனுக்கு இனித்தது. தான் முயன்ற மாதிரி பழையன் மட்டும் சந்தனக் கோட்டையை விட்டுத் தப்பாமல் இருந்திருந்தால் கூடற்பரந்தலைப் போர் தோல்வியில் முடிந்திருக்காது என்று அபிப்ராயப்பட்ட அவன் நன்னனின் தற்போதைய முயற்சியால் பழையன் விலக்கப்பட்டு விட்டால் தனக்கு வெற்றி நிச்சயம் என்று கருதினான். நன்னனிடம் உண்டாகியுள்ள வெறி தற்போது மிகவும் நல்லது என்றும் அந்தவெறி நிச்சயமாகப்



பழையனைச் சிறைப்படுத்தும் என்றும் நம்பிய அவன் திருப்திக்கு ஆளானான்.

அவன் வாய்விட்டுச் சொல்லவில்லை என்றாலும் அவனது முகம் நன்றாகவே பிரதிபலித்தது. அதை பெருநற்கிள்ளியும் எழினியும் கவனித்தார்கள். எழினியோ அதனால் வெறுப்பே அடைந்தான். பழையனை விலக்கி விட்டால் வெற்றியை அடைந்து விடமுடியும் என்று சேரன் நம்புவது பழையனின் பலத்தை உணர்த்துவதானாலும் பழையனை விலக்கி விட்டால் சேரனால் வெற்றி பெற்றுவிட முடியும் என்று நம்பி விட அவன் தயாராக இல்லை. உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தாமலும், பிறரை மதிக்காமலும், வீரத்தை விடத் தந்திரத்தையே நம்பி எப்போதும் சந்தேகித்துக் கொண்டிருப்பவனான இச்சேரமன்னன் பழையனை முன்வைத்து காரியத்தில் ஈடுபடுவது அர்த்தமற்றது என்றும், சாதகமற்றது என்றுமே நினைத்தான் எழினி. அச்சேரனுடன் பணிபுரிவதே அவனுக்குப் பொறுத்தமற்ற காரியமாக இருந்தது. ஆனால் பணிக்குத் தன்னை அழைத்தவன் சோழ மன்னன் என்பதாலும், பண்புள்ளவன் என்பதாலும் போர் முடியும்வரை உதவவே விரும்பினான். எனவே சேர மன்னனிடம் வீணாக எதிர்ப்பு தெரிவித்துக் கொண்டிருப்பதைத் தவிர்க்கவும் விரும்பினான்.

இரும்பொறை ஒரு வழியாகக் கனவை விட்டு விலகி, 'எல்லாம் நமக்குச் சாதகமாகவே அமைகிறது'- என்றான்.

அவன் உணர்த்தும் சாதகம் எது என்பதை அறிந்து கொண்டிருந்த சோழ மன்னன் அதைப்பற்றி வினவாமல்

'உறையூர் விருந்தாளி யார் என்று சொல்லவில்லையே. யார் அவர்?'- என்று கேட்டான்.

சோனும் அப்போது பழையனைப்பற்றி விவாதிக்க விரும்பாமல் உறையூர் விருந்தாளியைப் பற்றி பேச முற்பட்டு 'சிறந்த வீரன் சோழரே. வாழ்நாளில் தோல்வியையே சந்திக்காதவன். பகைவன் என்று ஒருவன் அமைந்துவிட்டால் அவனை அழிக்‌ ாமல் விடாதவன். பேரரசனாக ஆளத் தகுந்தவன்' என்றான்.

'அப்படியானால் சிற்றரசரா-'-

'ஆம். வடுகர் பெருமகன். எருமையூரன்'-

'என்ன எருமையூரனா? அயிரையாற்றங்கரை மன்னனா? எங்கோ இருக்கும் அவனா உறையூருக்கு வருகிறான்?'-

'சோழரே. முதலையின் வாயில் சிக்கிய யானை அழைத்தபோது எங்கேயோ இருக்கும் நாராயணன் வரவில்லையா? நட்புக்கும் பக்திக்கும் தூரம் என்பதேது? அதோடு இந்த எருமை நாட்டு மன்னன் எனக்கு மிகவும் பழக்கமானவன். சிறந்த நண்பன். நட்பு என்று வரும்போது உயிரைக் கொடுப்பவன். போர்ப் பயிற்சி நிரம்பிய தீரன். தற்போதைய சிறுவன் பாண்டிய நெடுஞ்செழியனின் பாட்டனார் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆரியப்படைகளை அழித்ததே வடுக நாட்டில்தான். அதற்கு வழி வகுத்துக் கொடுத்ததும் பாண்டியன் வந்து சேரும் வரை ஆரியரைத் தேக்கி நிறுத்தியவனும் எருமையூரன்தான். தோள்வலியும் வாள்வலியும் மிகுந்தவன் என்பதாலும் சிறந்த போர்த்திட்டங்களை வகுத்துத் தர வல்லவன் என்பதாலும் அவனை உதவிக்கு அழைத்தேன்'-



'அப்படியானால் அவன் இல்லாமல் பாண்டியனை வெற்றி கொள்ள முடியாது என்று தீர்மானித்திருந்தாயா இரும்பொறை?' கேட்டான் சோழவேந்தன்.

'அப்படியல்ல சோழரே. அவனை அழைத்தது ஒரு முன்னேற்பாட்டு நடவடிக்கைதான். அதுமட்டுமல்ல. நாம் பாண்டியனை முறியடிப்பதோடு நின்றுவிடப் போவதில்லை. வஞ்சி மாநகர் சேரன் கோக்கோதை மார்பனையும் வீழ்த்தியாக வேண்டும். அப்போதுதான் நீங்கள் ராசசூயம் நடத்த முடியும். அந்த ஒரு இக்கட்டான நிலையையும் நான் யோசித்து வைத்திருந்தேன். பாண்டியனுடனான போரில் நமக்கு உண்டாகக் கூடிய சேதத்தை ஈடு செய்யும் விதத்தில் இருக்கட்டும் என்றே இவனை அழைத்தேன். ஆனால் பாண்டியனை முறியடிக்கவே இவன் தேவைப்படுகிறான். மொத்தத்தில் கூடற்பறந்தலையில் நமக்கு நேர்ந்த சேதம் இவனால் இப்போது ஈடு செய்யப்பட்டுவிட்டது. நாம் பழைய பலத்தைப் பெறுகிறோம். அதோடு எருமையூரனின் போர் அறிவு வேறு கிடைக்கிறது.'-

'எருமையூரனை உறையூரில் நாம் சந்திக்க வேண்டும் என்றால் நமது திட்டம் மாறவேண்டுமல்லவா? நமது திட்டப்படி உறையூருக்குள் போகாமலேயே அதைக் கடந்துவிட வேண்டும். ஆனால் எருமையூரனைச் சந்திக்கவேண்டுமென்றால் ஊருக்குள் போகவேண்டு மல்லவா?' என்று தன் சந்தேகத்தைக் கேட்டான் சோழன்.

'தேவையில்லை. அநேகமாக நாம் உறையூரை அடைவதற்கு முன்பாகவே எருமையூரனைச் சந்திக்கலாம்.'

'உறையூரில் நாம் நுழையாமல் அதைக் கடந்து கிழக்கிலோ வடகிழக்கிலோ போவது உறையூர் மக்களுக்குச் சந்தேகத்தைத் தரும். உறையூர் என் ஊர். என் தலைநகரம். அதில் நுழையாமல் எப்படிப் போக முடியும்?' கேட்டான் சோழன்.

'கவலையே வேண்டியதில்லை சோழரே. அதற்கும் ஏற்பாடு செய்துவிட்டேன்.'

'ஏற்பாடா?'-

'ஆம். மதுரைப் போரில் நாம் வென்றுவிட்டதாக உறையூருக்கு ஏற்கெனவே செய்தியனுப்பி விட்டேன்.'

'இது என்ன விபரீதம்? என் மக்களுக்கு ஏன் பொய்ச் செய்தி அனுப்ப வேண்டும்? அதை நம்பும் பட்சத்தில் அவர்கள் பட்டணப்பிரவேசத்திற்கு நம்மைக் கட்டாயப்படுத்தினால்? அது மட்டுமல்ல. மதுரையில் நாம் வெற்றி பெற்றபின் உறையூருக்குத் திரும்பாமல் அதையும் தாண்டி ஏன் ஓட வேண்டும் என்று சந்தேகிக்க மாட்டார்களா?'

'மாட்டார்கள். ஏனென்றால் அதற்கும் ஒரு கதையை உருவாக்கி அனுப்பிவிட்டேன்'

'கதையா?'-

'அப்படித்தான். அதாவது பாண்டியரின் கடற்படை ஒன்று சிங்களர் உதவியுடன் சோழ மண்டல



கடற்கரையைத் தாக்க முயலுவதால் நாம் மதுரையில் வெற்றி பெற்ற கையோடு கிழக்கு நோக்கிப் போகிறோம். எப்படி இருக்கிறது?'-

'பொய் எத்தனை நாட்களுக்கு வாழும்?'

'வாழும் வரை வாழட்டும். அது இறந்த பின் புதுப் பொய்யை உருவாக்கிக் கொள்ளலாம்'

'இது சிறப்பான வழியாகத் தெரியவில்லை இரும்பொறை. இப்படியெல்லாம் முயன்றா நான் ராசசூயம் நடத்த வேண்டும்?'

''சோழரே, மனம் தளர்ந்து பிடிப்பை விட்டு விடாதீர்கள். இவைகளையெல்லாம் யாரும் மனம் விரும்பிச் செய்யவில்லை. கட்டாயத்தில் செய்கிறோம். அவசியத்தில் செய்கிறோம். மகாபாரதப் போரைப் பற்றி உங்களுக்குத் தெரியாதா? கௌரவர்களைச் சேர்ந்த ஜயந்தனைக் கொல்ல வேண்டிய நிர்பந்தம் பாண்டவர்களுக்கு ஏற்படுகிறது. அவனோ இருக்குமிடம் தெரியவில்லை. அவனை வெளிக்கொணர கண்ணன் திட்டமிட்டு பட்டப் பகலில் சூரியனை தன் சக்கரத்தால் மறைத்து இருள் சூழும்படி செய்துவிடுகிறான். இருள் பொழுது சம்பவித்து விட்டால் போரை நிறுத்தி விடுவது போர் சம்பிரதாயமாதலால் அப்போது இருள் சூழ்ந்து விடவே ஏமாந்து போன ஜயந்தன் பகல் பொழுது முடிந்து விட்டதாகக் கருதி வெளிப்படுகிறான். கண்ணனும் சக்கரத்தை நீக்கி இருளை அகற்றிவிடுகிறான். அர்ச்சுனன் ஜயந்தனை வீழ்த்திவிடுகிறான். இது தர்மமா? இல்லைதான். ஆனாலும் அது நடந்ததே எப்படி? போர் என்று வந்து விட்டால் சந்தர்ப்பங்களை நமக்குச்

சாதகமாக்கிக் கொள்வதும், சாதகமாவதற்கான காரியங்களைச் செய்வதும் இயல்புதான் சோழரே. நான் பழையன் ஒருவனைப் பெரிதாக எண்ணுவதையும், அவனை வைத்தே போர்த்திட்டங்களைத் தீட்டுவதையும் பைத்தியக்காரத்தனமாக நினைக்கிறான் இந்த எழினி. ஆனால் நீங்கள் அப்படி எண்ணமாட்டீர்கள் என்று நினைக்கிறேன். இப்போது சொன்னேனே-மகாபாரதம்-அதையே எடுத்துக் கொள்ளுங்கள். போர் என்று வந்த நிலையில் கண்ணன் ஒருவனை வைத்தே திட்டங்கள் நிறைவேறின. துரியோதனன் முதலானோர் அவனை அலட்சியப்படுத்தினாலும் பீஷ்மர் போன்ற மாவீரர்கள் கண்ணன் ஒருவனது மகத்துவத்தை அறிந்திருந்தார்கள். கௌரவர்களின் வெற்றிக்கு அவன் ஒருவனால் தான் தடை போட முடியும் என்று நம்பினார்கள். முடிவில் நடந்ததும் அதுதானே? வாசுதேவன் மட்டும் இல்லாதிருந்தால் பாண்டவர்கள் பிரமாதமாக எதைச் சாதித்திருக்க முடியும் போரில்? அன்று பாண்டவர்களுக்குக் கண்ணன் கிடைத்தான். இன்று பாண்டியர்களுக்கு பழையன் கிடைத்திருக்கிறான். அவன் ஒருவனுக்காகத்தான் நான் பலவாறு முயற்சி செய்கிறேன். கொங்கு சேரர்களுக்கு ஒவ்வாத சிந்தனைகளிலும் செயல்களிலும் இறங்குகிறேன். இதை மட்டும் நீங்கள் புரிந்துகொண்டு ஒத்துழையுங்கள். உங்கள் எண்ணப்படி ராச சூயத்தை நடத்திச் சரித்திரம் படைப்பீர்கள்'-

சேரனின் பேச்சு சோழனைப் பெரிதும் கவர்ந்தது. சேரன் சதிகளைச் செய்தாலும் அவைகளை மனம் விரும்பிச் செய்யவில்லை என்பதை அறிந்த மாத்திரத்தில் பெரும் ஆறுதல் அடைந்தான் பெருநற்கிள்ளி. அதோடு



அவன் சுட்டிக் காட்டிய மகாபாரதப் போரும் அப்போரில் மலிந்த அதர்மங்களும் சோழனின் மன உறுத்தல்களைப் பெருமளவுக்கு நீக்கின. ஆதிக்க வேட்கையில் இறங்கிவிட்டு தர்ம அதர்ம வாதங்களைப் பொருட் படுத்துவது வேட்கையின் போக்கையே திருப்பிவிடும் என்பதை உணர்ந்து கொண்டான் அவன். எனவே இனிச் சேரனின் சிந்தனை குறித்தோ செயல் குறித்தோ விவாதத்தில் இறங்குவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டான்.

எழினியோ அவ்வாறு நினைக்கவில்லை. சேரனின் பேச்சு சாமர்த்தியத்தை அவன் நன்று அறிந்திருந்தானாதலால் அவன் பேசுவதெல்லாம் சந்தர்ப்ப வாதங்கள்தான் என்றே கருதினான். சந்தர்ப்பம் மாறினால் தற்போதைய வாதங்களைச் சோழனுக்கு எதிராகத் திருப்பவும் சேர மன்னன் தயங்க மாட்டான் என்பது அவன் அபிப்ராயமாக இருந்தது. சதிகளின் இயல்பே சந்தர்ப்பங்களுக்கு ஏற்ற மாதிரி மாறக் கூடியதுதான் என்பதை அறிந்திருந்த எழினி சேரனின் வாதங்களைச் சட்டை செய்யவில்லை. சோழனுக்கு உதவுவது என்ற அளவில் மட்டுமே தன்னை வைத்துக் கொள்ளத் தீர்மானித்தான் அவன்.

அவர்களது பேச்சுக்கள் ஓரளவிற்குச் சாந்தமாகவும் திருப்தியாகவும் முடிவடைந்த நிலையில் யாருமே எதிர் பாராத நிலையில் அங்கு வந்து சேர்ந்தான் எருமையூரான்.

அவன் தீட்டிய திட்டமோ அவர்களுக்கு இனிப்பாகவும் அதே சமயம் பயங்கரமானதாகவும் இருந்தது.

◈◈◈

முரசு முப்பத்தேழு

# எருமையூரன்

எவரும் வெளியே திரிவதற்கு அஞ்சும் நள்ளிரவிலே புறப்பட்டு பகைவரின் காவற்காட்டினை அழித்து, அதையடுத்த புறநகரிலே உலவும் ஆநிரைகளைக் கவர்ந்து, அவை போதாமல் தொழுவங்களிலே இருக்கும் பசுக்களையும் அவற்றின் கன்றுகளையும் கொள்ளை யிட்டு வந்து தன்னாட்டு மன்றுகளை நிறைவிக்கும் வன்தோய் வடுகர் பெருமகன் என்று அகநானூற்றுப் பாடல் (253) சிறப்பித்த அயிரையாற்றங்கரை சிற்றரசனான எருமையூரனின் வரவு அங்கிருந்தவர்களுக்கு வாயைத் தேடி தேன் வந்து சொட்டியது போல் இருந்தது. எனவே இரு மன்னர்களும் அன்புடன் அவனை வரவேற்று உபசரித்தார்கள். உபசரிப்பு சிறப்பாக இருந்தாலும் எருமையூரனொன்றும் பெரிதும் திருப்திப்பட்டு விட்டவனாகத் தெரியவில்லை. ஒருவேளை அவனது முகத்தில் திருப்திக்கான களையே வராதோ என்னவோ. சேர சோழர்களை விட வயதானவனாய் இருந்தான் எருமையூரன். உடைகள் அரச உடைகளாய் இருந்தாலும் அவன் முகத்தில் ஆக்ரமித்திருந்த தாடியும் மீசையும் நரைத்துப் போன நீண்ட தலைமயிரும் அவனையொரு ராஜரிஷியாகவே எண்ண வைத்தன.

'உங்களுடன் வந்துள்ள படை எவ்வளவு?' என்று கேட்டான் எழினி.



குரல் புதியதாக இருக்கவே அதற்குரியவன் யாரெனப் பார்த்த எருமையூரன் 'யார் நீ?'- என்று கேட்டான்.

'என்னைக் கூடவா அடையாளம் தெரியவில்லை? உங்கள் அண்டை நாட்டவன். தகடூர் மன்னன் எழினி' என்றான் எழினி.

'பற்கள் உடைந்து கிடப்பதால் தெரியவில்லை. பிசாசுபோல் இருந்தாய்'- என்றான் எருமையூரன்.

அவனது மனம் கொதித்தது. தகடூரையடுத்த எருமையூரின் மன்னனாகப் பொறுப்பேற்ற புதிதில் தகடூரை விழுங்கிவிட முயன்றிருந்தான் எருமையூரன். ஆனால் அந்த முயற்சி எழினியின் தந்தையால் முறியடிக்கப்பட்டது. அந்தத் தோல்வியால் காலம் காலமாய் மனத்திலே அழுந்திக் கிடந்த ஆத்திரம் தற்போது எழினியை அடையாளம் தெரிந்து கொண்டதுமே ஏற்பட்டதால் அதை வார்த்தைகளில் வெளிப்படையாகவே காட்டிக் கொண்டான்.

ஏற்கெனவே வெறுப்படைந்து கிடந்த எழினிக்கு எருமையூரன் தன்னைப் பிசாசு என குறிப்பிட்டது பெருங் கோபத்தை உண்டாக்கியது.

'மனிதர்களைப் போய் பிசாசாகப் பார்க்கும் நீங்கள் போய் போரில் என்ன சாதிக்கப் போகிறீர்களோ தெரியவில்லை'... என்றான் இடக்காக.

'எழினி, பேசாமல் இங்கிருந்து போய்விடு. இல்லை யானால் அன்று அடையாமல் விட்ட தகடூரை உன்னைக் கொன்று இன்று அடைவேன்'... என்று இரைந்தான் எருமையூரன்.

'கொல்லும் கலை எனக்கும் தெரியும். அதை நாம் இருவரும் காட்டிக் கொள்ள இது நல்ல இடம்தான்' என்றான் எழினி பிடியை விடாமல்.

எருமையூரனுக்குக் கோபம் மிதமிஞ்சியது. 'இரும்பொறை, முதலில் இவனையும் இங்கே இருப்பவர்களையும் உடனடியாக வெளியே அனுப்பு. இவர்களையெல்லாம் வைத்துக்கொண்டு போர்த் திட்டத்தைப் பற்றிப் பேச நான் தயாராக இல்லை'- என்று கடுகடுத்தான். கண்களில் சாந்தமில்லை. கோபமே சுடர்விட்டது. இவையெல்லாம் வெறும் தோற்றங்கள் தான் என்று எண்ணத் தகுந்த விதத்தில் அவனது நடையும், நின்ற தோரணையும், கணீரென்று வெளிப்பட்ட வார்த்தைகளும், புறங்கைகளில் மின்னிய வெட்டுக் காயங்களும் அவனது வீரத்தைப் பறைசாற்றி கம்பீர அழகை அள்ளித் தெளித்தன.

அவனது வரவால் மிகவும் மகிழ்ந்த சேரன் 'தங்கள் தோற்றமும் வரவும் எங்களுக்கு ஒரு பீஷ்மர் கிடைத்த மாதிரி இருக்கின்றன'... என்றான்.

'நன்றி'- என்று தெரிவித்துக்கொண்ட எருமையூரன், 'நீங்கள் சொல்வது உண்மையானால் நான் உதவ வந்திருப்பது துரியோதனனுக்குத் தானா?'- என்று கேட்டு விட்டுச் சிரித்தான்.

வந்ததிலிருந்து சிரிப்பையே உதிர்க்காதிருந்தவன் தற்போது சிரித்ததும் பெரும் ஆறுதலடைந்த சேரன் 'அப்படியே வைத்துக் கொண்டாலும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. நமக்கு வெற்றி நிச்சயம். ஏனென்றால் அத்தரப்பில் வாசுதேவன் இல்லை'- என்றான்.



'வாசுதேவனா? யார் அது?' - கேட்டான் எருமையூரன் சந்தேகத்துடன்.

'மோகூர் பழையன்தான்'-

'என்னாயிற்று அவனுக்கு? பாண்டியர் தளபதி அவன் தானே?'

'அவன்தான். ஆனால் படை நடத்த முடியாமல் இருக்கிறான்.'

'ஏன்? உடல் நலமில்லையா?...

'அதல்ல காரணம். அவனை நான் சிறை பிடித்து விட்டேன்.'

'பிறகு நானெதற்கு?'

'நீங்கள் எங்களுக்கு உதவுவதே ஒரு நல்ல சகுனம் என்று நாங்கள் கருதுகிறோம். அது மட்டுமல்ல- உங்கள் போர் அறிவு தனிச் சிறப்புடையது. அது ராசசூயம் நடத்தவிருக்கும் சோழ மாமன்னருக்குப் பயன்படுவது சிறப்பில்லையா?'

இதைக் கேட்டதும் தன் உடலை சற்றே அசைத்துக் கொண்டான் எருமையூரன்.

'இவர்களெல்லாம் தளபதிகள்...' என்று ஆரம்பித்தான் சேரன்.

''அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் சேர சோழ மன்னர்களிடம் மட்டும்தான் போர்த் திட்டத்தைப் பேச முடியும்''- என்று நிர்த் தாட்சண்யமாகப் பேசினான் எருமையூரன்.

இதற்கிடையில் சேர சோழ மன்னர்களைத் தவிர மற்றவர்கள் அனைவரும் தாமாகவே கூடாரத்தை விட்டு வெளியேறினார்கள்.

அவர்கள் போனபின் ''என்னோடு ஏழாயிரம் புரவி வீரர்கள் நாலாயிரம் வில் வீரர்களும் வந்திருக்கிறார்கள்'' - என்று பேச்சை ஆரம்பித்தான் எருமையூரன்.

''ஏறக்குறைய மதுரையில் நாங்கள் இழந்த அளவை விடக் கொஞ்சம் அதிகம்'' - என்றான் இரும்பொறை.

''என்ன? இவ்வளவு படைகளையா இழந்து விட்டீர்கள்? எத்தனை நாள் நடந்தது போர்?'' - கேட்டான் எருமையூரன்.

'ஒரு நாள் கூட முழுமையாக இல்லை' -

''அப்படியிருந்தா இவ்வளவு இழப்பு? நல்லவேளை-போர் ஒரு நாளோடு முடிந்தது. மேலும் நான்கு நாட்கள் நடந்திருந்தால் இப்போது இங்கே நம் சந்திப்பே நடந்திருக்காது'' - என்றான் எருமையூரன்.

அவன் எதைச் சுட்டிக் காட்டுகிறான் என்பதை உணர்ந்து கொண்ட சேரன், ''அதனாலென்ன, நீங்கள் தான் வந்து விட்டீர்களே! இனி இழப்பெல்லாம் எதிரிகளுக்குத் தான்'' என்று வஞ்சகப் புகழ்ச்சியாகக் கூறிக்கொண்டான்.

பிறகு பேச்சு போர் நடவடிக்கை பற்றித் திரும்பியது. மதுரைப் போர் பற்றி முழுவதையும் தெரிந்து கொண்ட பின் ''ஒரு வகையில் நீங்கள் பாண்டியனிடம் தோற்று பின் வாங்கியதுகூட நல்லதுதான். இத்தோல்வி அவனை நம்மை நோக்கி இழுக்க உதவுகிறது. நம் நாட்டை விட்டு மதுரையைப் போன்ற பிரம்மாண்டமான எதிரி கோட்டையைத் தேடிப் போகும் போது அதிக கவனமும் ஆழ்ந்த திட்டங்களும் தேவை. கோட்டையைப் பற்றி பூரண உண்மையை அறியாமல் தாக்க முற்படுவது மிகவும்



ஆபத்தானது. கோட்டைக்குள் இருப்பவர்கள் பகைவரிடமிருந்து காத்துக் கொள்ள நாளுக்கு நாள் மாற்றங்களைச் செய்து கொண்டிருப்பார்கள். அது பகைவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை. ஆகவேதான் அவர்கள் கவனமாகச் செயல்பட வேண்டும். பாண்டியனை நம் வசம் இழுக்கும் முயற்சியையே நீங்கள் மேற் கொண்டிருக்கலாம். கோட்டையைத் தேடிப்போய் தோற்று விட்டீர்கள்'' என்றான்.

தற்போதைய பேச்சில் கிண்டலோ இகழ்ச்சியோ இல்லை. போர் வீரனுக்குள்ள விவேகமும் அறிவுமே பிரதிபலித்தது. சேரனுக்காகவும் சோழனுக்காகவும் பரிதாபப்படும் உண்மை உணர்வே புலப்பட்டது. தொடர்ந்து பேச முற்பட்டான் அவன்!

''சேரமன்னரே, ஆரம்ப வெற்றியை விட ஆரம்பத் தோல்வி நல்லது. ஏனென்றால் ஆரம்ப வெற்றி அகக் கண்களை மறைந்துவிடும். ஆரம்பத் தோல்வி அகக் கண்களைத் திறக்கும். அந்த வகையில் நாம் இப்போது செயல்பட வேண்டும். இப்போது நமக்குக் கிடைத்துள்ள வாய்ப்பு வெற்றியைத் தேடுவதற்கான வாய்ப்பு. இதை நாம் இழந்துவிடக் கூடாது. மதுரைப் போரிலிருந்து நமக்குத் தெரிந்த விஷயம் - பாண்டியனைக் கோட்டையின் பாதுகாப்புடன் வெல்வது சிரமம் என்பதுதான். கோட்டை அவனது பலம். தற்போது அந்த பலம் பறி போகிறது. முற்றிலுமாக அது பறிபோக வேண்டும். அதாவது அவனைச் சந்திக்கும் இடமானது கோட்டைக் கொத்தளங்களுக்குச் சமீபமாய் இருக்கக் கூடாது. ஆகவே அவனை நமக்குச் சாதகமான இடத்திற்கு இழுக்க வேண்டும். இந்த உறையூரும் வேண்டாம்.

அதற்குக் கிழக்கே உள்ள தஞ்சையும் வேண்டாம். தஞ்சாவூருக்கும் கிழக்கே போவோம். அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்து விட்டோம்'-

'தேர்ந்தெடுத்தாகி விட்டதா?'... சேரன் வியப்புடன் கேட்டான்.

'ஆம். இதோ இருக்கிறது சீலை. இதில் இருப்பதைக் கவனியுங்கள்'- என்று கூறி சீலையை விரித்து வைத்து தான் தேர்ந்தெடுத்த இடத்தைச் சுட்டிக்காட்டி அதன் பெயரையும் உச்சரித்தான். ஏதோ மந்திரப் பெயர் போல் ஒலித்தது அந்தப் பெயர்.

அதை அறிந்தபோது சேர சோழ மன்னர்கள் இருவருமே பரவசப்பட்டார்கள்.

'பாண்டியன் தொலைந்தான்'- என்று வாய்விட்டே தெரிவித்துக் கொண்டான் சேரமன்னன்.

'இந்த இடம் நமக்கு இரண்டு அனுகூலங்களைத் தருகின்றன. ஒன்று, இது மதுரையிலிருந்து வெகு தொலைவில் இருக்கிறது. ஆகவே இங்கு வந்து விட்டபின் பாண்டியனுக்கு மதுரை உதவ முடியாது. உதவ முன் வந்தாலும் நாம் சுத்தரித்து விடலாம். இரண்டு, இது கிழக்குக் கடற்கரைக்கு சமீபத்தில் இருக்கிறது. தேவைப்படும்போது உதவிப்படைகளை நாம் கடல் மூலம் தருவித்துக் கொள்ளலாம். அதுமட்டுமல்ல. கடற்கரைப் பட்டிணங்கள் தற்போது செழுமையாக இருக்கின்றன. நமது படைகளுக்குத் தேவையான உணவு தடையின்றிக் கிடைக்கும். நீர் வசதிக்கு ஆறும் அருகிலேயே இருக்கிறது'-



'உண்மை'-ஆமோதித்தான் சேரமன்னன்.

'அதோடு அந்த இடத்தில் நமக்குப் பாதுகாப்பளிக்க நாமொரு கோட்டையை அமைப்போம்'-

'கோட்டையா?'-

'ஆம். வீரர் கோட்டை'-

'வீரர் கோட்டையா?'-

'ஆம் வீரர்களைக் கொண்டு மதுரைக் கோட்டையை விட பலமானதும் பயங்கரமானதுமான வியூகக் கோட்டையை அமைப்போம். அதில் பாண்டியன் நுழைந்தால் உயிருடன் திரும்ப முடியாது. வியூகங்களின் பலம் பற்றி மகாபாரதப் போர் மூலம் அறியலாம். ஆகவே கவலை வேண்டியதில்லை'.

'வியூக வகை பற்றி தேர்ந்தெடுத்தாகி விட்டதா?'

'அது பற்றி ஆராயவும் அமைக்கவும் ஏற்கெனவே என் நண்பர் போயிருக்கிறார். வெறுங்கையோடு அல்ல. பத்தாயிரம் புரவிவீரர்களும் வாள்வீரர்களும் போயிருக்கிறார்கள்'.

'நம்பவே முடியவில்லை'-

'ஏன்?'-

'மிகவும் முன்னோக்கிப் போயிருக்கிறீர்கள். அது மட்டுமல்ல. முன்னேற்பாடு மிகவும் பிரமாதமாக இருக்கிறது.'

'அப்படியில்லாததால்தானே கூடற்பறந்தலைப் போரில் தோல்வியை சந்தித்தது'-

'அது சரி, உங்கள் நண்பர் என்று சொன்னீர்களே அது யார்?'

சொன்னான் எருமையூரன். அதைக் கேட்டதும் பெருவியப்பெய்தினான் சேர மன்னன். சோழன் பெருநற்கிள்ளிக்கும் வியப்பேற்படாமலில்லை. எருமையூரன் குறிப்பிட்ட மனிதன் உதவ வந்திருப்பது நம்ப முடியாத விஷயமாய் இருந்தது. அதே சமயம் அவனது உதவி கிடைக்கும் பட்சத்தில் தங்களுக்கென்று பேரணி ஒன்று உருவாவதால் பாண்டியனையும் அவன் குலத்தையும் பூண்டோடு ஒழித்துவிட முடியும் என்று வெகுவாக நம்பினான் சேர மன்னன். எனவே எருமையூரனின் பேரில் பெருத்த சந்தோஷம் உண்டாயிற்று அவனுக்கு. அதை வெளிப்படுத்திக் கொண்டதோடு மட்டுமல்லாமல் ''இப்போதே வெற்றி கிடைத்த மாதிரிதான்'' என்றும் கூறினான் மகிழ்ச்சியுடன்.

எருமையூரன் அவ்வாறு மகிழ்ந்து விடவில்லை.

''சற்று பொறுங்கள். நமது திட்டம் நிறைவேறுவதற்கு ஒரு தடை இருக்கிறது'' என்றான்.

'என்ன தடை?'- கேட்டான் சேர மன்னன்.

''பண்டியனை நாம் சந்திக்கப் போகும் இடத்திற்கும் நாம் இப்போதிருக்கும் இடத்திற்கும் இடையே ஒருவன் இருக்கிறான். அவன்தான் வேளிர் குலத் தலைவன் எவ்வி. அவனது மிழிலைக் கூற்றம் நமது போர் அரங்கிற்கு வெகு அருகில் இருக்கிறது. நாம் அவனைக் கடந்து செல்ல வேண்டும். அவனுக்கு நண்பனாக இருந்து அவனது நாட்டைக் கடப்பதா அல்லது பகைவனாக மாறிக் கடப்பதா என்பதுதான் நம் பிரச்சனை?'' என்று கேட்டான் எருமையூரன்.



''அவனை அழிப்பதொன்றும் பெரிய வேலை இல்லை. அழித்து விட்டே கடக்கலாம்'' என்றான் சேரமன்னன்.

''நானும் அப்படித்தான் முதலில் நினைத்தேன். ஆனால் நமக்கு அதனால் அனுகூலங்கள் குறைவு. எப்படி யென்றால் அவனை அழிக்கும் முயற்சியில் நாம் போரிட வேண்டும். அதற்கு எத்தனை நாட்கள் தேவைப்படும் என்று சொல்ல முடியாது. பாண்டியர் படைகள் துரத்தி வரும் நிலையில் நாம் எவ்வியுடன் போரிட்டுக் கொண்டிருப்பது ஆபத்தானது. நமக்குப் படைச் சேதம் வேறு ஏற்படும். துரிதமாகத் தாக்கி அவனை அழித்து விட்டால் கூட நாம் அங்கே இருந்து கொண்டு காவல் காக்க முடியாது. அவனது வீரர்களையே நம்பி விட்டு விட்டுப் போக வேண்டும். அவர்கள் நமது நம்பிக்கைக்கு ஏற்ப நடந்து கொள்வார்கள் என்று என்ன நிச்சயம் இருக்கிறது? நம்மைத் தொடர்ந்து வரும் பாண்டியனோடு சேர்ந்து கொண்டால் கஷ்டமல்லவா? அப்படிச் சேர்ந்து விட்டால் எவ்வியின் கோட்டை பாண்டியனுக்குக் கிடைக்கும். நமது போர் அரங்கத்திற்கு வெகு அருகில் அப்படியொரு கோட்டை அப்பாண்டியனுக்குக் கிடைத்தால் அவனுக்கு நல்லதொரு பாதுகாப்பு கிடைக்கிறமாதிரி. பிறகு நம் தரப்பு பலவீனப் பட்டுவிடும்''-

'அப்படியானால் எவ்வியுடன் நட்புக் கொள்ள வேண்டுமா?'

''இப்போதைக்கு அதுதான் நல்லது. அவன் நமது நண்பனாகி விட்டால் பாண்டியனுக்குப் பகைவனா கிறான். பாண்டியனின் முன்னேற்றத்தை வெகுவாகத்

தடை செய்வான். ஒருவேளை பாண்டியன் மிழிலைக் கூற்றத்திற்கு வராமலேயே நம்மை அணுக முற்பட்டால் எவ்வியைக் கொண்டு அவனைப் பின்புறம் தாக்கலாம்''-

'உண்மை. ஆனால் பாண்டியன் அவ்வாறு செய்யாமல் மிழிலைக் கூற்றத்திற்கு வந்து எவ்வியுடன் போரிட்டு அவனை வீழ்த்திவிட்டால் அவனது கோட்டை பாண்டியனுக்கு கிடைக்குமல்லவா?'-

'இக்கட்டான நேரத்தில் வீணான போரில் நாம் போய் ஈடுபட்டு படை இழப்புடன் எவ்வியை வென்று பிறகு அவனது கோட்டை பாண்டியனுக்குப் போவதை விட நாம் நண்பனாக இருந்து அவனது உதவிகளைப் பெற்று போர் அரங்கத்தை அடைந்துவிடுவோம். பாண்டியன் எதையாவது செய்து முட்டி மோதி நம்மிடம் வரட்டும். சரியான அடி கொடுத்து அனுப்புவோம். அது மட்டுமல்ல. பாண்டியன் வந்து சேரும்வரை நமக்கு உணவுப் பொருள்களைக்கூட எவ்வியிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்''.

'நல்ல திட்டம். எவ்வியை நண்பனாக்க வேண்டிய வேலை என்னுடையது. கவலை வேண்டாம்'' என்றான் சேர மன்னன்.

இதையடுத்து தன் நிபந்தனையைக் கூறினான் எருமையூரன்.

நிபந்தனை மோசமானதாகத்தான் இருந்தது.

அதற்கு சேரமன்னன் கொடுத்த வாக்குறுதியோ அதை விட மோசமானதாய் இருந்தது.

சோழமன்னன் ஸ்தம்பித்தான்.

முரசு முப்பத்தெட்டு

# எவ்வி

தித்திக்கும் திட்டங்களை தெரிவித்த கையோடு கசப்பான நிபந்தனைகளைச் சொல்ல முற்பட்ட எருமையூரன் 'சேர மன்னரே, நான் உங்களுக்கு உதவும் விஷயத்தில் ஏற்கெனவே ஒரு நிபந்தனையைக் கூறியிருக்கிறேன். அதை மறந்து விடவில்லையே?'- என்று கேட்டான்.

'மறப்பதற்கு என்ன வந்து விட்டது? எனக்கு செய்யும் உதவிக்கு ஊதியம் வேண்டும் என்கிறீர்கள். பத்தாயிரம் வராகன் பொன்னும் பத்து கிராமங்களும் கோரினீர்கள். நிச்சயமாக உங்கள் உதவிக்குத் தகுந்ததைச் செய்வதாக வாக்குறுதி தந்தேன். ஆனால் நீங்கள் தற்போது அளித்த திட்டத்தைக் கேட்ட பின் எனக்கு வேறு எண்ணம் வந்து விட்டது. மிகச் சிறந்த திட்டத்தை அளித்த உங்களை வெறும் கூலிக்காரனாக மாற்றுவதில் எனக்கு விருப்பமில்லை. பொன்னும் பொருளும் அளிப்பதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் உண்டு. அவற்றை எப்போது வேண்டுமானாலும் சம்பாதித்துக் கொள்ளலாம். ஆனால் சில பட்டங்களும் பதவிகளும் இருக்கின்றன. அவற்றை யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் சம்பாதித்து விட முடியாது. சேர சோழ, பாண்டியர் நிலைமையோடு உங்கள் நிலையை ஒப்பிட்டுப் பார்த்தால்

உங்களுக்கே புரியும். பாண்டியர்களையும் அவனைத் தொடர்ந்து சேரன் கோதை மார்பனையும் முறியடிப்போம். தமிழகம் நம் சோழ மன்னர் பெருநற்கிள்ளியின் ஒரு குடைக்கீழ் வரும். அப்போது அப்பரந்த தமிழகத்திற்கு நீங்கள் தளபதியாக நியமிக்கப்படுவீர்கள். உம் துணையுடன் சோழர் ராசுசூய யாகம் செய்வார். அவரது இப்பெரும் சாதனை சரித்திரத்தில் பொறிக்கப்படும்போது உம் பெயர் பிரதான இடத்தைப் பெறும்.'-

'சேரரே, உண்மையாகவா சொல்கிறீர்?'

'முறி வேண்டுமானால் எழுதித் தருகிறேன்'-

'வேண்டாம். வேண்டாம் சேரர்களை நான் நம்புகிறேன்'... என்றான் எருமையூரன்.

அவனது உள்ளம் கனவுலகில் ஆழ்ந்தது சேரன் கூறிய பதவியை நினைத்து. தமிழகம் முழுவதற்குமான ஆட்சியொன்றில் தளபதி பதவி கிடைப்பதென்பது சாதாரண காரியமா? தளபதி பதவி இருக்கட்டும். தமிழகம் முழுவதும் ஒரே மன்னனின் ஆட்சியின் கீழ் வருவது சாதாரண விஷயமா? முடியக்கூடிய காரியமா? அப்பெரிய காரியம் முடிவதென்றால் தற்போதைய முயற்சியில்தான் முடியவேண்டும். இந்த வாய்ப்பை விட்டு விட்டால் மறு முயற்சிக்கு நூறு ஆண்டுகள் கூட ஆகலாம். ஆகவே சோழனின் தற்போதைய முயற்சியை வெற்றி பெற வைத்து விட்டால் அவனுக்குத் தளபதியாகும் அரிய பாக்கியத்தைப் பெறலாம். என்னதான் எருமையூருக்கு மன்னனாக இருந்து வாள்



வீரம் போர்த் திறமை என்று பெற்றிருந்தாலும் தன்னால் அதிகபட்சமாக என்ன சாதித்துவிட முடியும்? தென்புறம் தகடூரை வேண்டுமானால் விழுங்கலாம். மேற்குப் புறம் துளு நாட்டில் சில பகுதிகளைக் கவரலாம். எல்லைப் புற நாடுகளில் கொஞ்சம் கவர முடியும். தவிர தமிழகம் முழுவதையும் பெறுவதென்பது தன்னால் கனவிலும் முடியக் கூடியதல்ல. அது சேர சோழ பாண்டியர்களைப் போன்ற வல்லரசுகளால் மட்டுமே முடியும். தற்போது சோழ வல்லரசு முயல்கிறது. அதற்கு உதவினால் கனவிலும் எண்ண முடியாத தளபதி பதவி கிடைக்கும். இதை ஏன் விடவேண்டும்? பொன்னும் பொருளுக்கும் வாய்ப்பா இல்லை? இரும்பொறை சொன்ன மாதிரி அவைகளை எப்போது வேண்டுமானாலும் சம்பாதித்துக் கொள்ளலாம். தளபதி பதவியிலேயே கூட சம்பாதிக் கலாம். பத்து கிராமங்கள் என்ன பத்து ஊர்களைக் கூட அப்போது பெறலாம். ஆகவே பொன்னை விடப் பதவியை ஏற்பதே லாபகரமானது. சேரன் வாக்குத் தவற மாட்டான். அவனுக்கு வேண்டியதெல்லாம் பாண்டியனின் தோல்விதான். நல்ல வேளையாக என் போர் அறிவு மழுங்கி விடவில்லை. நமது போர் முறைக்கு ஒவ்வாத ஆரியர் படைகளையே கலங்க வைத்த என்னால் நமது போர் முறைக்கு ஒத்த தமிழரான பாண்டியரையா ஒடுக்க முடியாது? சேரனும் சோழனும் பெருவீரர்கள். அவர்களோடு சேர்ந்து செயல்படும் போது ஏன் வெல்ல முடியாது?

-இப்படியெல்லாம் எண்ணி குதூகலமடைந்தான் எருமையூரன்.

போர்த்திட்டம் பற்றிய ஆலோசனை அத்துடன் முடிவடைந்தது. எருமையூரனை முதலில் புறப்பட்டு தஞ்சையை நோக்கிப் புறப்படும்படி கூறினான் இரும்பொறை. அவன் புறப்பட்டும் சென்றான். அவன் அங்கிருந்து செல்லும் வரை காத்திருந்த சோழ மன்னன் பெருநற்கிள்ளி, 'சேர மன்னா, என்ன இதெல்லாம்? எருமையூரனின் வீரமும் போர் அறிவும் சிறப்பானவைகளாய் இருக்கலாம். அதற்காக அவனுக்கு எதைத்தான் அளிப்பது என்றில்லையா? இவனுக்குத் தளபதி பதவி அளிக்கவா நான் ராசசூயம் நடத்த விரும்பினேன்?'... என்று கேட்டான்.

'பதவி வேண்டாம். பத்தாயிரம் வராகன் பொன்னும் பத்து கிராமங்களும் தந்து விடலாமா?' கேட்டான் சேரன் இரும்பொறை.

'பத்தாயிரம் வராகன் பொன் என்றால் வெறும் கையளவு என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா இரும்பொறை? படை வீரர்களுக்குச் சம்பளம் தரவே சரியாய் போய்க் கொண்டிருக்கும் நிலையில் இவனுக்கெல்லாமா அள்ளித்தர முடியும்? அறிவையும் திறமையையும் விலை பேசும் இவனா மன்னன்?'- எரிந்து விழுந்தான் சோழன்.

'அவன் யாராக இருந்தாலென்ன? நமக்குத் தேவை அவன் அறிவும் பலமும். அவற்றை நாம் கேட்பதால் அவன் விலை பேசுகிறான்'-

'இது போன்ற வியாபார உதவிகள் நமக்கு வேண்டியதில்லை'-



'அதனால்தான் பதவி அளிப்பதாகச் சொன்னேன்' என்று கூறிவிட்டுச் சிரித்த சேர மன்னன், 'சோழரே, கவலைப்படாதீர்கள். பொன் தருவதாகச் சொன்னது பதவி தருவதாகச் சொன்னது எல்லாமே வெறும் பேச்சு தான். பொன் தருவதாகச் சொன்னதை ஏற்றிருந்தால் அதை இப்போதே கேட்டிருப்பான். அதைத் தவிர்க்கவே பெரும் பதவியைச் சொல்லி ஆசை காட்டியிருக்கிறேன். போர் முடியும் வரை அவன் கேட்க முடியாதல்லவா?' என்றான்.

'இருக்கலாம். ஆனால் போர் முடிந்தபின் கேட்பான் அல்லவா?'

'முதலில் போர் நடக்கவேண்டும். அதில் நாம் வெல்ல வேண்டும். பிறகு கோதை மார்பனை முறியடிக்க வேண்டும். நீங்கள் ஏக சக்ராதிபதியாக முடி சூட வேண்டும். பிறகுதானே அவன் கேட்க வேண்டும்? இவையெல்லாம் எளிதில் முடிந்து விடக்கூடியவைகளா? போர் முடியட்டும். அதற்குப் பின்பும் அவன் உயிருடன் இருந்தால் கருவூரின் பட்டத்து யானையைக் கொண்டே அவனை மிதித்துக் கொன்று விடுகிறேன். அவனால் ஆக வேண்டிய காரியம் ஆகும் வரை வார்த்தைகளால் அவனுக்கு எதை வேண்டுமானாலும் பரிசளிக்கலாம். அதனாலென்ன நஷ்டம்?'

'சேரமன்னா, எருமையூரன் நல்ல திட்டமிடுகிறான். ஆனால் பெருத்த கோபக்காரனாகவும் தற்புகழ்ச்சிக் காரனாகவும் இருக்கிறானே?'

'கோபமும் தற்புகழ்ச்சியும் அவனது குணங்கள். நமக்குத் தேவையோ அவனது அறிவும் திறமையும் தான். குணத்தைப் பற்றிய கவலை வேண்டியதில்லை'-

'இரும்பொறை! கோபமும் தற்புகழ்ச்சியும் ஒருவனது அறிவையும் திறமையையும் காலப்போக்கில் அழித்துவிடும்'

'இவனை என்ன ஆயுட்காலம் முடியும்வரையிலா கட்டிக் கொண்டு அழப் போகிறோம்? போர் முடிய ஆகக் கூடிய ஓரிரு திங்கள் வரையில்தானே? அதற்குள் என்ன பிரமாதமான கேடு வந்துவிடப் போகிறது? அதோடு அவன் கோபத்தையும் தற்புகழ்ச்சியையும் அவன் வழியிலேயே அணைத்துக் கொண்டு போய் விடலாம். ஒன்றும் பாதகமில்லை.'

'எழினியும் இவனும் பூனையும் எலியுமாய் இருக்கிறார்களே?'

'சோழரே, நீர் புலி. நான் யானை. யானையும் புலியும் பூனையையும் எலியையும் கண்டா அஞ்சுவது?'

'சாதாரண காலங்களில் இவர்கள் ஒரு பொருட்டே அல்ல. போர்க்காலத்தில் ஒன்றாக இருந்து பணியாற்ற வேண்டிய நிலையில் இப்படி இருப்பது நல்லதா?'-

''எருமையூரனுக்கு நான் காட்டியிருக்கும் பதவி ஆசை மகத்தானது. அதை அடைவதில் ஆர்வம் காட்டும் அவன் சில்லரை விஷயங்களில் ஈடுபட மாட்டான். பதவிக்காகவே அவன் தன் திறமையைக் காட்டப் போகிறான் பாருங்கள். தப்பித் தவறி ஏதேனும் பிசகட்டும். போருக்கு முன்பே இருவரையும் ஊருக்கு அனுப்பி விடுகிறேன் பிணங்களாக''-



எந்த விஷயமாக இருந்தாலும் சேர மன்னன் பரிகாரம் வைத்திருக்கிறான் என்பதை உணர்ந்து கொண்ட பெருநற்கிள்ளி மேற்கொண்டு பேச்சில் இறங்கவில்லை.

⁂ ⁂ ⁂

அதற்கு மேல் நடவடிக்கைகள் துரிதமாகவும் ஒரு வித்த் தீர்மானத்துடனும் நடந்தன. எருமையூரனின் யோசனைப்படியே சேர சோழப் படைகள் உறையூருக்குள் புகாமல் ஊரையடுத்த காவிரிக்கரையை ஒட்டியே சென்று தஞ்சையை அடைந்தன. உறையூர் மக்களிடம் சேர சோழர்கள் பாண்டியனை தோற்கடித்து விட்டதாகவும், சிங்களர் துணையுடன் வரும் பாண்டியர் கடற்படையினைச் சந்திக்க கிழக்கே முன்னேறுவதாகவும் பொய்யான தகவல் பரப்பப்பட்டிருந்ததால் அவைகளை நம்பி மகிழ்ந்து போன மக்கள் காவிரியின் கரையோரமாகத் திரண்டு படைகளை வாழ்த்தி வழியனுப்பியதோடு படைகளுக்குத் தேவையான உணவுப் பொருட்களையும் மனம் உவந்து கொடுத்தனுப்பினார்கள். இத்தகைய பொய்ச் செய்தி உறையூரில் மட்டுமின்றி தஞ்சை வரையில் வழியெல்லாம் பரவ விடப்பட்டதால் வழி நெடுக மக்களின் உபசாரங்கள் அவர்களுக்குக் கிடைத்தன. உணவுப் பொருட்களின் இருப்புகளும் கணிசமாகப் பெருகின. அந்த விதத்தில் பெருத்த ஆறுதலடைந்த சேரமான் தஞ்சாவூரை விட்டு மேலும் கிழக்கே படைகளை நடத்தி எருமையூரன் குறிப்பிட்ட இடையூரான மிழிலைக் கூற்றத்திற்குள் பிரவேசித்து அப்பகுதிகளை ஆண்டு வந்த சிற்றரசனான எவ்வியின் தலை நகரான நீடூரை அணுகி பாசறை அமைத்தான்.

மிழிலைக் கூற்றம் என்பது தற்போதைய தஞ்சாவூர் மற்றும் புதுக்கோட்டை மாவட்டங்களுக்குரியதும் அறந்தாங்கி தாலுக்காவை உள்ளடக்கிய பகுதியாகும். அதன் தலைநகர் நீடூர் தற்போது கொரடாச் சேரிக்கு சற்றே முன்னால் உள்ள நீடாமங்கலமே ஆகும்.* நீராட்டு மங்கலம் என்ற பெயர் நீடா மங்கலம் என்று மருவியது என்பர். தஞ்சை திருவாரூர் சாலையில் உள்ள இவ்வூருக்கு அண்மையில் கோயில் வெண்ணி என்ற கிராமம் உள்ளது. இதுவே சங்க காலத்தில் கரிகாலன் பெரும் போர் புரிந்த வெண்ணிப் பறந்தலையாகும். இங்கு இச்சோழ மன்னன் பெற்ற வெற்றியை நீராட்டு மங்கலத்தில் கொண்டாடக் கருதி தன் வெற்றிவாளுக்கு நீராட்டு செய்து மகிழ்ந்ததால் அவ்வூர் நீராட்டு மங்கலம் என்று வழங்கப்பட்டது. காலப்போக்கில் நீடாமங்கலம் என்றாயிற்று'.**

அப்படி கரிகாலனின் மகிழ்ச்சிக்குக் காரணமாய் அமைந்த நீராட்டு மங்கலம் என்னும் நீடூருக்கு சமீபத்தில் வந்து சேர்ந்ததுமே சேரமன்னன் நேரத்தை வீணடிக்காமல் ஊரெல்லையில் வீரர்களை நிறுத்தி பறை கொட்டினான். நீடூர் இனி சேரர் வசம் வரப்போவதை யொட்டி ஊர் மக்கள் சேர சோழ மன்னர்களுக்குப் பணிய வேண்டும் என்றும் அதற்கு முன்னோடியாக ஒவ்வொரு குடும்பமும் சேர சோழ படைகளுக்குத் திறை செலுத்த வேண்டும் என்றும், அதனை உணவுப் பொருள்களாகவோ, தங்கமாகவோ செலுத்தலாம் என்றும் அறிவிக்கச் செய்தான்.

* சங்க கால அரசர் வரிசை - பக்கம் 67

அருகை முதலிய 44 பேர்கள் - by புலவர் கா. கோவிந்தன்

** பக்கம் 24

தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்



அந்த திடீர் அறிவிப்பு மக்களிடையே பீதியை உண்டாக்கியது. நீடூரை நெருங்கியிருந்த படைகளின் அந்த திடீர் அறிவிப்பு மக்களிடையே பீதியை உண்டாக்கியது. நீடூரை நெருங்கியிருந்த படைகளின் அந்த திடீர் அறிவிப்பு மக்களிடையே பீதியை உண்டாக்கியது. நீடூரை நெருங்கியிருந்த படைகளின் பரிமாணம் மட்டுமின்றி, அவை பாண்டியனை முறியடித்து விட்டு சிங்களக் கடற்படையைச் சந்திக்க நாகைப்பட்டிணம் செல்வதாக பொய்ச் செய்தி வேறு பரவியிருந்ததால் தற்போது கதி கலங்கினார்கள். பாண்டியனையே முறியடித்து விட்ட இவர்களுக்கு நீடூர் வெறும் சுண்டைக்காய்தான் என்பதும், இவர்களுக்குத் திறை செலுத்தாவிட்டால் நீடூர் தரை மட்டமாக்கப்படும் என்பதும் தெளிவாகவே புரிந்ததால் எதிர்க்க முடியாத கட்டாயத்திற்கு ஆளானார்கள்.

இந்தக் கட்டாயத்தினை மக்கள் உணர்ந்தது மட்டுமல்ல. மிழிலைக் கூற்றத்தின் மன்னரான எவ்வியும் உணர்ந்தான். சேர சோழரை எதிர்ப்பது வீரச் செயல்தான் என்றாலும் விளைவு படுதோல்வியாகத் தான் இருக்கும் என்பதில் அவனுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. அப்படி நிச்சயமானதொரு தோல்வியை வீரம் என்ற பெயரில் தழுவிக்கொள்ள அவனோ அவனைச் சார்ந்திருந்த ஆலோசகர்களோ, இதர தளபதிகளோ தயாராக இல்லை. கடல் அலை போன்ற படைகளை தாக்கித் தன் நீடூர் சிறு பெருங்காயம் போல் அழிவதற்கு வழிதருவது எந்த விதத்திலும் அரசியல் விவேகமாகாது என்று கருதினான்.

அதே சமயம் கேட்டதுமே கொடுத்துவிடுவது போல் தானம் செய்துவிட அவனது மனம் இடம் கொடுக்கவில்லை. ரத்தத்தில் ஊறியிருந்த மான உணர்ச்சி தடுத்தது. எனவே சரணடையக் கூடிய நிலையை எந்த அளவிற்குச் சாமர்த்தியமாகச் செய்யலாம் என்று யோசிக்கலானான்.

தீவிர யோசனை அவனிடம் திண்ணிய திட்டம் ஒன்றினைத் தோற்றுவித்தது. அதைச் செயல்படுத்தவும் முற்பட்டான்.

◈◈◈

முரசு நாற்பத்திரண்டு

# கருவூர் பிரவேசம்

அசட்டுத் துணிச்சலைக் காட்டுவதில் என்றுமே பின் தங்காதவனான சந்தனக் கோட்டை அதிபதி நன்னன் மேகலையின் தந்தையை வெட்டத் துணிந்த வேளையில் ஒற்றனின் மூலம் செய்தியொன்று குறுக்கிட்ட போது பெரிதும் கிலியடைந்தானென்றால் அதில் வியப்பேதும் இல்லைதான். ஒற்றனின் செய்தியை நம்புவதற்கு முன்பாகவே ''இப்படி நடக்கக் கூடும் என்று எப்படி சிந்திக்காமல் இருந்தேன் நான்?'' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான் நன்னன். சில நிமிடங்களுக்கு அவனுக்கு எதுவுமே தோன்றவில்லை. சற்றுப் பொறுத்த பின்னே ஓரளவிற்குத் தெளிந்த அவன் செய்தி கொண்டு வந்த ஒற்றனிடம், 'இச் செய்தியை உனக்குச் சொன்னது யார்'- என்று கேட்டான்.

'செய்திக்கு உரியவர்' - என்றான் ஒற்றன்.

''முட்டாள். என்ன உளறுகிறாய்? யாரிடம் உளறுகிறாய்?'' - என்று எரிந்து விழுந்தான் நன்னன்.

ஒற்றன் நிதானம் தவறவில்லை

'நாமிருக்கும் இடத்தைச் சற்று கவனித்தால் நல்லது'- என்றான்.

''இடத்திற்கென்ன குறைச்சல்? சந்தனக் கோட்டையின் அதிபதி 'சந்தனக் கோட்டையில் இருந்து பேசுவதில் உனக்கென்ன குறை வந்துவிட்டது?''. அதிர்ச்சியில் கண்டபடி பேசினான் நன்னன்.

எவ்வியை அன்றிரவே தன்னை வந்து சந்திக்கும்படி சொல்லியனுப்பினான்.

அதன்படி அன்றிரவு எவ்வியின் சந்திப்பு நடந்தது.

சேர சோழர்களின் பலம் பற்றி அறிந்திருந்தாலும் அதுபற்றி அச்சமின்றி அவர்களைச் சந்தித்த எவ்வி அவர்களிடம் வினவினான்.

''மன்னர் பெருமக்களே, நான் தங்கள் இருவரையும் சந்திக்க விரும்பியது வெறும் சம்பிரதாயத்திற்காக அல்ல. நியாயம் கேட்கவே இங்கு வந்தேன். தங்கள் நோக்கம் என்ன என்பது எனக்குத் தெரியாது. உங்கள் படையெடுப்பு எந்த அடிப்படையில் என்பதும் தெரியாது. ஆகவே கேட்கிறேன். உங்கள் நோக்கத்திற்கோ படையெடுப்புக்கோ நீடூர் எந்த வகையில் தடையாக இருக்கிறது? நீடூர் மக்கள் எந்த விதத்தில் உங்கள் வழியில் குறுக்கிட்டு விட்டார்கள்? எதற்காக அவர்கள் திறை செலுத்த வேண்டும்?''-

எவ்வியின் நெஞ்சுரத்தைக் கண்டு பெருநற்கிள்ளியும் சேரமானும் உள்ளுக்குள் வியந்தாலும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

''காட்டு வெள்ளம் உண்டாகும் போது வழித் தடைகள் உடைபடுவது இயற்கை. அது வெள்ளத்தின் தவறல்ல''- என்றான் இரும்பொறை அலட்சியமாக.

''காட்டுவெள்ளம் தன்னிஷ்டப்படி செல்லக் கூடியது. தாங்களும் அப்படித்தானா?''- என்று கேட்ட எவ்வி 'தங்கள் நோக்கம் என்ன?'- என்று மீண்டும் வினவினான்.



தற்போது சேர மன்னன் வெளிப்படையாகவே பேசத் தொடங்கி ''எவ்வி, பெரும் போர் ஒன்றைச் சந்திக்கச் செல்கிறோம் நாங்கள். எங்களுக்குப் பின்னால் பாண்டியப் படை வந்து கொண்டிருக்கின்றன. இந்தப் பாதையில் உள்ள தடை நீடூர் மட்டும் தான். இதை அகற்றாமல் போர்த் தடத்தை அமைப்பது சிரமம். ஆகவேதான் உங்களை அடி பணியச் சொல்கிறோம் வீண் சேதங்களைத் தடுக்க. எங்களுக்குத் தேவை உணவுப் பொருட்கள் அவற்றைச் சேகரித்துத் தரவும், எங்களுக்குத் துணையாக இருக்கும் பட்சத்திலும் நீடூரைத் தாக்க நாங்கள் முற்படப் போவதில்லை. இதை நீ உணர்ந்து கொள்வதே சிறந்தது மறுக்கும் பட்சத்தில் இங்கே அழிவை உண்டாக்குவது எங்களுக்கு மிகவும் எளிதான காரியம்''- என்றான்.

''பேரரசுகளின் நீதியும் நியாயமும் இப்படித்தான் இருக்கும் போலிருக்கிறது' என்று சலித்துக் கொண்ட எவ்வி, 'சேர மன்னா, நீங்கள் மட்டுமல்ல, நானும் போரைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இன்றோ நாளையோ - இரண்டே இனங்களுக்குள் போர்க்களம் புக வேண்டியவன் நான். எனவே என்னைப் பொறுத்தவரை நீங்கள் விட்டாலும் நான் போரை விட முடியாது'' என்றான்.

சேரமான் சற்றே குழம்பிப்போய் 'விளக்கமாய் சொல்' என்றான். அவன் முகத்திலே சிந்தனை படர்ந்தது.

அவனுக்குப் பதில் கூற முற்பட்ட எவ்வி, 'திதியன் படையடுத்து வருகிறான். இன்றோ நாளையோ நீடூரை அவன் தாக்கக்கூடும்' என்றான்.

'யாரது? கடுந்தேர் திதியனா?'- என்று வினவினான் சேரன்.

'ஆம்'

'எதற்காகப் போர் தொடுக்க வருகிறான்.'-

'அன்னியை உங்களுக்குத் தெரியுமல்லவா?'

'தெரியும். உன் நண்பன்'-

'ஆம். சேரரே. அந்த அன்னி திதியனின் அரசாட்சிக் குட்பட்ட புன்னை மரத்தினை வெட்ட முனைந்தான். நான் தடுத்தேன். அறிவுரை கூறினேன். அவன் கேட்கவில்லை. திதியனின் புன்னை மரத்தினை வெட்டி வீழ்த்தி அவமானத்தை உண்டாக்கினான். அப்போதே அவனுக்கும் திதியனுக்கும் போர் மூண்டது. அப்போரில் மரண காயம் பட்டு மாண்டு போனான் அன்னி.'*

'ஆம். கேள்விப்பட்டதுண்டு'...

'அந்த திதியனுக்கு இப்போது என்மீது கண் விழுந்திருக்கிறது'

'ஏன்?'-

'அன்னியைத் தடுத்தவன் நான். திதியனோ அதை நம்பவில்லை. அன்னியை அனுப்பியவனே நான்தான் என்று நினைக்கிறான். முடிவே கட்டி விட்டான். அதன் விளைவுதான் படையெடுப்பு-'

---

* திதியன் அன்னி சம்பந்தப்பட்ட நிகழ்ச்சி சரித்திரப் பூர்வமானது. பக்கம் 109 முதல் 119 வரை

சங்ககால அரசர் வரிசை-5 By புலவர். கா. கோவிந்தன்



எவ்வி இவ்வாறு கூறிவிட்டு சற்று மௌனமாய் இருந்தான். பிறகு பேச முற்பட்டு 'இப்போது சொல்லுங்கள், நீடூரின் நிலை எப்படி ஆகும் என்று சொல்வதற்கில்லை. திறை கொடுக்க மறுத்தால் நீங்கள் இதை அழிப்பீர்கள். திறை கொடுத்தால் உங்களுக்குப் பின்னால் திதியன் வந்து தாக்கப் போகிறான். திறைகொடுத்து பலவீனப்பட்டிருக்கும் நீடூரை அழிப்பது அவனுக்குச் சுலபமாகும்'- என்றான்.

இதைக் கேட்டதும் தீவிர யோசனையில் இறங்கினான் சேரமன்னன். அவனிடம் புதிய திட்டம் ஒன்று பளிச்சிட்டது. அதை நிறைவேற்றத் துணிந்தவனாய் எவ்வியிடம் பேசமுற்பட்டு 'எவ்வி, உன் நீடூரும், மக்களும், நீயும் அழியாமல் இருக்க நான் வழிசெய்கிறன். ஆனால் ஒரு நிபந்தனை. நான் அப்படிச் செய்வதற்கு ஏற்ற கைம்மாறு உன்னிடமிருந்து தேவை. அதாவது நீடூரைக் கடந்து செல்லும் எங்கள் படைக்குத் தேவையான உணவுப் பொருட்களைச் சேகரித்து அனுப்பும் காரியத்தை நீ மேற்கொள்ள வேண்டும். சம்மதமா?' என்று கேட்டான்.

தன் பேச்சை பொருட்படுத்தாமல் நிமிட நேரத்தில் நீடூரை அழித்து விட்டுக் கடந்து போகக் கூடிய நிலையில் இருக்கும் சேரமன்னன் தன்னிடம் உடன்படிக்கை செய்து கொள்வது போல் பேசிய விதம் எவ்விக்கு வியப்பாக இருந்தது. சேரன் அவ்வாறு உடன்படிக்கையில் இறங்குவது தன்மீதுள்ள கருணையினால் அல்ல என்பதும் வேறு ஏதோ லாபம் கருதித்தான் என்பதும் எவ்விக்குப் புரியலாயிற்று. அது எதுவாக இருந்தாலும் தனக்கும் தன்

நாட்டிற்கும் ஆபத்து இல்லாத வரை ஒப்பந்தம் செய்து கொள்வது தவறல்ல என்று தீர்மானித்தான் எவ்வி. சேர மன்னன் கோரும் உணவு உதவி போர் முடியும் வரைதான் என்பதாலும், போர் அதிகபட்சமாக ஓரிரு வாரங்களில் முடிந்துவிடலாம் என்பதாலும், அந்த சில நாட்களுக்கு உணவுப் பொருட்களை தந்துதவுவது முடியக் கூடிய காரியமே என்பதாலும் தன் சம்மதத்தையும் நன்றியையும் தெரிவித்துவிட்டு அரண்மனைக்கு மீண்டான் எவ்வி.

அவன் சென்றபின் பேச முற்பட்ட சோழன் பெருநற்கிள்ளி ''உன் திட்டம்தான் என்ன?'' என்று கேட்டான் சேரனிடம்.

'சோழரே, நாம் எதிர்பார்த்த அனுகூலத்தை விட இப்போது அதிகமாகவே நமக்குக் கிடைக்கப் போகிறது. எவ்வியைத் தாக்க வரும் திதியனைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டான் சேரன்.

'வேளிர் குல சிற்றரசன் என்று தெரியும்?'-

'அது மட்டுமல்ல. அவன் சிறந்த தேரோட்டி. தேர்ப்படைகளை நிரம்ப வைத்திருப்பவன். அவனிடம் உள்ள விசேஷமே அதுதான். தேர்ப்போரில் கைவந்தவன்.'

'அதனால் என்ன?'

'அவன் எவ்வியைத் தாக்க வருகிறான் என்றால் அவனது சிறந்த தேர்ப்படை தாக்க வருகிறது என்று அர்த்தம்.'

'அதனால்?'-



'நம்மிடையே தேர்ப்படைகள் இல்லை. திதியனின் தேர்ப்படைகள் சேர்ந்தால் சிறப்பான பிரிவு ஒன்று நமக்குக் கிடைக்கும்'-

'நீ சொல்வது...'

''சோழரே, இந்த எவ்வியை நாம் மிரட்டினோம் அல்லவா? அந்த மிரட்டலை இப்போது திதியனிடம் காட்டுவோம்'-

'அதாவது'-

''நமது மிரட்டல் திதியனைப் பணிய வைக்கும். ஏனென்றால் நமது படைபலம் அவனைக் காட்டிலும் பல மடங்கு பெரியது. நம்மிடம் அவனால் மோதி வெற்றி பெற இயலாது. நம்மைத் தவிர்த்து விட்டு எவ்வியைத் தாக்கப் போகவும் முடியாது. ஆகவே நாம் அவனை மடக்கி மிரட்டுவோம். நம்மிடம் சரணடைய வைப்போம். நம்மவரில் ஒருவனாய் ஆக்குவோம். பாண்டியனை எதிர்க்கும் அணி மிகவும் பலப்படும்''-

'அதுமட்டுமல்ல'

''வேறென்ன?'

''நாம் இப்படிச் செய்வதில் திதியனின் தேர்ப்படைகள் கிடைப்பது மட்டுமல்ல. நமக்குத் தேவையான உணவுப் பொருட்கள் எவ்வியிடமிருந்து கிடைக்கிறது. எவ்வளவு கிடைத்தாலும் லாபம்தான். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்''-

'திதியன் இங்கு வராவிட்டால்?'

'வரவழைப்போம்'

'எப்படி?'-

'இப்போதே ஒற்றர்களை அனுப்பி திதியனின் படை எங்கிருக்கிறது என்பதை அறியலாம். எவ்வியைப் பற்றி வதந்திகளை பரப்பலாம். இருவருக்கிடையே உள்ள பூசலை விசிறலாம். அது எப்படியும் திதியனை இங்கு வரவழைத்துவிடும்'-

இவ்வாறு கூறிமுடித்த சேரமன்னன் துரிதமாக நடவடிக்கையில் இறங்கினான். ஒற்றர்களை பல திசைகளுக்கும் அனுப்பினான். அவனது எதிர்பார்ப்பு பொய்க்கவில்லை. எவ்வியைத் தாக்க தென்மேற்கு திசையிலிருந்து வந்து கொண்டிருந்த திதியன் ஒற்றர்கள் விதைத்த மித்ர பேத வித்துக்களை விழுங்கினான். அவை அவனது இதயத்தில் ஆத்திரம் என்னும் செடியாய் முளைத்து மரமாகிப் பிளந்தது இதயத்தை. ஒரு நாளைக்கு முன்பாகவே அவனது படை நீடூரை அணுகியது.

நீடூருக்குச் சமீபத்தில் வந்த பின்புதான் அங்கிருந்த விபரீத நிலைமை புரிந்தது திதியனுக்கு. சிறிதும் எதிர் பார்க்காத விதத்தில் சேரசோழர்களின் கடல்போன்ற படை நீடூரை வளைத்துக் கிடந்ததைக் கண்டு அதிர்ந்தான். பாண்டியனை அப்படை மதுரையில் வென்றுவிட்டு கடற்கரை பக்கமாக முன்னேறுவதாகப் பரப்பப்பட்ட பொய்ச் செய்தி வேறு அவனுக்கு எட்டியிருந்தது. அந்த வகையில் பாண்டியனையே முறியடித்த மாபெரும் படைக்கு முன்னால் தான் எம்மாத்திரம் என்று கேட்டுக் கொண்ட அவன் தான் உண்மையிலேயே ஒரு சுண்டைக்காய்தான் என்பதை உணர்ந்தான்.



அவனுக்குள் விரிந்து கிடந்த கனவு மெதுவாக விரியலாயிற்று. தனது ஆற்றல் மிக்கத் தேர்ப்படைகளை கொண்டு எவ்வியைத் திணறடித்து மிழிலைக் கூற்றத்தை முழுதாய் விழுங்கலாம் என்று ஆசைக் கோட்டையை மனத்திலே கட்டிக்கொண்டு பொன்னால் ஆன தேரில் பெரும் தோரணையுடன் வந்த அவனுக்கு மனக் கோட்டை வெறும் மண்கோட்டையாகி பொடிந்தது போலவும் அதில் தான் சமாதியாகி விட்டது போலவும் தோன்றியது.

சேர சோழப் படைகளை எதிர்ப்பது என்ற உத்தேசமே அவனிடம் எழவில்லை. ஆகவே அதிலிருந்து எப்படி மீள்வது என்பதே அவனது சிந்தனையாயிற்று. சேர சோழ மன்னர்களிடம் சரணடைந்து எவ்வியைத் தாக்க வழி செய்து கொள்ளமுடியுமா என்று யோசித்தான். அதற்குக்கூட சேர சோழர்களின் நோக்கத்தை முதலில் அறிந்துகொள்வது அவசியம் என்று கருதினான். அவனது எண்ணங்கள் செயல்படுவதற்கு முன் சேரர் படையைச் சேர்ந்த தளபதிகள் அவனை அணுகி 'சேர மன்னன் அவனைச் சிறை செய்யும்படி உத்திரவிட்டுள்ளதாக' அறிவித்தார்கள்.

இதை திதியன் எதிர்பார்த்தான். இருப்பினும் வருத்தப்படாமல் இருக்க முடியவில்லை. தான் புறப்பட்ட வேளையில் துரதிருஷ்டமும் புறப்பட்டிருக்க வேண்டும் என்று எண்ணித் தன்னை நொந்து கொண்டு கைதியாகப் புறப்பட்டு சேரமன்னன் பாசறையை அடைந்தான்.

அங்கே அவனுக்கு கௌரவக் குறைவு எதுவும் இல்லாத வண்ணம் உபசாரங்கள் நடந்தன. அவற்றை யெல்லாம் மறுப்பு சொல்லாமல் ஏற்றுக்கொண்டு தனக்கு அளிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்து கொண்ட திதியன் 'கைதியாகக் கொண்டு வந்து உபசாரங்கள் செய்வதை எண்ணி மகிழ்வதா? அல்லது இத்தனை உபசாரங்களைப் பெற்ற நான் கைதியாக இருப்பதை எண்ணிக் கவலைப்படுவதா என்று தெரியவில்லை' என்றான்.

திதியனின் தர்மசங்கடம் சேரனுக்குப் புரியாமலில்லை. நன்றாகவே புரிந்துகொள்ள முடிந்தது அவனால். எனவே அதைப் போக்கும் விதத்தில் பேச முற்பட்டு 'சில விஷயங்கள் எதிர்பாராதவை. சில நடவடிக்கைகள் தவிர்க்க முடியாதவை. மன்னர்களுக்கு இவை இயல்பு' என்று கூறிவிட்டு, 'பாண்டியனின் நிலையும் உமது நிலையைப் போலத்தான். பெரும் காரியங்களில் ஈடுபடும்போது இவையெல்லாம் இயல்பாகவே நடந்துவிடும். இதில் வருத்தப்பட்டு மனம் தளர்ந்து விடுவது அழகல்ல. அதுவும் வீரரான நீர் இப்படி தளர்வது கூடாது, - என்று வினயமாகப் பேசிவிட்டு, 'சரி நீர் இங்கே படையெடுத்த நோக்கம்? - என்று வினவினான்.

'நோக்கம் எதுவானாலும் அது இனி நிறைவேறப் போவதில்லை' - என்றான் திதியன் அயற்சியுடன்.

'காரணம்?'

'உங்களுக்குத் தெரிந்ததுதான். எவ்வியைத் தாக்க வந்தேன். இடையில் நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் கடல் போன்ற சேனை இருக்கிறது. நானென்ன செய்ய முடியும்?'



'எவ்வி, எங்கள் உதவியை நாடியிருக்கிறான். நான் அதற்குச் சம்மதித்து விட்டேன். அதன் ஆரம்பமே இந்த நடவடிக்கை. எங்களுடன் போரிடுவதானால் எனக்கொன்றும் ஆட்சேபணை இல்லை'-

'அந்த உத்தேசம் எனக்கிருக்குமானால் கைதியாக வர சம்மதித்து இருப்பேனா சேரமன்னரே?'-

'போரிட உத்தேசமில்லை. கைதியாக வரச்சம்மதித்து வந்து விட்டீர்கள். இனி உங்கள் விதியை நிர்ணயிக்க வேண்டியது நான். இருந்தாலும் உங்களை கௌரவக் குறைவாக நடத்த நான் விரும்பவில்லை. இதை நேரிலேயே நீங்கள் கண்டீர்கள்.'

'ஆம்.'

'உங்களைச் சிறை செய்ததின் மூலம் எவ்வியைக் காப்பாற்றியாகிவிட்டது. அவனுக்கு வாக்களித்த உதவி முடிந்துவிட்டது.'

'ஆம்.'

'ஆனால் அதற்காக உம்மை நான் கைதியாக வைத்திருக்க வேண்டியதில்லை. உதவும் பட்சத்தில் நீர் எங்கள் நண்பராகலாம். பெரும் சாம்ராஜ்ய வேள்விக்கான தூண்களில் ஒன்றாகலாம்.'-

'சேரமன்னரே, எப்போது நான் கைதியாக உள்ளே நுழைந்தேனோ அப்போதே என் கௌரவம் போய் விட்டது. நீங்கள் அளித்த உபச்சாரங்களால் அது மீண்டு

விடாது. ஆனால் நீங்கள் சொன்னீர்களே நண்பனாக ஏற்பதாக-அந்த நிலை உண்மையில் என் கௌரவத்தைத் தூக்கி நிறுத்தும். உங்களுக்குத் தேவையான உதவி என்ன?' என்று கேட்டான் திதியன்.

அவனுக்கு இப்போது சற்று நிம்மதியாக இருந்தது என்றே சொல்லவேண்டும். கைதியாக ஆக்கப் பட்டவுடன் அவன் ஏதேதோ எதிர்பார்த்தான். அப்படி யெல்லாம் எதுவும் இல்லாமல் தனது கௌரவம் நிலைக்கும்படியான ஒரு வாய்ப்பு உண்டாவதை அறிந்தபோது அவனிடம் அதுவரை இருந்த சங்கடம் படிப்படியாக விலகியது.

நிம்மதி அவனுக்கு மட்டுமில்லை. சேரனுக்கும்தான். மிகவும் சாமர்த்தியமாகவும், தந்திரமாகவும் பேசி அவனை ஒரு நிலைக்குக் கொண்டு வந்துவிட்டதாகவே கருதினான் இரும்பொறை. துன்புறுத்தியும் வற்புறுத்தியும் கூட திதியனைப் பணிய வைக்க முடியும். ஆனால் அதைவிட இங்கிதமாகவும் பக்குமாகவும் வழிக்குக்கொண்டு வருவதே நிலையான பயனைத் தரும் என்று கருதி அவனுக்கு கௌரவ உபசாரங்களைச் செய்து வினயமாகப் பேசினான்.

தற்போது உதவியைப் பற்றி திதியன் கேட்டதுமே-

'என்ன தேவை என்றா கேட்டீர்? நீரும் உம் படைகளும்தான் தேவை. உம்மிடம் உள்ளதைத்தான் கேட்கிறேன்' என்றான்.

'யாருடன் போரிட?'-

'உமது பகைவருடன்'



'என் பகைவரா? எவ்விதான் என் பகைவன். அவனைத் தான் காத்து விட்டீர்களே?'...

'திதியரே, பழங்கதைகளை மறந்து விட்டீர்கள் போலிருக்கிறது'

'எதைச் சொல்கிறீர்கள்?'...

'கோசர்களை மறந்துவிட்டீர்களா?'-

'அவர்களையா? அவர்களை எப்படி நான் மறக்க முடியும்? நாடோடிகளான அவர்கள் கேவலம் தங்கள் மேய்ச்சல் நிலத்தில் அன்னி மிஞிலியின் பசுக்கள் திரிந்தன என்பதற்காக அவன் தந்தையின் கண்களைப் பிடுங்கி கொடுமை செய்த கயவர்களாயிற்றே அவர்கள்? அவர்களையா மறக்க முடியும்?'*

'அன்னி மிஞிலிக்காகச் சென்று கோசரை அழித்தது நீர் தானே? அவர்கள் உம் பகைவர் அல்லவா? அவர்களுடன் போரிட உமக்குத் தயக்கமிருக்கிறதா? திதியரே, நீர் போரிடப் போவது கோசர்களிடம் மட்டுமல்ல. அவர்களின் தலைவன் பழையனுடன். அது உமக்கு உகந்ததல்லவா? நாளைக்கு நாடே வியக்கப்போகும் ராச சூயத்தை நடத்தும் சோழ மன்னர் பெருநற்கிள்ளியின் அணியில் ஒருவராய் இருந்து பொற்காலம் படைப்பது உமக்கு கௌரவமில்லையா? உம்மைவிட பலவிதத்தில் பலவீனப்பட்டுக் கிடக்கும் எவ்வியை வென்று மிழிலைக் கொற்றத்தைப் பெறுவதில் என்ன சிறப்பு இருக்கிறது? மாறாக சேர சோழர் அணியில் நின்று போராடித் தமிழகப்

* இது சரித்திர பூர்வமான நிகழ்ச்சி அகநானூறு பாடல்கள் 262, 166 ஆகியவை மூலம் அறியலாம்.

போரில் வெற்றிக்கு வழி வகுத்து சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பாராட்டப்படுவதை விட வேறென்ன வேண்டும் உமக்கு?'...

'என் உடன்பிறவா சகோதரனை ஒரு வார்த்தை கேட்க வேண்டும்'-

'எங்கிருக்கிறான்?'

'என்னுடனேயே வந்திருக்கிறான்'

'அழைக்கச் சொல்'...

உடன் பிறவா சகோதரன் அழைக்கப்பட்டான். அவனைக் கண்டதும் 'நீயா?' என்று கேட்டு கண்களை விரித்தான் சேரமன்னன்.

◈◈◈

முரசு நாற்பது

# வில் வீரன் பொருநன்

மூளையை சலவை செய்யும் விதத்தில் பேசி தன் வழிக்கு ஏறக்குறைய திதியனை வரவழைத்துவிட்ட நிலையில் திதியன் சரியென்று ஒப்புக் கொள்வதை விடுத்து 'உடன்பிறவா சகோதரனை ஒரு வார்த்தை கேட்க வேண்டும்' எனச் சொன்னதும் இரும்பொறைக்கு ஒரு மாதிரியாகத்தான் இருந்தது- 'யாரந்த உடன்பிறவா சகோதரன்? அவனைக் கேட்கும் அளவிற்கு அவனென்ன அத்தனை முக்கியமானவன்?' என்றெல்லாம் தனக்குள் கேட்டுக்கொண்ட அவன் முடிவில் 'எதற்கும் அவனை யாரென்றுதான் பார்ப்போமே?' என்று தீர்மானித்தவனாய் திதியனிடம் அவனை வரவழைக்கும்படி சொல்லி தன் உபதளபதிகள் இருவரை அனுப்பினான்.

உபதளபதிகள் சென்ற பின் திதியனிடம் பேசத் துவங்கி, 'திதியரே, நான் உம்மை நடத்தும் விதம், உம்மிடம் காட்டும் மரியாதை, அறிவுறுத்தும் நட்பு இவையெல்லாம் என் லாபத்திற்காக என்றோ ஏதோ எனக்கு வேறு வழியில்லை என்பதற்காக என்றோ எண்ணிவிட வேண்டாம். உம்மை இங்கேயே அழித்துவிட்டு உமது தேர்ப்படைகளைக் கைப்பற்ற என்னால் முடியும். அப்படிச் செய்யாமல் உம்மிடம் பேசுவது முடிந்தவரை இழப்புகளைத் தவிர்க்க வேண்டும் என்பதற்காகத்தான். இதை நீங்கள் உம் உடன்பிறவா

சகோதரனுடன் பேசுவதற்கு முன் உணர்ந்து கொள்வது நல்லது. உமது உடன்பிறவா சகோதரன் ஒருவேளை இந்த வழிக்கு உடன்படவில்லையென்றால் உங்கள் இருவரையும் இங்கேயே கழுவேற்றி விட்டுப் படைகளைக் கவர்ந்து என் வழியில் தொடர்வேன். இரும்பொறை முன் வைத்த காலை பின் வைப்பதில்லை. எண்ணித் துவங்கியதை செய்யாமல் விட்டு விடுவதும் இல்லை.'' என்று பகிரங்கமாக மிரட்டவும் செய்தான்.

சேரனின் மனநிலையை திதியன் உணர்ந்தே இருந்தான். எனவே சேரனின் பேச்சு அவனுக்கு வியப்பளிக்கவில்லை. ஆகவே, ''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம் சேர மன்னரே. அவனைக் கேட்பது, அவனிடம் சொல்வது என்பதெல்லாம் எனக்கு ஒரு சம்பிரதாயம். நீண்டகாலமாக நாங்கள் இருவரும் ஒன்றாகப் பழகி எல்லா காரியங்களிலும் ஒன்றாகவே ஈடுபடுவதால் ஒருவரை யொருவர் சகோதரர்களாகவே கருதுகிறோம். அவன் என்கருத்தையோ நான் அவன் கருத்தையோ தட்டுவதில்லை. ஆயினும் ஒருவருக் கொருவர் தெரியாமல் எதையும் செய்வதில்லை. இந்த விஷயமும் அப்படித்தான். அவன் ஒருவேளை மறுத்தால் உமது விருப்பப்படி நடந்துகொள்ள நான் தயார்'- என்றான்.

திதியனின் தீர்மானம் இந்த விஷயத்தில் முடிவாகி விட்டிருந்தது. சோழ மன்னனின் ராசசூயம் பற்றியும், அதற்குப் பிறகு தமிழகம் சோழனின் ஆதிக்கத்திற்கு ஒரு முகமாக வந்து அந்த சாம்ராஜ்யத்தில் தளபதி பதவி கிடைப்பது பற்றியெல்லாம் சேரமான் சொன்ன செய்திகள் திதியனின் உள்ளத்தில் ஆசைத்தீயைக்



கிளறிவிட்டதென்னவோ உண்மைதான். ஆனால் அதற்காக மட்டும் அவன் மனம் மாறிவிடத் துணியவில்லை. கோசர்களைப் பற்றிச் சேரமான் கூறிய சம்பவங்கள்தான் அவனை அதிகமாகப் பாதித்தது பகைத்தீயை வளர்த்துவிட்டிருந்தது. தனது ஜென்மப் பகைவர்களான கோசர்களை சமயம் கிடைக்கும் போதெல்லாம் வேரறுப்பதை விரும்பும் சுபாவம் கொண்ட அவனுக்கு தற்போது அந்த ஜென்மப் பகைவர்களையும் அவர்களைவிட அவர்களது தலைவன் பழையனை அழிக்க சந்தர்ப்பம் கிடைக்கிறது என்று தெரிந்ததுமே அவனுக்குள் சேரமானுக்கு உதவ வேண்டும் என்ற தீர்மானம் உண்டாகிவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். சேரன் அழைக்கிறான் என்பதைவிட கோசர்களை எதிர்க்கிறோம் என்ற அம்சமே அவனை உந்தியது. மற்றபடி வேறெந்த சம்பந்தமோ காரணமோ அந்தப் பொருதலில் அவனுக்கு இல்லை.

அரசியல் மோதல்கள் நிகழும்போது இப்படி பழைய பகைமை, பழைய நஷ்டம் ஆகியவை புதிய வடிவம் பெற்று பலரையும் அதில் சம்பந்தப்படுத்தி விடுவதுண்டு. இங்கே அப்படியொரு சம்பந்தம் உண்டாக திதியனுக்கு சேரமன்னன் உதவினான் எனலாம்.

சேரனும் வேளிர்குல மன்னன் திதியனும் இப்படி ஒரு தீர்மானத்துக்கு வந்து அதை வெளியிட தயாராக இருந்த போது அப்பாசறைக்கு வந்து சேர்ந்தான் திதியனின் 'உடன்பிறவா சகோதரன்'.

அவனைக் கண்டதும் சேரமன்னனின் கண்கள் விரிந்தன மகிழ்ச்சியால். 'நீயா?'- என்று வியப்புடன் விளித்தான் வந்தவன் தனக்குத் தெரிந்தவன் என்பதால்.

பொதியமலைக்கு உரியவனும் வேளிர்குல சிற்றரசர்களில் ஒருவனும், சிறந்த வில்லாளியும், பலம் மிகுந்த விற்படையைக் கொண்டவனுமான பொருநன் சேரன் இரும்பொறையைப் பார்த்து பெரிதும் மகிழ்ந்தவனாய் அவனைப் போய் கட்டிப்பிடித்துக் கொண்டான்.

மெல்லிய தேகம் கொண்டிருந்தாலும் அவனது உடல் வஜ்ஜிரம் கொண்டதாய் இருந்தது. மிகவும் இளைஞனாக இருந்தாலும் அவன் தோரணையில் அனுபவம் மிளிர்ந்தது. கண்கள் சிறுத்துக் கிடந்தாலும் பார்வை கூர்மையாய் இருந்தது. மொத்தத்தில் இளவேங்கைபோல் இருந்த அவன் சேரமன்னனுக்கு ஏற்கெனவே பழக்கமானவனாய் இருந்துவிட்டபடியால் விஷயம் பிரச்சனையாகாமல் போயிற்று.

பாண்டியனுடன் செய்ய வேண்டிய போரைப்பற்றி மூவரும் பேசினார்கள். முடிவில் வேளிர்களான திதியனும் பொருநனும் ஒரே தீர்மானத்தில் நின்று சேர சோழர்களுக்கு உதவுவதாகவும், அவர்கள் புரியவிருக்கும் பெரும் போரில் திதியனின் தேர்ப்படையும் பொருநனின் விற்படையும் மனமுவந்து பங்கேற்கும் என்றும் முடிவாயிற்று. இப்படி அண்டை நாட்டுச்சிற்றரசர்களான இவ்விருவரும் இணைந்து தன் அணியில் சேர சம்மதித்ததும் சேர மன்னனின் கனவு விரிந்தது.

பெரும் சக்திகளான சேரசோழர்கள் நிற்க அவர்களுக்கு உதவ யானைப் படைகளைக் கொண்ட எழினி - தேர்ப்படையைக் கொண்ட திதியன் - விற்படையைக் கொண்ட பொருநன் - ஆயுதப் படைகளைக் கொண்ட



எருமையூரன்- வியூகங்களை வகுக்க வந்திருக்கும் இருங்கோவேள்-ஆகவேளிர் ஐவரும் சேர்ந்த மாபெரும் அணியை எண்ணிப் பார்த்தான் அவன். 'இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?' என்று கேட்டது அவன் மனம்.

பாண்டியனை வென்று விட்டதாகப் பொய்ச் செய்தியைச் சொல்லியிருந்தாலும் பாண்டியனிடம் தோற்றதுதான் உண்மை என்பது அவனுக்கு மறக்க முடியாததாக இருந்தது. நொடிப்பொழுதில் வென்று விடலாம் என்று எண்ணி முனைந்த காரியத்தில் வந்து சேர்ந்த எதிர்பாராத தோல்வி அவனுக்குள் மிகவும் உறுத்தியது. இருப்பினும் பழையனின் கடைசி நேர வரவால் திட்டங்கள் தடுமாறியதாலேயே இந்தத் தோல்வி கிடைத்தது என்று தனக்குத்தானே சமாதானம் செய்து கொண்ட அவன் தற்போதைய போரில் அப்படிப்பட்ட தடுமாற்றத்திற்கோ, தோல்விக்கோ இடம் தரக் கூடாதென்று தீர்மானம் செய்து கொண்டான். அந்தத் தீர்மானம் தற்போது சேர்ந்துள்ள மகோன்னதமான அணியினால் நிச்சயமாக வெற்றி பெறும் என்று நம்பினான். எதை இழந்தாவது அல்லது எதைச் செய்தாவது இப்போரில் பாண்டியனை முறியடித்து அவனது குலத்தை வேரோடு களைவது என்று உள்ளுக்குள் சபதம் எடுத்துக் கொண்டான். அதையொட்டி அவனுக்குள் பயங்கரத் திட்டங்கள் உருப் பெறலாயின.

அன்றிரவு எவ்வி மாமன்னர் இருவரையும் வேளிர்கள் ஐவரையும் நீடூர் அரண்மனைக்கு அழைத்து சிறப்பான விருந்துபசாரம் செய்து தன் நட்பைத் தெரியப் படுத்தினான். பாண்டியனைச் சந்திக்க வேண்டிய

போர்க்களம் எது என எவ்விக்குத் தெரிவிக்கப்பட்டது. அதை அறிந்தபோது போரின் வெற்றியை அப்போதே நிர்ணயம் செய்துவிட்டவனாய் மன்னர்களை வாழ்த்தினான். ஏதோ சோனுக்கு பணிந்து உதவ முன் வந்திருந்த அவனுக்குத் தற்போது உண்மையாகவே உதவும் விருப்பம் உண்டாயிற்று. அவர்களுக்கு உதவுவதைக் கௌரவமானதாக எண்ணவும் தலைப்பட்டான்.

மறுநாள் அந்த மாபெரும் போர் படை நீடூரை விட்டு அமர்க்களமாகப் புறப்பட்டது.

❀ ❀ ❀

நன்னனால் நயவஞ்சமாக இரண்டாவது முறை கடத்தப்பட்டு சந்தனக் கோட்டையில் சிறை வைக்கப்பட்ட வணிகர் மகள் மேகலை மிகவும் மெலிந்திருந்தாள். சிறைப்பட்ட துயரத்தை விட சிறைப்பட்டு நாட்கள் இரண்டாகியும் பழையன் தன்னை மீட்க வராததே அவளது வருத்தத்தை அதிகமாக்கி யிருந்தது. ஒரு வேளை தான் சிறைப்பட்டது பழையனுக்குத் தெரியாதோ என்ற கேள்வியும் அவளுக்கு எழாமல் இல்லை. இருந்தாலும் கூட இரண்டு நாட்களுக்கு சிறை வாழ்க்கையை அனுபவித்து விட்டதாலும், அச்சிறையிலிருந்து மீளும் வழி எதுவும் தென்படாததாலும் அவளது கவலை அதிகரித்து உடல் தெம்பைக் குறைத்து அவநம்பிக்கையில் ஆழ்த்தி இருந்தது.

பழையனைப் போன்ற மாவீரனைக் காதலித்ததற்காக அவள் பலமுறை பெருமைப்பட்டதுண்டு. ஆனால்



தற்போது தான் பகடைக்காயாகப் பயன்படுத்தப்பட்டு துன்பத்திற்கு ஆளாவதை எண்ணியபோது அவளுக்கு 'ஏன் தான் அரசியல் அதிகாரிகளை காதலிக்கிறோமோ?'' என்று தோன்றியது. பொறுமைக்கு உதாரணமாக இருக்க வேண்டிய பெண் விவேகத்தை இழந்து தன் காதலையே வெறுத்தாள்.

காதலனைப் பிரிந்திருப்பது கஷ்டம் தான் என்றாலும் அதைத் தாங்கிக் கொள்ள சில பெண்களால் முடியும். பொருளீட்டச் செல்லும் காதலர்களைப் பிரிந்து வாடும் பெண்கள் கிளிகளையும், மேகக் கூட்டங்களையும், நதியையும், நிலாவையுமெல்லாம் தூது விட்டு மனத்தை ஆற்றிக் கொள்ளும் இலக்கியச் செய்திகளை அவள் அறிந்ததுண்டு. ஆனால் காதலனைப் பிரிந்தது மட்டுமின்றி பகைவனின் சிறையில் அடைபட்டு அவமானப்பட நேர்ந்ததைத்தான் அவளால் தாங்கிக் கொள்ள இயலவில்லை. நிச்சயமற்ற நிலை அவளை மிகவும் பாதித்து விட்டிருந்தது.

நாள் தவறாமல் பராமரிக்கப்பட்டு வந்த பூஞ்செடி பராமரிப்பை இழந்து வாடிப் போனது போன்ற நிலையில் இருந்தாள் அவள். மழை தவறிப் போனதால் வெளிறிப் போன பயிர்களை ஒத்திருந்தது அவள் மேனி. நீர் வற்றிய அருவிபோல், ஒளி இழந்த நிலவு போல், துணை இழந்து, தெம்பிழந்து, தைரியத்தை இழந்து, ஓரளவிற்கு அறிவையும் இழந்தவளாய் வாடினாள் வணிகர் மகள்.

பல இலக்கியங்களை நினைவு கூர்ந்த அவளுக்கு இதிகாசம் மறந்து போயிருந்தது. இல்லையானால் ராமாயணத்தை நினைத்திருப்பாள். அதிலே கண்ணீர்க்கும்

கண்ணான கணவனான ராமனைப் பிரிந்த சீதை - சூழ்ச்சியால் - பகைவனால் கவரப்பட்டு - பலகாலம் வரை பகைவனின் உறைவிடத்தில் சிறை கிடந்த சோகத்தை நினைத்திருப்பாள். அச்சீதையின் பிரிவை விடவும், சோகத்தைவிடவும் தன் பிரிவும் சிறை வாழ்வும் ஒன்றும் பெரிதல்ல என்பதை உணர்ந்திருப்பாள். அதர்மமும் சூழ்ச்சியும் வெற்றி பெறுவதில்லை என்பதையும் தர்மமும் வீரமும் உரிய வெற்றியை அடைந்தே தீரும் என்பதையும் உணர்ந்து அமைதி பெற்றிருப்பாள். பெண்களின் புத்தி சில நேரங்களில் சரியான சிந்தனையிலிருந்து பின் தங்கி விடுவதால் தீர்க்கமான முடிவுக்கு வருவதில்லை.

இப்படி மனத்தாலும் உடலாலும் தடுமாறிக் கிடந்த மேகலையுடன் தற்போது அவளது தந்தையும் இருந்தார். அவரது உள்ளமும் உடலும்கூட பாதிக்கப்பட்டிருந்தன. ஆனால் மேகலையைப் போலல்லாமல் வேறு விதத்தில் அவரது இதயம் பாதிக்கப்பட்டிருந்தது. அதை வெளிப்படுத்த இயலாதவராய் குமுறும் எரிமலையை உள்ளுக்குள் சுமந்தவராய், அவசரப்பட்டு எதையும் செய்ய முடியாதவராய், சிறைக்கு வந்ததிலிருந்து பேச்சிற்கும் சிறைத் தண்டனையை விதித்தவரைப் போல் மௌனமே சாதித்தார்.

அவரது மனக்குமுறலை உணராத மேகலை அவர் மீது தணலை எடுத்து வீசுவது போல் பேசத் துவங்கி, ''இப்போது திருப்தி தானே தந்தையே! மதுரையின் பெரு வணிகரான நீங்கள் பெற்ற மகளுடன் சிறையிருப்பது பெருமையாகத்தானே இருக்கிறது? அதுவும் நாம்



இருப்பது வெறும் கற்கோட்டை இல்லையே. சந்தனக் கோட்டை அல்லவா?'' - என்றாள்.

அவர் முகத்தைக் கூட அவள் பக்கமாகத் திருப்பவில்லை. மௌனமாக இருந்தார். மேகலையோ விடவில்லை. அஸ்திரத்தை மேலும் தொடுத்தாள்.

''பேசுங்கள் அப்பா. எதற்காக மௌனம் சாதிக்கிறீர்கள்? உங்கள் பேச்சிற்கும் சேர்த்து சிறையிட்டு விட்டார்களா என்ன? இப்போது என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிறீர்கள்? அன்றைக்கு உங்கள் பேச்சைக் கேட்டிருக்கலாம் நான். படைத் தலைவரை மறந்து சேர மன்னனை மணக்க விருப்பம் தெரிவிக்கச் சொன்னீர்களே, அப்படியே நான் செய்திருந்தால் இன்று நாம் இங்கிருக்க மாட்டோம். நான் கருவூர் அந்தபுரத்தில் உல்லாசமாக இருந்திருப்பேன். தாங்களும் கருவூரில் பெரிய வணிகராய் உலவி பல்லாயிரம் பொற் காசுகளை சம்பாதித்துக் கொண்டிருப்பீர்கள். உங்களைச் சொல்லி என்ன பயன்? படைத் தலைவரைச் சொல்ல வேண்டும். அவரால் தானே நமக்கு இந்த நிலை?''-

அதுவரை பேசாதிருந்த அவர் மேகலையின் பேச்சை இடைமறித்து, ''படைத் தலைவரைப் பற்றி அவதூறாகப் பேசாதே அம்மா, அது சரியல்ல'' என்றார்.

இதைக் கேட்டுச் சிரித்தாள் மேகலை. ''என்னப்பா ஆயிற்று உங்களுக்கு? படைத் தலைவரைப் பற்றி ஒன்றும் சொல்லக் கூடாது என்கிறீர்கள்? திடீரென்று அவரெப்படி உத்தமரானார் உங்களுக்கு?''- என்று கேட்டாள்.

'மகளே, நான் எதிர்பாராதது நடந்து விட்டது'-

'எதைச் சொல்கிறீர்கள்?'-

'நான் ஏமாற்றப்பட்டு விட்டேன்?'-

'சிறைப்பட்டதையா சொல்கிறீர்கள்?'-

'மேகலை, சேர மன்னனை நம்பினேன். அவன் காட்டிய ஆசை வார்த்தைகளை நம்பினேன். அவனுக்காக நானே பழையனை உன்னிடமிருந்து பிரித்து இச்சந்தனக் கோட்டைக்குக் கடத்தினேன். சிறைப்படுவதற்கு உதவினேன். பெற்ற மகளையே துன்புறுத்தத் துணிந்த எனக்கு அந்தத் துரோகிச் சேர மன்னன் இன்றைக்குக் காட்டியுள்ள மரியாதை நம் இருவருக்கும் சிறைத் தண்டனை'-

'சேரமன்னனின் காரியமல்ல தந்தையே இது. நன்னனின் நடவடிக்கை'-

'சேர மன்னனுக்குத் தெரியாமல் இந்த காரியம் நடக்க முடியாது மேகலை. அவனுக்குத் தெரியாமல் நடந்திருந்தால் நடந்தபின்பாவது சொல்லப்பட்டிருக்கும். சேரன் யோக்கியனாய் இருந்திருந்தால் நம்மை இச் சிறைதண்டனைக்கு ஒப்புக் கொண்டிருக்க மாட்டான். நாம் இங்கு வந்து இரண்டு நாட்களாகியும் ஒரு மாற்றமும் இல்லையே? இது எதைக் காட்டுகிறது? என்னை வெறும் பகடைக்காயாய் மட்டுமே பயன்படுத்துகிறான் மகளே. அவன் சொல் செயல் எல்லாமே வெறும் பொய் என்றாகிவிட்டது. அவனை நம்புவதும் பாம்புடன் உறவாடுவதும் ஒன்றாகிவிட்டது'.- என்று உணர்ச்சி கொப்பளிக்கும் குரலில் பேசிய அவர் தற்போது மகளைப் பார்த்து கண் கலங்கினார்.



அவரது கலக்கம் மேகலையிடம் அதுவரை உண்டாகியிருந்த ஆத்திரத்தைக் கலைத்து அனுதாபத்தை உண்டாக்கியது. 'ஏனப்பா கலங்குகிறீர்கள்?'- என்று வினயமாகக் கேட்டாள்.

'மகளே, எனக்கு வயதாகி விட்டது. அடைய வேண்டிய சுகமென்று எனக்கு இனி எதுவும் இல்லை. நான் இங்கேயே உயிர் துறந்தாலும் கவலைப்பட மாட்டேன். ஆனால் உன் நிலை இதுவல்ல. நீ பிஞ்சு. மொட்டு. நீ மலர்ந்து, காய்த்து, கனியாகி நீண்டகாலம் வாழ வேண்டியவள். உனக்கு ஒருவிதமான கேடும் நிகழக்கூடாது மகளே. அதற்கு நீ இங்கிருந்து தப்ப வேண்டும். அதற்கு வழியில்லையே என்றுதான் அஞ்சுகிறேன் அம்மா'- என்றார் அவர்.

'படைத்தலைவர் இங்கிருந்து தப்பினாரே அப்பா?'

'எல்லோரும் படைத்தலைவர் போல் தப்பிவிட முடியாது மகளே. அவர் செய்தது போன்ற காரியம் எப்போதோ ஒருமுறை சாதிக்கக் கூடிய காரியம். அவரைத் தவிர வேறு யாராலும் நம்மை தப்புவிக்க முடியாதம்மா'.

'இரண்டு நாட்களாகியும் அவரிங்கு வருவதாக இல்லையே. அவருக்கு நம்நிலை தெரியாதா?'- என்று கவலையுடன் வினவினாள் மேகலை.

அவளுக்கு பதில் சொல்வது போல் அவளிருந்த அறையில் பிரவேசித்தது ஒரு புறா. அவள் மடியில் விழுந்து குறுகுறுத்தது. அது கொண்டு வந்த செய்தியை மிகுந்த ஆவலுடன் படித்தாள் மேகலை.

செய்தியைப் படித்த மேகலைக்குத் தலை சுற்றியது. மயங்கி விழும் நிலையை அடையவும் செய்தாள்.

## முரசு நாற்பத்தொன்று

# மலைமுகட்டில் பந்த ஒளி

தனக்குச் சேர மன்னனை மணம் செய்விப்பதில் மும்முரம் காட்டி அந்த உறுதிப்பாட்டில் பழையனை உதாசீனம் செய்து விரட்டியடித்த தன் தந்தை அதே வாயால் படைத்தலைவரை அவதூறாகப் பேச வேண்டாம் என்று கூறி அதற்குக் காரணமாகச் சேரமன்னன் செய்த துரோகத்தை விளக்கிக் கலங்கியபோது மேகலையிடம் இயற்கையான பாசம் துளிர்த்து அது தந்தையின் மீது அனுதாபமாக விரிந்தது. தன்னைச் சேரமன்னனுக்கு மணம் முடித்து பெரிய அந்தஸ்திற்கு ஆளாக்கும் ஆசையினாலேயே அவர் அப்படிப்பட தன் குணத்திற்கும் குலத்திற்கும் ஒவ்வாத காரியங்களைச் செய்திருக்கிறார் என்பதும், அது குலைந்து விட்டதில் அவரது இதயம் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதும் சந்தேகமின்றி தற்போது அவளுக்குப் புரியவே அதுவரை அவரிடம் பிரயோகித்த கோப வார்த்தைகளுக்காகத் தன்னை நொந்து கொண்டாள். அதே போல் அவர் படைத் தலைவரின் திறமை பற்றி பேசத்துவங்கியதும், அப்படைத் தலைவனின் பேரில் கொண்டிருந்த கோபமும் விலகவே செய்தது. அதனால்தான் பழையன் வந்து தன்னைக் காப்பாற்றுவான் என்று வலியுறுத்திப் பேசவும் செய்தாள். அதற்கு பலம் சேர்ப்பது போல் பழையனின் தூதுப்புறா ஒன்றும் அவள் மடியில் வந்து விழுந்தது.



தூதுப் புறா அனுபவம் அவளுக்கும் ஏற்கெனவே உண்டாகியிருந்ததால் தற்போது அதைக் கண்டதுமே பழையனிடமிருந்து செய்தி வந்திருக்கிறது என்று கருதியவளாய் அதன் இறக்கைகளை விரித்து ஆராய்ந்து உள்ளே செருகப்பட்டிருந்த பட்டுச் சீலையை எடுத்துப் படித்தாள். ஆனால் அதைப் படித்தபின் 'இதற்காகவா காத்திருந்தோம்?' என்று அவள் புலம்ப வேண்டியதாயிற்று. சீலையைத் தன் தந்தையிடம் காட்டினாள்.

'மேகலை'

இதை நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. என்னென்னவோ நடந்து நிலைமைகள் தலைகீழாகி விட்டன. உன் நிலை மோசமானதுதான். ஆனால் என் நிலை அதைவிட மோசம் என்பதை நீ புரிந்து கொள். உன்னை வந்து காப்பாற்றும் நிலையில் நான் இல்லை. உன் நிலையைச் சொல்லி உன்னைக் காப்பாற்ற மன்னரிடம் அனுமதி கேட்டபோது சிறிதும் எதிர்பாராத பதிலை வீசி விட்டார் மன்னர். 'நாட்டை விட உனக்கு உன் காதலி பெரியதாகி விட்டாளா? நாட்டு மக்களின் கௌரவத்தைவிட உன் மேகலையின் வாழ்க்கைதான் பெரிதாகி விட்டதா? பாண்டிய சாம்ராஜ்யத்தின் கௌரவத்திற்கு முன்னால் மேகலை ஒரு சிறு துரும்பு. அதற்காக படைத்தலைவனை நான் இழக்க முடியாது' என்று கடுமையாகப் பேசிவிட்டார். அவரது கடுமையின் காரணம் நியாயமானதுதான் மேகலை. அதையும் அவரே சொன்னார். 'படைத்தலைவரே, என்னை நீங்கள் தவறாக எண்ணப் போகிறீர்கள். இருந்தாலும் எனக்கு வேறு வழியே இல்லை. இப்போரில் என்னைவிட உங்களையே

பகைவர்கள் பெரிதாக நினைக்கிறார்கள். அதைக் கருதியே முன்பு உங்களைச் சிறையெடுத்தான் சேரன். நீங்கள் சமயத்தில் தப்பி வந்ததாலேயே அவன் தடுமாறவும் தோற்கவும் முடிந்தது. இன்னும் போர் முடியவில்லை. இப்போதைய விட கடுமையான போர் எதிர்நோக்கியிருக்கிறது. இந்த நேரத்தில் நீங்கள் இல்லையென்றால் என்னாகும்? பாண்டியர் படைகளுக்கு நீங்கள் இல்லாதது ஒரு பலவீனமாகவும், சேர சோழர்களுக்கு பெரும் பலமாகவும் ஆகிவிடும். நிச்சயமில்லாத ஒரு நிலையில் படைகளை விட்டுவிட்டு பெண்ணொருத்தியைக் காப்பதுதான் படைத் தலைவருக்கு உகந்தது என்றால் நான் உங்களைத் தடை செய்யவில்லை. உங்களை இங்கிருந்து அகற்ற வேண்டும் என்பதற்காகவே மேகலையைக் கடத்தியிருக்கிறான் சேரன். இந்த சூழ்ச்சியை அறிந்து கொள்ளாமல் நீங்களும் அவளைக் காக்கப் புறப்படுகிறீர்களே, எங்கே போயிற்று உங்கள் விவேகம்? காதல் உங்கள் கண்களை மறைத்துவிட்டதா?' என்று கேட்டு விட்டார். நான் என்ன சொல்வது சொல்? அவரை மீறி உன்னிடம் வந்தால் உன்னை வேண்டுமானால் நான் காப்பாற்றலாம். ஆனால் அதற்கு பிறகு என்ன செய்வது? நீயும் நானும் நாடோடிகளாய் திரிவதா? அதோடு மேகலை, இந்த முறை உன்னை தப்புவிப்பது என்பது சாமான்யமான காரியமல்ல. போன முறை நான் தப்புவதற்கு நன்னனின் உயிரைப் பணயம் வைத்து முயன்றேன். இந்தமுறை அதுவும் நடக்காது. நன்னனின் உயிர் போனாலும் உன்னைத் தப்பவிடக்கூடாது என்று சேரன் கட்டளையிட்டிருப்பான். ஆகவே யாரை ஏமாற்றி நான் முயற்சிப்பது என்பது புரியவில்லை. வணிகர் மகளே,



இந்த முறை நடக்கப் போகும் போர் மிகவும் பயங்கரமானது. சோழன் அடிப்பட்ட புலியாக இருக்கிறான். சேரனோ மதங்கொண்ட யானையாய் இருக்கிறான். இவர்களுக்கு வேறு பலரும் உதவப் போவதாகக் கேள்விப்படுகிறேன். ஆகவே பாண்டியர் வெற்றி நிச்சயமில்லை. நானே இப்படிச் சொல்கிறேன் என்பதால் உண்மை நிலை உனக்குப் புரிந்திருக்கும். ஒருவேளை பாண்டியர் தோற்று விட்டால் நான் எப்படி விழிப்பேன் உன் முகத்தில்? எனவே உன் தந்தை விரும்புவது போல் சேர மன்னனை மணப்பதில் சிந்தனையை செலுத்து. இருக்கும் சூழ்நிலையில் நடக்கக் கூடியது அதுதான். ஆடவனாகப் பிறந்து படைத்தலைவனாக அமர்த்தப்பட்டுள்ள நான் போர் குறுக்கிடும்போது களம் புகுவதே உகந்தது. உன் உயிருக்கு ஆபத்தில்லை. ஏனென்றால் என்னைப் பிடிக்கத்தான் நீ பிடிக்கப்பட்டிருக்கிறாய். நான் இருக்கும் வரை உனக்கு எதுவும் நேராது. போரில் நான் வீரமரணம் அடைந்தால் கவலைப்படாதே. சேர மன்னன் உனக்கு வாழ்வளிப்பான். அவன் மாவீரன். இந்த ஓலையைப் படித்ததும் கிழித்துப் போட்டுவிடு. யார் கண்ணிலும் படவேண்டாம். என்னை மன்னித்துவிடு.'

என்றும் உன்
பழையன்

மேகலையின் தந்தை பெருஞ்சாத்தனின் முகத்தில் ஈயாடவில்லை. தலையில் இடி விழுந்தாற் போல சிலையாகிவிட்டார். மேகலையோ பெரிதாகப் புலம்பினாள். ஒரே நம்பிக்கையாய் இருந்தது வீழ்ந்து விட்டதால் - ஒரே விளக்காய் மின்னியது அணைந்து

விட்டதால் எதிர்காலம் சூன்யமாகி விட்டது போன்ற நிலையில் பெரும் விரக்தியடைந்த அவள், ''பார்த்தீர்களா, தந்தையே! என் கதி எப்படி ஆகிவிட்டது பார்த்தீர்களா? என்னைக் காதலித்த மாபெரும் வீரர் - பாண்டியர் படைத் தலைவர் கூறும் வார்த்தைகளைப் பார்த்தீர்களா? சேரனை நான் மணக்க வேண்டுமாம். அப்படிச் சொல்ல இவர் யார்? பேசாமல் என்னைச் சாகச் சொல்லியிருக்கலாமே அப்பா? ஏனிந்த வேதனை? என்னை என்னவென்று எண்ணி விட்டார் அவர்? அவரும் நீங்களும் இந்த மன்னர்களும் வேண்டுமானால் என்னைப் பகடைக் காயாக நகர்த்த முயலலாம். கட்டாயமாக காரியங்களைச் செய்யச் சொல்லலாம். நினைத்தபடி கண்டபடி மாறச் சொல்லலாம். ஆனால் நான் நிச்சயமாக அதற்கெல்லாம் ஆடக்கூடியவள் அல்ல என்பதை எல்லோரும் புரிந்து கொள்ளத்தான் போகிறீர்கள். இவ்வளவு தூரம் நான் பல துன்பங்களையும் அவமானங்களையும் தாங்கிக் கொண்டிருந்தேன் என்றால் எல்லாம் அந்த படைத் தலைவருக்காகத்தான். அவரிடம் இழந்துவிட்ட என் இதயத்திற்காகத் தான். அவரைத் தவிர வேறு யாரையும் நினைக்க முடியாது - மணக்க முடியாது என்பதற்காகத்தான். படைத்தலைவர் என்னை மணக்காமல் போனாலும் சரி - போரில் மாண்டாலும் சரி - சாவேனே தவிர சேரனை மணக்க மாட்டேன் அப்பா. இது சத்தியம்' - என்று ஆவேசமாகப் பேசியபோது குறுக்கிட்டது ஒரு புதுக்குரல்.

'உன் சத்தியம் பயனில்லை மேகலை. சேரனின் சூளுரை மகத்தானது. அது வெல்லாமல் போகாது'- என்று கூறியபடி அங்கே பிரவேசித்தான் நன்னன்.



இருவரும் அவனுக்காகத் திரும்பியதும், 'உண்மையாகத்தான் சொல்கிறேன். உன்னை இங்கே சிறை வைத்தது பழையனைப் பிடிக்க மட்டுமல்ல. சேர மன்னர் போர் முடிந்ததும் உன்னை மணக்கவும் தான். பழையனிடமிருந்து கவர்ந்து உன்னை மணப்பதாகச் சூளுரைத்துள்ளார் சேரமான். தெரியுமா?' - என்றான் நன்னன்.

மேகலை அவனை இகழ்ச்சியுடன் பார்த்தாள். 'நல்ல மன்னன். நல்ல சூளுரை. இன்னொருவரது காதலியை மணப்பேன் என்பது மன்னன் செய்யக்கூடிய சூளுரையா?'- என்று கேட்டாள் அவள்.

'காதலியை என்ன - பிறர் மனைவிகளைக் கூட போரில் வென்ற மன்னர்கள் கவர்ந்திருக்கிறார்கள். அவமானத்தைத் தந்திருக்கிறார்கள்' என்றான் நன்னன்.

'இழிவான செயல்களைப் பின்பற்றுவதற்கும் அதைச் சூளுரைப்பதற்கும் ஒரு மன்னன்! அவனுக்கு உன்னைப் போல ஒரு அடிமை. உனக்கு வெட்கமாக இல்லையா நன்னா?'-

ஆணியால் அடித்தாற்போல் வெடித்த இந்த வெஞ்சொற்கள் நன்னனின் காதில் விழவில்லை. ஏனென்றால் அவனது பார்வை மேகலையின் மடியில் இருந்த புறாவின் மீது விழுந்தது. அவனது முகத்தில் சந்தேகம் தோன்றியது.

'ஏது இந்தப் புறா? எங்கேயிருந்து வந்தது? எதற்கு வந்தது?' - என்று அதட்டிய அவன் எதேச்சையாக பெருஞ்சாத்தனின் கையில் இருந்த சீலையைக் கண்டான்.

'என்ன ஓலை அது? கொடும் அதை' என்று அதட்டியபடி அவனாகவே வலுவில் போய் அவரிடமிருந்து அதைப் பறித்தான்.

பழையனிடமிருந்து வந்திருந்த செய்தி எதிர்பாராத தாய் இருந்ததால் அவனது எச்சரிக்கையை இருவருமே மறந்து போனார்கள். ஓலையை மறைக்காமல் அதிர்ச்சியில் ஆழ்ந்து கிடந்த வேளையில் நன்னன் அதைக் கவனித்து விட்டானாதலால் சிறிதும் தாமதிக்காமல் அவரிடமிருந்து பறித்தான். ஓலையில் தன் முட்டைக் கண்களை ஊன்றினான். பலமுறை திரும்பத் திரும்பப் படித்தான். ஓலைச் செய்திகள் தெளிவாய் இருப்பினும் பெரிதும் குழம்பிப் போனான் நன்னன். பழையன் பெரிய தந்திரக்காரன் ஆதலாலும், இக்கட்டான நேரங்களில் அவன் நடந்து கொள்ளும் காரியங்களில் உண்மை எது பொய் எது என்பதை கண்டு கொள்வது மிகவும் சிரமமான தொரு காரியமாதலாலும் அவனது ஓலைச் செய்தியை நம்பவும் முடியாமல் விட்டுவிடவும் முடியாமல் தவித்தான். பழையன் எப்படியும் மேகலையை மீட்க வருவான் என்று எதிர்பார்த்தே மேகலையைக் கடத்தியிருந்தான் நன்னன். அப்படி மீட்க வரும் பழையனை பிடிக்க விரிவான ஏற்பாடுகளையும் செய்திருந்தான். அப்படி பிடிக்கும் பட்சத்தில் அவனது கைகால்களை சங்கிலியால் பிணைத்து பாதாளத்தில் அடைத்து வைப்பது என்றும் தப்பமுயன்றால் கொன்று விடுவது என்றும் பலமான தீர்மானங்களைப்போட்டு அவை நிறைவேறும் பட்சத்தில் சேரமான் தன்னை பெரிதும் போற்றுவான் என்றும், அதுவரை நடந்துவிட்ட அசட்டுத்தனங்கள் எல்லாம் மறைந்து நற்பெயர்



கிடைக்கும் என்றும் சேரர் படையில் தளபதி பதவி கிடைக்கும் என்றும் கனவு கண்டு அதன் அடிப்படையிலேயே மேகலையைக் கடத்திவிட்டுச் சேர மன்னனிடம் அது பற்றி உறுதியாகச் சொல்லவும் செய்தான். ஆனால் அவை அனைத்துமே அர்த்தமில்லாமல் போனது போல் ஆக்கியிருந்தது பழையனின் ஓலைச் செய்தி.

பலவாறு யோசித்து யோசித்து மண்டையை குடைந்து கொண்ட அவனுக்கு முடிவில் பழையனின் செய்தியை நம்பத்தான் முடிந்தது. ஏனென்றால் ஓலையில் அவன் தெரிவித்திருந்த செய்திகளும், போர் நிலைமைகளும் மிகவும் சரியாய் இருந்தன. பழையன் ஒருவனை மட்டுமே முன் வைத்து சேரன் போரிடுவதும், அப்பழையன் சந்தனக் கோட்டையிலிருந்து தப்பி மதுரைப் போரில் ஈடுபட்டதாலேயே சேரனுக்கு தோல்வி கிட்டியதும், அதைத்தொடர்ந்து அவன் பேரணி ஒன்றை அமைத்திருப்பதும், அதை முறியடிக்க பாண்டிய மன்னன் பழையனின் துணையைக் கட்டாயமாக எதிர்பார்ப்பதும், அதற்குத் தடையாக அமையும் மேகலை விவகாரத்தை அப்பாண்டிய மன்னன் புறக்கணிக்க பழையனைக் கோருவதும், அதை மறுக்க முடியாமல் பழையன் போரையே பெரிதாகக் கருதி அதில் ஈடுபடுவதும் சந்தேகப்பட முடியாத விஷயங்களாக இருந்தன. அதைத்தான் பழையன் எழுதியிருந்தான். இதில் நன்னன் சந்தேகப்படவும் அவநம்பிக்கைப்படவும் இடமில்லாதிருந்தது.

ஆனால் ஓலையின் முடிவில் போரின் முடிவைச் சந்தேகித்துச் சேரனை மணந்து கொள்ளும்படி பழையன்

குறிப்பிடப்பட்டிருந்ததுதான் நன்னனுக்கு நம்புவதற்கு கஷ்டமாக இருந்தது. பழையன் மேகலை ஆகியோரின் காதலையும் அவர்களது பண்புகளையும் அவன் நன்கு அறிந்தேயிருந்தானாதலால் இப்படிக் கூட அறிவுரை கூறுவானா என்று கேட்டுக்கொண்டான். ஆனால் அவன் அப்படிக் கூறினாலும் சரி கூறாமல் போனாலும் சரி இனி அவன் மேகலையை மணக்க வாய்பில்லாத அளவிற்குச் சந்தனக் கோட்டைக்குள் சிறைவைக்கப்பட்டு விட்டதாகக் கருதிய அவன் பழையனின் அந்த திருமண அறிவுரைகளையும் பொருட்படுத்தாமலேயே விட்டான். எதற்கும் சீலைச் செய்தியை முழுதுமாய் நம்புவதற்குமுன் பழையன் உண்மையிலேயே படைகளுடன் கிளம்பி விட்டானா என்பதை உறுதி செய்து கொள்ள ஒற்றர்கள் இருவரை அனுப்பினான். ஆனால் அவர்கள் செல்வதற்கு முன்னாலேயே மதுரையில் இருந்து வந்த போர் ஒற்றர்கள் பழையன் பாண்டிய மன்னனுடன் முதல்நாளே கிளம்பி விட்டதாக சொல்லி கோட்டை அதிக பாதுகாப்பில்லாமல் இருக்கும் நிலையைக் கூறி அதைத் தாக்கலாம் என்று யோசனை சொன்னார்கள்.

கோட்டையைத் தாக்குவது பற்றியெல்லாம் நன்னன் அக்கறை காட்டவில்லை. அது மிகவும் பெரிய காரியம் என்பதும் அதற்கு வேண்டிய துணிவும் சாகசமும் தன்னிடம் இல்லை என்பதையும் நன்றாகவே உணர்ந்திருந்தான். அதோடு அப்படியொரு திட்டத்தைச் சேரமன்னன் சொன்னாலொழிய நிறைவேற்றுவதற் கில்லை என்பதால் அது விஷயமாகச் சிறிதும் கவனம் செலுத்தவில்லை. பழையனைப் பிடிக்க முடியாமல் போய்விட்டதுதான் அவனுக்குப் பெரிய வேதனையாக



இருந்தது. அவனைப் பிடிப்பதாக சேரமன்னனிடம் மார்த்தட்டி பேசிவிட்டு வந்த நிலையில் இப்படி பழையன் தன் வலையில் சிக்காமலும் அருமைக் காதலி மேகலையை உதாசீனப்படுத்திவிட்டு போய்விட்டதும் அவனது கனவு சாம்ராஜ்யத்தில் சூன்யத்தை உண்டாக்கி விட்டமாதிரி ஆகிவிடவே தத்தளித்தான் நன்னன். இனி தான் உயிருடன் இருப்பது மிகவும் கஷ்டம் என்பதும் அந்த உயிர் சேரனின் வாளிலோ, கழுமரத்திலோ அல்லது பட்டத்து யானையின் கால்களிலோ போக வேண்டிய காலம் சமீபித்து விட்டதாக எண்ணத் தலைப்பட்டான்.

இதற்கிடையில் பழையனைப் பிடிக்க வேறு ஏதாவது மார்க்கம் உண்டா என்றும் அவனது கட்டையான மூளை யோசிக்கலாயிற்று. 'மேகலையை அழைத்துப் போய் போர்க்களத்தருகே துன்புறுத்தி பழையனை இழுத்தால் என்ன? கண்ணெதிரே தன் காதலி துன்புறுவதைக் கூடவா அவன் சகித்துக் கொண்டு விடுவான்? அப்படி ஏதாவது செய்து அவனை அழைத்து வீரர்களை வைத்து மறைந்திருந்து கொன்று விட்டால் என்ன?' என்று கூட யோசித்தான் அவன். 'அதற்கு முன் மேகலையைச் சீண்டிப் பார்க்கலாம். பழையனின் பேரில் அவளுக்குள்ள ஈடுபாடு எந்த அளவிற்கு இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்' என்று கருதியவனாய் மேகலையிடம் மீண்டும் வந்து அவன் 'என்ன மேகலை, தயாராகி விட்டாயா?' என்று வினவினான்.

அவனை ஒரு புல்லுருவியைப் பார்ப்பது போல் பார்த்த மேகலை கேட்டாள் 'எதற்கு?'- என்று.

'என்ன எதுவும் தெரியாத மாதிரிக் கேட்கிறாய்? சேரனுக்கு மாலையிடத் தயாராகி விட்டாயா என்றுதான் கேட்கிறேன். உன் படைத்தலைவனே சிபாரிசு செய்திருக்கிறானே?'- என்றான் நன்னன்.

'முதலில் மரியாதையாகப் பேசு'- என்றாள் மேகலை.

'எதைச் சொல்கிறாய்?'-

'படைத்தலைவரை மரியாதையில்லாமல் பேச வேண்டாம்'-

'சரி. உன் விருப்பப்படியே ஆகட்டும். உன் படைத்தலைவர் சிபாரிசு செய்துள்ள காரியத்திற்குத் தயாராகி விட்டாயா சொல்'-

'அதைப் பற்றி உன்னிடம் எதற்காக நான் பேசவேண்டும்?'

'ஏன் பேசக்கூடாது மேகலை?'-

'பெண்ணொருத்திக்கு வந்த சீலையைப் பறித்துப் படிக்கும் நாகரீகமற்ற உன்னிடம் - பெண்ணொருத்தியை ஏமாற்றிக் கடத்தி வரும் பேடியான உன்னிடம் - உயிருக்காக மானமிழந்து வாழும் கோழையான உன்னிடம் - காதலைப் பற்றியோ வீரத்தைப்பற்றியோ கடுகளவும் தெரியாத உன்னிடம் நான் ஏன் பேச வேண்டும்?'-

'நல்ல கேள்விகள்தான். ஆனால் கேட்டுக்கொள். பெண்ணுக்கு வந்த செய்தியைப் பறித்தேன் என்கிறாய். இங்கே பெண் யார் என்பதும், எந்த நிலையில் இருக்கிறாள் என்பதும், அவளிடம் எது எதிர்பார்க்கப் படுகிறது என்பதும்தான் கவனிக்கப்படவேண்டிய



விஷயங்கள். அதோடு இது அரசியல். இதில் பெண் என்றோ ஆண் என்றோ பார்க்க முடியாது. இரண்டாவது உன்னைக் கடத்தியது. இதற்கும் முதலில் சொன்ன பதிலே போதும். அடுத்தது உயிருக்காக மானமிழந்து வாழ்வதாகச் சொல்கிறாய். நான் வாழ்வது என் உயிருக்காக அல்ல. பழையனின் உயிருக்காக. அது கிடைத்ததும் உன்னிடமே வருகிறேன். நீயே கூட வெட்டிப் போட்டுவிடு. கடைசியாக காதல் பற்றியும் வீரம் பற்றியும் எனக்குத் தெரியாது என்கிறாய். அது உண்மைதான். ஆனால் காதலர்களை வளைக்கவும், வீரர்களைப் பிடிக்கவும் இவை இரண்டும் தேவையில்லை தெரியுமா?'-

'உன் பதில்களைப் பற்றி எனக்குக் கவலையில்லை.'-

'மேகலை, நான் இந்தச் சந்தனக் கோட்டையின் அதிபதி. இங்குள்ளவர்களை எதை வேண்டுமானாலும் செய்யும் உரிமை எனக்குண்டு. உன்னை இங்கேயே இப்போதே வெட்டிப் போட என்னால் முடியும்.'-

'மிகவும் வீரமுள்ள காரியம்தான். செய்து கொள். யார் வேண்டாம் என்றார்கள்?'...

'உரிமையைத்தான் சொன்னேனே தவிர என் விருப்பம் அதுவல்ல. யாருடைய விருப்பமும் அதுவல்ல. இதுவரைத் தடையாக இருந்த பழையனும் விரும்பிவிட்டான். ஆகவே எல்லோரது விருப்பமும் நீ சேரனை மணக்க வேண்டும் என்பதுதான். அதற்கு உன்னைத் தயார்ப் படுத்திக்கொள்.'-

'முட்டாள். தமிழ்ப் பெண்ணின் மனத்தை என்ன வென்று நினைத்தாய்? மனத்தால் கணவனாக நினைத்து

விட்டவனைத் தவிர வேறு யாரையும் அவள் மனம் நெருங்காது. விரும்பியவன் கிடைக்காது போனால் மரணத்தை வேண்டுமானால் விரும்பி ஏற்பாளேயன்றி வேறொருவனை அல்ல'-

'நீ விரும்பவில்லையென்றால் சேரமான் உன்னை வலுவில் அடைவார்'-

'அப்போது என் உடலில் உயிர் இருக்காது.'-

'இது வெறும் பேச்சு. இதை அர்த்தமற்றதாக்க எங்களால் முடியும்?'-

இதற்கு மேகலை ஏதோ பேச முற்பட்டாள். அதுவரை அவர்களது உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த பெருஞ்சாத்தன் மேலும் பொறுக்க முடியாமல், 'டேய் நன்னா, நிறுத்து உன் உளறலை. நானொருவன் இன்னும் உயிருடன்தான் இருக்கிறேன்' என்று பொறுமினார்.

'அப்படியா? உயிரைப் போக்கிவிட்டால் போகிறது' என்றபடி வாளை உருவினான் நன்னன்.

நல்ல வேளையாக அசம்பாவிதம் எதுவும் நடக்கவில்லை. அந்த நேரத்தில் ஒற்றன் ஒருவன் பரபரப்புடன் நன்னனை அணுகி காதில் ஏதோ ஓதியதும் பெரும்கிலி பரவியது நன்னனின் முகத்தில். 'இது உண்மையா?'- என்று அலறுவதுபோல் கேட்டான் நன்னன். பரபரப்புடன் வெளியில் வந்து தூரத்தே இருந்த சேரர் காவற்கூட மலைமுகட்டை நோக்கினான். அங்கே பெரும் பந்தம் ஒன்று சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது. அதோடு பெரும் சங்கொலி ஒன்று எழுந்தது அப்பிராந்தியத்தில். நன்னன் நடுங்கினான்.

முரசு முப்பத்தொன்பது

# கடுந்தேர் திதியன்

தனது திட்டத்தின் உடனடி நடவடிக்கையாக சேர சோழ படைவீரர்களிடம் பதில் அறிவிப்பு செய்யும் வகையில் நீடூர் மக்களிடம் திறை வசூலிக்க வேண்டாம் என்றும் மன்னன் என்ற முறையில் தன்னுடன் சேர சோழ மன்னர்களைப் பேசும்படியும், அப்படி பேச தானே மறுநாள் வருவதாகவும் பறை கொட்டச் செய்தான் எவ்வி. இந்த அறிவிப்பு முறையானதுதான் என்றாலும் சேரன் இரும்பொறைக்கு ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. 'இந்தச் சுண்டைக்காய் சிற்றரசனுக்கு என்ன திமிர்? உடனடியாக ஓடிவந்து சரணடைய வேண்டியதுதானே? பேச்சு என்ன வேண்டியிருக்கிறது? அதுவும் ஒரு நாளைக்குப் பிறகு?' என்று தனக்குத் தானே கறுவிக் கொண்டான் அவன். இருப்பினும் நிதானத்தை இழந்துவிடவில்லை. எவ்வியை அழிப்பதும் நீடூரை வசப்படுத்துவதும் நிமிட நேர வேலைதான் என்றாலும் அந்த முயற்சியில் வீண் சேதத்தை அனுமதிக்க அவன் தயாராக இல்லை. பெரும் போரை பின்னால் வைத்துக் கொண்டு இந்தச் சிறிய சண்டைகளை மேற்கொள்வது தேவையற்றது என்பதை உணர்ந்தான். அது மட்டுமல்ல. எவ்வியுடன் போரிடுவதை விட போரில்லாமல் அவனை வழிக்குக் கொண்டு வருவதே லாபகரமானது என்று கணக்கிட்ட அவன் அவசரப்படாமல் அதே சமயம் தன் வரட்டுக் கௌரவத்தைக் காட்டிக் கொள்ளும் விதத்தில்

அதை உணர்ந்து கொண்ட ஒற்றன் நன்னனின் காதருகே போய், ''ஐயா, நம் ரகசியங்களை மேகலைக்கு முன்னால் பகிரங்கப்படுத்திக் கொள்ள வேண்டுமா?'' என்று கிசுகிசுத்த பின்பே நன்னனுக்கு உறைத்தது.

'சரி சரி, என் அறைக்கு வா' என்று கூறவும் இருவரும் தனி அறைக்குப் போனார்கள்.

அங்கே விவரமாகச் சொன்னான் ஒற்றன்.

''ஐயா, செய்தியை அனுப்பியது நமது கருவூர் ஒற்றர் தளபதி சஞ்சயன் தான். செய்தியை ஓலை மூலம் அனுப்ப வேண்டாம் என்று எனக்கும் நமது சேரர் காவற் கூட தலைவனுக்கும் வாய் மூலம் அனுப்பியிருக்கிறார். இதோ அவரது ராஜ முத்திரை.'' என்று கூறி ஒற்றர் தளபதி சஞ்சயன் அனுப்பிய ராஜ முத்திரையை நன்னனிடம் கொடுத்த ஒற்றன் ''நன்றாக பார்த்துக் கொள்ளுங்கள். இந்த ராஜமுத்திரை நமது சஞ்சயரிடம் மட்டும்தான் இருக்கிறது. உங்களுக்கே தெரியும். மிகவும் இக்கெட்டான நேரத்தில் அனுப்பப்படும் செய்திகளுக்கு அடையாளமாக இது சாட்சியாக வரும். இதுவும் உங்களுக்குத் தெரியும்''- என்றான்.

நன்னன் ராஜ முத்திரையை வாங்கி பலமுறை பல கோணங்களில் பார்த்தபின் ''உண்மை. உண்மை. அதே ராஜ முத்திரைதான். பார்த்திருக்கிறேன்''- என்று முணுமுணுத்துக் கொண்டான்.

ஒற்றன் மேலும் தெரிவிக்க முற்பட்டு, ''நமது சந்தனக் கோட்டைக் காவற்கூடத்திற்கும் போய் முத்திரையைக் காட்டிச் சொல்லிவிட்டேன். இக்கோட்டைக்கு



ஆபத்தென்றால் மலைமுகட்டில் பெரும் தீபம் ஏற்றப்படும் என்பது உங்களுக்கே தெரியும். போய் பார்ப்பதானால் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றான்.

உடனே ஏதோ நினைத்துக் கொண்டவனைப் போல் விடுவிடுவென கோட்டைக்கு வெளியே வந்து காவற் கூடம் இருக்கும் சேரர் மலை முகட்டைப் பார்த்தான் நன்னன். அங்கே பெரும் தீபமொன்று பிசாசு போல் எரிந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்தபின் ஒற்றனின் செய்தியின் பேரில் துளியும் சந்தேகமில்லாமல் போயிற்று.

அதை மேலும் உறுதிப்படுத்துவது போல் சங்கொலி ஒன்று சமீபத்திலிருந்து அந்த இரவுப் பொழுதில் அப்பிராந்தியத்தில் எழவே நடுநடுங்கிய நன்னன், ''இது அவனது ஒலிதான். சந்தேகமில்லை'' என்று நாக்குழறவும் செய்தான்.

ஒற்றனோ நன்னனின் நடுக்கத்தைத் கவனித்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படுவதாக இல்லை. அதோடு அச்சத்திற்கோ ஆச்சரியத்திற்கோ ஆளாகவுமில்லை. நிலைமையின் அவசரத்தை நன்னனுக்கு உணர்த்த முற்பட்டு ''தலைவரே, கடற் கொள்ளைக்காரன் டைரியஸின் வருகையைக் குறிக்கும் சங்கொலி கேட்டு விட்டது. இனியும் தாமதம் வேண்டாம். உடனடியாக மேகலையையும் அவரது தந்தையையும் கருவூர் வேண் மாடத்திற்குக் கொண்டு செல்ல ஏற்பாடு செய்யுங்கள்''- என்று தெரிவித்துக் கொண்டான்.

நன்னனின் நிலை சொல்லும் தரமற்றதாய் இருந்தது. இப்படியொரு திருப்பத்தை அவன் சிறிதும் எதிர்

பார்க்கவில்லை. 'மேகலையை மீட்க பழையன் வரவில்லை என்பது அவனது சிலைச் செய்தி மூலம் புலப்பட்டவுடன் மேகலையின் கதி அவ்வளவுதான் என்று மட்டுமே எண்ணி விட்டேனே நான்? பழையன் தானாக வராவிட்டால் என்ன, வேறு யார் மூலமாவது அவளை மீட்க முயலலாம் என்று எப்படி எண்ணாமல் போனேன்? அதுவும் அவளை மீட்க டைரியஸை அனுப்ப வாய்ப்புண்டு என்பது எப்படித் தோன்றாமல் போயிற்று? இப்போது அந்த கொலைகாரனிடமிருந்து தப்புவதே பெரிய வேலை. தப்பி விட்டாலும் மேகலையை கருவூருக்குக் கொண்டுபோய் விட்டுவிட வேண்டும். அந்தக் கொலைகாரன் மேகலை இல்லாத பட்சத்தில் சந்தனக் கோட்டையை அழிப்பான். அது மட்டுமல்ல. தன் கொள்ளைக் கூட்டத்துடன் கருவூருக்கே வந்து அட்டூழியங்களைச் செய்வான். அது எது வரைக்கும் செல்லும் என்பதைச் சொல்ல முடியாதென்றாலும் அழிவு நிச்சயம். அப்படி ஏதாவது நடந்து சேரமானுக்குத் தெரியும் பட்சத்தில் என் நிலை என்னாவது? எப்படியோ என் உயிர் போகப் போவது நிச்சயம். அது சேரன் கையிலா அல்லது டைரியஸின் கையிலா என்பது தான் பிரச்னை. சே- இந்தப் பழையன் விஷயத்தில் ஏன் தான் நுழைந்தேன் நான்? அவனைச் சம்பந்தப்படுத்தி முயலும் காரியமெல்லாம் இப்படி பேராபத்தாக முடிகிறதே?' என்றெல்லாம் நொந்து கொண்ட நன்னனுக்கு ஒரு சந்தேகம் எழவே செய்தது.

அதைப் பற்றி ஒற்றனிடமே பேச முற்பட்டு ''ஆமாம், டைரியஸ் மேகலையை மீட்க இங்கே வருகிறான் என்பதால் கருவூருக்கு அவளை அழைத்து வந்து



விடும்படி சஞ்சயன் சொல்கிறாரே, அது எதற்கு?''- என்று கேட்டான்.

''மேகலை இங்கேயே இருந்தால் டைரியஸ் மீட்டுக் கொண்டு போய் விடுவான்''- என்றான் ஒற்றன்.

அவனது பதில் நன்னனுக்கு பெரும் எரிச்சலைத் தந்தது. 'நான் அதைக் கேட்கவில்லை' என்று இரைந்தான்.

'பிறகு?'

''மேகலையை கருவூருக்கு ஏன் கொண்டு செல்ல வேண்டும் என்பதுதான் என் கேள்வி''

''இதற்கு நானெப்படி கருத்து சொல்ல முடியும் நன்னரே?''

சற்றே விழித்தான் நன்னன் என்ன பேசுவதென்று தெரியாமல். பிறகு சற்று சுதாரித்துக் கொண்டு, ''இங்கே மேகலை இல்லை என்று தெரிந்த பின் டைரியஸ் அங்கே வரமாட்டானா?'' என்று கேட்டான்.

''மேகலை அங்கே இருப்பாள் என்று அவனுக்கு யார் சொல்வார்கள்?''- கேட்டான் ஒற்றன்.

''அவனுக்கு மேகலை கருவூரில் இருப்பது தெரியவில்லை என்றே வைத்துக் கொள். சேரனுக்குச் சொந்தமான இச்சந்தனக் கோட்டையில் அவளில்லை என்ற ஆத்திரத்தை சேரர் தலைநகரான கருவூரின் மீது காட்டலாம் அல்லவா?''-

''டைரியஸ் தன் ஆத்திரத்தைக் கருவூரின் மீது காட்ட நிறைய சந்தர்ப்பங்கள் உண்டு. காரணம் எதுவும்

இல்லாமல் கூட கருவூரைத் தாக்க அவனால் முடியும். ஏனென்றால் அவன் வெறும் கொள்ளைக்காரன் தான்.''-

''வீரனே, நிலைமையின் கடுமை தெரியாமல் வெறும் சாமர்த்தியத்தை உன் பேச்சில் காட்டுகிறாய். நாம் நடக்கும் என்று எதிர்பார்ப்பது நடக்காமல் போவதும் நடக்காது என்று நினைப்பது நடந்து விடுவதும் போர்க் கால நெருக்கடிகளில் சகஜம். ஆகவே பல விதத்திலும் யோசித்துத் திட்டமிட வேண்டும். கருவூரை டைரியஸ் எப்போது வேண்டுமானாலும் தாக்கலாம் என்பது உண்மை தான். அப்படியொரு தாக்குதலையோ அல்லது கொள்ளையையோ இந்த மேகலையின் விவகாரத்தை யொட்டி டைரியஸ் தற்போது செய்தால் கருவூரைக் காக்க யார் இருக்கிறார்கள்? எல்லா படைகளும் மன்னர் பிரானுடன் போய்விட்டன. தளபதிகளும் போய் விட்டார்கள். இந்த நிலையில் ஒற்றர் தலைவன் சஞ்சயன் இருந்து கொண்டு காத்துவிட முடியுமா? பாதுகாப்பற்ற அந்த இடத்திற்குப் போய் மேகலையைக் கொண்டு வரும்படி சஞ்சயன் சொல்லி இருக்கிறானே! இதைத் தான் உன்னிடம் கேட்கிறேன் நான்''-

நடுக்கத்தில் இருந்த நன்னன் தற்போது முற்றிலுமாகத் தெளிவடைந்தது மட்டுமின்றி முட்டாள்தனமாகப் பேசாமல் மிகவும் நியாயமான சந்தேகத்தை வெளியிட்டதைக் கேட்டு வியப்படைந்த ஒற்றன் அது வரை காட்டிய இகழ்ச்சியை விட்டு, ''ஐயா, உங்கள் சந்தேகம் நியாயமானதுதான். இருப்பினும் சஞ்சயன் ராஜ முத்திரையுடன் செய்தி அனுப்பிய விஷயத்தைச் சற்று கவனியுங்கள். மிகவும் இக்கட்டான தவிர்க்க முடியாத நிலையில் மட்டுமே பயன்படுத்தக்கூடிய ராஜ



முத்திரையை அதுவும் மன்னர் இல்லாத நேரத்தில் பயன்படுத்தி திட்டமான கட்டளை பிறப்பித்திருப்பதி லிருந்தே, நீங்கள் சந்தேகப்படும் விஷயத்திற்குத் தகுந்த முன்னேற்பாடுகளை சஞ்சயர் செய்திருப்பார் என்று தோன்றவில்லையா? உங்களுக்கு ஏற்பட்ட சந்தேகம் அவருக்கு ஏற்பட்டிருக்காதா? ஆகவே உங்கள் சந்தேகத்தை ஒதுக்கிவிட்டு கட்டளையை நிறை வேற்றுங்கள். ராஜ முத்திரையுடன் வரும் செய்தி மன்னரே அனுப்பும் செய்தியைப் போன்றது. அதை மறுக்கவோ விமரிசனம் செய்யவோ யாருக்கும் உரிமை இல்லை''- என்றான்.

ஒற்றனின் விவாதமும் சரியாகத்தான் இருந்தது. உண்மையில் தனக்கு ஏற்பட்ட சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளும் நோக்கத்தில் தான் நன்னன் கேட்டானே அன்றி கட்டளையை மீறும் எண்ணத்தில் கேட்கவில்லை. அப்படி மீறும் விருப்பமோ துணிவோ அவனிடம் இல்லை. அப்படி மீறிச் செய்வதற்கு வேறு உபாயமும் அவனிடம் இல்லை. அனைத்திற்கும் மேலாக கட்டளையை மீறியோ அல்லது தாமதித்தோ டைரியஸிடம் சிக்கிக் கொள்ள அவன் தயாராக இல்லை. அவனிடம் சிக்கி சித்திரவதையின் அர்த்தங்களை அனுபவித்துத் தெரிந்து கொள்வதைவிட சேரமான் ஏற்றும் கழுவில் உயிரை விடுவதே சாலச் சிறந்தது என்பதே அவன் அபிப்ராயமாக இருந்தது. ஒருவகையில் டைரியஸ் நெருங்கிக் கொண்டிருக்கும் பேராபத்தான நேரத்தில் கருவூருக்கு வரும்படி அழைப்பு வந்திருப்பது உண்மையிலேயே தன் நல்ல காலம்தான் என்றும், மேகலையை அங்கு கொண்டு போய் விட்டு விட்டால்

அவளைக் காக்க வேண்டிய பொறுப்பு சஞ்சயனின் மேல் விழுந்து விடுமாதலால் தனக்கு ஆபத்தில்லை என்றும் கருதியவனாய் மேகலையின் புறப்பாட்டிற்கான ஏற்பாடுகளில் இறங்கலானான்.

சந்தனக் கோட்டையில் காவல் வீரர்கள் சுமார் நூறு பேர் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் போர் சன்னத்துடன் தயாரானார்கள். கோட்டைக்குள் இருந்த ஆயுதங்களும் உணவுப் பொருட்களும் இரண்டு வண்டிகளில் திரட்டப்பட்டன. டைரியஸ் எப்படியும் சந்தனக் கோட்டையை அழித்துச் சுடுகாடாக்கி விடுவது நிச்சயம் என்று நம்பிய நன்னன் அதில் எதையும் விட்டு வைக்கவில்லை. மேகலையும் அவள் தந்தையும் இரண்டு சிவிகைகளில் ஏற்றப்பட்டார்கள். நன்னனிடம் அவர்கள் எதையும் பிரஸ்தாபிக்காமல் சிவிகைகளில் ஏறி அமர்ந்தது நன்னனுக்கு நிம்மதிப் பெருமூச்சை வரவழைத்தது. வீரர்கள் உரிய ஆயுதங்களுடன் புரவிகளில் ஏற, அந்த சேரர் வீரர் பிரிவு சந்தனக் கோட்டையின் வாசலுக்கு முன்னால் அணிதிரண்டது. பந்தம் ஒன்றை ஏற்றி தூரத்தே இருந்த மலை முகட்டின் காவற் கூடத்தை நோக்கி நான்கு முறை ஆட்டினான் நன்னன். கோட்டையை விட்டுக் கிளம்பியாகிவிட்டது என்பதை அப்பந்த அசைவின் மூலம் உணர்த்திவிட்ட அவன் மேலும் தாமதம் செய்யாமல் வீரர்களைப் புறப்படச் சொன்னான். சிவிகைகள் நடுவில் இருக்க நாற்புறமும் புரவி வீரர்கள் சூழ நன்னனின் காவற் படை கருவூரை நோக்கிப் புறப்பட்டது.

அப்போது நள்ளிரவு நேரம் நெருங்கிக் கொண்டிருந்ததால் அந்த வனப்பிராந்தியம் பயங்கர



அமைதியில் ஆழ்ந்திருந்தது. சந்தனக் கோட்டையை விட்டு அகன்று விட்டாலும் டைரியஸைப் பற்றிய அச்சத்திலிருந்து நன்னனோ அவனது வீரர்களோ அகன்ற பாடாக இல்லை. கருவூரை அடைவதற்குள் அந்த கொள்ளைக்காரன் குறுக்கிட்டு விட்டால் என்னாவது என்ற அச்சத்தாலும், முடிந்தவரை அந்தப் படைப்பிரிவு நகர்வது டைரியஸுக்குத் தெரியாமல் இருப்பது நல்லது என்ற எண்ணத்தாலும், நடுநிசி பொழுதாக இருந்தபோதும் நிரம்ப பந்தங்களை ஏற்றாமல் ஓரிரண்டையே ஏற்றி தட்டுத்தடுமாறிக் கொண்டு படைகளை நகர்த்தினான் நன்னன். அவனிடம் குடி கொண்டிருந்த அச்சத்தினை உரசிப் பார்ப்பது போல் ஓரிரு புலிகளின் உறுமல்கள் அந்த அடர்ந்த காட்டுப் பகுதியிலிருந்து எழுந்து அவனது இதயத்தை ஊடுருவின. ஏற்கெனவே நிலவிய மயான அமைதியே பயங்கரமான தாய் இருந்ததென்றால், அதில் அவ்வப்போது எழுந்த காட்டு விலங்குகளின் உறுமல்கள் அதிபயங்கரமாய் இருந்தன. எங்கோ உயரத்திலிருந்து கொட்டிய அருவியின் ஓசை பின்னணி செய்வது போல் சிறிது தூரம் வரை கேட்டுக்கொண்டே வந்தது. காட்டுப் பகுதியின் ஏகாந்தமும் பயங்கரமும் எப்படி இயற்கையானதோ அதே போன்ற இயற்கையான நிலை வானத்திலும் இருந்தது. ஆனால் அது காட்டுச் சூழ்நிலையின் பயங்கரத்திற்கு நேர்மாறான விதத்தில் அளப்பரிய அழகோடு காட்சியளித்தது. மேற்குத் தொடர்ச்சி மலையின் உயரம் கணிசமானதாக இருந்த காரணத்தால் அங்கு தழைத்திருந்த பசுமையும் குளிர்ச்சியும் மலைச்சரிவுகளிலும் அண்டைப் பகுதிகளிலும் நிலவவிட்டிருந்ததாலும் அப்பிராந்தியம்

இதமான சீதோஷ்ணத்தில் இருந்தது. மேகச் சிதறல்கள் மட்டுமே வானத்தில் இருந்த காரணத்தால் ஆங்காங்கே வெளிப்பட்ட நட்சத்திரக் கோலம் இயற்கையின் ஒப்பில்லா அழகிற்கு உதாரணமாய் இருந்தது. மேகச் சிதறல்கள் ஓடி ஓடி நட்சத்திரங்களை மறைத்தவிதம் கூட இயற்கையின் - இயற்கை அங்கங்களின் விளையாட்டு போலவே எண்ண வைத்தது. சில சமயம் பார்த்தால் ஏதோ நிலவென்ற பெண் ஒவ்வொன்றாய் களைத்தெறிந்த ஆடை காற்றில் மிதப்பது போல் இருந்தது அம்மேகச் சிதறல்களின் அமைப்பும் ஓட்டமும். அந்த ஆடைகளிலிருந்து முத்துக்களும் மணிகளும் சிதறிய மாதிரி இருந்தது நட்சத்திரங்களின் பளிச்சென்ற அழகு. இப்படி பயங்கரம் ஒரு பக்கமும், பேரழகு ஒரு பக்கமும் நிலவி வாழ்க்கையும் இப்படித்தான் என்பதை உணர்த்திக் கொண்டிருந்தது. ஆனால் இந்த இயற்கை அழகை யெல்லாம் ரசிக்கும் நிலையில் நன்னனோ அவன் வீரர்களோ இல்லை. அவர்களால் காட்டின் பயங்கரத்தை மட்டுமே உணர முடிந்தது. டைரியஸின் கொடூரத்தை மட்டுமே நினைக்க முடிந்தது.

இப்படி ஒரு ஜாமம் பயணம் செய்த அக்காவற்படை அதிர்ஷ்ட வசமாக எந்த வித இடையூறும் இன்றி கருவூரை அடைந்தது. பெரும் நிம்மதி அடைந்தவனாய் உள்ளே பிரவேசித்தான் நன்னன். ஆனால் உள்ளே நுழைந்ததும் அவனது நிம்மதி இருந்த இடமே தெரியாமல் போயிற்று. உள்ளே நன்னனைப் பார்த்து இடியெனச் சிரித்தபடி வரவேற்றான் ஒருவன். அவன் டைரியஸ்.

◆◆◆

முரசு நாற்பத்திமூன்று

# மேகலை மீட்பு

எந்தக் கொள்ளைக்காரனுக்கு பயந்து சந்தனக் கோட்டையிலிருந்து மேகலையுடனும் வீரர்களுடனும் புறப்பட்டு தட்டுத்தடுமாறி பயணம் செய்து கருவூரை அடைந்து இனி ஆபத்தில்லை என்று பெருமூச் செறிந்தபடி உள்ளே நுழைந்தானோ-அந்த கொள்ளைக் காரனான டைரியஸ் அந்தக் கருவூரில் அரண்மனையில் இருந்து கொண்டு தன்னைப் பார்த்து நகைத்ததுமே உலகமே சுழன்றது போலிருந்தது நன்னனுக்கு. தான் வந்திருப்பது சேரர் தலைநகரா அல்லது டைரியஸின் இருப்பிடமா என்று ஒரு கணம் அவனுக்குப் புரியவில்லைதான். இது எப்படி சாத்தியம் என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டான்.

சந்தனக் கோட்டையை விட்டுப் புறப்பட்டதிலிருந்து அவன் டைரியஸை எதிர்பார்த்தான் என்றால் அது அக்கோட்டைக்கும் கருவூருக்கும் இடையே உள்ளே காட்டுப் பகுதியில் தானேயன்றி கருவூர் அரண்மனையில் அல்ல. அவன் என்ன எவனுமே எதிர்பார்க்க முடியாது தான். கருவூரை அடையும்வரை டைரியஸைப் பற்றிய அச்சம் அவனுக்கு இருந்தாலும் அவன் அச்சப்பட்ட மாதிரி பயணத்தில் எந்தவித ஆபத்தும் நேரவில்லை.

எனவே கருவூரை* அடைந்த போது - அந்நகரை அணைத்து ஓடிய ஆன்பொருனை நதிக்கரையை அடைந்த போது அதில் ஓடிய தெள்ளிய நீரின் ஆனந்தத்தைப் போலவே ஆனந்தம் அடைந்தான் நன்னன். அதைக் கடந்து கோட்டை வாயிலை அணுகியபோது வீரர்கள் அவனுக்குக் காட்டிய வரவேற்பு இயல்பானதாகவே இருந்தது. மதிலில் இருந்தபடி இருவர் பேரிகை கொட்டவும் இருவர் கொம்பை ஊதவும், இருவர் மலர்களைத் தூவவும் தான் வரவேற்கப்பட்டதைக் கண்ட போது பெரும் திருப்தியே அடைந்தான் அவன். வாயிலை தாண்டியதுமே வீரர்கள் தங்கள் கொட்டடி நோக்கிச் சென்றதையும், பணியாளர்கள் வந்து சிவிகை விருந்தாளிகளை அந்தப்புரத்திற்குக் கொண்டு சென்றதையும் பார்த்தபின் அவனுக்குப் பெரும் சாந்தியாக இருந்தது. தன் பொறுப்பு நல்லவிதமாக முடிந்து விட்ட பெருமிதத்தில் சஞ்சயனை சந்தித்துச் சூடாக இரண்டொரு கேள்விகளைக் கேட்டு தன் அந்தஸ்தைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று அவனிடம். எனவே வேண்மாடம் என்னும் பிரசித்தமான

* இக்கருவூர் என்பது எது என்பது குறித்து ஆராய்ச்சியாளர்க்கிடையே உண்டாகியுள்ள சர்ச்சை இன்னும் முடிவடையாமலேயே இருக்கிறது. தற்போதைய கேரளாவில் உள்ள திருவனந்தபுரத்திற்கு அருகே உள்ள திருவஞ்சிக்களமே கருவூர் என்று ஒரு சாராரும் அவ்வாறின்றி திருச்சி மாவட்டத்தில் உள்ள கரூரே சங்க காலத்துக் கருவூர் என்று வேறொரு சாராரும் கூறுகின்றனர். இக்கதையைப் பொறுத்தவரை ஆன்பொருனை என்று சங்ககாலத்திலும் அமராவதி என்று தற்காலத்திலும் அழைக்கப்படும் நதிக்கரையில் உள்ள திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த கரூர் நகரத்தையே கருவூராக எடுத்துக் கொள்வோம்.



அரண்மனையை நோக்கி கம்பீரமாக நடந்தான். ஒற்றர் தலைவனான சஞ்சயன் அரண்மனையின் இரண்டாவது உப்பரிகையில் இருப்பதாகக் காவலாளி ஒருவன் கூறவே அங்கு செல்லும் படிகளில் ஏறினான். ஆனால் தான் ஏறுவது படிகளில் அல்ல ஏமாற்றத்தின் மீது என்பதையும், ஆபத்தின் மீது என்பதையும் மேலே உப்பரிகையில் சென்ற பின்பே உணர்ந்தான் நன்னன். அங்கே அவனது வரவுக்குத் தயாராக இருந்தது போல் நின்றிருந்த டைரியஸ் நன்னனைப் பார்த்ததுமே இடியென நகைத்தான்.

அவனது சிரிப்பு தன் இதயத்தையே தாக்குவது போலிருந்தது நன்னனுக்கு. இதென்ன விபரீதம் என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டான் அவன். சேரரது மாபெரும் அரண்மனையில் கேவலம் ஒரு கொள்ளைக்காரன் சொந்தக்காரனைப் போல் நின்றது அவனுக்குப் பெரும் அதிர்ச்சியை அளித்தது. சேர மன்னன் இல்லாத நேரத்தில் அவனது தலைநகர் கொள்ளைக்காரனிடம் சிக்கியிருந்த விபரீதத்தை நம்பவோ, நம்பினால் ஜீரணிக்கவோ அவனால் முடியவில்லை. இதன் விளைவுகளைப் பற்றி எண்ண எண்ண அவனுக்குத் தலை சுற்றியது. அனைத்திற்கும் மேலாக அப்பேர்ப்பட்ட பேராபத்தான நிலையில் அந்த யமனிடம் தானும் சிக்கிவிட்டதை உணர்ந்தபோது உடல் சில்லிட்டுப் போயிற்று அவனுக்கு. டைரியனின் சித்திரவதைகளைப் பற்றி நிரம்பக் கேள்விப்பட்டிருந்த அவன் அவைகளையெல்லாம் வியர்க்க வியர்க்க நினைத்தான். தான் வந்திருப்பது கருவூர் அல்ல யமனின் நரகம் என்றே எண்ண வேண்டியதாயிற்று அவனுக்கு. தனக்கு என்ன மாதிரி தண்டனை உடனடியாகக்

கிடைக்கும் என்று யோசித்த அவனுக்கு விடையளிப்பது போல் அந்த உப்பரிகையின் ஓரத்திலிருந்து தூணில் பெரும் சங்கிலிகளால் பிணிக்கப்பட்டிருந்தான் ஒற்றர் தலைவன் சஞ்சயன்.

அக்காட்சியைக் கண்டு ஏதோ கேட்க நன்னன் வாயெடுத்ததைக் கண்ட டைரியஸ், 'என்ன கேட்கப் போகிறாய் நன்னா? உன்னைப் பிடித்துக் கட்ட வேறு தூண் இல்லையே என்றா? கவலை வேண்டாம். உன்னைக் கட்டிப் போடப்போவதில்லை. சுதந்திரமாக விட்டு விடப் போகிறோம்'- என்றதும்.

'சுதந்திரமாகவா'- என்று வாயைப் பிளந்தான் நன்னன்.

'ஆம். ஒரு கண், ஒரு காது, ஒரு கால், ஒரு கை ஆகியவற்றை மட்டும் நீக்கிவிட்டுச் சுதந்திரமாக விட்டு விடப் போகிறேன்'- என்றான் டைரியஸ் சர்வ சாதரணமாக.

நன்னனுக்குக் குலை நடுங்கியது. 'இது அநியாயம். அக்கிரமம்'- என்று அலறினான்.

'எது அநியாயம்? எது அக்கிரமம்?' கேட்டான் டைரியஸ்.

'எல்லாமேதான். டைரியஸ் உன் நடவடிக்கைகள் எல்லாமே அநியாயங்கள். அக்கிரமங்கள்'... என்று வியர்த்து வெல வெலக்க கூவினான் நன்னன்.

அந்த வெலவெலப்பினை அதிகரிப்பது போல் எழுந்தது ஒரு நகைப்பொலி.



அதையடுத்து அங்கே பிரவேசித்த பாண்டியர் படைத் தலைவன் பழையனைக் கண்டதும் ஏதோ மாயா ஜாலம் நடப்பதுபோல் இருந்தது நன்னனுக்கு. பாண்டிய மன்னனோடு போருக்குப் போய் விட்டதைத் தன் ஒற்றர்கள் பார்த்திருக்கும் போது இப்பழையனால் எப்படி இங்கே வர முடிந்தது என்று மண்டையைப் போட்டுக் குடைந்து கொண்டான்.

பழையனோ சகஜமாக நின்றபடி 'டைரியஸ், என்ன சொல்கிறார் சந்தனக் கோட்டை அதிபதி? ஏதோ அநியாயம் அக்கிரமம் என்று சொன்னார் போலிருக்கிறதே?'- என்று சிரித்தபடி வினவினான்.

டைரியஸும் சிரித்தபடி 'எனது நடவடிக்கைகளைத் தான் நன்னர் அப்படிக் குறிப்பிடுகிறார்'... என்றான்.

'உண்மைதான் டைரியஸ். நியாயங்களையும் தர்ம காரியங்களையும் செய்து பழக்கப்பட்டவர் நம் சந்தனக் கோட்டை அதிபதி. அவர் சொல்வதில் தவறிருக்காது' என்றான் பழையன்.

இருவரும் தன்னை எள்ளி நகையாடுகிறார்கள் என்பதை அறிந்தபோது சற்றே ரோஷம் உண்டாயிற்று நன்னனுக்கு.

''பழையா, நீ மாவீரன் என்று எல்லோரும் சொல்கிறார்கள். சேர மன்னன் இ[illegible] த போது அவனது தலைநகரைக் கவர்ந்து சஞ்சயனை இப்படிப் பிணைத்திருக்கிறாயே, உனக்கு வெட்கமாக இல்லையா? இது தான் உன் வீரமா?'' என்று கேட்டான்.

''இதில் வெட்கப்பட என்ன இருக்கிறது நன்னரே? படைத் தலைவன் போரில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது - அதாவது அவன் இல்லாதபோது-அவனது மனத்திற்கு உகந்தவளை - அதாவது ஒரு பெண்ணைக் கவர்ந்த உமது மாவீரத்திற்கு இதெல்லாம் ஈடு கொடுக்க முடியுமா?''- என்றான் பழையன்.

நன்னனுக்கு என்ன பேசுவதென்று புரியவில்லை.

இந்த நேரத்தில் குறுக்கிட்ட டைரியஸ் 'படைத் தலைவரே, இந்த அற்பப் பதரை எதற்காகப் பேச விட்டு பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? முட்டாள்தனத்தைச் செய்த இக்கோழையை முச்சந்தியில் நிறுத்திச் சித்திரவதை செய்வதை விட்டு விட்டு பேச்செதற்கு?''- என்று கூறி நன்னனை நோக்கி பயங்கரமாக ஓர் அடி எடுத்து வைத்தான்.

தன்னை நோக்கி எமனே நகர்வது போல் இருந்தது நன்னனுக்கு.

பழையன் டைரியஸை பேசாமலிருக்கும்படி கையசைத்து விட்டு நன்னனிடம் பேசினான்.

''நன்னா, போன முறையே உன்னை எச்சரித்தேன். இருப்பினும் எந்த தைரியத்தில்-எந்த நம்பிக்கையில் மீண்டும் இந்த அற்ப காரியத்தில் இறங்கினாய்? உன்னை ஜெயிக்க விட்டுத் தூங்கிக் கொண்டிருக்க நானென்ன உன்னைப் போல் முட்டாள் என்றா நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நீதான் மடத்தனமாகச் செயல்படுகிறாய் என்றால் அதை அங்கீகரித்து திருப்திபட்டுக் கொள்கிறானே இரும்பொறை-இவன்



என்ன மன்னன்? என்னைத் தவிர்க்கவோ தடுக்கவோ விரும்பும் நீங்கள் போயும் போயும் பெண்ணை ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இது எந்த வீரசாகசத்தில் சேரும் என்று என்னிடம் நியாயம் பேசுகிறாய்? எனக்கு நாடும் நாட்டின் கௌரவமுமே முதன்மையானது என்பது உண்மைதான். அதற்காக என்னை நம்பியவளை - என்னைக் கணவனாகவே வரித்து விட்டவளைச் சாகவைத்து விட்டு நிற்பேன் என்று மட்டும் கனவு காணாதே. ஒரு முறைக்கு இரு முறையாக நீ அவளுக்குத் துன்பமிழைத்திருக்கிறாய். ஆகவே உன்னை டைரியஸின் சித்திரவதைக்கு அனுப்புவதே சரி''

''வேண்டாம் படைத்தலைவரே வேண்டாம். எனக்கு உயிர்ப் பிச்சை கொடுங்கள்''- என்று அலறினான் நன்னன் அவசரம் அவசரமாக.

ஏனென்றால் யாராலும் மன்னிக்கப்பட முடியாத கருணை காட்டப்பட முடியாத நிலைக்குத் தான் வந்து விட்டது புரிந்தது அவனுக்கு. அதோடு தன் உயிருக்கு வந்த ஆபத்துகள் ஒவ்வொரு முறையும் எப்படியாவது விலகிப் போய்க் கொண்டிருந்தாலும் அந்த குருட்டு அதிர்ஷ்டங்களுக்கும் ஒரு முடிவு உண்டு என்பதை மறுக்க முடியவில்லை அவனால். அந்த முடிவானது நேர்ந்து விட்டால் அது தான் தன் வாழ்வுக்கும் முடிவாக இருக்கும் என்றும் அப்படிப்பட்ட நிலைதான் தற்போது வந்து விட்டது என்றும் உணர்ந்தான். இந்த நிலையில் உயிரைக் காக்க வேண்டுமானால் காலில் விழுவதைத் தவிர வேறு வழியில்லை என்று கருதினான். வெட்கங் கெட்டாவது உயிரைக் காத்துக் கொள்வது என்றும், பிறகு இது போன்ற அரை வேக்காட்டுத்தனமான காரியங்களில் இறங்காமல்

உருப்படியாக முனைந்து இப்பழையனை பழி வாங்கி விடலாம் என்றும் தீர்மானம் செய்து கொண்டான். அந்த அடிப்படையிலேயே அவசரம் அவசரமாக வேண்டிக் கொண்டது மட்டுமின்றி பழையனின் காலில் விழவும் செய்தான்.

அவனது செய்கை பழையனுக்கு அருவறுப்பாக இருந்தது. நன்னனின் மீதிருந்த கொஞ்ச நஞ்ச அனுதாபமும் மறைந்து போயிற்று அவனுக்கு. அவனது பிடிகளிலிருந்து தன் கால்களை விலக்கிக் கொண்ட அவன் 'எழுந்திரு'- என்றான் நன்னனிடம்.

எழுந்து கொண்ட நன்னனிடம், 'இப்படி உயிர்ப் பிச்சை கேட்கிறாயே, உனக்கு வெட்கமாக இல்லை?' என்று கேட்டான்.

நன்னனின் முகத்தில் படிந்த பீதிக்களை இன்னும் அகன்ற பாடாக இல்லை.

'படைத்தலைவரே, அனைவரும் பழிக்கும் காரியங்களை நான் செய்தது உண்மைதான். ஆனால் எனக்காகச் செய்யவில்லை. சேரனுக்காகச் செய்தேன். சேரனுக்காக வாழ்ந்தேன். அதன் விளைவு இப்போது புரிந்துவிட்டது. இனி எனக்காக வாழ விரும்புகிறேன். அதற்கு ஒரு வாய்ப்புக் கொடுங்கள்'-என்றான் கெஞ்சும் குரலில்.

பழையனுக்கு நன்னனின் பேரில் ஆத்திரமும் அருவறுப்பும் நிரம்ப இருந்தது. அதே சமயம் நன்னன் செய்யும் காரியங்களுக்கெல்லாம் சேரன்தான் பொறுப்பு என்பதை அறியாமலில்லை. எனவே நன்னனை மிரட்டும்



போதெல்லாம் வெறும் மிரட்டல் என்ற அளவில்தான் நடந்துகொள்ள விரும்பினானே தவிர அவனை டைரியஸின் சித்திரவதைக்கு ஆளாக்கவோ கொன்று போடவோ விரும்பவில்லை. ஆகவே நன்னன் தற்போது உயிர் பிச்சை கேட்டு அதற்கான காரணத்தைச் சொன்னபோது அதை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளவில்லை. டைரியஸிடம், 'டைரியஸ், இவனை இன்று சிறையில் அடைத்துவை. நாளை முடிவு செய்யலாம் என்ன செய்வதென்று'-என்று கூறிவிட்டு அகன்றான்.

நன்னனை விட்டு விலகிய படைத் தலைவன் உப்பரிகையிலிருந்து இறங்கி அரண்மனையை விட்டு வெளியே வந்தான். நள்ளிரவு கடந்து வெகு நேரம் ஆகி விட்டிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் பொழுது விடியலாம் என்பதற்கான அறிகுறிகள் வானத்தில் தெரியலாயின. அதைக் கவனித்த பழையன் தன் புரவியை அவிழ்த்து அதில் ஏறி ஆன் பொருனை நதியை நோக்கிச் சென்றான். நதிக்கரையில் இருந்த புலிமுக மாளிகையருகே புரவியை நிறுத்தி இறங்கி உள்ளே சென்றான். களைப்பு அவனைப் படுக்கச் செய்தது. விடியவிருந்த நேரத்தில் உறங்க முற்பட்டான். அதைக் கண்டு நகைத்தபடி உள்ளே நுழைந்தது ஓர் உருவம்.

◈◈◈

முரசு நாற்பத்து நான்கு

# மூன்று நிபந்தனைகள்

உறங்க முற்பட்ட நேரத்தில் உறுத்தி வந்து ஊட்டுவது போல் ஒலித்த சிரிப்பொலிக்குப் பின்னால் வந்து நின்றாள் மேகலை.

விடிவதற்கு முன்பாகவே வெள்ளி முளைத்து விட்டால் எப்படியிருக்குமோ அப்படியொரு திடீர் பிரகாசத்தையும் கலகலப்பையும் உண்டாக்கியிருந்தது அவளது பிரவேசம்.

அவள் நன்றாக உறங்கிவிட்டு வந்திருந்ததாலோ என்னவோ மிகத் தெளிவாக இருந்தாள். நீராடுவதையும் முடித்து விட்டிருந்தாளாதலால் புத்தம் புது ஆடை அணிகளை அணிந்திருந்தாள். சற்று முன் பூத்திருந்த மலர்கள் சிலவற்றையும் சூடியிருந்தாள்.

,உலகின் மீது ஆசைப்பட்டு விடிவதற்கு முன்பே ஓடி வந்துவிட்ட கதிரவனைப் போல் பறழயனைக் காணும் வேகத்தில் எதையும் யோசியாமல் திடீரென அவள் இப்படி வந்து நின்றது தேவதையின் திருக்கோலமாய் இருந்தது.

கற்பூரம் தன்னைச் சுற்றியுள்ள இடத்தையும் மணக்கச் செய்வதுபோல் அவளது தெள்ளிய தோற்றமும் பிரவேசமும் சிரிப்பும் அந்த ஆற்றங்கரை மாளிகைக்குச் சோபையை அளித்திருந்தது.



ஆடை அணிகளின் அழகும் சூடியிருந்த மலர்களின் மணமும் அவளது கோலத்தை ஒப்புயர்வில்லா நிலைக்கு உயர்த்தி விட்டிருந்தன. அதற்கு மிகவும் ஏற்றவள் போலவும் தகுதியானவள் போலவும் அவள் இயற்கையான அழகால் நிறைந்திருந்தாள்.

அவளது மனம் மகிழ்ச்சியால் நிறைந்திருந்தது. தட்டினால் கொட்டிவிடும் நிறைகுடம் போல் அவளது இதயமெல்லாம் காதல் உணர்வுகளால் அலைமோதிக் கொண்டிருந்தது.

எதிர்பார்த்த ஆசை நிறைவேறிவிட்டால் உண்டாகும் மகிழ்ச்சியை விட எதிர்பார்க்காமல் இருந்த ஆசை நிறைவேறும்போது உண்டாகும் மகிழ்ச்சி விஸ்தாரமானது. அதுவும் நிறைவேறாது என்றும் நடக்காது என்றும் முடிவு கட்டி ஏமாற்றத்தின் விளிம்பிற்கு வந்து விட்ட நிலையில் போய் ஆசையானது நிறைவேறுமானால் அதில் ஏற்படக் கூடிய ஆனந்தம் ஆழமாகவும் அழகாகவும் இருக்கும்.

மேகலை சந்தனக் கோட்டையிலிருந்து தப்ப முடியும் என்று நம்பவில்லை. அதை உறுதி செய்யும் வகையில் பறழயனிடமிருந்து சேலைச் செய்தியும் வந்தது. அதனால் அவள் ஏமாற்றத்தின் விளிம்பிற்கே வந்து விட்டிருந்தாள்.

ஆனால் அவள் தொட்டிருந்த விளம்பிற்குப் பின்னாலேயே ஆனந்தத்தின் ஆரம்பம் வந்து காத்திருந்தது. சந்தனக் கோட்டையிலிருந்து துவங்கிய பயணம் கருவூரில் முடிவடைந்த போது அது முடிவல்ல ஆரம்பம் தான் என்று உணர்த்துவது போல் அச்சோ நாட்டு

அந்தப்புரத்தில் உண்மையை அவள் அறிந்தபோது எல்லையற்ற குதூகலத்தை அடைந்தாள்.

அதற்குக் காரணமான பழையனை எண்ணிப் பூரித்தாள்.

எல்லையற்ற மகிழ்ச்சியை திடீரெனத் தந்தவன் யாரோ அல்ல-தன் ஆருயிர்க் காதலன் என்பதை எண்ணிய போது காதல் உணர்வுகள் இதயத்திலே பிரளயம் போல் பிரவகித்தன.

அதுவரை அப்பழையனைப் பற்றி பலவாறு எண்ணியதையெல்லாம் நினைவு கூர்ந்து அதற்காக வருத்தப்படாமல் விஷமக் குதூகலத்தில் சிரித்துக் கொண்டாள். அதற்கு மேல் அவனைக் காணாமல் அவளால் இருக்க முடியவில்லை. அவனைப் பற்றி விசாரித்து ஆற்றங்கரை மாளிகைக்குத் துள்ளி ஓடி வந்தாள். அவன் உறங்க முற்பட்டதைக் கண்டு சிரித்தாள்.

அவளையும் அவளது சிரிப்பையும் கண்ட பழையனுக்கு கோபம் மூண்டது.

'இங்கு ஏன் வந்தாய்? உன்னை யார் அழைத்தது?'- என்று அவளைப் பார்த்து எரிந்து விழுந்தான்.

அவளோ அவனது கோபத்தைப் பொருட்படுத்த வில்லை. ''இது என்னிடம் கேட்க வேண்டிய கேள்விகள் இல்லையே?''- என்று வினவினாள்.

அவனது கோபம் அதிகமாயிற்று. 'வேறு யாரிடம் கேட்கவேண்டும்? உன் தந்தையிடமா?'... என்று சீறினான்.



'உங்கள் மனதையல்லவா கேட்கவேண்டும்?' என்றாள் மேகலை.

'இந்த பசப்பு வார்த்தைகளெல்லாம் வேண்டிய தில்லை'- என்று அதைக் கோப உணர்வோடு சொன்னான் பழையன்.

'இது ஒன்றும் பசப்பு வார்த்தையில்லையே.' தெளிவாகவும் நிதானமாகவும் பேசினாள் அவள்.

'எதுவாக இருந்தாலும் இங்கே வார்த்தைகளும் தேவையில்லை. வேண்டாதவர்களும் தேவையில்லை.'-

'நான் வேண்டாதவள் என்றால் என்னை எதற்காக காப்பாற்றினீர்களாம்?'-

'உன்னை யாரும் காப்பாற்றவில்லை'-

'என் தந்தையைக் காப்பாற்றினீர்களாக்கும்'-

'யாரையும் யாரும் காப்பாற்றவில்லை'-

'அப்படியானால் சிவிகைகள் தாமாகவே வந்து எங்களைக் காப்பாற்றி விட்டதாக்கும்'- என்று கூறி மீண்டும் கலகலவென்று சிரித்தாள் மேகலை.

பழையனுக்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை. வறட்டுக் கோபத்தை உடனடியாக விட்டுவிடவும் அவன் தயாராக இல்லை. அந்தச் சங்கடத்தில் 'சே-தூங்குவதற்குக் கூட விடாமல் தொந்தரவு செய்பவர்களிடம் என்ன பேசுவதென்றுதான் தெரியவில்லை'' என்று அலுத்துக்கொண்டான்.

அவனது கோபத்திற்குக் காரணம் அலுப்புத்தான் என்பது அவளுக்குத் தெரிந்துதான் இருந்தது.

இருந்தாலும் அவனைச் சீண்டிப் பார்க்க விரும்பியே பேச்சுக் கொடுத்தாள். தன்னைக் காத்த காதலனைச் சீண்டிப் பார்ப்பதென்பது குதூகலமான விஷயமாதலால் - ஏற்கெனவே குதூகலத்தில் இருந்த அவளுக்கு - சீண்டத் தோன்றியது.

தற்போது அவன் பேச முடியாமல் தவித்து அலுத்துக் கொண்டதை அறிந்த பின் மேற்கொண்டும் சீண்டிக் கொண்டிராமல் அவனிருந்த பஞ்சணையில் போய் அமர்ந்து கொண்டதோடு மட்டுமின்றி அவனது தலையை உரிமையோடு எடுத்து தன் மடியில் வைத்துக் கொண்டு அவனது குழல்களைத் தடவி விடலானாள். அவனது குழல்களுக்கு இருந்த முரட்டுத்தனமும், அவனது உடலுக்கு இருந்த உறுதியும் அவளுக்கு விரும்பத் தக்கதாக இருந்தன. 'இந்த முரட்டுத்தனமும் உறுதியும் தானே ஆண்களை ஆண்களாகக் காட்டுகின்றன? இவைகளால்தானே வீரச்செயல்களை அனாயாசமாகச் செய்ய முடிகின்றன?' என்று எண்ணிப் பார்த்த அவள் ''இவைகள் தானே என்னையும் காத்திருக்கின்றன?'' என்றும் நினைத்தபோது அவன் மீதிருந்த காதலும் அதிகரித்தது. அவனது அலுப்பு மீதான அனுதாபமும் அதிகரித்தது. எனவே அவனது குழல்களை அளைய முற்பட்ட அவள், ''மிகவும் அலுத்து விட்டீர்களா?''- என்று பஞ்சின் மென்மையை நிகர்க்கும் குரலில் வினவினாள்.

**அந்த குரலுக்கும் மென்மைக்கும்தான் எத்தனை சக்தி? அவற்றைக் காட்டிலும் அலுப்பைத் தீர்க்கும் மருந்து வேறு இருக்க முடியுமா?**



முடியாது என்பதையே அப்போது உணர்ந்தான் பழையன். அவள் சிரித்தபோதும் பேசியபோதும் கோபமடைந்த அவன் அவள் பஞ்சணையை நெருங்கத் துவங்கியதிலிருந்து சற்றே ஆறுதலடையலானான். அந்த ஆறுதல் அவளது வினவலால் பூரணமடைந்தது. அவளது வினவலையே பெரிதும் விரும்பி எதிர்பார்த்துக் கிடந்தானாதலால் முதலில் அது கிடைக்காதபோது கோபமும் பிறகு அது கிடைத்தபோது கனிவும் அடைந்தான். இருந்தாலும் அவளது வினவலுக்குப் பதிலேதும் சொல்லவில்லை. அப்போதைய நிலையில் அவள் மடியில் படுத்திருப்பதே பெரும் சுகமாய் இருந்தது. அந்தநிலையிலேயே பல யுகங்களைக் கடந்துவிட வேண்டும் என்றும் தோன்றியது. வேறு எந்த நினைவுகளும் வரவில்லை. மனத்தில் நிம்மதி பிறந்தது. அந்த நிம்மதியில் உறங்கிப் போனான் பழையன்.

உறக்கம் விழித்தபோது, 'எழுந்து விட்டீர்களா?'- என்று அதே குரலில்-பழைய குரல் - மென்மை தவழ்ந்த குரல் அவன் செவிகளில் ஒலிக்கவே சடாரென்று எழுந்தான் அவன். எவ்வளவு நேரமாக உறங்கினானோ தெரியவில்லை. ஆனால் அவனது வியப்பெல்லாம் விழிக்கும் வரை அவளது மடியில் இருந்ததில்தான் எழுந்தது. மேகலையின் முகத்தைப் பார்த்தான். அதில் அலுப்பின் அடையாளம் எதுவும் இல்லை. அழகின் களையே ஆழ்ந்திருந்தது. இருந்தாலும் நீண்ட நேரமாகச் சிரமம் பாராமல் தன் தலையைத் தாங்கியிருந்த - தன் தலைக்குப் பெரும் ஆறுதல் அளித்திருந்த அவளது மடியை பெரும் அனுதாபத்துடன் தொட்ட அவன் 'வலிக்கவில்லையா மேகலை?'- என்று கேட்டான்.

'இல்லை' என்பது போல் தலையை ஆட்டினாள் அவள்.

'நீண்ட நேரமாகத் தூங்கி விட்டேனா?' - என்று கேட்டான் அவன்.

அவள் பதில் சொல்லாமல் வெளியே பார்வையை ஓட்டினாள்.

வெளியே வானம் தெரிந்தது. வானில் சில நட்சத்திரங்கள் தெரிந்தன.

தான் உறங்கியது நீண்ட நேரம்தான் என்பதை உணர்ந்த அவன் 'சற்று இரு மேகலை, இதோ நீராடி விட்டு வருகிறேன்' என்றான்.

அவள் கலகலவென்று சிரித்தாள்.

'ஏன் சிரிக்கிறாய்?'

'தலைகீழ் பாடத்தைக் கண்டு சிரிக்கிறேன்'.

'தலைகீழ் பாடமா?'

'ஆமாம். விடியும் நேரத்தில் உறங்குவதும், உறங்கும் நேரத்தில் நீராடுவதும் வேறென்ன?'

'என்ன செய்வது? பெண்களுக்காக காரியத்தில் இறங்கும்போது எல்லாமே தலைகீழ்ப் பாடமாகி விடுகின்றன.' என்று கூறிவிட்டு மஞ்சத்தைவிட்டு எழுந்தான்.

'நானும் வரவா?' - விஷமமாகக் கேட்டாள் மேகலை.

'ஐய்யய்யோ. நான் கற்புடைய ஆண்மகன். நான் , நீராடுவதைப் பார்க்க யாரையும் அனுமதிக்க முடியாது'-



என்று கூறிவிட்டு வெளியே தெரிந்த ஆன்பொருனை நதியை நோக்கிச் சென்றான் பழையன்.

⁂ ⁂ ⁂

ஆற்றில் இறங்கும்வரை விரைவிலேயே நீராடிவிட்டு வரத்தான் நினைத்தான் பழையன். ஆனால் ஆற்றில் இறங்கிவிட்ட பின் அந்த நினைப்பு நிறைவேறக் கூடியதாக இல்லை. தூய்மையான ஆற்று நீரும் சீரான அதன் ஓட்டமும், கரையோர மலர்களின் சுகந்தமும் ஆனந்தமயமான சூழலை உண்டாக்கிவிட்டபடியால் நீரை படுக்கையாக்கிக் கொண்டவனைப் போல் புரண்டும் சுழன்றும் மூழ்கியுமாய் நீந்தி விளையாடினான். அவனது விளையாட்டைக் கண்டு நகைப்பது போல் வானில் நட்சத்திரங்கள் பளிச்சென்று திகழ்ந்தன. அவற்றைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பதுபோல் நிலவும் பெரிதாய் அவ்வானத்தில் பூத்திருந்தது. அந்த இயற்கை எழிலைக் கண்டு களியாட்டம் போடுவது போல் ஆற்று நீர் துள்ளி ஓடியது. இயற்கை ரசிகனான பழையன் இந்த ஆனந்தச் சூழலில் தன்னை மறந்தவனாய் இருந்தான். அவன் அவ்வாறு தன்னை மறந்திருப்பதும் அனாவசியமாக நேரத்தைக் கடத்துவதும் தவறு என்று எச்சரிப்பது போல் கரையோர மரமொன்றில் அமர்ந்திருந்த ஆந்தைகள் இரண்டு மாறிமாறி இரைந்தன பயங்கரமாக. அந்த பயங்கரத்தை அதிகமாக்குவது போல் தொலை தூரத்திலிருந்து புலியொன்றின் உறுமல் ஒலியும் கேட்டது.

அவற்றைக் கேட்டதாலோ என்னவோ மேகலையின் நினைவு மேலிட்டவனாய் ஆற்றைவிட்டு வெளியேறி கரையோர மாளிகைக்கு வந்த பழையன் மாளிகையை ஒரு

முறை நோட்டம் விட்டான். அதன் பெரும் அந்தஸ்தும் கம்பீரமும் அம்மாளிகை அரச குடும்பத்தினருக்கு உரியது என்பதை உணர்த்தியது. அதிலிருந்தே தனக்கு வேண்டிய உடைகள் கிடைக்கும் என்று எண்ணியவனாய் மாளிகையின் முன் அறையை உதைத்து உடைத்துத் திறந்தான். அவன் எண்ணம் வீண் போகவில்லை. அரச குடும்பத்தினருக்கு உரிய ஆடை அணிகள் அளவுக்கு அதிகமாகவே இருக்கவே நிதானமாக அவற்றிலிருந்து தனக்குப் பொருத்தமானதைத் தேர்ந்தெடுத்து அணிந்து கொண்டு ஓரிரு அணி வகைகளையும் அணிந்தான். அங்கிருந்த கண்ணாடியில் தன்னை ஒருமுறை அழகு பார்த்துக் கொள்ளவும் செய்தான். இப்படி ஏதோ பெண்பார்க்கப் புறப்படுபவன் செய்து கொள்ளும் ஒப்பனைகளை செய்து கொண்டு திருப்தி அடைந்தவனாக அறையைவிட்டு வெளியேறி மேகலை இருந்த அறைக்குச் சென்றான்.

அங்கே மேகலை இல்லை.

'மேகலை' - என்று குரல் கொடுத்தான். பதிலில்லை.

திரும்பவும் பெயர் சொல்லி அழைத்த போது கரகரத்த குரலொன்று பதில் சொல்லிற்று.

'மேகலையைத் தேட வேண்டியதில்லை. இங்குதான் இருக்கிறாள்'-

முற்றிலும் எதிர்பாராத குரலைக் கேட்டதும் அக்குரல் வந்த திசையை நோக்கி நடந்தான் பழையன்.

கரகரத்த குரல் அவனை எச்சரித்தது.



'மேற்கொண்டு ஓர் அடியும் எடுத்து வைக்க வேண்டாம். வைத்தால் மேகலையை உயிருடன் பார்க்க முடியாது'-

'இருட்டில் இருந்தபடி எச்சரிக்கை விடுக்கும் மாவீரர்கள் யாரென்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?'- சாதாரணமாகவே கேட்டான் பழையன்.

அதையடுத்து விடுவிடுவென பற்ற வைக்கப்பட்ட பந்தங்கள் வெளிப்பட்டன. அந்த வெளிச்சத்தில் சுமார் முப்பது பேர் தெரிந்தார்கள்.

ஏதோ திரைவிலகி வெளிப்பட்ட காட்சி போல் தெரிந்த அவர்களைக் கண்டபோது அசாத்திய கோபம் உண்டாயிற்று பழையனிடம்.

அதை அவன் வெளிப்படுத்துவதற்குள் புதிய குரலொன்று ஒலித்தது.

'மூன்றே நிபந்தனைகள். நீ என்னோடு சிறைப்பட்டு வரவேண்டும் ஒன்று. நன்னனை விடுதலை செய்து வெளியேற்ற வேண்டும் இரண்டு. மூன்றாவது நிபந்தனை மேகலையை சேரர் மணக்கவிருப்பதால் அவளை நீ மறந்துவிட வேண்டும். இல்லையென்றால் மோசமான விளைவுகள் நிகழும். என்ன சொல்கிறாய்?'-

இச்சொற்களை உதிர்த்தவன் மறுகணம் பந்த ஒளிக்கு முன்னே வெளிப்பட்டான். அவன் தகடூர் தலைவன் எழினி.

◈◈◈

முரசு நாற்பத்தைந்து

## எழினியின் கனவு

தகடூர்த் தலைவனும், தர்ம நியாயங்களைப் பற்றிக் கவலைப் படாதவனுமான எழினி அந்த அரைகுறையான பந்த ஒளியில் பேய் போலக் காட்சியளித்தான். கறுத்த மேனியும் முரட்டு வடிவமும் கொண்டிருந்ததோடு மட்டுமின்றி பற்கள் சிலவற்றையும் இழந்து கிடந்த எழினி வெறிச்சிரிப்பொன்றையும் உதிர்த்தபடி பந்தத்திற்கு அருகே வெளிப்பட்ட விதமானது அச்சுறுத்தக் கூடிய பயங்கரமாய் இருந்தது. சேர சோழ படைகளுடன் சென்ற அவன்-சேரரோடும் சோழரோடும் இருக்க வேண்டிய அவன் - தஞ்சையை விட்டு நெடுந்தூரத்திற்குப் போய்விட்ட அவன் கருவூருக்கருகே திடீரென முளைத்தது வியப்புக்குரிய விஷயம்தான் என்றாலும் பாண்டியர் படைத் தலைவனான பழையனுக்குச் சிந்தனையெல்லாம் அவன் போட்ட நிபந்தனையின் பேரிலும் அவனிடம் சிக்கிக்கிடந்த மேகலையின் பேரிலும் இருந்தன. அவனைப் பொறுத்தவரை எழினி ஒரு பொருட்டே இல்லைதான். அவனால் ஏககாலத்தில் பத்து பேர்களைச் சமாளிக்க முடியும்தான். ஆனால் அப்படிச் சமாளிக்கக் கூடிய காரியத்தில் இறங்குவது மேகலைக்கு ஆபத்தையே விளைவிக்கும் என்பது வெளிப்படையாகத் தெரிந்ததால் உணர்ச்சிபூர்வமான நடவடிக்கை எதிலும் இறங்காமல் தனக்கே உரிய பாணியை பின்பற்ற முனைந்து தன் முன்நின்றிருந்த



ஆட்களிடம் 'உள்ளே ஏதாவது ஆசனம் இருக்கிறதா என்று பாருங்கள். இருந்தால் கொண்டு வாருங்கள்' - என்றான்.

அவனது குரலில் என்னதான் தனித்தன்மை இருந்ததோ தெரியவில்லை. ஏதோ எஜமானனுக்குப் பணிபவர்களைப் போல் அவர்களில் சிலர் மா ஆசனம் ஒன்றைக் கொண்டு வந்து போடவும் அதில்போய் அமர்ந்து நன்றாக சாய்ந்து கொண்டு கால்மீது காலைப் போட்டுக்கொண்டு பெரும் அரச தோரணையை ஆக்கிக்கொண்டான் பழையன். அவன் ஆசனத்தைக் கேட்டது அதற்குத் தன் வீரர்கள் பணிந்தது - பின் அந்த ஆசனத்தில் பழையன் அமர்ந்தது எல்லாமே எழினிக்கு ஒரு புறம் வியப்பாகவும் மறுபுறம் சினமாகவும் இருந்தது. பழையனின் அலட்சியம் மிகவும் ஆபத்தானது என்பதை அவன் நன்றாக உணர்ந்திருந்தானாதலால் பெரும் எச்சரிக்கை அடைந்தான்.

பழையனோ எதைப்பற்றியும் கவலைப்படாதவனைப் போல் அமர்ந்துகொண்டு எழியினிடம் சகஜமாகக் கேட்கலானான்.

'எழினி, உன் மூன்று நிபந்தனைகளும் கடினமானவை. அவற்றை நான் எப்படி ஏற்க முடியும்?'-

'விளைவுகளை யோசித்துப் பார்த்தால் ஏற்காமல் இருக்க முடியாது'- என்றான் எழினி ஆணித்தரமாக.

'விளைவுகளா? என்ன விளைவுகள்?'- ஒன்றும் தெரியாதவனைப் போல் கேட்டான் பழையன்.

'நீங்கள் மறுத்தால் முதலில் மேகலை கொல்லப் படுவாள். நீங்கள் சிறைப்படுவீர்கள். உங்களை வைத்தே நன்னனை மீட்க முடியும்' - என்றான் எழினி.

'மேகலையை சேரனுக்கு மணம் முடிக்க வேண்டும் என்று சொன்னாயே - அவளைக் கொன்று விட்டால் எப்படி முடியும்? சேர மன்னர் கோபிக்க மாட்டாரா?'-

''அவர் கோபித்தால் அதைச் சமாளித்துக் கொள்வது என் பிரச்சனை. நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டியதில்லை''-

'பிறகென்ன? செய்ய வேண்டியதுதானே?'-

'எதை?'-

'மேகலையைக் கொன்று என்னைச் சிறை செய்து நன்னனை மீட்பது'

'அதில் சில சிக்கல்கள் இருக்கின்றன. அதைத் தவிர்க்கவே விரும்புகிறேன்'

'என்ன சிக்கல்கள்?'-

''அதை உங்களிடம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. அதோடு உங்களை உயிருடன் பிடித்து வருவதையே சேர மன்னர் விரும்புகிறார்''

''அப்படியானால் என் உயிருக்கொன்றும் ஆபத்தில்லை. நல்லது. என் எழினி, ஒன்றை நீ யோசித்தாயா?''-

'எதை?'-

''நான் கருவூர் அரண்மனையை விட்டு இங்கு வந்தேனே, எந்தவித முன்னேற்பாடும் இல்லாமல்தான் வந்திருப்பேன் என்று எண்ணுகிறாயா?''-

''எந்த ஏற்பாட்டைச் செய்துவிட்டு வந்திருந்தாலும் அதைச் சமாளிக்க நான் தயாராகவே இருக்கிறேன்''-



பழையன் மேற்கொண்டு எதையும் பேசவில்லை, சற்று யோசித்துவிட்டு ''சரி எழினி, உன் நிபந்தனைகளில் இரண்டை ஏற்கிறேன். ஒன்றை மட்டும் ஏற்க முடியாது''-என்றான்.

'என்ன அது?'-

''நன்னனை விடுவிக்க வேண்டுமென்றாய். அதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஏனென்றால் அவனை வைத்திருப்பதால் எனக்கெந்த லாபமும் இல்லை. இரண்டாவது நான் சிறைப்படுவது. இதிலும் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஏனென்றால் என்னைக் கட்டிக் காக்கும் பொறுப்பு உங்கள் திறமையைப் பொறுத்தது- ஆனால் மூன்றாவது நிபந்தனை அப்படி அல்ல. மேகலையை மறப்பது முடியாதகாரியம். அவளைச் சேரனுக்கு மணமுடிக்கச் சம்மதிப்பது கேவலமான காரியம். அதைச் செய்வதைவிட நான் சாவதே மேல். அவளை மறக்கவோ சேரனை மணக்கவோ நான் நேசிக்கவில்லை. ஆகவே அதற்கு ஒப்புக் கொள்ள முடியாது. சம்மதமென்றால் பேசு. இல்லையென்றால் உன்னால் என்ன செய்ய முடியுமோ செய்துகொள்''-

எழினிக்கு ஒருகணம் என்ன செய்வதென்றே விளங்கவில்லை. தனி ஒரு நபராக இருந்து கொண்டு பழையன் தன்னை மடக்குவதை நினைத்து சற்றே வியப்படைந்தான். பழையனை அனைவருமாகச் சூழ்ந்துகொண்டு நிமிடநேரத்தில் கொன்றுவிட முடியும். ஆனால் அதற்குப் பிறகு நேரும் பின் விளைவுகள் எந்த விதத்திலும் தனக்கோ சேர மன்னனுக்கோ சாதகமாக இருக்காது என்பது திட்டவட்டமாகப் புரிந்தது எழினிக்கு.

எனவேதான் எதைச் சாதிப்பதானாலும் பழையனை உயிருடன் வைத்துக் கொண்டே சாதிக்க விரும்பினான். அது நிறைவேற வேண்டுமானால் பழையன் போடும் பதில் நிபந்தனைக்கு வழி விடத்தான் வேண்டும் என்பதும் அவனுக்குப் புரிந்தது. உண்மையிலேயே அவனுக்கும் சரி சோனுக்கும் சரி மேகலையைக் கொல்வதிலோ மணப்பதிலோ அவ்வளவாக நாட்டம் இல்லை. சுயநல அரசியலுக்கு அவளை ஒரு கருவியாக மட்டுமே பயன்படுத்த நினைத்தார்கள். தற்போது அவள் அப்படியொரு கருவியாகப் பயன்படப் போவதில்லை என்பதை பழையனின் வாக்கிலிருந்து தெரிந்ததால் அவளைவிட்டுவிடவே ஆயத்தமானான் எழினி. அவளை விட்டு விட்டால் பழையனின் கை ஓங்கலாம். ஆனால் சுமார் முப்பது வீரர்கள் இருக்கும்போது அவனால் ஒன்றும் செய்து விட முடியாது என்று தீர்மானித்தபின் பழையனிடம் பேசலானான்.

'சரி, மூன்றாவது நிபந்தனையை விட்டு விடுகிறேன். ஆனால் முதலில் நன்னன் இங்கு வந்தாக வேண்டும்'-

'அது முடியாது'-

'முடியாதா?'

'ஆம். உன்னை நான் நம்பத்தயாராக இல்லை எழினி. மேகலையை முதலில் என்னிடம் அனுப்பினால்தான் நன்னனை நான் விடுவிக்க முடியும்'-

'பழையா! உன் நிலை என்னவென்று தெரியாமல் பேசுகிறாய்?'- கோபத்தில் நிலைதடுமாறி இரைந்தான் எழினி.



பழையன் அசரவில்லை. 'நீதான் உன் நிலையை அறியாமல் இருக்கிறாய் எழினி. அதனால்தான் தடுமாறுகிறாய். மரியாதையின்றிப் பேசுகிறாய். எனக்கு நஷ்டம் விளைவிப்பவர்களைக்கூட மன்னிப்பேன். ஆனால் அவமரியாதை செய்பவர்களை லேசில் விடமாட்டேன். ஞாபகம் இருக்கட்டும்' - என்றான். இதைச் சொல்லும்போது அவனது முகம் திடீரெனச் சிவந்து பந்த ஒளியில் பயங்கரமாகக் காட்சியளித்தது. அதைக் கண்டு முரடனான எழினி கூட சற்றே அஞ்சினான்.

பழையனின் கோபத்தைக் கிளறுவது எரிமலையைக் கிளறுவது போன்றது என்று கருதிய எழினி முடிவில் மேகலையை பழையனிடம் ஒப்படைத்து விட்டு 'ஓலை எழுதுங்கள் டைரியஸுக்கு. நன்னனை விடுவித்து இங்கு அனுப்பும்படி'. என்று கூறிவிட்டு வீரர்களை வட்டமாகச் சுற்றி நிற்கச் செய்தான்.

பழையன் மறுப்பேதும் சொல்லவில்லை. தன்னிடம் தரப்பட்ட ஓலையில் 'டைரியஸுக்கு-நானும் மேகலையும் பேராபத்தில் இருக்கிறோம். தப்ப முடியாத சூழ்நிலை. எனவே நன்னனை விடுவித்து ஆற்றங்கரை மாளிகைக்கு உடனே அனுப்பவும்-பழையன்' - என்று எழுதி எழினியிடம் நீட்டினான்.

அதைப் படித்த எழினிக்கு திருப்தியாக இருந்தது. கருவூர் அரண்மனைக்குள் நுழைய பழையனின் மோதிரத்தை வாங்கி அதையும் ஓலையையும் வீரன் ஒருவனிடம் கொடுத்து கருவூர் அரண்மனைக்கு அனுப்பினான் - அதேசமயம் பழையனையும் மேகலையையும் சுற்றி அமைத்த காவலையும் தீவிரப்படுத்தினான்.

அடுத்தது என்ன நடக்கும் என்பதை தீர்மானிக்க முடியாததொரு நிலை அங்கே நிலவியது. முப்பது வீரர்களை வைத்துக்கொண்டு பழையனையும் மேகலையையும் வளைத்திருந்தாலும் எழினியின் மனம் பூரண நிம்மதியில் இல்லை. நன்னன் விடுவிக்கப் படுவதில் அவனுக்குச் சந்தேகம் இல்லைதான். ஆனால் அவன் விடுவிக்கப்பட்டு ஆற்றங்கரை மாளிகைக்கு வந்தபின் என்ன நடக்கும் என்பதில் அவனுக்குள் ஒருவித குழப்பம் இருந்தது. அதற்குக் காரணம் பழையனைப் பற்றிய அவனது எண்ணம்தான். எந்த நேரத்தில் எப்படி நடந்து கொள்வான் என்று அனுமானிக்க முடியாத மனிதன் ஒருவன் உண்டென்றால் அது பழையன்தான் என்பதால் அதன் காரணமாகவே அவன் குழம்பித் தவித்தான். தான் விதித்த நிபந்தனைகள் மூன்றுமே வேப்பங்காயைவிடக் கசப்பானவை என்பது வெளிப்படையான பட்சத்தில் அவற்றில் ஒன்றைத் தவிர ஏனைய இரண்டை பழையன் ஏற்றுக்கொண்டது எழினிக்கு வியப்பை உண்டாக்கி குழப்பத்தை அதிகரித்தது. தனக்கு ஒவ்வாத விஷயங்களைப்போய் பழையன் ஒப்புக் கொள்கிறான் என்றால் அது சாதாரண விஷயமல்ல என்பதும் ஏதோ ஆழ்ந்த திட்டத்தின் அடிப்படையில்தான் ஒப்புக்கொண்டிருக்கிறான் என்பதும் அவனுக்குள் உறுத்தின. அந்தத் திட்டம் என்னவாக இருக்க முடியும் என்பதே அவனது சிந்தனையில் நிறைந்திருந்தது.

தஞ்சைக்கு அப்பால் வெகுதூரம் கடந்து பாண்டியனைச் சந்திக்கும் இடத்திற்கு அருகே வந்துவிட்ட நிலையில் நன்னனின் நிலைபற்றியும்



கருவூரின் நிலை பற்றியும் கேள்விப்பட்ட சேரமன்னன் யானைக்கண்சேய் பதட்டப்படவில்லை. கருவூர் கொள்ளைக்காரனான டைரியஸ் வசம் சிக்கிவிட்டது என்ற விஷயம் அவனைக் காட்டிலும் சோழமன்னன் பெருநற்கிள்ளியை திடுக்கிட வைத்தது. கருவூரை மீட்க உடனே போகும்படி சேர மன்னனைக் கேட்டுக் கொள்ளவும் செய்தான். ஆனால் சேரனோ அசைய வில்லை. 'கருவூரை எப்போது வேண்டுமானாலும் என்னால் மீட்டுக்கொள்ள முடியும் சோழரே. ஆனால் பாண்டியனை இப்போது விட்டுவிட்டால் வேறு எப்போதும் முறியடிக்க முடியாது. அதுவும் முக்கால் கிணறு தாண்டிவிட்ட நிலையில் உங்களை இங்கே விட்டு விட்டு நான் அங்கே போக முடியாது. நான் அங்கு போகும் பட்சத்தில் பழையன் இங்கு வந்து சேர்ந்துவிட்டால் நிலைமை தலைகீழாகிவிடும். அதைவிட பழையனை அங்கேயே வைத்திருக்க முயற்சி செய்வது பயனுள்ளது. அதற்கு யாரையாவது அனுப்புவது பற்றி யோசிக்கலாம்'- என்றான் சேரமன்னன்.

இதைக் கேட்டு மனம் நெகிழ்ந்து போனான் சோழன் பெருநற்கிள்ளி. தன்னுடைய நாட்டைப்பற்றி கூட கவலைப்படாமல் பாண்டியனை முறியடிக்கும் முயற்சியிலேயே மூச்சாக இருந்த அவனது மனதிடம் பெருநற்கிள்ளியை வியக்க வைத்தது.

இந்த சம்பாஷணை நடந்த நேரத்தில் அங்கிருந்த எழினி குறுக்கிட்டு, 'இந்த நிலையில்கூட உங்கள் கவனம் பழையனின் மீதுதானா? ஒன்றுக்கு ஆறு வேளிர்கள் கூடியிருக்கும் நாம் இன்னும்கூட பழையனை எண்ணியா நடுங்கிக் கொண்டிருக்க வேண்டும்? சேரமன்னரே, உமது

இந்தநிலை எனக்கு மிகவும் வேதனையாகவும், வெட்கமாகவும் இருக்கிறது. நாட்டின் எல்லைப் புறங்களில் நான் களவாடியதையே பொறுக்காத நீங்கள் நாட்டையே கொள்ளைக்காரன் அபகரித்திருப்பதைக் கேட்டும் கவலைப்படாமல் தனி மனிதனைப்பற்றி கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களே! என்னால் பொறுக்கமுடியவில்லை. அந்த மடையன் நன்னனால் எதுவும் முடியாது. அவனால் முடியாததை நானே செய்கிறேன். நன்னனை மீட்டு உங்கள் கருவூரையும் மீட்டு பழையனைக் கொண்டு வந்து உங்கள் முன்னால் என் வாளால் வெட்டி வீழ்த்துகிறேன். அப்போதாவது அவனைப் பற்றிய பேச்சை நிறுத்திவிடுவீர்கள் அல்லவா? நெடுஞ்செழியனை முறியடிப்பதில் முனைவீர்கள் அல்லவா?'' என்றுகூறி விட்டு கணிசமான வீரர்களுடன் கருவூருக்குப் புறப்பட்டான். அங்கு வந்து நிலைமையைக் கண்டறிந்தான். பழையன் இருக்கும் ஆற்றங்கரை மாளிகையை அடைந்தான். அவனுக்கு அனுகூலமாக மேகலை தனித்துக்கிடந்தாள். அவளை மடக்கி தன் சூழ்ச்சியைத்துவக்கினான்.

அந்தமட்டில் சந்தோஷப்பட்ட அவன் அதற்கப்பால் பழையன் நடந்து கொண்ட முறையில் தடுமாறி சிந்தனையில் விழவேண்டியதாயிற்று. சேரனிடம் சூளுரைத்துவிட்டு வந்திருக்கும் நிலையில் தன் முயற்சி தோற்றுவிட்டால் தனது நிலை நன்னனைவிட மோசமாகிவிடும் என்பது அவனுக்குப் புரியவே சற்றே கவலைப்பட்டான்.

ஆனால் விரைவிலேயே அவனது கவலை தீரும் விதத்தில் நன்னன் அந்த ஆற்றங்கரை மாளிகைக்கு



அழைத்து வரப்பட்டான். அவனது கைகள் பின்னால் வளைத்துக் கட்டப்பட்டிருந்தன. இருபுறமும் இரு கொள்ளைக்காரர்கள் நின்றார்கள். எழினியின் வீரன் முன்னே நின்றான்.

இக்காட்சியைக் கண்டபின்பே மூச்சு வந்தது எழினிக்கு. 'நன்னனின் கட்டுகளை அவிழ்த்து விடுங்கள்'- என்று தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டான். அது நிறைவேறியதுமே நன்னனுடன் வந்திருந்த டைரிய...ன் கொள்ளைக்காரர்கள் இருவரையும் கொன்றுவிடும்... கட்டளை இட்டான்.

அப்போது பழையனின் குரல் குறுக்கிட்டது.

'எழினி, நிறுத்து. அவர்களைக் கொல்ல நான் அனுமதிக்க முடியாது'-

'அனுமதிக்க முடியாதா? உன் அனுமதியை யார் கேட்டது?'- என்று இரைந்து பெரிதாகச் சிரித்தான். எழினி.

ஆனால் மறுகணம் அவனது சிரிப்பு மறைந்தது இருந்த இடம் தெரியாமல். அதுமட்டுமல்ல. அவனை நோக்கி அரசகட்டளை ஒன்றும் பிறந்தது. அதை விடுத்த நபரையும் அவர் இருந்த நிலையையும் கண்டான் எழினி. அவனது உடல் உறைந்தது.

◈◈◈

முரசு நாற்பத்தாறு

# ராணியார் விருப்பம்

நன்னன் விடுவிக்கப்பட்ட நிலையில் இனி எதற்கும் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை என்ற எண்ணத்தில், பழையனைச் சிறைப்பிடித்துப்போய் சேர மன்னனின் முன்னால் நிறுத்திவிடுவதில் இனிச் சிரமம் எதுவும் இல்லை என்ற ஆனந்தத்தில் பழையனின் பேச்சை உதாசீனப்படுத்திவிட்டு டைரியஸின் கொள்ளைக்காரர்கள் இருவரைக் கொன்றுவிடும்படி உத்தரவிட்டதும் அந்த உத்தரவு தடைப்படும் என்றோ, அதோடு பழையனையும் மேகலையையும் விடுவிக்கும் படி கட்டளை பிறக்கும் என்றோ, அதைப் பிறப்பிக்க ஆற்றங்கரை மாளிகைக்கு சேர மன்னனின் பட்டத்து ராணியே வருவார் என்றோ, அவரது கழுத்து டைரியஸின் கத்தி முனையில் இருக்கும் என்றோ எழினி நிச்சயம் எதிர் பார்த்திருக்க முடியாது.

ஆனால் அனைத்துமே கண நேரத்தில் நடந்து விட்டன.

எழினியும் அவனது வீரர்களும் நன்னனும் டைரியஸின் ஆட்களால் வளைக்கப்பட்டு நிலைமையானது சில கணங்களிலேயே தலைகீழாகியது. பழையன் டைரியஸிடம் ஏதோ சைகை செய்யவே. அவன் சேர மன்னனின் ராணியை விட்டு விலகி நின்றான். அங்கு வந்து நின்று ''என்னை மன்னிக்க வேண்டும்



மகாராணி. தங்களை இந்த நிலைக்கு ஆளாக்க வேண்டும் என்பது என் விருப்பமல்ல. பாண்டிய வம்சத்தினருக்கு உகந்ததும் அல்ல. தங்களை இவ்வாறு சிக்க வைப்பதோ அல்லது கருவூர் அரண்மனையை வசப்படுத்துவதோ என் நோக்கமல்ல. அவ்வாறு செய்வதற்கான உரிமையும் படைத்தலைவன் என்ற முறையில் எனக்குக் கிடையாது. நான் செய்த இக்காரியங்கள் பழையன் என்ற தனி மனிதனின் காரியங்கள். அவற்றைக்கூட வேறு வழியில்லாததலால்தான் செய்தேன். அல்லது. ஆளாக்கப்பட்டேன். மேகலை என் உயிரைப் போன்றவள் என்பதுகூட இரண்டாவது பட்சம்தான். அவள் பெண் என்பதே முதல் முக்கியம். அவளைக் கருவியாக்கி, கடத்தி துன்புறுத்தி அரசியல் ஆதாயம் தேட முற்படுகிறார் சேர மன்னர். தன் பெரும் மன்னர் மரபிற்கு ஒவ்வாத இக்காரியத்தைச் செய்யும் போது, அக்காரியத்திலிருந்து சம்பந்தப்பட்ட பெண்ணை மீட்க வேண்டிய அவசியம் வரும் போது நானும் சில அவச் செயல்களைச் செய்ய வேண்டியதாகிறது. சென்ற முறையே நன்னன் செய்த காரியத்தை நான் எச்சரித்தேன். அவன் சரி என்று சம்மதித்து அதே துரோகத்தைச் செய்தான். அதை முறியடிக்க வேறு வழியில்லாததால் கருவூர் அரண்மனையைக் கைப்பற்றினேன். மேகலையை மீட்டேன். அதோடு நின்றிருந்தால்கூட பரவாயில்லை. நன்னன்விட்ட பணியை எழினி தொடர்ந்திருக்கிறான். அவன் உருவாக்கிய சூழ்நிலையை நீங்களே சற்று முன்னால் பார்த்திருப்பீர்கள். அதை உடைத்தெறியத்தான் வீரனுக்கு ஒவ்வாத காரியத்திற்கு வழி வகுத்தேன். அதன் விளைவுதான் டைரியஸ் தங்களைப் பிணைக் கைதி போல்

இங்கே அழைத்து வந்துவிட்டான். இந்தச் செயலுக்காக மிகவும் வெட்கப்படுகிறேன் மகாராணி. தாங்கள் அரண்மனைக்குச் செல்லுங்கள். தங்கள் நாயகரிடம் - சேரமான் இரும்பொறையிடம் சொல்லுங்கள் இனியும் இத்தகைய பெண் பிடிக்கும் வேலையை விட்டு விடும்படி. மாவீரர்கள் சந்திக்க வேண்டிய இடம் போர்க்களம். அங்குதான் பாண்டிய மன்னர் சென்று கொண்டிருக்கிறார். அங்கே போர்த்தந்திரம் எவ்வளவு வேண்டுமானாலும் காட்டச் சொல்லுங்கள். பதில் கொடுக்கிறோம். போய் வாருங்கள் மகாராணி''- என்றான் பழையன்.

சிறிது நேரம் மௌனமாய் இருந்த மகாராணி, 'நான் அரண்மனைக்குத் திரும்பப் போவதில்லை. எப்போது வெளி மனிதர்களால் அரச அந்தஸ்திற்குத் தகாத வகையில் அரண்மனையை விட்டு நான் வெளியேற்றப்பட்டேனோ அப்போதே நான் முடிவு செய்துவிட்டேன். இனி அதற்குள் மன்னரோடுதான் நுழைவேன்' - என்றார் கம்பீரமான குரலில்.

'வேண்டாம் தாயே - வேண்டாம் மகாராணி. அவ்வாறெல்லாம் சொல்லாதீர்கள். அரண்மனைக்குச் சென்றுவிடுங்கள். எங்களால் உண்டான சிரமத்திற்கு தண்டனையை அனுபவிக்க வேண்டியது நாங்கள்தான்' - என்று எழினியும் நன்னனும் ஒருசேர வேண்டிக் கொண்டார்கள்.

மகாராணி அப்போதும் சம்மதிக்கவில்லை. 'இப்போதைய நிலைக்கு யார் காரணம் என்பதை ஆராய நான் விரும்பவில்லை. பரிகாரம் செய்யவே



விரும்புகிறேன். மேகலை என்ற இந்தப் பெண் பல வகையில் பல இடங்களில் அல்லலுக்கு ஆளாகியிருக்கும் போது நானும் கொஞ்சமாவது அவ்வாறு அல்லல் பட விரும்புகிறேன். சேரமன்னர் இருக்கும் இடத்திற்கே செல்ல விரும்புகிறேன். அதற்கு ஏற்பாடுகளைச் செய்தால் மட்டும் போதும்'-என்றார்.

'எங்கே? போர்க்களத்திற்கா? வேண்டாம் தாயே வேண்டாம்' என்றான் நன்னன்.

'தாங்கள் அங்கு வருவதை சேர மன்னர் விரும்ப மாட்டார்'- என்றான் எழினி.

'பெண்களை அல்லலுக்கு ஆளாக்கியதை நானும் விரும்பமாட்டேன்' என்றார் மகாராணி.

'மகாராணி, தயைகூர்ந்து சற்று கேளுங்கள். தங்கள் வரவால் மன்னருக்கு அங்கே தொல்லைகள் உண்டாக லாம்' என்றான் நன்னன்.

'முட்டாள். ராணியின் வரவால் சேரமன்னருக்குத் தொல்லையா? என்ன உளறுகிறாய்? தன் பட்டத்தரசியின் வரவு சேரமன்னரை பாதிக்கும் என்று சொல்ல உனக்கு எத்தனை துணிச்சல்? கருவூர் அரண்மனை மாற்றார் வசமாகிவிட்டது என்ற செய்தியே அவரைப் பாதிக்கவில்லை என்றால் வேறு எது அவரைப் பாதிக்கும்?'- சீறினார் மகாராணி. பிறகு நன்னனிடமும் எழினியிடமும் 'உங்களிடம் நான் அபிப்ராயம் கேட்கவில்லை. யாரிடமும் யோசனை கேட்கவேண்டிய அவசியம் எனக்கில்லை'- கூறிவிட்டுப் பழையனிடம் ஏதோ கேட்பதுபோல் பார்த்தார்.

அவரது நெஞ்சுரமும் தீர்மானமும் பழையனைச் சற்றே அசர வைத்தது. சேரமன்னனின் நடவடிக்கைகளை அவர் விரும்பவில்லை என்பதும் அதேசமயம் சேர மன்னனின் கௌரவத்தின் பேரிலும் வீரத்தின் பேரிலும் அவருக்கு இருந்த நம்பிக்கையும் அக்கறையும் அவனைக் கவர்ந்தன. அவரது மனத்தை மாற்ற முடியாது என்பதை உணர்ந்தான். இப்படிப்பட்ட ஒருத்திக்கு மணாளனாக வாய்த்தும் சேரமன்னனின் புத்தி ஏன் கெட்டுப் போயிற்று என்று தனக்குள் கேட்டுக் கொண்ட அவன் 'நல்லது மகாராணி. உங்கள் விருப்பம் நிறைவேறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறேன்'- என்று கூறிவிட்டு அந்த முயற்சியில் இறங்கினான்.

கொஞ்ச நேரத்திலேயே 'ராஜ கம்பீரம்' என்ற சேரரது அரண்மனைத் தேர் கொண்டுவரப்பட்டது. அதில் மகாராணி ஏறி அமர்ந்தார். பின்னால் நான்கு தேர்களில் அவருக்குரிய ஆடை அணிகளும் விருந்துப் பொருட்களும் ஏற்றப்பட்டன. அவைகளுக்குப் பின்னால் நான்கைந்து வண்டிகளில் பணிப்பெண்கள் அமர்ந்தனர். கருவூர் அரண்மனைக் காவல் வீரர்கள் பத்துபேர் புரவிகளில் ஏறி இருபுறமும் அணிவகுத்தனர். மகாராணி புறப்பட்டார். கடைசியில் புரவி ஒன்றை வரவழைத்து எழினியிடம் கொடுத்து எழினி, 'உன் எஜமானனின் துணைவியாருக்குக் காவலாகப் போ. உன்னைச் சந்திக்க வேண்டிய இடம் போர்க்களமாய் இருக்கவேண்டும் என்றே விரும்புகிறேன். ஏனென்றால் நீ நடத்தை கெட்டவன் ஆனாலும் அரசமரபினன். தகடூரின் தலைவன். சேர சோழ மன்னர்கள் நம்பிக் கொண்டிருக்கும் போராயுதங்களில் ஒருவன். போய் வா.



சேர மன்னனுக்கு என் கடைசி எச்சரிக்கையைத் தெரிவி.' என்றான் அழுத்தம் திருத்தமான குரலில்.

'நன்னன்?'... என்று வினவினான் எழினி.

'சிறிது நாட்களுக்கு அவன் உயிர் வாழட்டும்'... என்றான் பழையன்.

'புரியவில்லை'-

'அவன் உன்னுடன் வந்தால் சேர மன்னனுக்கு முன்னால் கழுவில்தான் ஏறவேண்டும்.' என்று சொன்ன பழையன் 'என்ன நன்னா?'. என்று நன்னனிடம் வினவினான்.

பழையன் சொல்வதில் சந்தேகம் எதுவும் இல்லை. ஆதலால் நன்னன் பதிலேதும் பேசாமல் தலைகுனிந்தபடி நின்றான். பல்வேறு முயற்சிகளில் தொடர்ந்து தோற்றுத் தோற்று அவமானமும் அடைந்து உயிருக்கு உத்திரவாதம் இல்லாத நிலையை அடைந்துவிட்ட அவனது இதயம் ரணகளமாகி விட்டிருந்தது. ஒரு முறையாவது வென்றிருக்கக் கூடாதா என்ற ஆதங்கமும் இனி வெற்றி பெறுவதற்கு வாய்ப்பில்லையே என்ற ஏக்கமும் அவனைப் பெரிதும் பாதித்துவிட்ட காரணத்தால் பதில் பேச விரும்பாமலும் மௌனமாய் இருந்தான்.

எழினிக்கும் மேற்கொண்டு என்ன பேசுவதென்று தெரியவில்லை. பேச விரும்பவில்லை. உண்மையில் பேசுவதற்கு எதுமில்லை. முக்கால் கிணற்றைத் தாண்டி விட்ட மாதிரி முழங்கால் தடுக்கி விழுந்துவிட்ட மாதிரி தன் முயற்சி தோற்றுவிட்ட விதம் அவனுக்கு அவமானமாக இருந்தது. நன்னனைப் போன்று அவன்

கோழை அல்ல. அதோடு நன்னனைப் போல் அடிமைத் தொழில் செய்வதற்கும் அவன் விரும்புபவன் அல்ல. தகடூரின் தலைவனாகவும் அவனிருந்தான். இதனால் தன் முயற்சியில் உண்டான தோல்வியும் அது நிகழ்ந்த விதமும் அவனை மிகவும் பாதித்தன. சேரமன்னன் பழையனைப் பற்றியே எண்ணி அவன் நினைவாகவே புலம்பிக் கொண்டிருந்ததைக் கண்டு சகிக்க முடியாமல் அதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க விரும்பித்தான் அவனாகவே முன்வந்து பழையனைப் பிடித்து வருதாகச் சொல்லிப் புறப்பட்டானே தவிர அந்தக் காரியத்தில் அவனுக்கு உண்மையான ஆர்வமோ மதிப்போ இல்லாமல்தான் இருந்தது. கருவூர் வந்தடைந்து பழையனின் இருப்பிடத்தை அறிந்து ஆற்றங்கரை மாளிகைக்குச் சென்று மேகலை இருப்பதைக் கண்டபின் அவளை மடக்கி வைத்து பழையனை வளைத்த செயல் தற்செயலாக நடந்த ஒன்றுதானே அன்றி அது அவன் எதிர்பார்த்த வாய்ப்பே அல்ல. அதோடு அவன் பழையனைப் பிடிக்க வேறுமாதிரி திட்டமே தீட்டி வைத்திருந்தான். அத்திட்டம் கைவிடப்பட்டதும் தற்செயலானதுதான். எனவே எதிர்பாராராத நிகழ்ச்சியில் ஈடுபட்டு தோல்வியடைந்து ஏறக்குறைய உயிர்ப்பிச்சையைப் பெற்றது போன்ற ஒரு நிலையைத் தான் அடைந்தது குறித்து வெட்கப்பட்டான். சேரன் இருக்குமிடத்திற்குத்தான் செல்ல வேண்டியது அவசியம் தானா என்று கூடத் தோன்றியது அவனுக்கு. அங்கு சென்றால் சேரனின் அவமதிப்பைத்தான் பெற வேண்டி இருக்கும் என்பது அவனுக்கு தெரிந்திருந்ததால் சற்று தயங்கினான். ஆனால் தயக்கத்தைப் பிறகு அவன் விட



வேண்டியதாயிற்று. தான் போரில் ஈடுபடுவது சோழ மன்னனின் அழைப்பினால் தான் என்பதாலும், சேரனைப் போல் சோழன் பிறரை இகழ்வதை விரும்பாதவன் என்பதாலும், தான் தற்சமயம் ஒதுங்குவதென்பது அச்சோழனுக்குச் செய்யும் துரோகம் என்பதாலும் வேறு வழியின்றி ஆற்றங்கரை மாளிகையை விட்டுப் புறப்பட்டான்.

அவன் சென்றபின் டைரியஸை அழைத்த பழையன் ''டைரியஸ், கருவூர் அரண்மனையைச் சஞ்சயனிடமே ஒப்படைத்து விடு. உனது நண்பர் நன்னனை அழைத்துக் கொண்டு சந்தனக் கோட்டைக்குப் போ. அவரது உதவியோடு அவரது இருக்காங்களாலும் திருவாக்கினாலும் அவரது ஆட்களைக் கொண்டே அதை அழித்துவிடு. பிறகு நான் சொன்னபடி செய். என்னிடமிருந்து செய்தி வந்ததும் உடனே செயலில் இறங்கு. நன்னனை மட்டும் கொன்று விடாதே. பாவம். நானும் மேகலையும் பாண்டியரிடம் செல்கிறோம். இனி அவளைத் தனியே விட்டு விட்டு மீண்டும் மீண்டும் நான் இது போன்று முயற்சி செய்து கொண்டிருக்க முடியாது. போர் வானம் மிகவும் கறுத்து விட்ட நிலையில் பாண்டிய மன்னரைவிட்டு நான் விலகி இருப்பது சரியல்ல. போர் மிகவும் கடுமையாக இருக்குமென்றே தோன்றுகிறது. சேர சோழருடன் ஆறு மாவீரர்கள் அணி சேர்ந்திருப்பது மிகப் பெரும் விஷயம். அதை எதிர்ப்பதென்பது சாமானியமான காரியமல்ல. மேகலையின் தந்தையை மதுரையில் சேர்த்துவிடு'' என்று பல்வேறு செய்திகளை பல்வேறு உணர்ச்சிகளால் சிக்குண்ட நிலையில் கூறிவிட்டு தன் புரவியை நோக்கி மேகலையை

அழைத்துக்கொண்டு சென்றான் பழையன். அவனது மனமெல்லாம் போர்ச் சிந்தனைகளே மீண்டும் மீண்டும் தழைத்தபடி இருந்தன.

இதே நேரத்தில் சேர சோழ பாண்டியரது அணியைச் சந்திக்கும் முயற்சியில் நீடூரை அடைந்திருந்தன பாண்டியன் நெடுஞ்செழியனின் படைகள். நீடூர் எவ்வியின் வசமிருந்த விவரமும் அவன் சேர சோழரது தலைமைக்கு ஆதரவளிக்கும் விஷயமும், அவன் தற்போது தன் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறான் என்ற நிலைமையும் நெடுஞ்செழியனுக்கு தெரிவிக்கப்பட்டன. இவற்றைத் தெரிவித்த தளபதி அதுகை தன் யோசனையைத் தெரிவித்தபோது பெரும் பேரிகையொலி ஒன்று எழுந்து அப்பிராந்தியத்தையே கலக்கியது.

◈◈◈

முரசு நாற்பத்தேழு

## காவிரியில் காதலர்கள்

'என்னையா போர்க்களத்திற்கு அழைத்துச் செல்கிறீர்கள்?' வியப்புத்ததும்ப கேட்டாள் மேகலை.

'ஆம். அங்குதான் உன்னை அழைத்துச் செல்கிறேன்' என்று சாதாரணமாகச் சொன்னான் பழையன்.

'நான் பெண் என்பதை மறந்து விட்டீர்களா?'- பேதையைப் போல் கேட்டாள் மேகலை.

'சேர மகாராணியைப் பார்த்தாய் அல்லவா? அவள் பெண் தானே மேகலை?'... கேட்டான் பழையன்.

'இருவரும் ஒன்றாகிவிட முடியுமா? அவர் பெரிய ராணி அல்லவா?' வினவினாள் மேகலை.

'சேரனுக்கு அவர் ராணி என்றால் எனக்கு நீ ராணி. ஒரு வேளை நான் படைத்தலைவன் தானே என்கிறாயா? சேரமன்னன் அவ்வாறு நினைக்கவில்லை தெரியுமா உனக்கு? என்னைப் பிடிக்கத்தான் என்னவெல்லாம் செய்கிறான் தெரியுமா?'-

'நான் நினைக்காததையெல்லாம் ஏன் கற்பனை செய்கிறீர்கள்?'

'பெண் ஒருத்தி அருகில் இருந்தால் கற்பனை ஏற்படுவது இயல்புதான்'-

'இப்போதைய நிலையில் உங்களுக்கு கற்பனை வேறு வருகிறதா?'

'சூழ்நிலை எதுவானால் என்ன? கற்பனைக்கு தேவை பெண்தான்'-

'சரிசரி- அந்தக் கதையை விடுங்கள். நான் வருவது உங்களுக்குத் தொல்லையாக இருக்காதா?'

'இருக்கும்தான்'-

'பிறகு?'

'முள் குத்துமே என்பதால் மலரை யாராவது பறிக்காமல் இருக்க முடியுமா?'

'நீங்கள் இருக்கலாம். மன்னர்?'-

'எந்த மன்னர்?'-

'இதென்ன கேள்வி? நம் பாண்டிய மன்னரைத்தான்'

'அவரைப் பற்றி உனக்குத் தெரியாதா?'

'தெரியும்.' ஆனால்...'

'என்ன ஆனால்?'-

'நீங்கள் அனுப்பிய பட்டுச் சீலையில் அவரைப் பற்றி வேறு மாதிரி எழுதியிருந்தீர்களே?'-

'அவரைப் பற்றி மட்டும்தானா? என்னைப் பற்றிக் கூடத்தான் நிரம்ப எழுதியிருந்தேன்? அவைகளையும் நீ நம்பிவிட்டாயா?'-

'ஏன் அப்படியெல்லாம் பொய்யாக எழுதினீர்கள்?'-

'நன்னனைச் சற்று குழப்பி வைக்கத்தான்'-



'அதெப்படி?'-

'நான் அனுப்பிய அச்சீலை எப்படியும் அவன் கையில் சிக்கும்.'

'எப்படி? நான் காட்டியிராவிட்டால்?'

'காட்டும்படி செய்திருப்பேன். அதையெல்லாம் கேட்காதே மேகலை. எப்படிப்பட்ட செய்தியை எப்படி யாருக்கு எப்போது எதற்காக அனுப்பவேண்டும் என்பதெல்லாம் எனக்குத் தெரியும். எதையும் சரியாக அனுமானம் செய்தே காரியங்களைச் செய்கிறேன் நான். நான் அனுப்பும் சீலை முதலில் உன்னையும் உன் தந்தையையும் சினப்படுத்தும். குழப்பும். அந்தக் கோபத்திலும் குழப்பத்திலும் சீலையை மறைக்க நீங்கள் மறந்து போவீர்கள். அந்த நிலையில் அது நன்னனுக்கோ அவனது ஆட்களுக்கோ தெரியும். சீலைச் செய்தியை நன்னன் அறிந்தால் அவன் நன்றாகக் குழம்புவான். ஏற்கெனவே மந்த புத்தி கொண்ட அவனுக்கு இது போன்ற குழப்பங்கள் அசையவொட்டாமல் செய்து விடும். அப்போது என் பிறகாரியங்கள் எளிதில் நிறைவேறும். இப்படியெல்லாம் எண்ணித் திட்டம் தீட்டினேன். இம்மியும் பிசகவில்லை'-

சீலைச் செய்தியை வைத்து நான் தவறான முடிவுக்குப் போயிருந்தால்?'-

'போக முடியாது மேகலை. உன்னைத் தன் கண்போல காக்கும் நிலை நன்னனுக்கு. உன்னை வைத்துத்தான் என்னை அவன் பிடிக்க முடியும். நான் பிடிபடும் வரை உன்னை அவன் எப்படியும் காப்பான். அது மட்டுமல்ல.

சிலையை அனுப்பிய நான் பேசாமல் உட்கார்ந்து விடவில்லையே. உன் இருப்பிடத்தை அறிந்து கண்காணித்தபடி தானே காரியங்களைச் செய்து கொண்டிருந்தேன்?'-

'சந்தனக் கோட்டைக்கு வந்து நீங்கள் காப்பாற்ற வில்லையே ஏன்?'-

'முன்பு நீயும் நானும் சந்தனக் கோட்டைக்குள் இருந்தோம். நம்மிடம் நன்னன் சிக்கினான். அவன் உயிரைக் கருவியாக்கித் தப்பினோம் இந்த முறை நிலை வேறு. நான் சந்தனக் கோட்டைக்கு வந்து நன்னனை கூடப் பிடிக்கலாம். ஆனால் முன்போல் நன்னனின் உயிரைக் கருவியாக்கி உன்னை மீட்க முடியாது. ஏனென்றால் இந்தமுறை நன்னனின் உயிரைப் பற்றிச் சேரமான் கவலைப்படவில்லை. ஆகவே சந்தனக் கோட்டைக்குள் வந்து முயல்வது என்ற தற்கொலைக்கு ஒப்பான காரியத்தை நான் செய்ய விரும்பவில்லை, மாறாக சந்தனக் கோட்டைக்கு வெளியே இருந்தபடியே உன்னை மீட்பது என்று தீர்மானித்தேன்.'

'கருவூருக்கு என்னை கொண்டு சென்றானே நன்னன்? அது ஏன்?'-

'அவனா கொண்டு போனான்? நான் தானே அதற்கான கட்டளையை இட்டேன்?'

'நீங்களா?'-

'ஆம். மேகலை. சந்தனக் கோட்டையின் அமைப்பு பற்றி உனக்குச் சரியாகத் தெரியாது. மிகவும் பயங்கரமானது. அதை வெளியே இருந்தபடி சிதைத்து



உன்னை மீட்க முடியாது. ஒரு சிதைவும் இன்றி உன்னை அங்கிருந்து மீட்கவேண்டும். மீட்ட பின் என்னை அடைய வேண்டும். அதற்கு ஓர் இடம் வேண்டுமல்லவா? அதற்குத் தான் கருவூரைத் தேர்ந்தெடுத்தேன்'

'ஏன்?'-

'என்னைப் பிடிக்க எப்படி உன்னை அவர்கள் பகடைக்காயாகப் பயன்படுத்தினார்களோ அதே போல் உன்னை விடுவிக்கவும் அவர்களில் ஒருவனைப் பகடைக் காயமாக பயன்படுத்துவதை விட வேறு வழியில்லாமல் இருந்தது. அந்தப் பகடைக்காய் நன்னனை விட பெரிதாக இருந்தொலொழிய உன்னை மீட்க முடியாது என்ற நிலை. அந்த நிலையில் தான் கருவூரைப் பற்றிய நினைவு எனக்கு வந்தது. கருவூரின் மன்னனால் வந்த பிரச்சனையை கருவூரைக் கொண்டே தீர்ப்பது என்று முடிவு செய்தேன். அதன் நிலையைப் பற்றி எனக்கு ஓரளவிற்குத் தெரிந்திருக்கவே அதைக் கைப்பற்றி பணயமாக வைத்து உன்னை மீட்கக் கருதினேன்.'

'எப்படிக் கைப்பற்றினீர்கள்?'

'டைரியஸின் மூலம்'-

'யார் அந்த அரபிக் கடல் கொள்ளைக்காரனா? யவனனா?'-

'ஆமாம் மேகலை. அவன் கொள்ளைக்காரன்தான். ஆனால் இப்போது அவன் கொள்ளையடிப்பது சேர நாடும் அதன் கடலோரமுமே. ஆதலால் நமக்கு நஷ்டமெதுவும் இல்லை. அவனது உயிரை ஒரு முறை காத்து பெரும் செல்வத்தை அடைய நான்

உதவியதிலிருந்து என்னிடம் மிகவும் விசுவாசமாய் இருக்கிறான். அதுவரை லாபம்தான். அவனுக்குச் செய்தியனுப்பி கருவூரைத் திடீரெனத் தாக்கிப் பிடிக்கச் சொன்னேன். அவன் அதை மிகவும் எளிதாகச் செய்தான்.'

'சேரரின் தலைநகர் ஒரு கொள்ளைக்காரன் பிடித்துவிடக் கூடிய கேவல நிலையிலா இருந்தது?'

'ஆம். சேரமன்னன் சோழனுக்கு உதவி ராசசூய யாகம் நடத்த உதவும் முயற்சியில் தன் நாட்டைப்பற்றிக் கூட கவலைப்படவில்லை. சாதாரணமாகவே வேறு நாட்டு படையெடுப்பில் ஈடுபடும் மன்னர்கள் தங்கள் நாட்டு காவலுக்குப் பெயரளவு படைவீரர்களை வைத்துவிட்டுச் செல்வார்கள். இங்கு சேரன் யானைக்கண்சேய் அந்தப் பெயரளவு காவலைக் கூடச் செய்யவில்லை. உண்மையைச் சொல்லப் போனால் அவனுக்குக் கருவூர் வீழ்ந்தால்கூட கவலை இருந்திருக்காது என்றே சொல்லலாம். அவனது முழு கவனமும் பாண்டியர் முறியடிப்பில் தான். அதை நிறைவேற்றிய பின் தன்னால் எதையும் செய்து கொள்ள முடியும் என்ற பெரும் நம்பிக்கையும் அவனுக்கு இருக்கவேண்டும். அதனால் தான் கருவூரை பலமற்ற நிலையிலேயே விட்டு விட்டுப் போயிருந்தான். அதோடு டைரியஸ் கைப்பற்றியது கூட கருவூர் அரண்மனையைத் தானே தவிர கருவூர் கோட்டையை அல்ல. திடீரெனத் தாக்கிய அவனது கொள்ளைக்காரர்கள் கோட்டையில் பிரவேசித்து அரண்மனையை வளைத்து மகாராணி உட்பட அனைவரையும் சிறைப்படுத்தினார்கள். அக்கொள்ளையரின் பயங்கரத்தை நன்றாகவே அறிந்திருந்த சேர காவல்



வீரர்கள் அவனுக்கு அடிபணிந்தார்கள். இந்த நிலையில் தான் அங்கு சென்றேன். கோட்டையை எதுவுமே நடக்காத மாதிரி இயல்பான நிலைக்குக் கொண்டு வந்தேன். மகாராணியை நான் சிறை வைத்து அச்சுறுத்தியதால் சேர காவல் வீரர்கள் எனக்குப் பணிந்தார்கள். அதோடு தேவையான உத்தரவுகளை அவர் மூலமே சேர வீரர்களுக்குப் பிறப்பித்தேன். மகாராணியின் உயிர் என் கையில் இருந்ததால் சேர வீரர்கள் எனக்கு முன்பு மட்டுமின்றி எனக்கு அப்பாலும்கூட நான் சொல்லியபடியே நடந்து கொள்ள வேண்டியதாயிற்று. அவர்கள் மூலம்தான் சந்தனக் கோட்டையில் இருந்த நன்னனுக்குச் செய்தி அனுப்பினேன். சந்தனக் கோட்டையைத் தாக்க டைரியஸ் நெருங்குவதால் உன்னை கருவூர் அரண்மனைக்குக் கொண்டு வந்து விடும்படி கருவூர் ஒற்றர் தலைவன் சஞ்சயனைக்கொண்டு ஓலையனுப்பினேன். அச்செய்தியை நன்னன் நம்புவதற்காக சஞ்சயன் மூலமாகவே ராஜமுத்திரையைப் பற்றிய செய்தி அறிந்து அதையும் பயன்படுத்திக் கொண்டேன். சந்தனக் கோட்டையை அடுத்த சேரர்களின் காவற்கூட மலைச் சிகரத்திலும் உரிய முன்னேற்பாடுகளைச் செய்தேன். குழம்பிக் கிடந்த மந்த புத்தி படைத்த நன்னன் அனைத்தையும் நம்பினான். டைரியஸுக்கு பயந்து உடனடியாக உன்னை அழைத்துக் கொண்டு கருவூருக்குப் புறப்பட்டான். பிறகு நடந்தது எல்லாம் உனக்கே தெரியும். நம் இருவரையும் சிறைப்படுத்திய சந்தனக் கோட்டை இனியும் இருக்க வேண்டாம் என்றே அதை அழித்துவிடும்படி டைரியஸிடம் சொல்லியிருக்கிறேன்.''

'டைரியஸ் இனியும் உங்கள் சொற்படி நடப்பானா?'-

'ஏன் நடக்க மாட்டான்? அவனுக்குத்தான் ஊதியத்திற்கு அடிக்கடி ஏற்பாடு செய்கிறேனே?'

'ஊதியமா?'-

'ஆமாம்: முன்பு படியூரில் அளித்தேன். இப்போது கருவூரில் களஞ்சியத்தில் இருந்ததையெல்லாம் கொடுத்து இருக்கிறேன். போதாதா? அவன் இனி உதவவில்லை என்றாலும் எனக்குக் கவலையில்லை. நீதான் என்னுடன் இருக்கிறாயே'

'இப்போது புரிந்து கொண்டீர்களா?'

'எதை?'

'ஆற்றங்கரை மாளிகையில் இருந்தபோது'-

'இருந்த போது?'-

'நீங்கள் நீராடப் போவதாகச் சொன்னீர்களே'-

'ஆமாம் சொன்னேன்'

'நானும்கூட வரட்டுமா என்று கேட்டேன் அல்லவா?'

'ஆமாம்'

'நீங்கள் சரி என்று சொல்லியிருந்தால் நானும் வந்திருப்பேன். இந்தத் தகடூர் எழினியும் என்னைப் பிடித்திருக்க முடியாது'

'அதனால்?'...

'நான் உங்களுடனேயே இருப்பதுதான் எதற்கும் நல்லது.'



'அப்படியானால் சரி. அதோ பார் காவிரியின் உல்லாச ஓட்டம். நேரமோ இரவு நேரமாய் இருக்கிறது. எனக்கும் நீராடவேண்டும் போல் இருக்கிறது. இந்த முறை நீ என்னுடனேயே வந்துவிடலாம். என்ன?'

'எனக்கு மாற்று உடைகள் இல்லையே?'

'யார் சொன்னது?' என்று கேட்ட பழையன் தன் விரல்களை வாயில்விட்டு ஒருவிதமான ஒலியை எழுப்பினான். அதையடுத்து சில நிமிடங்களிலேயே தனிப்புரவி ஒன்று மூட்டையொன்றைத் தாங்கியபடி அவனிடம் வந்துநின்றது.

'இதெப்படி இவ்வளவு முன்னேற்பாடாகச் செய்திருக்கிறீர்கள்?'

'ஆற்றங்கரை மாளிகையில் வேண்டிய ஆபரணங்கள் இருந்தனவே, அவற்றில் சிலவற்றை எடுத்து வைத்துக் கொண்டேன். நீ ஒரு புரவியிலும் நான் ஒரு புரவியிலும் பயணம் செய்யலாம் என்றுதான் முதலில் நினைத்தேன். பிறகு சரிபட்டு வராது என்று அந்த எண்ணத்தை விட்டுவிட்டு அந்த இரண்டாவது புரவியில் ஆபரணங்களையும் உணவுப் பொருட்களையும் ஏற்றி அனுப்பும்படி டைரியஸிடம் சொன்னேன். நாம் புறப்பட்ட கொஞ்ச நேரத்திலேயே அது நம்மைப் பின்பற்றி வந்து விட்டது.'

'அதெப்படி?'

'இவ்விரண்டு புரவிகளும் நம்மைப் போல் காதலர்கள். இவைகளுக்கு எதையும் சொல்லித் தர வேண்டியதில்லை. அந்த அளவிற்கு ஏற்கெனவே

பழக்கப்பட்டவை. குறிப்பறிந்து நடக்கக் கூடியவை. எனது இரண்டு கண்கள் என்று வைத்துக் கொள்ளேன். இவைகளின் பெயர் என்ன தெரியுமா? நாம் பயணம் செய்யும் இப்புரவியின் பெயர் புயல். ஆண் புரவி புயலைப் போலச் செல்லும். அதோ மூட்டையைச் சுமந்து நிற்கிறதே அதன் பெயர் தென்றல். அதன் மீது சவாரி செய்வதே தனி இன்பம் தெரியுமா?'

'நல்ல ஆள். நல்ல புரவி'-

'உன்னை ஏன் விட்டு விட்டாய்? நீயும் நல்ல போக்கிரி தான்'

'போக்கிரியா?'-

'நல்ல போக்கிரி என்று தானே சொன்னேன்? சரி சரி. தாமதிக்காதே வா. சற்று அலுப்பைப்போக்கிக் கொண்டால்தான் நாளை மாலைக்குள் போக வேண்டிய இடத்தை அடையலாம்' என்று கூறிக் கொண்டே புரவியிலிருந்து குதித்த அவன் அவளையும் கீழே இறக்கிய பின் புரவிகளை நோக்கி மீண்டும் ஒரு குரல் கொடுத்தான். புயலும் தென்றலும் அவ்விடத்தை விட்டு அகன்றன.

'இவ்விரண்டும் சிறந்த ஒற்றறியும் புரவிகள். நாமிருக்கும் இடத்திற்கு அருகிலேயே இருக்கும். ஏதேனும் ஆபத்தென்றால் குரல் கொடுக்கும். கவலை இல்லை' என்று கூறிவிட்டு மேகலையின் கையைப் பிடித்துக்கொண்டு காவிரியை நோக்கி ஓடினான்.

அவன் ஆற்றங்கரை மாளிகையை விட்டுப் புறப்பட்ட போது விடியும் நேரமாகி விட்டிருந்தது. அங்கிருந்து நேர்கிழக்கில் ஆற்றங்கரை ஓரமாகவே பயணம்



செய்தான். தனது இருப்பிடம் ரகசியமாகவே இருக்கட்டும் என்று கருதிய அவன் ராஜ பாட்டைகளைத் தவிர்த்து காவிரிக் கரையோர காட்டு வழியிலேயே பயணம் செய்தான். அதனால் சற்று நிதானமாகவும் எச்சரிக்கையாகவுமே செல்ல வேண்டியிருந்தது. எனவே தான் அவன் உறையூரை அடையும் போது பொழுது சாய்ந்து இருள் எழுந்து விட்டிருந்தது. இந்த நிலையில் தான் மேகலையுடன் நீராடுவதற்காகக் காவிரி ஆற்றை நோக்கிச் சென்றான் பழையன்.

கவலைகள் ஏதுமின்றி தன் காதலியுடன் அவன் ஆசை தீர நீராடினான். காதலியோடு நீராடும் சுதந்திரத்திற்கு இணை வேறு எதுவும் இல்லை என்று கருதியவனாய் நீராடினான். தங்களை எச்சரிக்க புரவிகள் இரண்டு இருப்பதாக பழையன் கூறியதால் மேகலையிடம் இருந்த பயம் நீங்கியது. பயம் நீங்கியதால் தயக்கம் நீங்கியது. தயக்கம் நீங்கியதால் சுதந்திரம் கொடிகட்டிப் பறந்தது. ஆனால் அவர்கள் முற்றிலும் எதிர்பாராத ஆபத்தொன்று அங்கே இரண்டு உருவங்கள் வடிவத்தில் இருக்கத்தான் செய்தது. அவ்விரண்டு உருவங்களும் ஆற்றங்கரை நாவல்மரக் கிளைகள் இரண்டில் படுத்துக் கொண்டு இருவரது விளையாட்டையும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தன.

◈◈◈

முரசு நாற்பத்தெட்டு

# புயலும் தென்றலும்

ஆகாயத்தில் சந்திரன் மேகத்திற்குள் மறைவதும் வெளிப்படுவதுமாய் இருந்தது. அதே போல் பழையனும் மேகலையும் ஆற்றுக்குள் மறைவதும் வெளிப்படுவது மாய் இருந்தார்கள். விளையாடுகிறார்களா அல்லது நீராடுகிறார்களா என்று அனுமானிக்க முடியாத விதத்தில் இருந்தது அவர்களது நடவடிக்கை. பழையனோ தனக்கே உரிய இயற்கையான அலட்சியத்தையும் முரட்டுத் தனத்தையும் காட்டி நீந்தியும் தாவியும் பாய்ந்தும் நீராடினான். மேகலையோ மகிழ்ச்சி வெள்ளத்திலும் காதல் வெள்ளத்திலும் மூழ்கியிருந்ததால் விஷமக் குதூகலத்துடன் நீரில் நீந்தி விளையாடினாள். நீருக்குள் மூழ்கி திடீரென காணாமல் போனது போல் நடித்தான் பழையன். அவள் அவனைத்தேட நீரில் மூழ்கினாள். அந்த சந்தர்ப்பத்திற்காகவே காத்திருந்த பழையன் நீருக்கடியில் அவளை இழுத்தணைத்து முரட்டுத் தனமாகப் புரட்டிப் போட்டான். அவள் கோபப்படுபவள் போல் நடித்தாளே தவிர விலகி ஓடவோ அவனைக் கண்டிக்கவோ முற்படவில்லை. மாவீரம் செறிந்த காதலனோடு சரசமாடும் இத்தகையதொரு சந்தர்ப்பத்தை தனக்குக் கிடைத்த வரப்பிரசாதமாக எண்ணி அவள் அதில் ஈடுபாடு கொண்டவளாய் அவனை விஷமங்கள் செய்யத் தூண்டினாள். நீரில் மறைந்து பின் அவளை அணைத்த அவனது முரட்டுத்தனத்தை அவளே செய்யவும் செய்தாள்.



அவளது வெட்கங்கெட்ட ஆனந்த விளையாட்டைக் கண்ட விண்மீன்கள் எள்ளி நகையாடுவது போல் கண் சிமிட்டின. ஆற்றுமீன்களோ வெட்கப்பட்டு அவர்களை விட்டு விலகிஓடின. சந்திரன் கூட சங்கடப்பட்டானோ என்னவோ. அடிக்கடி அவன் மேகத்திரையை மூடிக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஆற்றங்கரை நாவல் மரக்கிளைகளில் ஊர்ந்து கிடந்த இருவருக்கு மட்டும் இக்காதலர்களின் விளையாட்டுகள் மிகுந்த எரிச்சலைத் தந்தன. நேரங்கெட்ட நேரத்தில் நீர்விளையாட்டென்ன வேண்டியிருக்கிறது இவர் களுக்கு? அதுவும் இவ்வளவு நேரமா? நீண்ட நேரமாக நீராடிக்கொண்டிருக்க வேறு சமயமா கிடைக்கவில்லை என்று எரிச்சலடைந்த அவர்களுக்கு ஆகாயத்தின் பேரிலும் ஆத்திரமாகத்தான் இருந்தது. 'இன்றென்ன என்றுமில்லாத விதத்தில் மேகக் கூட்டங்கள் வந்த வண்ணமாயும் சந்திரனை மறைத்த வண்ணமாயும் இருக்கின்றன? வெறும் சந்திர ஒளியில் அவர்களைக் காண்பதே பெரும் கஷ்டமான காரியம். இதில் சந்திர ஒளி அடிக்கடி மறைந்தால் எப்படிப் பார்ப்பது? குறிவைப்பது? போதாத குறைக்கு இக்காவிரியின் அகலம் வேறு? அகலம் இல்லாத இடத்தில் குளிக்கக் கூடாதா இவர்கள்? அகலம் அதிகமான இந்த இடத்தில் அதுவும் நடுப் பகுதியில் போய் விளையாடிக் கொண்டிருக்கிறார்களே. இவர்களைப்போய் இந்தச் சந்திர ஒளி அதிகமில்லாத நிலையில் குறிவைப்பதோ வேலெறிந்து கொல்வதோ அம்பெறிந்து வீழ்த்துவதோ எப்படிச் சாத்தியம்? இருக்கட்டும் இருக்கட்டும். எப்படியும் இங்குதானே கரையேறவேண்டும். இருவர் மீதும் இரண்டு வேல்களை

எரிந்து தீர்த்து விட வேண்டியதுதான்' என்று தீர்மானித்துக் கொண்டார்கள். சேரமன்னனால் அனுப்பப் பட்ட அந்த இரண்டு வில் வீரர்கள்.

சேரமன்னனுக்கு எழினியின் மீது நம்பிக்கையில்லை. என்னதான் எழினி சூளுரைத்து விட்டுச் சென்றாலும் அவனால் பழையனைப் பிடித்து வரமுடியாது என்று உறுதியாக நினைத்தான் இரும்பொறை. ஆகவேதான் பொருநன் வசமிருந்த வில்வீரர்கள் இருவரை அனுப்பி மறைந்திருந்தாவது பழையனைக் கொன்று விடும்படி உத்திரவிட்டு அனுப்பினான். பழையனை மடக்குவதும் சிறைப்பிடிப்பதும் முடியாத வேலை என்பதும் அவனை நேருக்கு நேர் நின்று வீழ்த்துவது வெறும் கனவு என்பதும் சந்தேகமற அவன் உணர்ந்திருந்திருந்த காரணத்தால் அவனைத் தீர்த்து விடவே விரும்பினான். அக்காரியத்தை வஞ்சகமாகச் செய்யவேண்டும் என்பதும், மறைந் திருந்தாவது நிறைவேற்றிவிட வேண்டும் என்பதும் அவனது தீர்மானங்களாகி விட்டதால் தன் தர்ம நியாய நெறிகளை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு வில் வீரர்களை அனுப்பி வைத்தான்.

அவர்கள் ஆன் பொருனை நதிக்கரை மாளிகைக்கு வந்து விஷயமறிந்த பின் பழையன் போன பாதையில் பின் தொடர்ந்தார்கள். பழையனின் பயணம் ராஜபாட்டையில் இருக்கும் என்று எதிர்பார்த்த அவர்கள் அம்பெறிந்து கொன்றுவிடுவது எளிது என்று நினைத்தார்கள். ஆனால் பழையனோ ராஜபாட்டையைத் தவிர்த்து காட்டு வழியை பயணவழியாய் மேற்கொண்டதால் அவனைப் பின் தொடர்வதும் கொல்வதும் அவர்களுக்கு எளிதான



காரியங்களாக இல்லை. எனவே தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்தவர்களாய் அவர்களை அவர்கள் அறியா வண்ணம் பின் தொடர்ந்து சென்றார்கள். உறையூர் அருகே பழையனும் மேகலையும் நீராடச் சென்றதைக் கண்ட பின்பே தான் எதிர்பார்த்த சந்தர்ப்பம் கிடைத்ததாய் எண்ணி மகிழ்ந்த அவர்கள் கரையோர நாவல் மரத்தில் ஏறினார்கள். நீராடும் பழையனையும் மேகலையையும் தீர்த்துவிடும் எண்ணத்தில் வில்லில் நாணேற்றினார்கள். அந்த வாய்ப்பும் கைகூடாத விதத்தில் மேகங்கள் அடிக்கடி நகர்ந்து நிலவை மறைத்து இருளாக்கியபடி இருந்தன. அதோடு பழையனும் மேகலையும் நீச்சலில் வல்லவர்களாக இருந்தபடியால் கரையோரமாக நீராடாமல் அகன்ற ஆற்றின் நடுவிற்கே சென்றுவிட்டார் களாதலால் வில் வீரர்களுக்குப் பெரும் இடைஞ்சலாக இருந்தது. எனவே 'சரி. எப்படியானாலும் கரையேறத் தானே வேண்டும்? பார்த்துக் கொள்ளலாம்' என்ற தீர்மானத்துடன் மரக் கிளைகளிலேயே காத்துக் கிடந்தார்கள்.

ஆனால் இந்த தீர்மானத்தையோ ஆபத்தையோ அறியாத நிலையில் உல்லாசத்தின் படிகளில் பழையனும் மேகலையும் ஏறிய வண்ணம் இருந்தார்கள். மேகங்களும் சந்திரனும் மறைந்து மறைந்து தோன்றி இருளையும் ஒளியையும் மாறி மாறி தந்து கொண்டிருந்தாலும் இருள் சூழ்ந்த நேரமே அதிகமாக இருந்ததாலும், தனிமை கொடுத்த சுதந்திரத்தாலும் அவர்கள் தங்கள் நிலை மறந்தார்கள். பழையனின் கை அடிக்கடி விஷமங்களைச் செய்தது. செய்யப்பட்ட விஷமம் நீருக்கு அடியில்தான். பிறரால் பார்த்துவிட முடியாதுதான். ஆனாலும் அந்த

விஷமங்கள் அதுவரை அனுபவித்தறியாததாயும் புதியதாயும் இருந்ததால் மேகலைக்கு இன்பச்சங்கடமாய் இருந்தது. 'இப்படியெல்லாம் இவர் செய்யலாமா? என்று நினைத்த அவள் அதே சமயம் 'இன்னும் என்னவெல்லாம் செய்வார்?' என்று எண்ணவும் வைத்தன. ஒரு முறை விஷமம் செய்து அவனது கை விலகிய போது சங்கடம் நீங்கியது போல் தோன்றினாலும் மறுகணம் 'என்ன அவசரம்? இதற்குள் ஏன் விலகிவிட் டார்? நான் என்ன தடையா செய்துவிட்டேன்?' என்று திருட்டுத்தனமாக அவள் மனம் கேட்டுக் கொள்ளவும் செய்தது. ஆரம்பத்தில் புதியதாய் இருந்ததால் சங்கடமும் தயக்கமும் கொண்ட அவள் பழகப் பழக தன்னையே மறந்து அவனுடன் இழைய ஆரம்பித்தாள். அவளது மாற்றம் அவனுக்குத் தெரிந்ததோ இல்லையோ - பழையனுக்குத் தெரிந்தது. பெண்ணிடம் உள்ள நாணமும் தயக்கமும் அச்சமும் விலகுவது அவள் தன் நிலையை மறப்பதில் தான் முடியும் என்பதையும் அப்படி அவள் தன் நிலையை மறப்பது பெண்மைக்கு ஆபத்தாக முடியும் என்பதையும் அவன் உணர்ந்தான். அவளது இந்த நிலைக்குத் தன் விஷமங்களே காரணம் என்றாலும் மேற்கொண்டு அவற்றைத் தொடர்வதையோ அவளது மாற்றம் விபரீத மடைவதையோ அவன் விரும்பவில்லை. அவளை இயல்பான நிலைக்குக்கொண்டு வரவும் எல்லை மீறாமல் காக்கப்படவும் விரும்பிய அவன் சேட்டைகளை நிறுத்தி பேச முற்பட்டு 'மேகங்கள் அதிகமாகின்றன மேகலை' என்றான்.

அவள் இன்னும் இன்பக் கிறக்கத்திலிருந்து மீளாததால் ஆற்று நீரில் மல்லாந்து படுத்து மிதப்பது



போல் நீந்திக் கொண்டிருந்த நிலையில் 'ம்' என்று மட்டுமே சொன்னாள்.

'மின்னல்கள் வேறு தோன்றிக் கொண்டிருக்கின்றன' என்றான் பழையன்.

நீரைத் தன் கைகளால் தட்டித் தெறித்த அவள் தற்போதும் முன்போலவே 'ம்' என்றாள்.

'காற்றில் குளிர்ச்சி சேர்ந்திருக்கிறது. மழை வருவதற்கான அறிகுறிகள் இவை. உனக்குத் தெரியவில்லையா?' என்று கேட்டான்.

அவள் பதில் பேசாமலிருந்தாள்.

'மழை வருவதற்குள் நாம் கரையேறி விடுவது நல்லது. மழை ஒருவேளை அதிகமானால் ஆற்றில் வெள்ளப்பெருக்கு அதிகமாகும். காவிரியின் வெள்ளம் அபாயமானது. வா போகலாம்' என்று தொடர்ந்து சொன்னான் பழையன்.

'ஏன், இன்னும் கொஞ்சநேரம் இருக்கலாமே' என்றாள் அவள். பேச்சிலே விரகதாபம் லேசாகப் படிந்திருந்தது.

'போதும் மேகலை, அதிக நேரம் நீரில் இருந்து விட்டோம். உடல் விறைக்கும் நிலைக்குப் போக வேண்டாம். அதோடு நாம் போகவேண்டிய இடத்தை அடையும் வரை ஆபத்திற்கு உரியவர்கள்'.

'நீங்கள் தான் இருக்கிறீர்களே! ஆபத்தைப் பற்றி நான் ஏன் அஞ்சவேண்டும்?' கவலையற்ற பெண் ஒருத்தி அலட்சியமாகப் பேசுவது போல் பேசினாள் மேகலை.

'நான் இருப்பதே ஓர் ஆபத்துதான் மேகலை. நான் உயிரோடும் சுதந்திரமாகவும் இருப்பதை ஆபத்தாக எதிரிகள் கருதுகிறார்கள். ஆகவே ஆபத்து என்னை எப்போதும் சூழ்ந்தபடி இருக்கிறது.'-

'அதைத்தான் நீங்கள் சமாளித்து விடுவீர்களோ?'

'எப்போதுமே அப்படிச் சொல்லிவிட முடியாது மேகலை. புலன்களால் காணவோ உணரவோ முடியாத ஆபத்தை நாம் எதிர்பார்ப்பது முடியாத காரியம். அவைகளை முறியடிக்க முடியாது. அதே போல் நமது முதுகுப்புறம் வரும் ஆபத்துக்களை நாம் உணர முடியாமல் போகலாம். அதோடு நமது அடிப்படைப் பண்புகளை நாம் மறந்து விடுவது நல்லதல்ல.'-

பழையனின் இந்த கடைசி வார்த்தை அவளை ஊசி போல் குத்தியது. எதையோ உணர்த்தியது.

பழையன் அந்த வார்த்தையின் தொடர்ச்சியைப் பேசாமல் 'நாளை காலை நாம் இருக்க வேண்டிய இடம் பாண்டியர் பாசறை என்பதை நினைவில் வைத்துக்கொள். கணக்கற்ற எதிரிகளை நாளை சந்திக்க வேண்டிய நிலையில் உள்ள ஒரு படைத் தலைவன் இப்படி பொழுதை வீணடிக்கலாமா சொல். எனது சிந்தனைகள் மாறிவிட்டன மேகலை. ஆகாயத்தில் மேகங்கள் அதிகமாவதைப் பற்றிச் சொன்னேனே... அப்படிச் சொல்லும் போது போர் மேகங்கள் தான் என் நினைவிற்கு வந்தன. மின்னல்கள் தோன்றித் தோன்றி மறைவதைச் சொன்னேனே- அந்த மின்னல்கள் நமக்கு உண்டாகக் கூடிய ஆபத்துகளையே நினைவுபடுத்தின. வரப்போகும்



மழையைப் பற்றியும் வெள்ளப் பெருக்கும் போரின் விளைவுகளை எனக்கு உணர்த்துகின்றன. காவிரியின் வெள்ளம் வேகமானது. ஆபத்தானது. சேர சோழரின் தன்மையும் தற்போது அப்படித்தான். அதிலிருந்து காத்துக் கொள்ள முன்னெச்சரிக்கைகளை எடுக்க வேண்டும் மேகலை. நான் உடன் இருப்பது அவசியம் என்று தெரிந்தும் கூட நீ கடத்தப்பட்டாய் என்பதை அறிந்ததும் 'உடனடியாகப் போய் என் சகோதரியை மீட்டுவா. இது என் மானப்பிரச்சனை' என்றார் மன்னர். போரின் நிலையைச் சொல்லி நான் தயங்கியபோது 'இது அரச கட்டளை. இதை நீ மீறினால் தண்டனையை அடைய வேண்டி வரும்' என்றார். 'உன்னால் முடியாது என்றால் நான் போய் என் சகோதரியை மீட்டு வருகிறேன்' என்று புறப்பட்டார். பிறகுதான் நானே புறப்பட்டேன். ஓர் வணிகரின் மகளை-தன் நாட்டின் ஒரு குடி மகளை - தன் சகோதரியாகவும் - படைத் தலைவனைத் தன் நண்பனாகவும் கருதும் மன்னனை நீ வேறெங்காவது பார்த்திருக்கிறாயா? கேட்டிருக்கிறாயா? பழையனைக் காதலிக்கிறாள் என்று தெரிந்தும் உன்னைக் கடத்த ஆணையிடும் சோழனும் ஒரு மன்னன்தான். பழையனின் காதலிக்கு ஆபத்து என்று தெரிந்ததும் போர் நிலையைப் பற்றிகூடக் கவலைப்படாமல் அதை மானப்பிரச்சனையாகக் கருதி தானே புறப்பட முன்வந்த நெடுஞ்செழியனும் ஒரு மன்னன்தான். இருவருக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்? இத்தகையதொரு மன்னன் சரித்திரத்தில் எப்போதோ ஒரு முறைதான் கிடைக்கிறான். இவரது பாட்டனார் கூட மாபெரும் மனிதர்தான். நீதி செத்து விட்டது என்று தெரிந்ததுமே தன்னை

அக்கூற்றுவனுக்கு அர்ப்பணித்துக்கொண்ட மகோன்னத மானமன்னர்தான். ஆனாலும் கோவலன் கொன்யுண்ட ஒரு பிழையை அவர் செய்துவிட்டார் என்ற கறை அவர் சரித்திரத்தில் படிந்துவிட்டது. அப்படியொரு கறையோ குறையோ இன்றி பனிச்சென்று விளங்கும் மன்னன் மிகப்பெரும் எதிரிகளுக்கு முன்னால் நின்று கொண்டிருக்கிறார். தன்னைச் சிறுவன் என்று இகழ்ந்த சின்ன மனிதர்களின் பெரும் படைகளுக்கு முன்னால் அபிமன்யுவைப்போல் நிற்கிறார். அவருக்கு வெற்றியை ஈட்டித்தர வேண்டியது என் கடமையல்லவா? அதற்கு உதவவேண்டியது உன் வேலையல்லவா?'

மன்னனைப் பற்றி பழையன் விவரிக்கத் தொடங்கிய போதே காம உணர்வுகளிலிருந்து முற்றிலும் விடுபட்டு விட்ட மேகலை அம்மன்னனின் பண்பை எண்ணி பூரிப்படைந்தாள். உணர்ச்சி வசப்பட்டாள். ஆனந்தக் கண்ணீர் உகுத்தாள். தவறு செய்து விட்டவளைப் போல் உணர்ந்து வேதனைக் கண்ணீரையும் பெருக்கினாள். ஆனாலும் தண்ணீரிலே மீன் அழுதால் அதன் கண்ணீரை எப்படி அறிய முடியாதோ அதுபோலத்தான் மேகலை கண்ணீரைப் பெருக்கிய இடம் தண்ணீராக இருந்ததால் பழையனால் அறிய முடியவில்லை.

'என்னை மன்னித்து விடுங்கள். தாமதிக்க வேண்டாம். புறப்படுங்கள்' - என்றாள் மேகலை போக வேண்டிய அவசியத்தை உணர்ந்தவளாய்.

பிறகு இருவரும் நீந்தினார்கள். கரையை நெருங்க இருந்த நேரத்தில் பழையனின் புரவி புயல் இடிபோல் கனைத்தது. அது மட்டுமல்ல ஆற்று நீரில் பாய்ந்து



குதிக்கவும் செய்தது. அது குதித்த இடத்தைக் கவனித்த பழையன் மறுகணமே 'மேகலை, வா இப்படி'- என்று கூவி அவளது கரத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு நீரில் ஆழ்ந்தான். 'அதோ! அதோ! என்ற குரல்கள் அதே சமயம் கரையில் எழுந்தன. பழையன் மூழ்கிய இடத்தில் அம்புகள் பல சரமாரியாக வந்து விழுந்தன.

பழையனோ தண்ணீரில் மூழ்கிய மறுகணமே இடம் பெயர்ந்து மேகலையுடன் தண்ணீருக்குள்ளேயே நீந்தினான். அதே சமயம் வானம் மேன் மேலும் இருண்டு போகும் விதத்தில் மேகங்கள் பெருமளவில் தழைத்தன. பழையன் சில நிமிடங்கள் வரை மேகலையுடன் நீருக்குள் நீந்தியபின் ஆற்றின் மேற்கே சிறிது தள்ளி மேலெழுந்து கரையை நோக்கியபோது அங்கே பந்தங்கள் ஏற்றப் படுவதற்கான அறிகுறிகளைக் கண்டான். பிறகு மேகலையிடம் ஏதோ சொல்லிவிட்டு மீண்டும் நீரில் ஆழ்ந்து கரைப்பக்கமாக அவளுடன் நீந்தினான். இருவரும் முதலில் ஆற்றில் இறங்கிய இடத்திற்கு மேற்கில் கரையேறினார்கள். கரையேறியதும் புரவியை அழைக்கும் குரலை எழுப்பினான் பழையன். ஈர உடையுடன் இருந்த மேகலை குளிரால் நடுங்கினாள்.

அவளைத் தன்னோடு அணைத்துக் கொண்ட பழையன் 'சற்று பொறு மேகலை. தென்றல் புரவி வந்து விடும். ஆடைகளை மாற்றிக் கொள்ளலாம்'- என்றான்.

'எதிரிகள்?'- என்று கேட்டாள் மேகலை.

'அதைப்பற்றிக் கவலைப்படாதே'- என்றான் பழையன்.

'குரல் கொடுத்தீர்களே, நம் இருப்பிடத்தை அறிந்து கொண்டிருக்க மாட்டார்களா?'...

'வீரனுக்கு அழகு எதிரிகளை அழைப்பதும் போரிடுவதும் தானே மேகலை?' என்று கூறிச் சிரித்த பழையன், 'வானம் இருண்டு விட்டது. அவர்கள் பந்தத்தைக் கொளுத்தினாலும் இதோ வீசுகிற குளிர்காற்றும் பெய்யப்போகும் மழையும் அதை அணைத்துவிடும். அதோடு வந்திருப்பவர்கள் இரண்டு பேர் மட்டும்தான் என்று தோன்றுகிறது. அதுமட்டுமல்ல. அவர்கள் மூளை பலம் இல்லாதவர்கள் என்றும் தோன்றுகிறது. இல்லையானால் நாம் கரையேறும் வரை காத்திருப்பார்கள். இவர்கள் அவசரக்காரர்களாக இருக்கிறார்கள். நம்புரவி கனைத்ததும் நீரில் பாய்ந்ததும் நம்மை எச்சரிக்கத்தான் என்பது நமக்குத் தான் தெரியுமே தவிர அவர்களுக்குத் தெரியாதல்லவா? புரவி கனைத்துவிட்டு நீரில் பாய்ந்த போது அவர்கள் நம்மைக் கண்டிருக்கிறார்கள். புரவி பாய்ந்ததையும் கவனித்திருக் கிறார்கள். என்னவோ ஏதோ என்று குழம்பிப் போய் விவேகமின்றி அம்பெய்யத் துவங்கிவிட்டார்கள். நீரில் இருக்கும் நம்மை நோக்கிச் சரிவரப் பார்க்க முடியாத இருட்டில் அம்பெய்வது பைத்தியக்காரத்தனமல்லவா? நாம் நீரில் மூழ்கி விட்டால் இந்த இருட்டில் எதை அவர்கள் இலக்காக வைத்து அம்பெய்ய முடியும்? பந்தத்தைக் கொளுத்தித் தான் என்ன செய்வது? ஆற்றில் இறங்கித் தேடவா முடியும்? மொத்தத்தில் நம்மைக் கொல்ல நீண்ட நேரமாகக் காத்திருந்தவர்கள் சிறிது நேரத்தில் தடுமாறிப் போய் மடத்தனம் செய்து விட்டார்கள்.'



பழையன் பேசி முடிப்பதற்கும் அவனது தென்றல் புரவி அங்கு வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. அது சுமந்திருந்த ஆபரணங்களை எடுத்து இருவரும் அணிந்து கொண்டார்கள். அசந்தர்ப்பத்திலும் அவசரத்திலும் அவர்கள் அணிந்து கொண்ட விதம் கூட ஓர் அழகாய்த் தானிருந்தது. ஆனால் அழகை உணரும் சமயமோ ரசிக்கும் சமயமோ அங்கு நிலவவில்லை. தன்னுடைய மற்றொரு புரவியான புயலையும் அழைக்கும் பொருட்டு குரலொன்றை எழுப்பிய பழையன், 'புரவிகள் நமக்கு எவ்வளவு உபயோகமாக இருக்கிறது பார்த்தாயா? இவைமட்டும் இல்லாது போனால் ஆபரணங்களை கரையிலேயே வைத்திருப்போம். அவை அந்த மாவீரர்களிடம் சிக்கி நாம் இங்கே ஈர உடையுடன் திண்டாட வேண்டியிருக்கும். அதே போல் அந்த புரவி புயல் மட்டும் கனைக்காமல் இருந்திருந்தால் நான் எச்சரிக்கை அடைந்திருக்க மாட்டேன். அது நீரில் பாயாது நின்றிருந்தால் நான் நீரிலேயே சமாதியாகி இருப்பேன். என்ன செய்யவேண்டும் என்பதை எவ்வளவு சரியாக செய்து காட்டியது பார்த்தாயா அது? சரிசரி-விருந்தாளிகள் நம்மைத்தேடி வராததால் நாமே போய்த்தேடுவோம்' என்றான்.

'அவர்களை ஏன் தேட வேண்டும்?'-

'நிர்க்கதியாகவா விட்டுவிட்டுப்போவது? வா மேகலை. விசாரிக்க வேண்டாமா அவர்களை யாரென்று?'-

'வேண்டியதில்லை. நாங்களே வந்து விட்டோம்'... என்று புதுக்குரல் ஒன்று குறுக்கிட்டது. அதையடுத்து

இரண்டு கறுத்த உருவங்கள் வெளிப்பட்டன. இரண்டுமே வில்லை வளைத்திருந்தன.

'நான் சொன்னது சரியாக இருக்கிறது பார்த்தாயா மேகலை? வீரனாய், இருப்பவன் எதிரியை வரவழைத்துத் தான் போரிடுவான்' என்று கூறி அப்பேச்சின் மூலம் கிடைத்த கணநேர இடைவெளியில் மேகலையைப் பிடித்து பின்னாலிருந்த புதருக்குள் தள்ளிவிட்டு கீழே உருண்ட பழையன் இடைவாளைச் சடாரென்று உருவி ஒருவன் மீது வீசவும் அது அவன் இடையிலே பதித்து 'ஆ' என அலறி அவன் விழவும், அதைக் கண்டுச் சற்றே தடுமாறிய மற்றொருவனின் முகத்தில் மண்ணை எடுத்து வீசவும் அனைத்துமே கணநேரத்தில் நடந்துவிட்டன. முகத்தில் மண் பூச்சினைப் பெற்றவன் அதை நீக்க முற்பட்டபோது பழையன் துள்ளி எழுந்து அவனை வளைத்துப் பிடித்தான். அனைத்தும் சரிவர முடிந்ததற்கு அடையாளமாக வானத்தில் பெரும் இடியோசை யொன்று கேட்டது.

பிடிபட்டவன் மூலம் பல விவரங்களையும் அறிந்து கொண்டான் பழையன். இருவரில் ஒருவன் இறந்து விட்ட நிலையில் தன்னிடம் சிக்கியவனைக் கொல்ல பழையனுக்கு மனம் வரவில்லை. அவனை உயிரோடு விட்டு 'போய் வா. இரண்டொரு நாட்களில் சந்திப்பதாகச் சேரனிடம் போய்ச் சொல்'- என்று கூறி அனுப்பி வைத்தான்.

பிறகு புரவிகள் புயல், தென்றல் ஆகிய இரண்டும் பழையனையும் மேகலையையும் சுமந்து பயணத்தைத்



தொடர்ந்தன. மேற்கொண்டு நிகழப்போகும் பெரும் போர் மோதல்களை அறிவிப்பது போல் வானில் இடி முழக்கங்கள் பெரிதாய் எழுந்தன. போர் நாடகத்தினை எழுத முற்பட்டாற்போல் மின்னல்களும் வானத்தைக் கீறின. தூறல்களும் விழத்தொடங்கின வரப்போகும் துயரை எண்ணி அழுவது போல்.

◈◈◈

முரசு நாற்பத்தொன்பது

# பாண்டியன் பவனி

**ம**துரையைக் கைப்பற்ற முயன்று தோற்ற சேர சோழர்கள் ஏமாற்று வேலைகளைச் செய்துவிட்டு ஓட முற்பட்டதும் அந்த ஓட்டம் வெறும் ஓட்டம் அல்ல என்பதாலும் மீண்டும் சரியான விதத்தில் சரியான இடத்தில் தாக்குவதற்கான முன்னோடியே என்று அனைவரும் கருதிய பட்சத்தில் அதை ஒரு சவாலாக ஏற்றுத் தன் படைகளுடன் பின் தொடர்ந்தான் பாண்டியன் நெடுஞ்செழியன். அவனோடு அவனது குருநாதர் மட்டுமின்றி அவைகளப் புலவர்களும் சென்றார்கள். நடக்க வேண்டிய போர், சரித்திரத்தில் ஓர் சிறப்பாக இல்லாமல் சிறப்புக்களின் சரித்திரமாக அமையவேண்டும் என்பதில் புரவலனுக்கும் புலவர்களுக்கும் எந்தவிதமான கருத்து வேறுபாடுகளும் இல்லை. அப்படி அமையும் பட்சத்தில் அதற்கு பிரத்யட்சமான சாட்சிகளாய் பெரும் புலவர்கள் அமையவேண்டும் என்பதிலும் அவர்களுக்கிடையே வேறுபாடுகள் இல்லை. புலவர்கள் இவ்வாறு புடைசூழ வருவதை வேறெதற்கும் இல்லை என்றாலும் தன் வீரத்திற்கு ஒரு சாட்சியாக இருக்கவேண்டும் என்று பெரிதும் விரும்பினான் நெடுஞ்செழியன். சிறுவன் என்று தன்னை உதாசீனம் செய்தவர் முன் தான் வயதில் மட்டுமே சிறுவன் என்பதையும் வீரத்திலோ விவேகத்திலோ, நீதியிலோ. நிர்வாகத்திலோ அல்ல என்பதை



சான்றோர்கள் அறிய நிரூபிக்கவேண்டும் என்பது அவனது ஆசையாய் இருந்தது. எனவே சேர சோழர்களை பின்பற்றுவதில் எந்தவித ரகசியமும் இன்றி பகிரங்கமாகவே நடந்து கொண்டான். அவனது மாபெரும் படை ராஜபாட்டைகளில் போர் பாடிச் சென்றது. காடுமேடுகளில் தூள் கிளப்பிச் சென்றது. கண்டோர் வியக்கும் படியும் வாழ்த்தும்படியும் சென்றது. லட்சக்கணக்கை மட்டும் காட்டாமல் லட்சியத்தையும் காட்டும் படையாகச் சென்றது. பலத்தில் புயலாகவும் பண்பில் தென்றலாகவும் சென்றது. எதிரிகள் சேர சோழர்களும் அவர்கள் திரட்டியுள்ள படைகளுமே என்பதால் வழிபட்ட குடிமக்களில் எவரையும் தொடவில்லை. படையெடுத்துச் செல்லும் வழியில் எதிர்ப்படும் ஊர்களையெல்லாம் அழிப்பதும், நீர்நிலைகள் இயற்கை வளங்கள் ஆகியவற்றைச் சிதைத்தும், மனிதர்களின் ஓலக்குரலும் சாபக்குரலும் எதிரொலிக்க அவற்றுக்கு இடையே இடியோசையாயும் கடல் வெள்ளமாயும் அமளிதுமளி செய்வதே எதிரிப்படையின் சாதாரண நடத்தையாக இருந்தாலும் அவற்றிலிருந்து மாறுபட்டு அவற்றுக்கு முற்றிலும் சம்பந்தமில்லாத ஒன்றாய் சென்றது அப்படை. சோழன் செய்த காரியத்திற்குச் சோழ நாட்டைச் சுடுகாடாக்கியிருக்கலாம். நெடுஞ்செழியன் அவ்வாறு எண்ணவும் முற்படவில்லை. உறையூரில் தன்னைத் தாக்குவான் என்று எதிர்பார்த்த போது சேர சோழப் படைகள் அங்குதென்படவில்லை. உறையூரை விட்டால் தஞ்சாவூரிலாவது மோதல் இருக்கும் என்று பார்த்தால் அங்கும் அவர்களைக் காணோம். இப்படி எதிரிகள்

இழுத்தடிக்கும் காரியத்திற்காக அவர்களது நாட்டையும் மக்களையும் வீழ்த்தியிருக்கலாம். நெடுஞ்செழியனோ அங்கெல்லாம் 'தான் சிறுவனல்ல. பெருந்தன்மை யானவன்' என்பதை நிரூபித்தான். எந்தப் பகுதியிலும் ஊருக்குள் சென்று தொல்லை தராமல் எல்லைப் பகுதிகளைத் தொட்ட படியே படைகளை நடத்தினான். ஒரு சில இடங்களில் சிதையும் நிலையில் இருந்த ஏரிக்கரைகள் அவனது வீரர்களால் பழுதுபார்க்கப் பட்டன. அவனது பண்பு சோழநாட்டு மக்களைப் பெரிதும் கவர்ந்ததால் பெருமளவில் ஆங்காங்கே கூடி படைகளை வாழ்த்தினார்கள். படைகள் கேட்காமலேயே அவைகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்கள். படைகளுடன் சென்ற உணவுப் பொருள்களைக் கொண்ட வண்டிகளின் எண்ணிக்கையும் அதிகரித்தன. சேர சோழரது படையெடுப்பு அம்மன்னர்களது சொந்த விருப்பங்களின் முடிவேயன்றி அந்நாட்டு மக்களின் விருப்பமல்ல என்று மக்களில் பெரும்பாலோர் சொன்னார்கள். மக்களின் நலனை யோசிக்காமல் உதாசீனப்படுத்தி அழிவு வேலைகளில் ஈடுபடும் மன்னர்கள் தங்கள் சொந்த நாட்டு மக்களாலேயே கைவிடப்படுவார்கள் என்பதை சந்தேகத்திற்கு இடமின்றி உணர்த்துவது போல் அமைந்துள்ளன அவர்களது உதவிகளும் வாழ்த்துக்களும்.

இப்படி தங்கள் பண்பாலும் லட்சியத்தாலும் செம்மையாக படை நடத்திச் சென்ற நெடுஞ்செழியன் வெண்ணிப் பறந்தலையை அடைந்தான். அங்கே நீண்டு பரந்து கிடந்த சமவெளியும் அதில் கண்ட இடங்களில் எல்லாம் குத்துக்கற்களாய் நின்ற நடுகற்களையும், அவற்றில் அகன்றும் உயர்ந்தும் கிடந்த நடுகற்களின் நிழலில் நாய்கள் சுகமாகப் படுத்திருந்ததையும், படைவரவு கேட்டு அவைகள் இரைச்சலிட்டு ஓடியதையும் கண்ட பாண்டிய மன்னனுக்குப் பண்டைய வரலாறு நினைவிற்கு வந்தது. இதே இடத்தில் பல வருடங்களுக்கு முன்னால் நடந்த பெரும் போரை நினைவு கூர்ந்தான். அந்தப் போர் வேறு வேறு நாட்டு மன்னர்கள் பகையினால் நடந்த போரல்ல. ஒரே குல - அதாவது சோழர் குலத்திற்குள்ளேயே நேர்ந்த பூசல் போராய் வெடித்தது. பங்காளிகளுக்குள் நடந்த பாரதப் போரைப் போல் சோழ தாயாதிகளுக்குள் நடந்தது அப்போர். அதில் சோழரது ஓர் அணிக்கு பாண்டியர்களும் சேரர்களும் துணைபுரிந்து தோற்றோடினார்கள். தற்போதோ பாண்டியனை சேரரும் சோழரும் சேர்ந்து எதிர்க்க முற்பட்டிருக்கிறார்கள். இதென்ன விந்தை? இதென்ன ஆட்சிமுறை? என்ன கொள்கை? என்ன நியாயம்? இந்தப் போரெல்லாம் எதற்கு? இந்த மன்னர்களெல்லாம் சமாதானமாக வாழ முடியாதா? இவர்களெல்லாம் யாருக்காக ஆள்கிறார்கள்? மக்களைப்பற்றி கவலைப்படாத இவர்களுக்கெல்லாம் நாடெதற்கு? நடப்பெதற்கு?



இப்படியெல்லாம் பாண்டிய மன்னனின் சிந்தனை ஓடியபோது அதைக் கலைத்தான் ஒரு தளபதி. 'மன்னவா அதோ பார்த்தீர்களா அந்த நடுகல்லை?'- என்று கேட்டு அழைத்துச் சென்று நடுகல் ஒன்றின் முன்னால் நின்றான் அத்தளபதி.

அந்த நடுகல் உயரமாகவும் அகலமாகவும் ஏறக்குறைய சுவர்போல் அமைந்திருந்தது. அதற்கு,

மஞ்சள் குங்குமம் போன்றவற்றால் மங்கல அலங்காரங்கள் செய்யப்பட்டிருந்தன. ஒரு சில நாட்களுக்கு முன்பாக அதற்கு மங்கலவிழா எடுக்கப் பட்டதற்கு அடையாளமாக சிதறிக் கிடந்தன தேங்காய் ஓடுகளும் மாலைகளும்* அக்கல்லின் இடையே இருந்த எழுத்துக்களைச் சுட்டிக்காட்டிய தளபதி, 'மன்னவா, இந்த நடுகல் சோழன் இருங்கோ வேளுக்குரியது. குருதி தோய வீழ்ந்து அவன் மாண்ட இடம் இது' என்றான்.

ஆயிரமாயிரம் நடுகற்களை நடுவதற்கு வழிவகுத்து விட்டவனான பாதகன் இருங்கோவேளின் நடுகல்லைக் கண்டபோது அவனது பேராசையும் வஞ்சக அரசியலும் நினைவிற்கு வந்தது. அவன் மட்டும் தன் தாயாதியை தீயிட்டுக் கொளுத்தாமல் விட்டிருந்தால் வெண்ணிப் போர் விளைந்திருக்காது. கரிகாலன் என்னும் மாபெரும் மன்னனும் உருவாகியிருக்க மாட்டான். இப்படி வீழ்ச்சி ஒன்றுக்கும் எழுச்சி ஒன்றுக்கும் காரணமான இருங்கோவேளின் நடுகல்லைப் பார்த்துவிட்டு 'இதற்கென்ன தளபதி?'- என்று கேட்டான் பாண்டிய மன்னன்.

நமக்கு முன்னால் சேரசோழப் படைகள் இந்த வெண்ணியைக் கடந்திருக்க வேண்டும். அப்போது சோழ

* போரில் வீர சுவர்க்கம் அடையும் வீரர்களுக்கு நினைவுச் சின்னம் போல் நடுகற்களை நடும் வழக்கம் சங்ககாலத்திலிருந்தே இருந்து வந்துள்ளது. அவற்றைப் புனித அடையாளங்களாய் கருதி விழா எடுப்பதும் அன்றைய வழக்கம்தான். இவற்றைப்பற்றி மேலும் பல சுவையான செய்திகள் உண்டு. அவற்றைக் கீழ்க்கண்ட நூலிலே காணலாம்.

'நடுகல் வழிபாடு' (1978) By வெ. வேதாசலம்



மன்னன் இந்த நடுகல்லைப் பார்த்திருக்க வேண்டும். இதற்கு விழா எடுத்திருக்க வேண்டும்' என்றான் தளபதி.

'இருங்கோவேள் எப்படிப்பட்டவன் என்றாலும் சோழர் குலத்தவன். எனவே அவனது நடுகல் சோழருக்கு புனிதம் வாய்ந்தது. அதற்கு விழாவெடுத்ததும் இயல்பு தான்' என்றான் நெடுஞ்செழியன்.

'இந்த நடுகல்லின் கீழே ஓர் ஓலை கிடந்தது. இதில் யார் எழுதியது என்ற விவரம் இல்லை'-என்று கூறி தான் கண்ட ஓலையை மன்னனிடம் தளபதி கொடுத்தான்.

'நெடுஞ்செழியா, இங்கேதான் பாண்டியன் தோற்றோடினான் முடியையும் இழந்து- அதே நிகழ்ச்சி நடைபெற வேண்டிய இடத்திற்கு அருகில்தான் நீ இருக்கிறாய். முடியும் கொடியும் ஜாக்கிரதை' என்றிருந்தது ஓலையில்.

அதைப் படித்துப் புன்முறுவல் கொண்டான் நெடுஞ்செழியன்.

'சேரன் கூடத்தான் இங்கே தோற்றோடினான்? அவ்வளவு என்? இங்கு செத்துத் தொலைந்தவனும் சோழன் தான். ஆகவே முடியும், கொடியும், தலையும் பாதுகாக்க வேண்டியது சேரனும் சோழனும் தானே?' என்றான் தளபதி.

'அரியணை ஏறும்போதே முடியைப் பற்றியும் கொடியைப் பற்றியும் ஒரு வித ஜாக்கிரதை உணர்வு ஒவ்வொரு மன்னனுக்கும் இருக்கவே செய்யும். அதை பிறர் உணர்த்த வேண்டியதில்லை. ஆளத் தொடங்கிய பிறகு சில நேரங்களில் அந்த உணர்வு மறையலாம்.

ஒருவேளை அந்த வகையில்தான் எனக்கு ஞாபகப்படுத்தியிருக்கிறார்களோ என்னவோ. நல்ல அறிவுரைதான். ஏற்றுக்கொள்கிறேன்'-என்று சொல்லி மீண்டும் புன்முறுவல் கொண்டான் மன்னன்.

தளபதி நிச்சயமாக அப்புன்முறுவலை எதிர்பார்க்கவில்லை. அவனென்ன யாருமே எதிர்பார்க்க முடியாதது தான். ஓலையைப் படித்ததுமே வெகுண்டு எரிமலை போல் சீறுவார்கள் என்றுதான் யாருமே எதிர்பார்க்க முடியும். அப்படியிருக்க ஓலைச் செய்தியை மிகவும் சகஜமாக எடுத்துக் கொண்டு மன்னன் சாந்தசொரூபியாய் காட்சியளித்தது தளபதியை மெய்சிலிர்க்க வைத்தது. இப்படிப்பட்ட மன்னனிடம் தளபதியாய் பணிபுரிவதை பெரும் பாக்கியமாகக் கருதினான் அவன்.

பிறகு படைகள் வெண்ணியை விட்டு அகன்று நீடூரின் காவல் வளையம் போலிருந்த கோரையாற்றங்கரையை அடைந்த போது பாண்டியத் தளபதி அதுகை மன்னனை வந்து பாசறையில் சந்தித்தான்.

மதுரைப் போரின் போது எழினியின் தாக்குதலால் சற்றே காயப்பட்டிருந்த அதுகை உடனடியாக மருத்துவ சிகிச்சையை செய்து கொண்டு நெடுஞ்செழியன் உறையூரைத் தாண்டியிருந்த சமயத்தில் வந்து சேர்ந்து கொண்டான். அதிலிருந்து ஒற்றறியும் பிரதான பணியைத் தானே ஏற்றுக் கொண்டு ஒற்றர் பிரிவொன்றுடன் பாண்டிய மன்னன் செல்வதற்கு முன்பாகவே சென்று நிலவரம் அறிந்து செய்திகளை அனுப்பிக் கொண்டிருந்தான். அவன் அனுப்பி வந்த செய்திகளுக்கு முற்றிலும் மாறுபட்ட செய்தியாக இருந்தது நீடூரைப் பற்றிய செய்தி.



பாண்டியன் படை பாண்டிய மண்டலத்தை விட்டுச் சோழ மண்டலத்தில் நுழைந்ததிலிருந்து அதற்கு எதிர்ப்பு என்று ஒருவரிடமிருந்தும் எழவில்லை. மாறாக வரவேற்பும் வாழ்த்துமே கிடைத்து வந்தன. அப்படிப்பட்ட வரவேற்போ வாழ்த்தோ இல்லாமல் நீடூரில் எதிர்ப்புக் கிளம்பியதுமே அதைச் செய்தியாக அனுப்பிவிட்டுப் பேசாமல் உட்கார்ந்து விடாமல் நேராகவே வந்து பாண்டிய மன்னனிடம் தெரிவித்தான் அதுகை.

'எவ்வி நம்மை எதிர்ப்பதின் காரணம் என்ன தளபதி?'- என்று எந்தவிதமான பட படப்பும் இல்லாமல் கேட்டான் பாண்டிய மன்னன்.

'சேர சோழரின் அணியில் ஒருவனாகிவிட்டதுதான் காரணம் மன்னவா. தனிப்பட்ட முறையில் வேறெந்தக் காரணமும் இல்லை' என்றான் அதுகை.

'இந்த நீடூர் மிகச் சிறியதொரு பட்டிணம். இதைக் காக்க கோட்டையென்று கூட ஒன்றில்லை. அப்படியிருக்க நம்மை எதிர்க்க எவ்வி துணிந்திருக்கிறான் என்றால் அது பாராட்டத் தகுந்த விஷயமல்லவா?'- கேட்டான் பாண்டிய வேந்தன்.

'பாராட்டக் கூடிய துணிச்சல் அவனுக்கு உண்டு என்றால் அதைச் சேர சோழரிடம் ஏன் காட்டவில்லை மன்னவா? அவர்களிடம் ஏன் பணிந்தான்? பயம்தானே காரணம்?'-

'சேர சோழர்களுக்குப் பயந்த அவன் நம்மை எந்த தைரியத்தில் எதிர்க்கிறான்?'-

'மன்னவா, சேரன் இவனுக்குப் பலவிதமான ஆசை காட்டித் தூண்டியிருக்கிறான்.'

'வெறும் ஆசை மட்டும் பாண்டியர் படையை எதிர்க்க போதுமா?'

'போதாது மன்னவா. ஆசை ஒரு பக்கம். அலட்சியம் ஒரு பக்கம். இரண்டும்தான் அவனைத் துணிய வைத்து இருக்கின்றன'

'அலட்சியமா?'

'ஆம். சேரன் தங்களிடம் காட்டிய அலட்சியம் தான் இவனுக்கும் வந்திருக்கிறது. பாண்டியன் தானே என்ற எண்ணம்'

'அது உண்மையா என்பதை அறிந்து கொண்டீர்களா?'

'அறிந்து கொண்டேன். பூரணமாக அனைத்தையும் அறிந்து கொண்டுதான் வந்தேன்'- என்று கூறிய அதுகை பாண்டியர் படை நீடூருக்கு வருவதற்கு முன் தான் இங்கு வந்ததையும் எவ்வியைச் சந்திக்க அனுமதி மறுக்கப் பட்டதையும், காவல் பிரிவின் தலைவன் மூலமாகவே எவ்வியின் நோக்கத்தை அறிந்ததையும் விளக்கிச் சொல்லி 'தங்களை மிகவும் அலட்சியமாக நினைக்கிறான் எவ்வி. அதில் சந்தேகமே இல்லை' - என்றான்.

'எவ்வியின் எண்ணம் அதுவானால் நாம் செய்ய வேண்டியது என்ன தளபதி?' கேட்டான் பாண்டியன்.

'டேய் எவ்வி. உன்னை வீழ்த்த பாண்டிய மன்னர் வேண்டியதில்லை. என்னைப் போன்ற ஒரு தளபதி போதும்' என்று சவால்விட்டு நான் சொல்கிறேன்



மன்னவா. நான் அவனுக்குப் பாடம் புகட்டுகிறேன். தெளிவில்லாத சிந்தனையும், ஆணவமும், அலட்சியமும் மன்னன் ஒருவனுக்கிருந்தால் அது எத்தகைய அழிவைத் தரும் என்பதை அவனுக்கு மட்டுமல்ல இந்த மிழிலை கொற்றத்துக்கு மட்டுமல்ல-இந்த உலகத்திற்கே உணர்த்துகிறேன். எனக்கு அனுமதி கொடுங்கள்' என்று கூறி அதற்கு அனுமதி கேட்டான் மன்னனிடம்.

மன்னனின் அனுமதி உடனே கிடைத்தது. அதனால் களிப்பும் தெம்பும் அடைந்த அதுகை சுமார் ஆயிரம் வீரர்களை மட்டுமே அழைத்துக் கொண்டு அவர்களுக்கு நீடூரின் 'அமைப்பைக் காட்டித் தன் திட்டத்தை விளக்கினான்.

'நீடூருக்குக் கோட்டையோ சுவரோ எதுவும் இல்லை. ஆனால் கோட்டைக்குரிய பாதுகாப்பு வசதிகள் இருப்பதைக் கவனித்தீர்களா? இதன் மேற்கில் அதாவது நாம் நின்ற கொண்டிருக்கிறோமே இங்கு கோரையாறு ஓடுகிறது. கிழக்கில் வெண்ணாறு ஓடுகிறது. இரு கோடுகளாய் அருகருகே ஓடும் இவை நீடூரை நெருங்கும் இரண்டு அரை வட்டங்களாக-பிறை நிலவுகளாக வளைந்து நீடூரைத் தாண்டியபின் மீண்டும் இரு கோடுகளாக ஓடுகின்றன. அதாவது இவ்விரண்டும் இவ்வூரைப் பொறுத்தவரை ஓர் அகழியாகவே காத்திருக்கின்றன. இத்தனை நாட்களாக வெறும் ஆறுகளாக இருந்த இவற்றில் ஏராளமான முதலைகள் இறக்கி அகழியாகவே மாற்றியிருக்கிறான் எவ்வி. அதோடு இவ்வாறு கோரைகள் நிரம்பப் படர்ந்த ஆறுகளாய் இருப்பதால் முதலைகள் இந்தக் கோரைகளைப் படுக்கைகளாகக் கொண்டு இங்கேயே

படுத்துக் கிடக்கின்றன. ஓடும் ஆற்றோடு போகாமல் அவை இங்கேயே இருப்பது எவ்விக்கு பலமளிக்கிறது.

'இரண்டாவதாக கோட்டைச் சுவர் என்று இதற்கு இல்லைதான். ஆனால் ஊரைச் சுற்றி வட்டவடிவில் மாளிகைகள் இருக்கின்றன. ஒவ்வொரு மாளிகையிலும் வீரர்கள் நிரம்ப ஆயுதங்களுடன் இருக்கிறார்கள். மாளிகைச் சுவற்றில் தெரியும் ஏராளமான துளைகளிலிருந்து அவர்கள் நம்மைப் பார்க்கவும் நாம் நெருங்கும்போது நம்மீது அம்புகள் எறிந்து கொல்லவும் முடியும். அதோடு நான்கு புறங்களிலும் உயரமான காவற் கூடங்களைப் புதிதாக நிர்மாணித்திருக்கிறான் எவ்வி. அவற்றிலிருந்து கொண்டு தொலை தூரம் வரை நம்மை அவர்களால் கண்காணிக்க முடியும். இவ்விரண்டையும் முறியடித்து விட்டால் நமக்குச் சிரமம் எதுவும் இருக்காது'.

நீடூரின் பலம் மிகவும் கடுமையானதுமில்லை. ஒன்றுமே இல்லை என்று சொல்கிறமாதிரியும் இல்லை. இது வீரர்களுக்குப் புரிந்தது.

அவர்களிடமிருந்து பதிலேதும் வருகிறதா என்று பார்த்தான் அதுகை. அவர்களோ அவனிடமிருந்து கட்டளைகளை எதிர்பார்த்து நின்றார்கள். இதை உணர்ந்த அதுகை முடிவில் தன் திட்டத்தைக் கூறி அதை செயல்படுத்தவும் செய்தான்.

◈◈◈

முரசு ஐம்பது

# நீடூர் போர்

நீதியை மதிக்கவோ நியாயத்தை ஏற்கவோ மறுத்தது மட்டுமின்றி எதிரியைக் கேவலமாக மதிப்பிடும் எவ்வியை முறியடிக்கும் முயற்சியில் எதைப்பற்றியும் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை என்று கருதிய அதுகை தன் போர் நடவடிக்கையை போர்தர்மங்களுக்குப் புறம்பாக இரவு நேரத்தில் திடீரென துவக்கினானாதலால் எவ்வி மிகவும் திணற வேண்டியதாயிற்று. தன் வீரர்களில் நூறு பேரை கோரையாற்றங்கரையில் நிறுத்திய அதுகை மற்ற நூறு பேரை நீடூரின் எல்லைக்கு அப்பால் ஆறுகள் இரண்டும் இருகோடுகளாய் பிரியும் இடத்தில் முதலைகளின் இடையூறு இல்லாத இடத்தில் ஆற்றைக் கடக்கவிட்டு மறுபுறத்தில் வெண்ணாற்றங்கரையில் நிறுத்தினான். மற்ற 800 வீரர்கள் இரண்டு அணிகளாய் பிரிந்து அதேபோல் ஆற்றினைக் கடந்து நீடூரின் வடக்கு தெற்கு ஆகிய இருபுறங்களிலும் கூடி நின்றார்கள். அவனது தலைமையின் கீழ் திரண்ட ஆயிரம் வீரர்களும் பூரண இரும்புக் கவசமணிந்து கொண்டார்கள் எதிரிகளின் அம்புத் தாக்குதலிலிருந்து தப்புவதற்காக.

இரவுப் பொழுது தொடங்கி ஒரு ஜாமம் கழிந்த நிலையில் கொம்பை எடுத்து ஊதினான். அதுகை. அதை அடுத்து கோரை ஆறு மற்றும் வெண்ணாற்றுக் கரைகளிலிருந்த வீரர்கள் பலம் வாய்ந்த வாணங்களைக்

கொளுத்தி முகப்பு மாளிகைகளை நோக்கிச் சரமாரியாக வீசினார்கள். அவை படார் படாரென வெடித்தன மாளிகைகளில் விழுந்து. தொடர்ந்து வாணங்கள் வீசப் பட்டதாலும் வெடிக்கப்பட்டதாலும் உண்டான ஓசை அந்த இரவு நேரத்தில் மிகப்பெரும் இடியோசையாய் நீடூரில் எதிரொலித்தது. அதைக் கண்டுச் சிலிர்ப்பது போல் வான் நட்சத்திரங்கள் கண் சிமிட்டின.

இந்த இரவு நேரத் தாக்குதலை - குறிப்பாக வாணவெடித் தாக்குதலை எவ்வி சிறிதும் எதிர்பார்க்க வில்லை. தாக்குதல் தொடங்கி மாளிகையின் மேலும் கீழும் உள்ளும் புறமுமாய் கண்டபடி வெடிக்கத் தொடங்கிய போதே அவனது வீரர்கள் போரிடத் தயாரானார்கள். ஆனால் அவர்களால் அப்பணி எளிதில் முடியவில்லை.

ஏனென்றால் தொடர்ந்து வெடிக்கப்பட்ட வாணங்களால் மாளிகைகள் பல சேதமடைந்தன. பல இடங்களில் தீப்பற்றி எரிந்தது. இதனால் உண்டான புகை மண்டலம் நீடூர் முழுவதும் பரவியது. இவற்றைச் சமாளித்து எதிரிகளைத் தாக்க அவர்களால் முடியவில்லை. எதிரிகளைப் பார்க்கவே முடியவில்லை.

அதுகைப் படையினரின் நிலையோ அவ்வாறில்லை. இரண்டு ஆறுகளின் கரைகளில் நின்றிருந்த வீரர்களுக்கு இலக்கானது எளிதாக இருந்தது. எவ்வியின் வீரர்கள் எங்கிருக்கிறார்கள் என்று பார்த்து அவர்களைத் தாக்கும் வேலை அவர்களுக்கில்லை. மாறாக முகப்பு மாளிகைகளை சரமாரியான வெடிகளையும் வாணங்களையும் வைத்து தாக்கும் வேலை மட்டுமே



தரப்பட்டிருந்ததால் தங்களுக்கு முன்னால் இருந்த இடத்தை நோக்கி வாணங்களை கவலையின்றி வீசிக்கொண்டிருந்தார்கள்.

அவர்களது எதிர்பாராத தாக்குதலால் மாளிகைகள் எரிந்தும் சரிந்தும் வீழ்ந்து பலரது உயிரைக் கணநேரத்தில் குடித்தது. மரணத்தைத் தழுவப் போனவர்களும் ரணத்தைக் தழுவியவர்களும் போட்ட கூச்சலையும் குழப்பத்தையும் கேட்ட வினாடியிலேயே தீட்டிய திட்டப்படி வடக்கு தெற்கு புறங்களில் ஆற்றில் இடை வெளிகளில் நின்றிருந்த வீரர்களும் வாணவேடிக்கையை நிகழ்த்தலானார்கள். பெரும் குழப்பம் எங்கும் நிலவியது.

இந்த நிலையில் வடக்கு மற்றும் தெற்குப் புறங்களில் வாண வேடிக்கை நிகழ்த்துபவர்களைத்தவிர மற்றவர்கள் ஆற்றோர மரங்களை வெட்டியும் வீழ்த்தியும் அகழி ஆற்றில் சாய்த்து கரையைக் கடந்து மாளிகைகளை நோக்கிப் போனதோடு மட்டுமின்றி அம்புகளையும் வேல்களையும் வீசிய வண்ணம் சென்றார்கள்.

இதற்கிடையில் மாளிகையின் உட்புறத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த யானைகள் வாண வெடிகள் உண்டாக்கிய காயங்களால் எரிச்சலடைந்து வெளியேற முற்பட்டன. அந்த நிலையில் அதுகையின் வீரர்கள் எரிந்த அம்புகளுக்கும் வேல்களுக்கும் இலக்காகி கோபம் கொண்டு உட்புறமாகவே தாறுமாறாக ஓடின. காலில் பட்டவர்களும் துதிக்கைக்குச் சிக்கியவர்களும் எமனுலகிற்கு அனுப்பப்பட்டார்கள்.

இந்த குழப்பத்தையும் திருப்பத்தையும் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டான் அதுகை. அவனது வீரர்

பிரிவுடன் மூர்க்கமாக உட்புறம் பாய்ந்தோடினான். எதிர்பட்டவர்கள் வெட்டப்பட்டார்கள். இப்படி கல்லுளிமங்கனின் படைபோல் சென்ற அவனது படை நேராக நீடூர் அரண்மனைக்குச் சென்றது. அப்படை அங்கு செல்லவும் அரண்மனையிலிருந்து எவ்வியின் தலைமையில் படைப்பிரிவு ஒன்று புறப்படவும் சரியாக இருந்தது. இரு பிரிவுகளும் கைகலத்தன.

அதுகையின் திட்டம் வேறாக இருந்தது. படைப் பிரிவுகளை மோதவிட்டு வெற்றி தோல்வியை கணிக்க அவன் தயாராக இல்லை. எவ்வி கண்ணில் பட்டதுமே மிக வேகமாக அவனை நெருங்கி குறுவாளை எடுத்து வீசி அவனது புரவியை வீழ்த்தி அவனைக்கவிழ்த்தான். எவ்வி சுதாரித்து எழுவதற்குள் 'பாண்டியரை அற்பமாக நினைத்துப் பேசிய அற்பனே ஒழிந்து போ' என்று சொல்லி தன் உடைவாளை மின்னலைப் போல் அவனது இதயத்திலே பாய்ச்சினான்.

பேரரசுகளின் இடையிலே சிக்குண்டு தீர்க்க தரிசனம் இன்றியும் பெருந்தன்மையின்றியும் நடந்து கொண்ட மிழலைக் கூற்றத்துச் சிற்றரசன் எவ்வியின் உடல் சில கணங்கள் துடித்தது. பிறகு பேரமைதியில் மண்ணில் விழுந்தது. எந்த மண்ணிற்காக சேர சோழரை நம்பி பாண்டியரை அவமதித்தானோ அந்த மண்ணிலேயே வேரற்ற மரமாய்ச் சாய்ந்தான் எவ்வி.

எவ்வி மாண்டதுமே வெற்றிக்கான கொம்பை ஊதினான் அதுகை. அதையடுத்து பாண்டியர் வெற்றியைக் குறிக்கும் வாழ்த்தொலிகள் எழுந்தன. அதையடுத்து உண்மையறிந்த எவ்வியின் படை வீரர்கள்



சிதறி ஓடினார்கள். வாட்களின் உரசல்கள் நின்றன. வாளைங்களின் ஒலிகள் மறைந்தன. வெடிச் சத்தமும் கொஞ்சம் கொஞ்சமாய் நின்றது. மற்றவர்களால் நிறுத்த முடிந்த சத்தங்கள் எல்லாம் மறைய மற்றவர்களால் நிறுத்த முடியாத மரண ஓலங்கள் மட்டும் கொஞ்ச நேரத்திற்கு நீடித்தன.

இதற்கிடையில் அதுகை தான் எத்தனை திறமையான தளபதி என்பதை நிரூபித்தான். வாண வேடிக்கைகளால் ஏற்பட்ட தீயை அணைக்க சிலர் அனுப்பப்பட்டார்கள். காயம் பட்ட வீரர்களும் குடிமக்களும் சிகிச்சைகளைப் பெற வைத்தியசாலைகளுக்கு அனுப்பட்டார்கள். மாண்டவர்களின் உடல்கள் அடக்கம் செய்யும் பொருட்டு கோரை ஆற்றங்கரைக்கும் வெண்ணாற்றங்கரைக்கும் அனுப்பி வைக்கப்பட்டன. வீரசுவர்க்கம் எய்திய எவ்வியின் உடல் இறுதி அஞ்சலிக்காக அமைச்சரிடம் ஒப்படைக்கப்பட்டது.

'மிகவும் நன்றி' -என்றார் அமைச்சர்.

'எதற்கு?' -கேட்டான் அதுகை.

'வீரத்தைக் காட்டும் போர் முடிந்த கையோடு போய் விடாமல் போருக்குப் பின்னும் இருந்து அனைத்துக் காரியங்களையும் நீங்களே இருந்து முடித்திருக்கிறீர்கள்'.

'அதுதான் பாண்டியர் பண்பு' என்றான் அதுகை.

'இரவில் போரிடுவதும் பாண்டியரின் பண்புதானா?' -கேட்டார் அமைச்சர்.

'மாற்று நாட்டு மன்னரை, பேரரசின் காவலரை சிறுவன் என்று பேசும்பண்பு கொண்டவர்களை

அழிப்பதில் பகலோ இரவோ இல்லை. இரண்டும் ஒன்றுதான். முள்ளை முள்ளால் எடுப்பதே மரபு'- என்றான் அதுகை.

'சிற்றரசுகளின் தலைவிதி சோகமானது'- என்று கூறி மௌனமானார் அமைச்சர்.

அன்றிரவு முதல் மிழலைக் கொற்றம் பாண்டியர் வசம் வந்துவிட்டது என்பதை அறிவிக்கும் பொருட்டு பாண்டியரின் மீன்கொடி அரண்மனை விதானத்தில் பறக்க விடப்பட்டது. அதைப் பார்க்க ஆசையுடன் ஓடி வந்தது போல் கிழக்கிலே வெள்ளி முளைத்தது.

எஞ்சிய பாண்டிய வீரர்கள் பாசறைக்குத் திரும்பி மன்னனை வணங்கி வெற்றிச் செய்தியை மிகவும் சகஜமானதொரு செய்தி போல் கூறினார்கள்.

'அதுகை எங்கே?'- என்று கேட்டான் மன்னன்.

'இன்றிரவு வந்து தங்களைச் சந்திப்பதாகச் சொல்லச் சொன்னார் பிரபு'-

வீரர்கள் பாசறைக்குத் திரும்பிய பின் தன் அருகில் அமர்ந்திருந்த மாங்குடி மருதனாரை நோக்கினான் மன்னன்.

'பார்த்தீர்களா குருநாதரே, நமது போர்ப் பாதைக்குத் தடையாய் இருந்த எதிரி எவ்வியை அழித்து வெற்றியை ஈட்டியிருக்கிறான் தளபதி அதுகை. என்னிடம் வந்து அதைகூறிப் பெருமிதப்பட வேண்டிய அவன் அவ்வாறு செய்யாமல் எங்கோ போய் விட்டான். என்னை இரவில் சந்திக்கிறானாம். இவனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'... என்று வினவினான்.



'இவனைப் பற்றி என்ன-இந்தப் பாண்டியர்களைப் பற்றித் தான் நினைப்பதற்கு என்ன இருக்கிறது?' என்றார் புலவர்.

'குருநாதரே, தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?'

'நெடுஞ்செழியா, பாண்டியர்களுக்கு வெற்றி பெறுவதே வேலையாகிப் போய்விட்டது. அன்றாட அலுவல் அது. அதைப் போய் உன்னிடம் சொல்வதில் புதிய பெருமிதம் எதற்கு? அப்படி வந்து சொல்ல ஒரு தளபதி தேவையா?'-

'என்ன அழகாகச் சொல்லி விட்டார் புலவர்? வெற்றி பெறுவதென்பது பாண்டியரின் வேலையாமே!' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட பாண்டிய மன்னன் எவ்வியை வெற்றி கொண்ட செய்தியை ஒரு பொருட்டாகவே கருதாத தளபதியை எண்ணிப் பெரிதும் பூரித்தான்.

அன்றிரவு வந்து சேர்ந்த அதுகையும் நீடூர் போரைப் பற்றி எதையும் பிரஸ்தாபிக்காமல் 'மன்னவா, சேர சோழரது பேரணி நம்மைச் சந்திக்கும் இடம் தெரிந்து விட்டது'- என்றான்.

'என்ன இடம் அது தளபதி?'- கேட்டான் மன்னன்.

'தலையாலங்கானம்' என்று ஏதோ மந்திரச் சொற்களை உதிர்ப்பது போல் சொன்னான் அதுகை.

ஓரிரு நிமிடங்களுக்கு மன்னனின் முகம் தீவிர சிந்தனையைக் காட்டியது. பிறகு அதுகையை நோக்கி 'தளபதி, சேரன் அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்த காரணம் என்னவாக இருக்கும்?' என்று கேட்டான்.

'மன்னவா, இந்த இடத்தைத் தேர்வு செய்தது சேர மன்னனல்ல'

'வேறு யார்?'-

'இருங்கோவேள்'

'அவனா?'-

'ஆம் மன்னவா. ஆனால் ஆலங்காட்டைப் போய் தேர்ந்தெடுத்தது ஏன் என்று தான் தெரியவில்லை'-

'நான் சொல்கிறேன்'- என்று புதுக்குரல் ஒன்று அங்கே பிரவேசித்தது.

அதையடுத்து மன்னனின் பாசறையில் பிரவேசித்தான் பழையன்.

⁂ ⁂ ⁂

இதே கேள்வியைத்தான் தலையாலங்கானத்தில் சேரமன்னன் கேட்டுக் கொண்டிருந்தான் இருங்கோவேளிடம்.

அந்த இருங்கோவேள் அன்று தேர்ந்தெடுத்த தலையாலங்கானம் இன்றும் இதே பெயரில் தஞ்சை மாவட்டத்தில் குடவாசலுக்குக் கிழக்கே திருவாரூர் செல்லும் வழித்தடத்திற்குச் சமீபத்தில் ஒரு கிராமமாக பேரமைதியுடன் காட்சி தருகிறது.

இவ்வூர் தலையாலங்காடு என்றும் வழங்கப்பட்டது. ஆலங்காடுகளில் தலையானதாக இருந்த காரணத்தால் இது தலையாலங்காடு என்று வழங்கப்பட்டிருக்கலாம் என்று அறிஞர் கூறுவர். சங்ககாலத்திற்குப் பின்னால்



இங்கே தோன்றிய சிவாலயத்தின் ஈசன் ஆலங்காடன் என்றும் அழைக்கப்பட்டான்.* தற்போது அங்கு ஆலங்காடு எதுவும் இல்லைதான். ஆனால் பெரும் படைகள் கூடி போரிடக்கூடிய அளவிற்குப் பரந்த நிலப்பரப்பு இருப்பதைக் காண முடியும்.

அந்த ஆலங்காட்டின் நடுவே ஆலங்களின் பசும் நிழலில் அரியதோர் காட்சியாக அனைத்து மன்னர்களும் வீற்றிருந்தனர். சோழ மன்னனும் சேர மன்னனும் மூவேந்தர்களில் இருவராதலால் சற்றே உயரமான ஆசனங்களில் அவரவர் வெண்கொற்றக் குடையோடும் கொடியோடும் அமர்ந்திருக்க அவர்களுக்கு முன்னால் பெரும் தோரணைகொண்ட வீரத் தளபதிகளைப் போல வேளிர் குலச் சிற்றரசர்களான எருமையூரன், திதியன், பொருநன், இருங்கோவேள் ஆகியோர் அமர்ந்திருந்தனர்.

சிற்றரசர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் ஆற்றல் கொண்டவர்களாய் இருந்தாலும் இருங்கோ வேளுக்கு மட்டும் அங்கே மதிப்பு சற்று அதிகம் இருந்த மாதிரித் தோன்றியது. அதற்கு முக்கியக் காரணம் தலையாலங்கானத்தைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்து படைகள் மேன்மேலும் அலைய விடாமல் காத்ததுதான் என்று சொல்லலாம். அவனது இதர விவரங்களைப் பற்றி எதுவும் அறியாத படைவீரர்கள் கூட தங்களது ஊர்வலத்திற்கு அவன் ஒரு முற்றுப்புள்ளி வைத்ததை

* 'தடங்கல்லைத் தலையாலங்காடன் தன்னை
சாராதே சாலநாள் போக்கினேனே'
- தலையாலங்காட்டுத் திருத் தாண்டகம் 6 (அப்பர்)

எண்ணி ஆசுவாசப் பெருமூச்சு விட்டு அவனை பற்றிச் சிலாகித்துக் கொண்டார்கள்.

இறந்து கிடந்த மார்பில் சந்தனத்தைப் பூசியிருந்த காரணத்தால் சுற்றுப்புறத்தைச் சுகந்தமானதாக மாற்றி விட்டிருந்த இருங்கோவேள் ஒரு விதச் செருக்குடன் தன் ஆசனத்தில் அமர்ந்திருந்தான். தற்போது ஹளெபீடு என்று அழைக்கப்படும் கன்னட நாட்டின் சங்ககாலப் பெயர் துவரை. அங்கே அக்காலத்தில் அரசாண்ட மன்னர் பரம்பரையினர் வேளிர் குலத்தைச் சார்ந்தவர்களாய் இருந்ததால் அவர்களது பெயர்கள் எல்லாம் கோவேள் (கோ-அரசன்) என்பதாகவே அமைந்தன. அம்மரபில் வந்தவனான இருங்கோவேள் பாண்டியன் நெடுஞ்செழியனின் காலத்தில் துவரை நாட்டின் சிற்றரசனாக இருந்தான். அந்நாட்டின் அண்மை நாடான எருமையூரில் (மைசூர்) ஆண்டு வந்த எருமையூரனுடன் நட்புறவு கொண்டிருந்தான். அந்த நட்புறவே இருவரையும் சேர மன்னனின் அழைப்புக்கு சம்மதம் சொல்லவைத்து உதவத் தூண்டியது.

அப்படி வந்து சேர்ந்த இருங்கோவேள் ஆற்றல் மிகுந்தவனாயும் போர்க்கலையில் வல்லவனாயும் இருந்தான். அதிலும் போர் வியூகங்களை அமைப்பதில் நிபுணனாய் இருந்தபடியால் எருமையூரன் அவனை முன்கூட்டியே அனுப்பி வைத்து பாண்டியப் படைகளை முறியடிக்கத் தோதான இடத்தைத் தேர்ந்தெடுக்கும்படி வேண்டிக் கொண்டான். பாண்டியப் படைகளை முறியடிக்க வகுக்க வேண்டியது சிறந்த திட்டம் மட்டுமல்ல வியூகமும் கூடத்தான் என்பதை அறிந்த இருங்கோவேள் எருமையூரனின் திட்டப்படியே



முன்னதாகவே சோழ நாட்டிற்குச் சென்று தலையாலங் காட்டைத் தேர்ந்தெடுத்தான். சேர சோழர்கள் அங்கு வந்து சேர்ந்ததும் அவன் விருப்பப்படியே படைகள் அணி வகுக்கப்பட்டு சகலமும் முடிந்து பாண்டியனைச் சந்திக்கக் காத்திருந்தன.

அவனது ஏற்பாடுகளில் இருந்த சிறப்புகளால் பெரிதும் பூரித்துப் போன சேரமன்னன் தற்போது வினவினான். 'இருங்கோவேள், நீங்கள் இந்த இடத்தைத் தேர்ந்ததெடுக்கக் காரணமென்ன?'

இதற்கு இருங்கோவேள் பதில் கூற முற்பட்டபோது பாசறைக்கு முன்னால்வந்து நின்றது ஒரு தேர். அதிலிருந்து இறங்கிய நபரை கண்டவர்கள் ஒரு கணம் திகைத்தார்கள். விருந்தில் விழுந்த கல்போல் இருந்தது அந்த நபரின் பிரவேசம்.

◈◈◈

முரசு ஐம்பத்தொன்று

# இருங்கோவேளின் திட்டம்

ரதத்திலிருந்து இறங்கிய நபர் வேறு யாருமல்ல. சேரர் மன்னனின் பட்டத்து ராணி வீரமாதேவி தான். அவரைக் கண்டதும் பாசறையில் இருந்த சிற்றரசர்கள் வியப்படைந்தனர் அவரது வரவு அசந்தர்ப்பமானதாய் இருந்ததால். அவரைக் கண்டதும் நால்வரும் மரியாதைக்கு அடையாளமாய் எழுந்து நின்றதோடு 'மகாராணியார் வரவேண்டும். தங்கள் வரவு நல்வரவாகட்டும்' என்று வரவேற்றனர். சோழன் பெருநற்கிள்ளி பிறகு எழுந்து 'வாருங்கள் மகாராணி. வீரர் குல பெண்மணியான உங்கள் வரவு இப்போருக்கு நல்லதொரு சகுனமாக அமையட்டும்' என்று கூறிவிட்டு 'யாரங்கே' என்று கூவி கைகளைத் தட்டவும் பாசறையின் வாசலில் இருவர் தோன்றினர். அவர்களிடம் சோழன் கட்டளையிட முற்படுவதற்குள் அவர்களாகவே 'மகாராணியார் தங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டோம் பிரபு'- என்று தெரிவித்துக் கொண்டனர். பிறகு சோழன் சேரமன்னனைப் பார்த்தான். அதே சமயம் பாசறையின் வாசலில் வந்து நின்ற எழினியையும் அவனது களையிழந்த முகத்தையும் அனைவரும் பார்த்தனர். சேர மன்னன் ஏதோ பேச முற்பட்டு அடக்கிக் கொண்டான். மகாராணியுடன் தனி பாசறைக்குச் சென்றான்.



மகாராணியிடம் நடந்தவைகளைக் கேட்டு அறிந்த போது சேர மன்னனுக்குப் பெரும் கோபம் உண்டாயிற்று. பழையனைவிட எழினியின் பேரிலேயே அவனது கோபமும் ஆத்திரமும் அதிகமாய் இருந்தன. அந்தப்புரத்தை விட்டால் அரண்மனைக்கு மட்டுமே வந்து பழகிய மகாராணியை கண்டபடி அலையவிட்டதற்கு எழினியே முழுகாரணம் என்பதை அறிந்த அவன் எழினியை ஒரே வெட்டில் வீழ்த்திவிடும் நோக்கத்துடன் உருவிய வாளுடன் பாசறைக்குச் சென்றான்.

நல்ல ,வேளையாக எழினி அங்கே இல்லை. எழினியிடம் அனைத்து விவரங்களையும் அறிந்திருந்த சோழன் தற்போது சேரனின் கோலத்தைக் கண்டதும் அவனது உத்தேசத்தை ஓரளவிற்கு ஊகித்துக் கொண்டு அவனுக்கு அருகில் வந்து தோளைப் பற்றி இதமாகப் பேசினான்.

'கோபம் வேண்டாம் இரும்பொறை. கோபத்தை அடக்கி வீரத்தையும் விவேகத்தையும் காட்ட வேண்டிய இடம் இது. பெரும் முடிவிற்கான திட்டங்களைத் தீட்ட வேண்டிய நேரம் இது. உனது வாள் பாண்டியர்களின் தலைகளை வீழ்த்த வேண்டிய வாளேயன்றி வீணான காரியங்களில் பயன்படுத்த வேண்டிய வாளல்ல. உன் ராணி இங்கு வந்தது ஒரு வகையில் நல்லதுதான். உன் மாவீரத்தையும் மகத்தான வெற்றியையும் நேரில் இருந்து காண்பது அவருக்கும் உனக்கும் பெருமைக்குரிய ஒன்று. அதற்கான வாய்ப்பையே எழினி உண்டாக்கி விட்டான் என்று வைத்துக்கொள். கவலையைவிடு. உன் மகாராணிக்குத் [illegible] விரைவிலேயே வருகிறது. ஆம். சோழ அரசியும் இங்கே வரப்போகிறாள். இருவரும்

நமக்கு வெற்றித் திலகமிடுவார்கள். வா. வந்து உட்கார். நாம் பேச வேண்டிய விஷயங்கள் நிரம்ப இருக்கின்றன' என்றான்.

சோழனின் பேச்சு சேரனின் கோபத்தை ஓரளவிற்குத் தணித்தது. 'போர் முடியட்டும். அந்த அற்பன் எழினியின் எஞ்சியிருக்கும் பற்களையும் தட்டி பரலோகத்திற்கு அனுப்பி வைக்கிறேன்' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டு வாளை உறையிலிட்டுக் கொண்டு பாசறைக்குள் வந்தமர்ந்தான்.

அவனது சிந்தனையை மாற்ற முற்பட்ட பெருநற்கிள்ளி இருங்கோவேளிடம் வினவினான்.

'துவரை மன்னரே, இந்த இடத்தைப் போர்க்களமாகத் தேர்ந்தெடுத்தது பற்றி பேசிக் கொண்டிருந்தோம்.'

'ஏன், நம் எருமையூர் மன்னர் அதுபற்றி ஒன்றும் கூறவில்லையா?' என்று கேட்டான் இருங்கோவேள்.

'விவரமாக எதும் சொல்லவில்லை. இந்த இடம் கடற்கரைக்கு அருகில் இருப்பதாகச் சொன்னார். பாண்டியனுக்கு உதவக்கூடிய கோட்டை வசதிகள் அருகில் எதுவும் இல்லை என்று சொன்னார். அதோடு இங்கே படைகளைக் கொண்டு வியூகக் கோட்டை அமைக்கப் போவதாகச் சொன்னார்'...

'உண்மைதான் சோழ மன்னரே. இந்தச் சமவெளி வெண்ணிப் பரந்தலையைவிட விஸ்தாரமாக இருக்கிறது. அதனால் எத்தனை லட்சம் படைகளையும் இங்கே அணிவகுக்க முடியும். கடற்கரையும் நமக்குப் பின்னால் சமீபத்திலேயே இருப்பதால் நமது படை தேவைப்



பட்டால் பின்வாங்கவும், விரிவடையவும், பிரிந்து போய் வளைக்கவும் போதிய இடமிருக்கிறது. நமக்குப் பின்னால் ஊர்கள் எதுவும் இல்லை. நாகைப்பட்டினமும் சற்று தள்ளியே இருப்பதால் நமக்குப் பின்புறத்தில் எந்தவிதமான எதிர்ப்பும் நமக்குத் தெரியாமல் வரமுடியாது. பாண்டியனிடம் கடற்படை இருந்தாலும் பெரிதாக இல்லை. ஒருவேளை கொற்கையில் இருக்கும் அவனது சிறிய கடற்படை கடற்புறம் வந்து நம்மைப் பின்னால் வந்து தாக்க முற்படலாம். ஆனால் அதை முன் கூட்டியே அறியவும் அப்படை கரைக்கு வந்து சேருவதற்கு முன் தாக்கவும் இந்த இடம் நமக்குச் சௌகரியம்.'- என்று கூறி சற்று நிறுத்தினான் இருங்கோவேள்.

அனைவரும் அவனது போர் அறிவைப் பெரிதும் சிலாகிப்பதுபோல் தலையை அசைத்தார்கள். இருங்கோவேள் மீண்டும் தொடர்ந்தான்.

'மதுரையில் பாண்டியன் வென்றதற்கு முக்கியக் காரணம் நெடுஞ்செழியனின் வீரமோ பழையனின் தந்திரமோ காரணமல்ல. மதுரைக் கோட்டையின் அமைப்பும் பலமும் தான் முக்கிய காரணம். கோட்டைக் கதவுகள் திறந்தமுறை, கோட்டைச் சுவர்கள் நகர்ந்த விதம் ஆகியவைகள் அவனுக்கு மிகவும் சாதகமாக இருந்தன. அதோடு அவைகளைத் திறம்பட இயக்க யவனர்கள் கோட்டைக் காவல் புரிந்தார்கள். அவை மட்டும் இல்லாதிருந்தால் போரின் முடிவு மாறியிருக்கும். தற்போதிருக்கும் இடத்தில் அவனுக்கு அந்த வசதியில்லை. மதுரையை விட்டு அவன் வெகு தூரம் வந்துவிடுகிறான். தன்னைப் பாதுகாத்துக் கொள்ள

அவனுக்குக் கோட்டை வசதிகள் எதுவும் இல்லை. அவனைப் பலவழிகளிலும் நெறுக்கிப் பின்னடையச் செய்யலாம். அதே நேரத்தில் தஞ்சையில் நமது படைப் பிரிவு ஒன்றை அனுப்பி வைத்து பின்புறத்தில் அவனைத் தாக்கச் செய்யலாம். அவன் தப்புவதற்கு இடமில்லாமல் போகிறது'-

'அப்படியானால் இந்தச் சமவெளியில் நம்மைச் சந்திப்பதைத் தவிர அவனுக்கு வேறு வழி இல்லை. அல்லவா?'- என்று கேட்டான் பொதிகை மலையின் தலைவன் பொருநன்.

'ஆம். நம்மை இங்கேயே சந்திக்கத் தான் வேண்டும். அப்படிச் சந்திக்கும் போது அவன் உடனடியாக காலனைச் சந்திக்கும்படிச் செய்யும் இத் தலையாலங்கானம். இதோ நாம் இருக்கும் இப்பெருவெளி ஆலங்காடுகளால் சூழப்பட்டு சிறந்த பாதுகாப்பைத் தருகிறது. அதாவது நமது இருபுறங்களிலும் உள்ள ஆலங்காடு நமக்கு இரு இறக்கைகள் போல் அமைகின்றன. அந்த இறக்கைகளில் தேர்ப் படைகளையும் யானைப் படைகளையும் நிறுத்தி பொருத்தமான நேரத்தில் பாண்டியர் படைகளைப் பக்கங்களில் தாக்கவிட்டு நொறுக்கலாம். அதே சமயம் இறக்கைகளுக்கு நடுவே பறவையின் உடல் போல் உள்ள இச்சமவெளியில் நமது பிரதானப் படைகள் முன்னேறிப் போய் தாக்கினால் பாண்டியன் எமலோகத்தைத் தவிர வேறெங்கு போக முடியும்?'-

இருங்கோவேள் இப்படிச் சொல்லி முடித்ததும் 'உண்மை. உண்மை. உங்கள் திட்டம் வெற்றி பெறுவதற்கான சாத்தியக் கூறுகள் பூரணமாக



இருக்கின்றன. நமக்குள்ள இந்தவசதி பாண்டியர் படைகளுக்கு இல்லை' என்று சொன்ன பெருநற்கிள்ளி, 'வியூகக்கோட்டை என்று ஏதோ சொன்னீர்களே அது என்ன?' என்று கேட்டான்.

'அது என் கடைசி அஸ்திரம். அநேகமாக அதற்குத் தேவையிருக்காது. ஒரு வேளை அமைக்க வேண்டி வந்தால் அதில் எமனே வந்து சிக்கினாலும் தப்ப முடியாது. அது பற்றி பிறகு தெரிவிக்கிறேன். பாண்டியர் படைகள் வரட்டும்'- என்றான் இருங்கோவேள்.

அன்றைய உரையாடல் அத்துடன் முடிந்தது. அதில் சேர மன்னன் கலந்து கொள்ளவில்லை. எழினியைப் பற்றியே எண்ணி அன்று முழுவதும் சித்தம் கலங்கி இருந்தான். மறுநாள் சோழ அரசி வந்து சேர்ந்தபின் மகாராணிகள் இருவரும் பரஸ்பர சந்தோஷமடைந்தார்கள். தங்கள் மணாளர்களின் வெற்றிச் சிறப்பைக் காணும் பெருமிதத்தில் பூரித்தார்கள். அவர்களின் பூரிப்பைப் பூரணமாக்கும் கலை நிகழ்ச்சிகளையும் வீரர்கள் நிகழ்த்திக் காட்டியதால் நிலைமை வெகுவாக மாறியது. சேர மன்னனும் இயல்பான நிலைக்குத் திரும்பினான். அவனப்படித் திரும்பியது வீரர்களுக்குத் தெம்பை ஊட்டியதால் பாசறை புத்துணர்ச்சி பெற்றது.

அன்றிரவும் மன்னர்கள் கூடி ஆலோசனை செய்தார்கள்.

அப்போது எவ்வி மாண்டு போன செய்தி அவர்களுக்குக் கிடைத்தது.

'எவ்வி மாண்டு போகும் அளவிற்கு போர் நடந்ததா?'- என்று வினவினான் இரும்பொறை செய்தி கொண்டு வந்த ஒற்றனிடம்.

'பெரும் போர் என்று சொல்ல முடியாது. அரை நாழிகைதான் நடந்தது.'- என்றான் ஒற்றன்.

'போரை நடத்தியது யார்?'...

'பாண்டியர் தளபதி அதுகையின் தலைமையில் சுமார் ஆயிரம் வீரர்கள் இரவுப் பொழுதில் வாணங்களைக் கொளுத்தி...' என்று ஒற்றன் முடிப்பதற்குள் சேர மன்னனுக்கு போர் விவரம் விளங்கி விட்டதால் 'போதும்' என்று கூறி ஒற்றனை அனுப்பினான்.

அதற்கடுத்த நாள் பாண்டியர் படையுடன் பழையன் வந்து சேர்ந்துவிட்டான் என்ற செய்தி கிடைத்தது.

பழையன் இல்லாத பாண்டியர் படையுடன் மோதுவது என்ற நிலை மாறிவிட்டபடியால் சேர மன்னன் தனது முடிவான திட்டம் பற்றி சக மன்னர்களிடம் ஆலோசனை நடத்தினான். அதற்கு இருங்கோவேள் சில மாற்றங்களைச் சொன்னான். மொத்தத்தில் சேர சோழரது போர்த்திட்டம் பயங்கரமாய் இருந்தது.

❀ ❀ ❀

சேர சோழரது போர்த்திட்டம் உறுதிப்பட்டு விட்ட நிலையில் பாண்டிய மன்னனும் தன் போர்த் திட்டத்தைத் தன் தளபதிகளுக்குத் தெரியப்படுத்தினான். அவனது திட்டத்தைக் கேட்ட தளபதிகளான அதுகை, நாலைக் கிழவன், வில்லவன் ஆகியோர் தலைகளை ஆட்டிச்



சம்மதம் தெரிவித்ததோடு அதனைப் பாராட்டவும் செய்தார்கள். ஆனால் படைத்தலைவன் ஒரு வார்த்தையும் பேசாதது மட்டுமின்றி ஏதோ சிந்தனை வயப்பட்டவனாக இருந்தான்.

அதைக் கவனித்த பாண்டிய மன்னன் 'படைத் தலைவரே'- என்று அழைத்து பழையன் அவனுக்காகத் திரும்பி 'மன்னவா', என்று விளித்ததும் 'நீங்கள் எதையும் சொல்லவில்லையே!' என்று கேட்டான்.

பழையன் உடனடியாக எதுவும் பேசாததால் மன்னன் மேலே பேச முற்பட்டு 'ஏன், என் திட்டத்தில் குறை ஏதாவது இருக்கிறதா?' என்று வினவினான்.

இங்கு குறுக்கிட்ட அதுகை 'இதில் குறை எதுவுமில்லை. எதிரியின் பிரதான படை நமக்கெதிரே சமவெளியில் நிற்கிறது. அதன் தேர்ப்படையும் யானைப்படையும் இருபுறங்களில் உள்ள ஆலங்காட்டில் இருக்கின்றன இரு இறக்கைகளைப் போல். அதாவது கருடனைப் போல் வியூகம் வகுத்து நிற்கின்றன எதிரிப்படைகள். அதற்கு மாற்றாக என்னவியூகம் வகுக்க வேண்டுமோ அதைத்தான் மன்னர் பிரான் கூறுகிறார். இதில் குறை என்ன இருக்கிறது?'- என்று கேட்டான்.

அவனை உற்று நோக்கிய படைத்தலைவன், 'தளபதி எதிரியின் படைபலம் எவ்வளவு'? என்று கேட்டான்.

'சுமார் இரண்டு லட்சம் இருக்கலாம்'- என்றான் அதுகை.

'நமது படைபலம்?'...

'ஒரு லட்சம்'-

'எதிரியின் தரப்பில் சேர சோழ மன்னர்களைத் தவிர போர்த்திறமை வாய்ந்த ஐந்து சிற்றரசர்கள் இருக்கிறார்கள். புரவிப்படை, யானைப்படை, தேர்ப் படை, விற்படை ஆகிய அனைத்துப் படைகளும் இருக்கின்றன இல்லையா?'...

'ஆமாம்'

'அவனது தேர்ப்படையும் யானைப்படையும் இருக்கும் ஆலங்காட்டுப் பகுதி மேடாக இருக்கிறது. அங்கிருந்து நம்மீது தாக்கும் அப்படை பெரு வேகத்தில் நம்மீது வந்து மோதமுடியும் இல்லையா?'...

'ஆமாம்'

'அதோடு கருட வியூகம் அமைத்தார்களே-எப்போது அமைத்தார்கள்?'-

'நேற்று'

'நேற்று வியூகம் அமைத்தவர்கள் இன்று வரை நம்மைத் தாக்க முற்படவில்லையே ஏன்? நம்மைக் காட்டிலும் வசதியான நிலையில் படை பலத்துடன் இருககும் எதிரி ஏன் இன்னும் தாக்க முற்படாமல் இருக்கிறான்? அவன் எதிர்பார்ப்பது என்ன?'... என்று சரமாரியாக கேள்விகளைக் கேட்டான் பழையன்.

'அது தெரியவில்லை'... என்றான் அதுகை.

'அதைத்தான் நானும் யோசிக்கிறேன்' என்று கூறிய பழையன் 'மன்னவா, நாளைக் காலை வரை போரை ஒத்தி வைக்க தங்கள் அனுமதியைக் கோருகிறேன்'... என்றான்.



'பாதகமில்லை. அப்படியே செய்யலாம்' என்று உடனே ஒப்புக் கொண்டான் மன்னன்.

ஏன் எதற்கு என்று கேட்காமல் விளக்கம் எதுவும் கோராமல் பழையனின் சந்தேகத்திற்கு மதிப்பளித்து அவனது கோரிக்கையை மன்னன் ஏற்றதைக் கண்டு அதுகை முதலானோர் வியந்தார்கள். பழையனின் பேரில் அவனுக்கிருந்த நம்பிக்கை அவர்களது நெஞ்சைத் தொட்டது.

மறுநாள் காலை போரைத் துவக்க ஆயத்தமாகிய தளபதி அதுகை மன்னனை வந்து சந்தித்தபோது அவன் கேள்விப்பட்ட செய்தி விபரீதச் செய்தியாய் இருந்தது. உடனிருந்த படைத்தலைவனை நோக்கினான் அதுகை. படைத்தலைவனின் முகம் புன்னகையைக் காட்டிக் கொண்டிருந்தது.

◈◈◈

முரசு ஐம்பத்திரண்டு

# பழையனின் போக்கு

மேகலையை மீட்டுக் கொண்டு பாண்டிய மன்னனின் பாசறைக்கு வந்து சேர்ந்ததிலிருந்து பழையன் சும்மா இருக்கவில்லை. அவனது சிந்தனையும் ஒரு நிலையில் இல்லை. சேர சோழருடன் எழினி, திதியன், பொருநன், எருமையூரன், இருங்கோவேள் ஆகிய வேளிர் ஐவரும் தத்தம் கைதேர்ந்த சிறப்புப்படைகளோடு சேர்ந்து முழுமை பெற்றிருப்பதையும், ஆலங்கானத்தை தேர்ந்தெடுத்து படைகளை அணிவகுக்க முற்பட்டதையும் அறிந்ததிலிருந்தே அவனது சிந்தனை பலவாறு வியாபித்து அவனை அலைக்கழித்தது. வந்ததிலிருந்து பல இடங்களுக்கும் ஒற்றர்களையும் ஓலைகளையும் அனுப்புவதிலும், அவற்றுக்கான பதில்களை எதிர்பார்ப்பதிலுமாக இருந்தான். ஆயுதங்களை வடித்துக் கொண்டிருந்த பட்டறைக்குச் சென்று கொல்லர்களிடம் ஆலோசனை செய்து திடீர் திடீரென பற்பல ஆணைகளையும் பிறப்பித்தான். காட்டு மரங்கள் அதையடுத்து வெட்டப்பட்டு கொல்லுப்பட்டறைக்கு அனுப்பப்பட்டன. பட்டறையில் என்ன நடக்கிறது என்று தெரியா வண்ணம் அதைச் சுற்றி மறைவு செய்யப்பட்டது மட்டுமின்றி பலத்த காவலும் போடப்பட்டது. இதற்கிடையில் மதுரையிலிருந்து உதயணனும் அவனுடன் யவனன் ஒருவனும் வந்து சேர்ந்தார்கள்.



அவர்களுடன் வந்திருந்த பொருட்களை பார்வையிட்ட பழையன் திருப்திக்கு அறிகுறியாகத் தலையை அசைத்துக் கொண்டான். அந்த யவனனுடன் நீண்ட நேரம் ஆலோசனை செய்தபின் 'செய்து முடிக்க எத்தனை நாட்களாகும்?' என்று வினவினான். அதற்கு யவனன் அளித்தபதில் திருப்தியாக இல்லை. 'இரண்டு நாட்களுக்குள் முடியவேண்டும். உதவிக்கு எத்தனை ஆட்களை வேண்டுமானாலும் எடுத்துக்கொள். உன் திறமையை நம்பித்தான் உன்னை அழைத்தேன்', என்று அவனுடன் பலமாக வாதம் செய்தான். அதை யவனன் ஒப்புக் கொண்டதன் பேரில் பட்டறை மேலும் சுறுசுறுப்படைந்தது. பழையனே பட்டறைக்குள் அடிக்கடி சென்று வேண்டிய உதவிகளைச் செய்தான். சில சமயங்களில் இரும்பை உருக்கி வளைக்கும் பணிகளில் அவனே ஈடுபட்டான். பிரம்மாண்டான வேலைகளை யானைகள் செய்தன. முடிவில் இரண்டு நாட்களில் அவன் எதிர்பார்த்த பொருள் நிர்மாணித்து முடிக்கப் பட்டதைக் கண்டதும் பெருமகிழ்ச்சி அடைந்து யவனனைக் கட்டித்தழுவினான். உதயணனிடம் அதையொட்டி சில ஆலோசனைகளைச் செய்தபின் பட்டறையில் புதியதாக உருவாக்கப்பட்ட பொருட்களின் எண்ணிக்கையைக் கொண்டு ஏதேதோ கணக்குகளை தரையில் போட்டுப் பார்த்தான். அவ்வப்போது உயரமான மரங்களில் குரங்கு போல தொற்றி ஏறி எதிரிப்படைகளை நோக்கினான். கீழே இறங்கி வந்தபின் தரையில் மேலும் பல கணக்குகளையும் கோடுகளையும் போட்டான். இப்படி நான்கு நாட்கள் கழிந்த பின்பே அவனுக்குப் பெருமூச்சு வந்தது.

இந்த நான்கு நாட்களில் மன்னனை அவன் சந்திக்கவே இல்லை. ஆயினும் அவன் ஒரு நிலையில் இல்லை என்பது மன்னனுக்கு விளங்கவே செய்தன. மன்னனும் அவனைத் தொந்தரவு செய்யவில்லை. போரின் நிலைமை மிகவும் கடுமையாய் இருந்தாலொழிய பழையன் இந்த அளவிற்கு இருக்க மாட்டான் என்று அவனுக்கு நன்றாகவே தெரிந்திருந்ததால் அவன் போக்கிலேயே விட்டு மற்ற காரியங்களில் தன் கவனத்தைச்செலுத்தினான். ஐந்தாவது நாள் ஆலோசனை நடந்து கொண்டிருந்தபோதுதான் பழையன் அந்த ஆலோசனைக் கூட்டத்தின் பக்கம் தலைகாட்டினான். ஆனால் அங்கே அவனெந்த திட்டத்தையும் கூறவில்லை. மன்னன் அறிவித்த திட்டத்தைப் பற்றியும் விமரிசனம் செய்யவில்லை. மாறாக ஒரு நாளைக்கு நடவடிக்கை களைத் தள்ளிப் போடும்படி கேட்டுக் கொண்டான்.

பழையனைப் பற்றி ஆதிமுதல் அந்தம் வரை அறிந்தவனும் அவனை வெறும் படைத்தலைவனாய் கருதாமல் தன் உற்ற நண்பனாகவே வைத்துக் கொண்டவனுமான இளம்பாண்டிய மன்னன் அதற்குச் சம்மதிக்கவே செய்தான் எந்தவிதமான சிந்தனையிலும் இறங்காமல், அந்த நிலையில் ஆலோசனை அவையை விட்டு நீங்கிய அவன் அதுகையை அழைத்தான். தான் கேட்ட ஒரு நாள் அவகாசத்திற்கான காரணத்தை உணர்த்தும் பொருட்டு அதுகையை தான் ஏறும் வழக்கமான மரத்தில் ஏறும்படி சொன்னான். படைத்தலைவனின் போக்கு அதுகைக்கு விந்தையாய் வேடிக்கையாய் இருந்தது.



'கீழே இறங்கி விடாதே அதுகை. நாளைக் காலை வரை மேலேயே இரு. நீ காண்பவைகளை நாளைக் காலை வந்து சொல். எந்த நிலையிலும் உணர்ச்சி வசப்படாதே. எந்தக் காரியத்திலும் இறங்காதே. நாளைக் காலை உனக்கே எல்லாம் புரியும்'- என்று மேலும் கூறிவிட்டு பதிலுக்குக் காத்திராமல் அகன்றான் பழையன்.

பழையனின் போக்கு அதுகையின் விஷயத்தில் மட்டுமல்ல. எல்லா விஷயங்களிலும் விந்தையாகத்தான் இருந்தது. அதுகையை விட்டு வந்த அவன் மேகலையிடம் சென்றான். பட்டறையிலிருந்து கொண்டு வந்த கவசங்களை அவளை அணியச் சொன்னான். அந்த திடீர் உடைகளைக் கண்டு ஏதும் புரியாமல் அவள் திணறியபோது அவனே வலுவில் அக்கவசங்களை அவளுக்கு அணிவித்தான். அப்படி அவன் கவசங்களை அணிவித்தபோது அவனது கைகள் அவளது அங்கங்கள் பலவற்றில் மிகவும் முரட்டுத்தனமாக நடந்து கொண்டன. அவன் அதைப்பற்றியெல்லாம் கவலைப்படவே இல்லை. ஏதோ சிலையொன்றுக்குக் கவசம் போடுவதாகவே எண்ணிக்கொண்டான் போலும்.

அவளால் அப்படிச் சிலைபோல் இருக்க முடியவில்லை. அவனது கரங்களும் அவை அணிவித்த கவசங்களும் விளைவித்த இம்சைகளை அவளால் தாங்க முடியவில்லை. என்னை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறார் இவர்? பெண் என்ற நினைப்பு கூட போய்விட்டதா? எதற்காக கவசங்கள்? அதையும்தான் இப்படியா முரட்டுத்தனமாக அணிவிக்க வேண்டும்? இவரது கைகள் என்ன இரும்பா? அவை இரும்பாகவே இருக்கட்டும்! என் உடலும் இரும்பென்று நினைத்து

விட்டாரா?' என்றெல்லாம் எண்ணி உணர்ச்சிக் கொந்தளிப்பில் தவித்தாள். அவனது கரங்கள் முரட்டுத் தனமாய் படும்போதெல்லாம் அவஸ்தையில் முனகினாள். அவள் எதிர்ப்புக் காட்ட முற்பட்டாலும் அதை சட்டை செய்யும் நிலையில் அவன் இல்லாததால் வேறு வழியின்றி பொறுமையாக இருந்தாள்.

கவசங்களை அணிவித்தபின் பழையன் மேற்கொண்ட நடவடிக்கை மேலும் விந்தையாய் இருந்தது. அவளிடம் வாளொன்றைக் கொடுத்த பழையன், 'ம். போரிடு என்னுடன்' என்றான் முரட்டுத்தனமான குரலில்.

அவளுக்குத் தற்போது பெருங்கோபம் மூண்டு விட்டது.

'போரிடுவதா? நானா? நீங்களென்ன விளையாடுகிறீர்களா?'- என்று சீறினாள்.

அவன் அவள் வார்த்தைகளை மதித்தவனாகத் தெரியவில்லை. 'வாளை வைத்துக்கொண்டு யாரும் விளையாட மாட்டார்கள். வீண்பேச்சு வேண்டியதில்லை. தொடங்கு' என்று மூர்க்கமாக இரைந்தான். அவனது இரைச்சல் அருகில் சென்று கொண்டிருந்த சில வீரர்களைக்கூடத் திரும்பிப் பார்க்க வைத்தது.

மேகலை மிகவும் குன்றிப் போனாள் வெட்கத்தால். தன் உடலில் இருந்த கவசங்களைத் தாங்குவதே அவளுக்கு இயலாத காரியமாக இருக்கும்போது வாளேந்தி அதுவும் எதற்கென்று தெரியாமல் போரிடுவது நரகமாயிருந்தது அவளுக்கு. அப்படியொரு நரகம் தன் ஆருயிர் காதலனாலேயே கிடைக்கும் என்று அவள் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. அழுகை பொத்துக் கொண்டுவரும் நிலையில் இருந்தாள் அவள். உண்மையிலேயே தனக்குக் கவசம் அணிவித்ததும் போரிடச் சொன்னதைவிட தன்னை முரட்டுத்தனமாக நடத்திய விதமே அவளை நரக சிந்தனைக்குக் கொண்டு சென்றிருந்தது.



எனவே அவளுக்குள் இயற்கையான முரட்டுத்தனம் துளிர்த்தது. அனைத்தையும் மறந்தாள். எதிரே நின்ற பழையனை எதிரியாகவே நினைத்தாள். அவளது வாள் போரில் இறங்கியது. அவளது உன்மனப் போராட்டங்களை முதலில் பழையன் அறிந்து கொள்ளவில்லை, ஆகவே அவள் வாளை வீசிய பற்பல நேரங்களில் 'இப்படி அல்ல. அப்படி' 'கீழே இறக்காதே - வலது புறமாக வீசு' 'வேகம் வேண்டும் - இப்படியா நிதானிப்பது?' என்றெல்லாம் திருத்தங்களைச் சொன்னான். அவள் அவற்றைக் கவனித்தாளா இல்லையா என்று தெரியாது. ஒருவேகம்- அவளுக்குள் உண்டாகி அவளை இயக்கியது என்றே சொல்ல வேண்டும். அந்த வேகம் போகப் போக அவளது வாள் வீச்சில் புலப்பட்டது.

அதைப் பழையன் கவனிக்கவே செய்தான். அதை மட்டுமல்ல. அவளிடம் தயக்கம் எதுவும் இல்லாததையும் இயல்புக்கு மீறிய முரட்டு வெறி உண்டாகியிருப்பதையும் கவனித்தான். தான் சொன்ன திருத்தங்களையெல்லாம் மீறி அவள் வாளை வீசுவதையும் உண்மையான போரிலேயே இறங்கி விட்டதையும் அவளது முகம் தீயாய் சிவந்து கண்கள் அனலைக் கக்கியதையும் கவனித்தான். அவற்றை

யெல்லாம் கண்டபோது அவனுக்கு மகிழ்ச்சியாகவே இருந்தது. ஏதோ தான் நடத்திய சோதனை வெற்றி பெற்று விட்ட பூரிப்பு உண்டாயிற்று. போரை நிறுத்த அவனே விரும்பினாலும் முடியாத சூழ்நிலை உண்டாவதையும் உணர்ந்தான். எனவே போரின் உக்கிரத்தை மெல்ல மெல்ல குறைத்து முடிவில் 'போதும் மேகலை. போதும் நிறுத்து' என்றான்.

அவனது குரல் அவளது சிந்தனை வேகத்தைப் பட்டென அறுத்தது. வாளை ஓங்கித் தரையில் வீசினாள் அவள். போரும் அதன் வேகமும் நின்றுவிட்ட நிலையில் அவளால் நிற்க முடியவில்லை. சாய்ந்தாள் தரையை நோக்கி. பழையன் அவளைத் தாங்கிக் கொண்டான். கவசம் தரித்த அவளது உடலை அனாயாசமாக கைகளில் ஏந்தி அவளது கூடாரத்திற்குப் போனான். அங்கிருந்த பஞ்சணையில் படுக்கவைத்து கவசங்களைத் கழற்றினான். ஏதோ பெரும் சிறையிலிருந்து விடுபட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது அவளுக்கு. அப்படியே மயக்கமானாள்.

அவளை மேற்கொண்டு தொந்தரவு செய்யாமல் வெளியேறிய பழையன் தளபதிகளான வில்லவன், நாலைக்கிழவன் ஆகியோரிடம் ஏதேதோ ஆணைகளை இட்டான். அந்த நேரத்தில் டைரியஸ் வந்து சேர்ந்து விட்டதாகவும் அவனுடன் நன்னனும் வந்திருப்பதாகச் செய்தி வந்தது. இருவரையும் அழைத்தான் பழையன். டைரியஸிடம் தனியாகப் பலவித விஷயங்கள் பற்றிக் கலந்தாலோசித்துவிட்டு, 'நன்னனைக் கவனித்து கொள் டைரியஸ். துன்புறுத்தாதே. பாவம் மிகவும் நொந்து போயிருக்கிறான்' என்று அறிவுறுத்திவிட்டு வில்லவன்,



நாலைக்கிழவன், உதயணன் ஆகியோரை அழைத்துக் கொண்டு படை வீரர் முகாம்களுக்குச் சென்று வீரர்களைச் சந்தித்துப் பேசினான்.

அவன் வந்து போவதற்கு முன்பாக பாண்டிய மன்னனே நேரில் வந்து வீரர்களிடம் அளவளாவியும், அவர்களது நிறை குறைகளைப் பற்றிப் பேசியும், அவர்களோடு அமர்ந்து உண்டு விட்டும் போயிருந்தான். அப்படியிருக்கப் பழையனும் அவ்வாறு வந்து உறவாடிய விதம் வீரர்களைப் பெரிதும் கவர்ந்தது. பாண்டியப் பேரரசின் இருபெரும் தூண்களான இவ்விருவரும் அந்தஸ்து பாராமல் தங்களுடன் சமதையாயும் சகஜமாயும் உறவாடிய விதம் அவர்களுக்குள் பெரும் தெம்பை மூட்டியது. பரவலாகப் படைமுகாமுக்குள் உலவிய பழையன் உபதளபதியிடம் போர் முரசுகளை அமைக்க வேண்டிய இடங்களைச் சொல்லி இரவுக்குள் அதை முடித்துவிடும்படி கட்டளையிட்டு விட்டு மேகலையின் இருப்பிடத்திற்கு வந்தான்.

மேகலை அப்போது உறங்கிக் கொண்டிருந்தாள். நாசியிலிருந்து சீரான மூச்சு வந்து கொண்டிருந்தது. பாண்டில் விளக்கொளியில் அவள் மஞ்சத்தில் படுத்திருந்த விதம் மலர் கொத்தொன்று கிடப்பபோல் இருந்தது. தன்னோடு போரிட்டபோது அவளுக்கு காயமெதுவும் ஏற்பட வில்லை என்றாலும் முரட்டுக் கவசங்கள் அழுந்தியதால் ஆங்காங்கே அழுத்தமான அடையாளங்களை உண்டாக்கியிருந்தன. அப்படியொரு அடையாளம் அவளது இடைப் பகுதியில் உண்டாகி விளக்கொளியில் சிவந்த இடையாபரணம் போல் காட்டியது. அதை ஆசையோடு தொட்டு வருடிக் கொடுத்த அவன் அவளது

ஆடைகளைச் சீர்படுத்திக் கூந்தலையும் ஆதரவாய் தடவிக் கொடுத்தான். கால்களையும் சிறிது நேரம் அமுக்கி விட்டும் இதப்படுத்தினான். இந்த நிலையில் கண் விழித்தாள் அவள்.

சிறிது நேரத்திற்கு அவளுக்கு எதுவும் விளங்க வில்லை. 'இதென்ன இவர் என் கால்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்?' என்று யோசித்தாள். கொஞ்சம் கொஞ்சமாக அவளுக்கு விஷயம் அனைத்தும் விளங்கலாயிற்று. பழையன் காட்டிய முரட்டுத் தனமெல்லாம் நினைவிற்கு வந்தது. தன்னை ஒரு பொருட்டாகவே எண்ணாமல் நடத்திய அவன் தற்போது தன் கால்களைப் பிடித்து விடுவதைக் கண்ட போது அவளது கோபமெல்லாம் இருந்த இடம் தெரியால் போயிற்று. சேரனே அஞ்சும் மாவீரன் தன் கால்களைப் பிடித்துக் கொண்டிருப்பது அவளை நெகிழ வைத்தது. அவன் காலைப் பிடிப்பது அடிமைத்தனத்தால் அல்ல தன் மீதுள்ள அனுதாபத்தால்தான் என்பதை அறிந்ததும் அவளது கண்கள் கலங்கின.

அதுவரை ஏதும் பேசாதிருந்த பழையன் தற்போது அவளது கண்களில் நீர் துளிர்ப்பதைக் கண்டதும் 'கலங்க வேண்டிய நேரமல்ல மேகலை'- என்றான் சலனமில்லாத குரலில்.

அவள் படுத்திருந்த நிலையை விட்டு எழுந்தாள். அவன் மார்பில் சாய்ந்தாள். ஒரிரு நீர் முத்துக்கள் அவனது மார்பில் விழுந்தன.

அவளது கண்களைத்துடைத்த பழையன் 'ரொம்பவும் முரட்டுத்தனமாகத்தான் நடந்து கொண்டு விட்டேன். மன்னித்துவிடு மேகலை. நிலைமை அப்படியிருக்கிறது' என்று கூறி அவளது இடையில் தெரிந்த அடையாளத்தின் மீது கையை வைத்தான்.



அவனது கையைத் தன் கரங்களால் அமுத்திக் கொண்ட அவள் 'எனக்கெதற்கு கவசம்?' என்று கேட்டாள்.

'போரிடத்தான் மேகலை'

'போரிடவா? நானா?'

'நீயேதான்'

'யாரிடம்?'

'எதிரியிடம்'

'யார் எதிரி?'

'எதிரியை அதற்குள்ளாகவா மறந்து விட்டாய்? சேரன் தான். உன்னைச் சிறைப்பிடித்தவன் உன் எதிரி இல்லையா?'

'அவனை எதிர்க்கத்தான் நீங்கள் இருக்கிறீர்களே!'

'நான் மட்டும் போதுமா மேகலை? நீ வேண்டாமா? அவனை நீ தண்டிக்க வேண்டாம்?'

'நான் எப்படித் தண்டிப்பது?'

'போரிட்டுத்தான்'

'நானாவது! போரிடுவதாவது.'

'உனக்கென்ன? என்னோடு உக்கிரமாகப் போரிட்டாயே'

'அதெல்லாமா போர்? நான் சாதாரணப் பெண். என்னைப் போய் போரிடச் சொல்கிறீர்களே? பார்ப்பவர்கள் சிரிப்பார்கள்'

'மாட்டார்கள். மேகலை, பெண் போரிட வேண்டியது இல்லை. போருடை அணிந்தாலே போதும். எதிரி அச்சப்படுவான். பல ஆடவ வீரர்களால் உண்டாக்க முடியாத விளைவை ஒரு வீராங்கனையின் போர்க்கோலமே உருவாக்கும். வீரனின் மனைவியான நீ போர் நடக்கும்போது மஞ்சத்திலா படுத்திருக்க முடியும்? நீ இருக்க வேண்டிய இடம், நடந்து கொள்ள வேண்டிய முறை ஆகியவைகளையெல்லாம் இரண்டு நாட்களுக்கு என்னிடம் விட்டுவிடு. என்னைக் கேட்காமல் எதையும் செய்யாதே. என் சொல்லை மறுக்காதே' என்றான் பழையன்.

அவனது வார்த்தைகள் வரவர செட்டிப்பட்டுப் போனது மட்டுமின்றி அவளது முகமும் சிவந்தது.

பிறகு அவளை அங்கே ஓய்வெடுக்கும்படி சொல்லி விட்டு எங்கோ சென்றான் அவன். விடிவதற்குச் சரியாக மன்னனைச் சந்திக்க வந்த போது அங்கே ஏதோ சச்சரவு நடப்பது போல் தோன்றவே அங்கு விரைந்தான். மன்னனின் பாசறைக்குள் அவன் கண்ட காட்சி அவனுக்கே வியப்பாய் இருந்தது. உள்ளே பலியாடுபோல் நின்றிருந்தான் நன்னன். அவனை வெட்டிப் போட நாலைக் கிழவனும் வில்லவனும் வாளை உருவிய வண்ணம் நின்றார்கள்.

◈◈◈

## முரசு ஐம்பத்து மூன்று

# வியூக விசித்திரம்

பழையன் மட்டும் குறுக்கிடாமல் இருந்திருந்தால் நன்னனின் உயிர் நொடிப் பொழுதில் போயிருக்கும். பலமுறை நன்னனின் உயிரைக் காத்த பழையன் தற்போதும் குறுக்கிட்டு நாலைக்கிழவனையும் வில்லவனையும் விலகச் சொல்லி என்னவென விசாரித்த போது தளபதிகள் இருவரும் பதட்டத்துடன் கூறினார்கள்.

'இந்த மடையன் நமது மன்னரை உறங்கும்போது கொலை செய்யப்பார்த்தான். மன்னர் கையும் களவுமாய் பிடித்திருக்கிறார். இவனைக் கொன்று களப்பலியாக இடுவதை விட்டுவிட்டு என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?'-

பழையன் மன்னனைப் பார்த்தான். மன்னனின் முகத்தில் புன்முறுவல் விரிந்து கிடந்தது. எதுவுமே நடக்காதது போன்றதொரு நிலையில் இருந்தான் அவன்.

'ஒன்றுமில்லை படைத்தலைவரே. ஏதோ அவனது வேலை அவனுக்கு. முயன்றிருக்கிறான். பலன் கிடைக்க வில்லை பாவம். ஏன் படைத்தலைவரே இவனுக்கு நல்ல புத்தியைக் காட்ட எவருமே இல்லையா? சேரனுக்குத் தான் குறுக்கு வழி என்றால் அவன் ஈடனுக்குமா

அப்படியே அமைய வேண்டும்? என்னைக் கொல்ல முயன்றது கூட பரவாயில்லை. நான் உறங்கி விட்டேன் என்று நினைத்து வந்திருக்கிறானே பாவம். சுயபுத்தி கொஞ்சம் கூட இல்லையா?' என்று மன்னன் வினவினான்.

'அற்ப பதர். இவனுக்கும் இவனது மன்னன் சோழனுக்கும் அவனை அண்டியுள்ள கூட்டத்திற்கும் உறங்குவதைத் தவிர வேறெதுவும் தெரியாது மன்னவா! ஆகவேதான் தன்னைப் போலவே தங்களையும் எண்ணிவிட்டான். டேய் நன்னா, உங்கள் கூட்டத்தைப் பூண்டோடு அழிக்கும் வரை பாண்டிய மன்னரும் சரி பாண்டிய வீரர்களும் சரி உறக்கமென்பதை மேற்கொள்ள மாட்டார்கள் என்பதை இன்றாவது தெரிந்துகொள்' என்றான் வில்லவன் - உணர்ச்சி வசப்பட்டவனாய்.

'பொறு வில்லவா. பொறு. உன் வாள் வெட்டி வீழ்த்தவேண்டிய தலைகள் வீரர்களுக்குச் சொந்தமான வைகளாய் இருக்கட்டும். இவனைப் போன்ற உதவாக்கரைகளின் தலைகளாக இருக்க வேண்டாம். பாண்டிய மன்னரின் உயிரைக் குடிக்க இனிமேல்தான் எவனாவது பிறக்கவேண்டும் என்பதை நினைவில்கொள். டைரியஸிடம் இவனை ஒப்படைத்து விடு. இவனுக்கேற்ற தண்டனையை பிறகு தாலாம்' என்றான் பழையன்.

நன்னன் அகன்ற சிறிது நேரத்தில் அங்கு வந்து சேர்ந்தான் அதுகை. ஏறக்குறைய ஒரு நாள் முழுவதும் மரத்தின் உச்சியில் உட்கார்ந்திருந்துவிட்டு வந்தாலும்



அதனால் அசதி அடைந்ததற்கான அறிகுறிகள் எதுவும் அவனிடத்தில் இல்லை. மாறாக ஏதோ காண முடியாததைக் கண்டுவிட்ட மாதிரியான ஆச்சரியம் அவன் முகம் முழுவதும் விரவிக்கிடந்தது. அதை மன்னன் உட்பட அனைவருமே கவனித்தார்கள். பழையனும் கவனித்தான். ஆனால் அவன் மற்றவர்களைப் போல் வியப்படையவில்லை. எதிர்பார்த்த காரியம் நடந்ததைக் கண்டால் ஏற்படும் இயல்பான திருப்தியே அவனிடம் உண்டாயிற்று.

'என்ன தளபதி, கண்டாயா?' என்று அவனே வினவியதும் 'ஆச்சரியம். அற்புதம். பயங்கரம்' என்ற சொற்கள் வெளிவந்தன அதுகையிடமிருந்து.

'ஆச்சரியமா? அற்புதமா? பயங்கரமா? கனவேதாவது கண்டீரா தளபதி?' என்று வினவினான் நாலைக்கிழவன்.

'கனவு போலத்தான் இருக்கிறது. ஆனால் கனவல்ல. என் கண்களால் நானே பார்த்தேன்' என்று எதோ கனவுலகிலிருந்து பேசுவது போல் பேசிய அதுகை உள்ளே வந்தமர்ந்து 'மன்னவா? நேற்று எதிரிகள் கருட வியூகம் அமைத்திருந்தார்கள் அல்லவா?' என்று வினவினான்.

'ஆமாம்'.

'அதற்கு முன் தினம் மகர வியூகம் அமைத் திருந்தார்கள் இல்லையா?'

'ஆமாம்'

'அதற்கு முன்னாள் ஊசி வியூகம் அதற்கு முன்னாள் வியாள வியூகமும்* அமைத்தார்கள். இதுவும் தங்களுக்குத் தெரியும்'

'ஆமாம்'

'ஆனால் ஒரு நாள் கூட அந்த வியூகப்படி நம்முடன் போரிட முற்படவில்லை. அது ஏன் என்று நாம் தெரியாமல் குழம்பினோம். அதற்குக் காரணம் தெரிந்து விட்டது. மன்னவா, அவன் பலவித வியூகங்களை அமைத்தானே தவிர அது நம்முடன் போரிடுவதற்கு அல்ல. நம்மை பயமுறுத்துவதற்கு. அதோடு நாம் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வியூகம் என்று தான் நினைத்திருந்தோமே தவிர உண்மை அதுவல்ல. ஒவ்வொரு நாளும் பற்பல வியூகங்கள் உருவாக்கப்பட்டு அழிக்கப்படுகின்றன.'

'அதெப்படி சாத்தியம்?' - கேட்டான் மன்னன்.

'நான் நேற்று முழுவதும் படைத்தலைவர் சொன்னபடி கவனித்தேன். நேற்று மட்டுமே ஐந்து விதமான வியூகங்கள் அமைக்கப்பட்டு மாற்றப்பட்டன.'

'சுமார் இரண்டு லட்சம் வீரர்களைக் கொண்ட படைகளை ஒரே நாளில் ஐந்து வியூகங்களாக மாற்றி அமைப்பது எப்படி சாத்தியம்?'

'நம்புவது கடினம். ஆனால் பார்த்தவன் நான். மன்னவா நேற்று காலை நாம் கண்டது கருடவியூகம். பிறகு அது சகட வியூகமாக மாறியது. பிறகு கிரௌஞ்ச

* பாம்பு வியூகம்



வியூகமாக மாறியது. பிறகு சருவதோபத்திர வியூகமாக மாறியது. கடைசியில் கோளவியூகமாகியது'*

பாண்டிய மன்னன் உண்மையிலே இதை நம்ப முடியாதவனாகத்தான் இருந்தான். எனவே அதுகையிடம் 'இவை எப்படி நடந்தன?' என்று கேட்டான்.

'மன்னவா, எதிரியின் படைமுகாமில் நான்கு நாட்களாக முரசொலியும், கொம்பொலியும் சங்கொலியும் கேட்டபடி இருக்கின்றன அல்லவா-' என்று அதுகை சொல்லிக் கொண்டிருக்கும்போதே வியூக விவகாரங்களை மன்னன் புரிந்துகொண்டு விட்டதால் அவனது முகம் மலர்ந்து பிரகாசித்தது. படைத் தலைவனும் அதைக் கவனித்து புன்னகை செய்தான்.

ஆனால் அங்கிருந்த நாலைக்கிழவனுக்கும் வில்லவனுக்கும் இதர உபதளபதிகளுக்கும் சூட்சமும் புரியவில்லை. எனவே அதைப் புரிந்கொள்ள விரும்பி, 'முரசொலியும் கொம்பொலியும், சங்கொலியும் படைமுகாமில் நான்கு நாட்களாகக் கேட்டது உண்மை

* சகட வியூகம் என்பது வண்டியைப் போன்ற உருவ அமைப்பைக் கொண்டது. கிரௌஞ்ச வியூகம் என்பது வானத்தில்கிரௌஞ்சப் பறவைகள் எப்படிச் சாரை சாரையாய் செல்லுமோ அப்படிச் செல்லுமாறு நுண்ணிய கழுத்தையும் இடைக்கு ஏற்ற இறகினையும் கொண்டதாக அமைக்கப்படுவது. சருவதோபத்திர வியூகம் என்பது ஒவ்வொரு புறமும் எட்டு வளைவுகளைக்கொண்டதாக அணி வகுக்கப்படுவது. கோளவியூகம் என்பது எட்டு வட்டங்களாகவும் எல்லாப் புறங்களிலும் வாயில் களைக்கொண்டதாகவும் இருக்கக்கூடியது.

- வியூகம் பற்றிய விவரங்களுக்கு 'சுக்கிர நீதி' பக்கம் 336-339

தான். அதற்கும் வியூக மாற்றங்களுக்கும் என்ன சம்பந்தம்? படைகள் திரண்டு இருக்கும் களத்தில் இத்தகைய ஒலிகள் எழுவதில் வியப்போ விசேஷமோ இல்லையே தளபதி? நம் முகாமில் கூடத்தான் அவ்வப்போது இத்தகைய ஒலிகள் எழுகின்றன'- என்றான் வில்லவன்.

அதுகை அவனுக்கு விளக்க முற்பட்டு 'வில்லவா, நானும் உன் போலத்தான் முதலில் நினைத்தேன். ஆனால் பார்த்தபின்புதான் அதன் சூட்சமங்கள் புரிந்தன. சில கொம்புகள் ஊதப்படுகின்றன. அப்போது படையின் ஒரு பிரிவு வளைகிறது. அல்லது நீள்கிறது. அல்லது பிரிகிறது. சில முரசுகள் அடிக்கப்படுகின்றன. வேறொரு படைப்பிரிவு மற்றொரு பிரிவுடன் சேர்கிறது. அல்லது பிரிகிறது. சில சங்கொலிகளுக்கும் இப்படி மாற்றங்கள். புரிகிறதா நான் சொல்வது? ஒலிகள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வித்தியாசத்திற்கும் படைகளில் மின்னல் வேகமாற்றங்கள் விளைகின்றன. இக்கோடியில் இரண்டு முரசுகள் ஒலித்தால் அதை அங்கீகரிப்பது போல் மறு கோடியில் இரண்டு முரசுகள் ஒலிக்கின்றன. படைகள் மின்னல்களைப் போல் மாறி வெவ்வேறு வியூகங்களாக மாறுகின்றன. ஒரு நாழிகைக்குள் ஒரு வியூகம் மாற்றி அமைக்கப்படுகிறது' என்றான்.

வில்லவன் விடவில்லை. 'எப்படி இதைப் பார்த்தீர்?' என்று கேட்டான்.

'மரத்தின் உச்சியிலிருந்து'...

அப்போதுதான் ஏதேதோ புரிய ஆரம்பித்தது அவனுக்கும் அங்கிருந்தவர்களுக்கும்.



'நான்கு நாட்களாகப் படைத்தலைவர் அடிக்கடி மரத்தின் மீது ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தது இதற்குத்தானா? அப்படியானால் இந்த விஷயங்கள் அவருக்கு ஏற்கெனவே தெரிந்துவிட்டதா?' என்று சிலாகித்தான் வில்லவன்.

'அப்படியானால் நான்கு நாட்களாக எதிரி வியூகப் பயிற்சி செய்து பார்த்திருக்கிறான் இல்லையா?' என்று வினவினான் நாலைக்கிழவன்.

'பயிற்சியில் இருந்ததால்தான் நம்மிடம் போரிட வில்லை போலிருக்கிறது' என்றான் ஓர் உபதளபதி.

அதுவரை உரையாடலில் குறுக்கிடாதிருந்த பாண்டிய மன்னன் படைத்தலைவனைப் பார்த்தான். 'படைத் தலைவரே, காலையிலிருந்து முரசொலியோ கொம்பொலியோ எதுவும் கேட்கவில்லை' என்றான்.

அவன் என்ன கேட்கப் போகிறான் என்பதை அறிந்து கொண்ட பழையன் ஏதோ கணக்குப் போடுவது போல போட்டு விட்டு 'அநேகமாக எல்லா வியூகங்களும் வந்து விட்டன மன்னவா ஒன்றைத் தவிர' என்றான்.

மன்னன் அதுகையை நோக்கி தளபதி 'எதிரியின் தற்போதைய நிலை என்ன? அறிந்து வாருங்கள். இனி தாமதிக்க வேண்டாம்' என்றான்.

பிறகு பழையன் மன்னனை அழைத்துச் சென்றான் பட்டறைக்கு. அங்கே வடிக்கப்பட்டிருந்த பொறிகளைக் காட்டினான். அதைக் கண்ட போது வியப்பின் உச்சிக்கே சென்றுவிட்டான் மன்னன். அதுவரை அதுகை விவரித்த வியூக விவகாரம் கூட சிறியதாய் பட்டது அவனுக்கு.

மகிழ்ச்சி மிகுதியால் தன்னையே மறந்த அவன் 'அடே கொள்ளைக்காரா, இத்தனை மாயாஜாலங்களை எப்படி இத்தனை சீக்கிரத்தில் செய்தாய்? நான்கு நாட்களாக நீ என் கண்ணில் படாமலிருந்தபோது கூட ஏதோ முக்கிய அலுவலில் இருக்கிறாய் என்றுதான் நினைத்தேனே தவிர இப்படியொரு ஜாலவித்தையில் இறங்கியிருப்பாய் என்று எதிர்பார்க்கவில்லையே?' என்றான்.

'இதன் பெருமை மூன்று பேர்களுக்குத்தான் சேர வேண்டும். இதோ உதயணன். பக்கத்தில் இருக்கும் நமது மதுரை புறஞ்சேரியில் உள்ள யவன பொறியியல் நிபுணன் ஹீராக்ளிஸ். மூன்றாவது கொள்ளைக்காரன் என்று எல்லோரும் தூற்றும் டைரியஸ். இவர்களில்லாமல் இந்த பொறிகள் இல்லை மன்னவா' என்றான் பழையன்.

தன்னிலை உணர்ந்த மன்னன் 'இங்கிருக்கும் பொறிகளைப் பார்த்தால் படைகளை விட இவற்றின் பலத்தை அதிகம் எதிர்பார்க்கிறீர்கள். இல்லையா படைத்தலைவரே?' என்று கேட்டான்.

'வேறு வழியில்லை மன்னவா. எதிரியின் பலம் படை வீரர்களால் மிகவும் அதிகரித்திருக்கிறது. அதோடு வியூக விவகாரங்கள் மிகவும் சிறப்பான இருங்கோவேளினால் கையாளப்படுகின்றன. ஆகவே நமது படைபலம் மட்டும் போதாது.' வீரத்துடன் தந்திரமும் தேவைப்படுகிறது. மேலும் இப்பொறிகளை நான் ஏற்படுத்தியதற்கு முக்கியக் காரணம் ஒன்றிருக்கிறது. எதிரியிருக்கும் ஆலங் காட்டைப் பாருங்கள்.'

'ஆலங்காடுகள் எதிரிக்குப் பலம்தானே படைத் தலைவரே. படைகள் மறைந்திருக்க வசதியல்லவா?'-



'அதிக நேரம் அப்படி மறைந்திருக்க முடியாமல் செய்துவிடும் நம் பொறிகள்.'

'எப்படி?'

'ஆலங்காட்டை நன்றாக கவனியுங்கள். கோடைக் காலமாதலால் காட்டில் ஆங்காங்கே நிரம்ப மரங்கள்'-

'புரிந்தது' என்றான் மன்னன் மகிழ்ச்சியுடன்.

பிறகு இருவரும் நன்னனைப்பற்றியும் படைப்பிரிவு ஒன்றைப் பற்றியும் பேசியபோது மன்னனிடம் ஓர் வேண்டுகோள் விடுத்தான் பழையன்.

'இது என்ன வேண்டுகோள் படைத்தலைவரே. அது உங்கள் கடமையல்லவா?'- என்று கேட்டான் மன்னன்.

இருவரும் பிறகு பாசறைக்குத் திரும்பியபோது அவனுக்காக அங்கே காத்திருந்த மாங்குடி மருதனாரும் 'ஒரு விண்ணப்பம்' என்றார்.

'கட்டளையிடுங்கள் குருநாதரே'

'போரில் நீ சோழமன்னனைக் கொல்வதில்லை என்று சத்தியம் செய்துகொடு' என்றார் புலவர்.

'குருநாதரே!'

'என்ன பாண்டியா?'

'என் வெற்றி அத்தனை நிச்சயமா?'

'தருமம் தோற்பதில்லை நெடுஞ்செழியா?'

'இருந்தாலும்-'

'வர்க்குக் கொடுப்பதால் தவறில்லை'

'உங்கள் இஷ்டம் குருநாதரே' என்றான் பாண்டியன். அவனது மனம் ஒரு கணம் மதுரையின் பால் சென்று மீண்டது.

அதையடுத்து அதுகை வந்து சேர்ந்தான். எதிரிகள் அமைத்திருக்கும் வியூகத்தைப் பற்றிச் சொன்னான். அதைக் கேட்டபோது பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன் கூட தன் வெற்றி குறித்து யோசிக்கவே செய்தான்.

வியூகச் செய்தி அத்தனை பயங்கரமாய் இருந்தது.

◈◈◈

முரசு ஐம்பத்து நான்கு

# வியூகக் கோட்டை

எதிரிப்படையின் நிலையை அறிந்துவர அனுப்பப் பட்ட அதுகை திரும்பி வரும்போது ஏறக்குறைய நடுப்பகல் ஆகியிருந்தது. எதிரியின் முகாமில் எந்தவிதமான அரவமும் இல்லை. பாண்டியர் பக்கத்திலிருந்து பார்த்தபோது அந்த எதிரியின் படைகள் கடைசிநேர ஏற்பாடுகளை முடித்துக்கொண்டு போருக்குத் தயாராக இருப்பதைக் காணமுடிந்தது. இனி அந்தத் தரப்பிலும் தாமதத்திற்கு வழியில்லை என்ற நிலை உண்டாகி விட்டதை அனைவருமே அறிந்து கொண்டார்கள். அந்த நிலையில் அங்கு வந்து சேர்ந்த தளபதி அதுகை 'மன்னவா, வியூகப் பயிற்சி முடிந்து விட்டது. படைத்தலைவர் கூறியபடி ஏறக்குறைய எல்லாவிதமான வியூகங்களும் அமைக்கப்பட்டு ஒத்திகை செய்து கொள்ளப்பட்டன. எதிரி இதன் மூலம் வியூக பலத்தை பரிசோதித்துக் கொண்டது மட்டுமின்றி நமக்கு உணர்த்தியும் விட்டான். இப்போதுதான் பிரம்மாண்ட மாக உருவாகி இருக்கிறது. அதன் பெயர்...' என்று கூறி சற்று நிறுத்திவிட்டு பிறகு ஏதோ மந்திரத்தை உச்சரிப்பதுபோல் 'பத்ம வியூகம்'- என்றான்.

'பத்ம வியூகமா?'



பத்ம வியூகம்



'ஆம் மன்னவா. ஏறக்குறைய சக்கர வியூகம் என்றும் கூறலாம். இது வெறும் வியூகம் அல்ல. வியூகக்கோட்டை வீரர் கோட்டை'.

இதைக் கேட்ட மன்னன் 'இது உண்மையா?' என்று கேட்பது போல் பழையனைப் பார்த்தான்.

பழையனும் அதை ஆமோதித்து 'உண்மைதான் மன்னவா. பெரும் சமவெளிகளில் பெரும் போர்களுக்கு உண்டாக்கப்படும் செயற்கை கோட்டைதான் இந்த பத்மவியூகம். ஆனால் உண்மைக் கோட்டையை விட ஆபத்தானது.' என்று கூறி அதன் ஆபத்துக்களையும் விவரிக்கலானான்.

'இந்த வியூகம் மற்ற வியூகங்களைப் போல் நகராது. கோட்டையைப் போல் ஓரிடத்திலேயே நிற்கும். நாம் தான் அதை அணுக வேண்டும். அது மட்டுமல்ல. இந்த வியூகத்தை வெளியிலிருந்து கொண்டு நாம் போரிட முடியாது. உள்ளே பிரவேசித்துத்தான் போரிட வேண்டும்' என்று கூறி 'இதோ அந்த அமைப்பைப் பாருங்கள். இந்தப் படத்தில் இருப்பதுதான் பத்ம வியூகம். இதற்கு ஒரே ஒரு வாயில் மட்டும்தான் இருக்கிறது. இதன் மூலம்தான் நமது படை நுழைய வேண்டும். போரிட வேண்டும். வெல்ல வேண்டும். இந்த வாயிலில் நுழைந்த பின் இந்த வட்டவடிவமான வழிகளில் போரிட்டபடியே முன்னேறி நடுப்பகுதியை அணுகவேண்டும். வட்டப் பாதைகள் படையின் வளையங்களை உடைக்க முடியும். அந்த நிலையை எந்த அளவிற்கு எதிரியால் தடுக்க முடியுமோ அதைப் பொறுத்துத்தான் அவனது வெற்றி இருக்கிறது' என்றான்.

'எதிரி நம்மை எப்படித் தடுக்க முடியும்?' - கேட்டான் மன்னன்.

'மன்னவா, வியூகத்திற்குள் நுழைய இருக்கும் வழி ஒன்று மட்டும்தான். அதன் மூலம் மட்டுமே நாம் நுழைய வேண்டும். அப்படி நுழையும் போது நமது படைகள் முழுவதும் நுழையும் வரை பார்த்துக் கொண்டிருக்க மாட்டான் அவன். சிறிது படை நுழைந்ததுமே வியூகத்தின் வாயில் தடாலென மூடப்பட்டு விடும். உள்ளே நுழைந்த படை உதவுவதற்கு ஆளில்லாத நிலையில் வட்ட வளையங்களில் சிக்கிக் கொள்ளும். அங்கே அணிவகுத்திருக்கும் வில்வீரர்கள் காலாட் படை வீரர்களும் மும்முரமாகத் தாக்குவார்கள். நமது படைகள் முன்னேறவும் முடியாது. பின்னால் திரும்பவும் முடியாது. சிக்கிக்கொண்டு அழியத்தான் முடியும்.

'அதே சமயம் வியூகத்தின் வாயில் மூடப்பட்டு அதன் முகப்பைக் காக்கும் பலமான தேர்ப்படை உள்ளே புக முடியாமல் தடைப்பட்டு நிற்கும் நம் படைகளைப் பதட்டம் இல்லாமல் குறி பார்த்துத் தாக்கி அழிக்கும். நாம் வாயிலை நெருங்க முடியாதபடி நம்மீது யானைகள் விரட்டப்படும். அம்பு மழைகள் பொழியப்படும். அவற்றையெல்லாம் மீறி வியூகத்திற்குள் நுழைவதென்பது மிகவும் சிரமமான விஷயம். எனவே நாம் பின்னடைய மட்டுமே முடியும். அப்படி நாம் பின்னடைந்த பின் வியூகத்திற்குள் சிக்கிய படை முற்றிலுமாக அழிக்கப்பட்டு பிணங்கள் அகற்றப்பட்டு வட்டப் பாதை சீர்படுத்தப்படும். பின்னடையும் நாம் மறுநாள் மீண்டும் போரிட வேண்டும். வியூகத்திற்குள் நுழைய வேண்டும். முன்னாள் நடந்த மாதிரியே நம்



படையில் ஒரு பகுதி மட்டுமே வியூகத்திற்குள் நுழையும் படி செய்வார்கள். முகப்பு மூடப்படும். உள்ளே சென்றவர்கள் அழிக்கப்படுவார்கள். இப்படியே தினம் தினம் நடக்கும். ஒரே வாரத்தில் நமது படை முற்றிலும் அழிக்கப்படும். நமக்கோ தினம் தினம் அலைச்சலும் போராட்டமும் தான். எதிரியோ வியூகக் கோட்டைக்குள் வசதியாக இருப்பான் தொல்லை இன்றி. இன்று பின்னடைந்து மறுநாள் நாம் போரிடத் தொடங்கும் வரை வியூக வளையங்களுக்குள் உணவு வண்டிகள் வந்து வீரர்களுக்கு உணவளித்து விட்டுச் செல்லும். ஒரு வேளை பத்ம வியூகத்தில் அணி வகுத்திருக்கும் வீரர்களுக்கு அசதி ஏதாவது நேர்ந்தால் வியூகத்தில் ஏதாவது ஒரு பகுதியோ அல்லது மாறி நம்மை முன்னேறித் தாக்கும் நாம் எதிர்பாராத நேரத்தில். நாம் போரிட்டுச் சமாளிப்பதற்குள் பத்ம வியூகத்திற்கு நேர்ந்த குறை சரி செய்யப்படும். அதை அறிவிக்க கொம்பு ஊதப்படும். அதைக்கேட்டதும் முன்னேறி வந்த படைகள் கொஞ்சம் கொஞ்சமாகப் பின்னடைந்து தங்கள் இருப்பிடத்திற்குப் போய் சேர்ந்து கொள்வார்கள். அவ்வாறு சேர முடியாமல் போனால் பத்ம வியூகம் முற்றிலுமாக கலைக்கப்பட்டு இரண்டு மூன்று மாற்று வியூகங்களாக மாறி பல பக்கங்களில் நம்மைத் தாக்கும். அந்த வியூகங்களுக்கு எல்லாம் நாம் மாற்று வியூகம் காண நேரமிருக்காது. குழப்பமே மிஞ்சும். முடிவில் நாம் சிரமமின்றி அழிக்கப்படுவோம். ஆனால் இந்த நிலை பத்ம வியூகத்தில் ஏதாவது சிரமம் ஏற்பட்டால்தான்'

''என்ன மாதிரியான சிரமங்கள் ஏற்படக் கூடும் பத்ம வியூகத்தில்?'' - கேட்டான் அதுகை.

'தளபதி, பத்ம வியூகம் என்பது செயற்கை கோட்டை என்று சொன்னேன். அதன் வளையங்கள் போர் முடியும் வரை நிலையாக இருக்க வேண்டும். போர் மூன்று நான்கு நாட்களுக்குள் முடிந்து விட்டால் சிரமமில்லை. அதற்கு மேலும் நீடிக்குமானால் பத்மவியூக வளையங்களில் ஒரே சீராக வீரர்களும் புரவிகளும் அணிவகுத்துக்கொண்டு நிற்க முடியாது. அவர்களுக்கு ஓய்வு தேவைப்படும். புரவிகளுக்கு வெறிபிடித்து கட்டுப்பாடுகளை மீறும். அப்போது பத்ம வியூகம் பலனற்றுப் போகும். அதைச் சரிக்கட்டவே நான் சொன்ன மாதிரி ஏதாவது ஒரு பிரிவு புது வியூகமாக மாறி முன்னேறும்.'

'படைத்தலைவரே, எப்படியாவது சிரமப்பட்டு நமது படைகளையெல்லாம் வியூகத்திற்குள் நுழைத்து விடுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள் அப்போது நம் நிலைமை எப்படி?'- கேட்டான் மன்னன்.

'வளையங்களில் நாம் நுழையும்போது நாம் இரண்டு பக்கங்களிலும் எதிரிகளால் தாக்கப்படுவோம். அதனால் நம் முன்னேற்றம் மிகவும் பாதிக்கப்படும். அதையும் சமாளித்து நாம் முன்னேறுவதாக வைத்துக் கொண்டால் அதைச் சமாளிக்கும் வகையில் இந்த ஆலங்காடு உதவுகிறது. இதைக் கவனியுங்கள் மன்னவா. நம் முன்னே நிற்கும் இந்த பத்ம வியூகத்தின் கிழக்கு மேற்கு ஆகிய இரு புறங்களில் உள்ள வளையங்கள் நன்றாக மேட்டுப் பகுதியில் ஆலங்காட்டில் அமைந்திருக்கின்றன. ஏறக்குறைய குன்றின் சரிவுகள் போல் அந்தப் பக்கங்கள் இருப்பதால் அங்கே உள்ள வில் வீரர்களால் வியூகத்தின் நடுப்புறத்தைப் பார்க்க முடியும் தெளிவாக.



எனவே அங்கிருந்து கொண்டு வளையங்களில் ஓடி வரும் நமது படைகளின் மீது அம்பெறிந்தும் வேலெறிந்தும் எளிதில் அழித்துவிட முடியும். நமது படை வளையங்களில் ஓடுவதைக் கொண்டே எளிதில் நம்மை அவர்களால் அடையாளம் கண்டு வேலெறிய முடியும். மேலும் அந்த வியூகத்தின் வளையங்கள் முழுவதுமே சமதளத்தில் இல்லை. உள்வளையங்கள் மட்டுமே சமதளத்திலும் வெளி வளையங்கள் சமதளம் மற்றும் ஆலங்காட்டு மேடு ஆகியவற்றில் இருப்பதால் அவற்றில் முன்னேறுவதென்பது முடியாத காரியம். இதையெல்லாம் துல்லியமாகக் கண்டுபிடித்தே போரிடுவதற்கு இந்த ஆலங்கானத்தைத் தேர்ந்து எடுத்து பத்மவியூகம் அமைத்திருக்கிறான் இருங்கோவேள். ஒருவேளை போரில் எதிரி வெற்றி பெற்றால் அதன் காரணகர்த்தாவாக இருங்கோவேள்தான் இருப்பான்'...

படைத்தலைவன் இவ்வாறு பத்மவியூகத்தின் ஆபத்துக்களை எடுத்து கூறியபோது பாண்டியத் தளபதியின் முகங்களில் ஈயாடவில்லை. பெரும் கவலையும் கிலியும் அவர்களைச் சூழ்ந்து கொண்டது.

'இந்த வியூகப்போரை நாம் எப்படி நடத்துவது?' என்று கேட்டான் நாலைக்கிழவன்.

'மந்திரத்தாலா?'- என்றான் ஓர் உபதளபதி.

'இல்லை. யந்திரத்தால்'-என்று கூறிய பழையன், 'தளபதிகளே, நான் இதுவரை கூறிய அனைத்தும் பத்ம வியூகம் அமைத்தவர்கள் போரிடக்கூடிய சம்பிரதாயங்கள். ஆனால் நாம் அவற்றைக் கடைப் பிடிக்கப் போவதில்லை' என்றான்.

'கடைப்பிடிக்காமல்?'-

'எந்தச் சாதகங்களை மனதில் கொண்டு ஆலங்காட்டை தேர்ந்தெடுத்து பத்மவியூகத்தை அமைத்தானோ அந்த சாதகங்களை அவன் எதிர்பார்க்கும் சம்பிரதாயங்களை மீறி உடைப்போம். அவனது சாதகங்களையே அவனுக்கு எதிராக மாற்றுவோம். பத்மவியூகத்தை அர்த்தமற்றதாக்குவோம்' என்று கூறித் தன் திட்டத்தை அறிவித்தான் பழையன்.

அதைக் கேட்டபின் சிலை போலிருந்த படைபதிகள் அலைபோல் அசைந்து ஆரவாரித்தார்கள். பழையனை கட்டித்தழுவினார்கள்.

பாண்டிய மன்னன் மிகவும் பெருமிதப்பட்டான் 'படைத் தலைவரே. சேரன் பாராட்டுக்குரியவன் தான்' என்றான்.

சூட்சும புத்தி கொண்டவனான பழையனுக்கே மன்னனின் வார்த்தைகள் அப்போது புரியவில்லை. 'சேரனா?' என்று விளித்தான்-சந்தேகத்துடன்.

'ஆமாம் படைத்தலைவரே. சேரன்தான். உம்மைப் பற்றி எந்த அளவிற்குச் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறான் அவன்? உம்மைச்சிறைப்படுத்த அவன் முயன்றது தவறே அல்ல.'

மன்னன் தன் திட்டங்களைச்சுற்றி வளைத்து இவ்வாறு பாராட்டியதை உணர்ந்த பழையன் சற்றே வெட்கப்பட்டான்.

ஃ ஃ ஃ

இதே சமயம் பத்மவியூகத்தில் மன்னர்கள் சகல சந்தோஷத்துடன் இருந்தார்கள் கவலைக்குக் காரணம்



இல்லாததால். வார்த்தைக்கு வார்த்தை இருங்கோவேள் புகழப்பட்டுக் கொண்டிருந்தான் அங்கே. பழையனை எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த சேரன் இரும்பொறைக்குக்கூட இருங்கோவேளின் வியூக தயாரிப்பைக் கண்ட பின் பெரும் சந்துஷ்டி நிலவியது மனதிற்குள். ஏறக்குறைய பழையனின் புத்திக் கூர்மைக்கு ஏற்றவனாய் இதுவரை மன்னன் இருங்கோவேள் அமைந்து விட்டதாகவே கருதினான். எனவே சாம்ராஜ்யக் கனவில் அவனது மனம் சஞ்சரிக்கலாயிற்று. பாண்டிய மன்னனைப் புறங்கண்டு விட்டதாகவே அவனதுமனம் முடிவு செய்து விட்டதால் அடுத்து புறங்காண வேண்டிய வஞ்சி மாநகர் கோதைமார்பனைப் பற்றியும் அவனை முறியடிப்பது பற்றியும் யோசிக்கத் தொடங்கியது.

இருங்கோவேள் பத்மவியூகத்தை அமைத்த விதம் சிறப்பானதாக இருந்தது. எட்டு வளையங்களைக் கொண்ட அந்த வியூகத்தில் வெளிவியூக வளையங்கள் மூன்றையும் காலாட்படைகளாலும் விற்படையாலும் அமைத்து கிழக்கு வளையங்களுக்கு பொருநனையும் மேற்கு வளையங்களுக்கு எருமையூரனையும் தலைமை வகிக்கச் செய்தான். அவற்றையடுத்த 3 வளையங்களில் புரவிப்படை அணி வகுத்தது. அவற்றுக்குச் சேரனும் சோழனுமாய் தலைமை வகித்தார்கள். வியூகத்தின் நடுவிலும் முகப்பிலும் தேர்ப்படைகள் நிறுத்தி தலைமை தாங்கினான் திதியன். எழினியின் திறமை மிகுந்த யானைப்படை வியூகத்தில் சேராமல் வியூகத்திற்குப் பின்னால் யானைக் கோட்டை ஒன்றை அமைத்திருந்தது. அவனுக்கென்று தனியான பணிகளைக் கொடுத்திருந்தான் இருங்கோவேள்.

இப்படி அனைவரது இடத்தையும் நிர்ணயம் செய்து அவர்களை ஆங்காங்கே இருக்கும்படி செய்து வியூகத்தின் வடக்குபுற வளையங்களுக்குத் தலைமை தாங்க வந்து சேர்ந்தான். இவ்வாறு அனைத்து ஏற்பாடுகளையும் கதிரவன் கீழ்வானத்தில் தலைகாட்டிய நேரத்திலேயே முடித்துவிட்டு பாண்டியர் படையின் வருகைக்காகக் காத்திருந்த அவனுக்கு நாழிகைகள் பல கழிந்ததும் பாண்டியப் படை நகராமல் இருந்தது ஒரு பக்கம் ஏமாற்றமாகவும் மறு பக்கம் வெறுப்பாகவும் இருந்தது. பத்ம வியூகத்தைப் பல நாட்களுக்கு ஒரே நிலையில் வைத்திருக்க முடியாது என்பதால் போர் துவங்குவதற்கு ஆன தாமதம் ஒவ்வொரு நொடியும் அவனுக்கு யுகமாக இருந்தது. தான் முடிவான வியூகம் வகுத்துவிட்டு அதை அறிவிக்கும் அடையாளமாய் சங்கை ஊதிய பின்பும் பாண்டியர்படை நகராமல் இருந்ததைக்கண்ட அவனுக்கு 'பாண்டியர்களெல்லாம் வீரர்கள்தானா?' என்ற சந்தேகமும் வந்தது. பத்மவியூகம் பல விதங்களில் பயங்கரமானதாயும் பலமானதாயும் இருக்கக் கூடியது தான் என்றாலும் நகர்ந்து சென்று போரிட முடியாத பலவீனம் இருப்பதை எண்ணி சற்று வருத்தமும் கொண்டான். பாண்டியர்களாக வந்து நுழையும் வரை அவர்களுக்காகக் காத்திருக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து பத்ம வியூகத்தைச் சபிக்கவும் செய்தான்.

அவனது கவலை நியாயமானதாக இருந்தாலும் அதைப் போக்க அங்கே யாரும் இல்லை. தவிர்க்க முடியாத நிலையினைச் சங்கடத்துடன் சுமந்து கொண்டு இருக்க ஒரு வழியாய் இரவுப் பொழுதும் வந்தது. இரவு முகிழ்த்து விட்டநிலையில் பத்ம வியூகத்திற்குள் எந்த



எதிரியும் நுழையமாட்டான் என்பதாலும் அவ்வாறு நுழைவதை விட தற்கொலையே மேல் என்பது நுழையக் கூடியவனுக்கும் தெரியும் என்பதாலும் பொழுது விடியும் வரை ஆசுவாசப்படுத்திக் கொள்வதில் இறங்கினான். இதர மன்னர்களும் படைவீரர்களும் கூட ஓய்வு கொள்ள முனைந்தார்கள்.

கோடைக்கால வானம் நிர்மலமாய் இருந்தது. நிர்மலமான எதுவுமே அழகானதாய் இருக்கும் என்பதை நிரூபிப்பது போல் வானத்தின் நட்சத்திரக் கோலம் பார்ப்பதற்கு ரம்மியமாய் இருந்தது. அமாவாசைக்குக் கொஞ்ச நாட்களே இருந்ததால் நிலவு வானத்தில் தென்படவில்லை. ஆனாலும் கூட அந்தக் குறையை ஈடுகட்டுவதற்குத் தாங்களே போதும் என்று நிரூபிப்பது போல் நட்சத்திரங்கள் பளிச்சென்று மின்னிக்கிடந்தன. மறுநாள் விளையப்போகும் கோரங்களைப்பற்றி அறியாமல்.

விடிவதற்குச்சிறிது நேரமிருக்கலாம். நட்சத்திரங்கள் சற்றே மங்கத் தொடங்கின. அவைகளை ஆலங்காட்டுப் பகுதியில் நடைபெறப் போகும் விபரீதங்களைப் பார்க்கக் கூடாதென்ற காரணத்தாலோ - அல்லது எதிரிகளுக்கு வரப்போகிற விளைவு இப்படித்தான் இருக்கும் என்றும் உணர்த்தும் காரணத்தாலோ என்னவோ வானத்தே எழுந்த கருமேகக் கூட்டமொன்று நட்சத்திரங்களை மறைத்துத் திரையிட்டது. அதுதான் சமயமென்பது போல் பாண்டியர் தரப்பிலிருந்து படைப்பிரிவு ஒன்று மின்னலைப் போல் பத்மவியூகத்தை நெருங்கியது. நுழையவும் செய்தது.

அதையடுத்து உண்டாயிற்று பிரளயம்.

முரசு ஐம்பத்து ஐந்து

# தலையாலங்கானத்துப் பெரும் போர்

**வி**டிவதற்கு முன்பாகவே இடி வந்து விழுந்த மாதிரி பாண்டியர் படைப்பிரிவு ஒன்று பத்மவியூகத்தில் நுழைந்த அதே சமயம் பேரிகை முழங்குவதற்கு பதிலாக வானத்தில் இடியோசை எழுந்தது மிக பயங்கரமாக. அதையடுத்து வானத்தே மின்னல்கள் தோன்றியதுபோல் பத்மவியூகத்திலும் ஆங்காங்கே பந்தங்கள் தோன்றின. அதிலே நுழைந்தபடை 'பாண்டிய மன்னர் வாழ்க வாழ்க. வீரவேல் வெற்றிவேல்' என்று முழங்கிகொண்டு பாண்டிய மன்னனின் தலைமையில் மிகவும் துரிதமாக நுழைந்துவிட்டது.

இதைக் கேள்விப்பட்ட இருங்கோவேள் உண்மையிலேயே வியந்தான். பொழுது புலருவதற்குள் அதுவும் மேகத்திரை வானத்தை மூடி இருட்டை சிருஷ்டித்திருக்கும் நேரத்தில் பத்மவியூகத்தில் நுழைய முயன்ற பாண்டியனை நினைத்து உவகையே கொண்டான் அவன். 'இவனைப்போய் சிறுவன் என்று எப்படிச் சொன்னான் சேரன்?' என்று கேட்டுக் கொள்ளவும் செய்தான்.

ஆனால் இக்கேள்விகளை உடனடியாக நிறுத்திக் கொள்ளாவிட்டால் பிறகு இதே கேள்விகளை



பாண்டியனே தன்னிடம் வந்து கேட்க வேண்டியிருக்கும் என்பதை உணர்ந்து கொண்ட அவன் கொம்பொன்றை எடுத்து இருமுறை ஊதி பத்மவியூகத்திற்கு உயிர் கொடுத்தான். ஆனால் எல்லாவிதமான இணைப்பையும் கொடுத்துவிட்டு சுவிட்சைப் போடும்போது எரியாமல் போன பல்பைப் போல அவனது கொம்பொலியால் பத்மவியூகம் தடுமாறியது சிறு குழப்பத்தால். காற்றென வியூகத்தில் நுழைந்த பாண்டியர் படை மூன்றாவது வளையத்தில் பிரவேசித்து இருங்கோவேள் இருந்த வளையத்தையும் கடந்து திரும்பியபோது கிழக்கு வளைத்தில் இருந்த பொருநன் தன் விற்போர் திறமையைச் சோதிப்பதுபோல் நாணேற்றி பாண்டியப் படையின் முன்னால் வந்த மன்னனை நோக்கி குறிபார்த்து அம்பை எய்து விட்டான். அது வந்து இலக்கை அடையும் நேரத்தில் கீழே குதித்த பாண்டிய மன்னன் அலறினான். அவன் பின்னால் வந்த வீரர்களும் அலறினார்கள் அம்புகள் பட்டதால். 'ஐயோ நிறுத்துங்கள் நாங்கள் பாண்டியரல்ல. சோழர்கள். சேரர்கள் நான்தான் நன்னன்' என்ற பற்பல குரல்கள் ஒலிக்கவே பத்மவியூக வளையங்களில் குழப்பம் உண்டாயிற்று.

இதை எதிர்பார்த்தான் பழையன். அதற்காகவே நன்னனை பாண்டிய மன்னனைப்போல் வேடமிட்டு புரவியில் ஏற்றி அவனுக்குப் பின்னால் மதுரைப் போரில் சிறைப்பட்ட சேரசோழ வீரர்களையும் புரவிகளில் அமர்த்தி பாண்டிய மன்னனை வாழ்த்தும் கோஷங்களைப் போடச்சொல்லி வியூகத்தை நோக்கி அனுப்பி வைத்தான். 'நன்னா, உன் துரோகங்களுக்கான தண்டனையை உன் வீரர்களிடமே பெற்றுக்கொள். சேரனைப் போன்ற

அதர்மவானுக்குச் சேவகம்புரியும் வீரர்களும் அவர்களிடமே போய் சேரட்டும் 'இனி உன் விதிப்படி எது நடக்கிறதோ அது நடக்கட்டும்' என்று இடித்துரைக்கவும் செய்தான். நன்னனுக்கும் சரி அவனுடன் வந்த வீரர்களுக்கும் சரி விட்டால் போதும் என்றிருந்ததால் பாண்டிய கோஷங்கள் வான்முட்ட எழுப்பிய வண்ணமாய் புறப்பட்டு பத்மவியூகத்தில் நுழைந்து குழப்பத்தை விளைவித்தார்கள்.

அதைக் கண்டபின் சங்கொன்றை ஊதினான் பழையன். மறுகணம் அவன் சிருஷ்டித்திருந்த மாயா ஜாலம் நிகழ்ந்தது. அவனது படையிலிருந்த இரு பக்கங்களில் இருந்து யவனபொறியியல் நிபுணன் ஹீரோகிளீஸும் உதயணனும் உருவாக்கியிருந்த கல்லுமிழ் கவண்களும் கல்லிடு கூடையும் இயங்கின சடசடவென. அவற்றிலிருந்து விஷம் தடவப்பட்ட கற்களும் தீ உருண்டைகளும் பத்ம வியூகத்தின் கிழக்கு மேற்குப்புற ஆலங்காட்டில் போய் இடைவிடாமல் விழுந்தன. அக்காட்டில் பாண்டிய மன்னனுக்குப் பழையன் சுட்டிக் காட்டிய கணக்கற்ற காய்ந்த மரங்களில் விழுந்து திடீர் திடீரென ஆங்காங்கே பெருந்தீயை உண்டாக்கின். இதனால் அந்த இரு பக்க மேடுகளிலும் நின்ற பத்ம வியூக வளையங்கள் தத்தளித்தன. ஒரு நிலையாய் நிற்க முடியாமல் தவித்தன. போதாத குறைக்குத் தானியங்கி பொறி வண்டிகள் மூலம் எரியம்புகளும் வந்து விழுந்ததால் ஆலங்காட்டுப் பகுதி அமளி துமளியாகிக் கொண்டிருந்தது.

இதைக் கவனித்தான் இருங்கோவேள். எந்த ஆலங்காட்டையும் மேட்டுப்பகுதியையும் தனது பெரும்



பலம் என்று நினைத்தானோ அதுவே அவனது பலவீனமாகிக் கொண்டு இருப்பதைக் கண்டு பெரிதும் சினந்த அவன் மேட்டுப் பகுதி வளையங்களை மாற்றியமைக்க முற்பட்டபோது வியூகத்தின் முகப்புப்பகுதியில் பெரும் கலவரம் உண்டாகியிருந்தது. மேட்டுப்பகுதி காடுகளில் பெருந்தீ உண்டாகி அனைவரது கவனமும் திருப்பப்பட்டிருந்த நிலையில் பழையனின் மூன்றாவது விசித்திரமும் நடந்து விட்டிருந்தது.

அதன்படி அவனது தரப்பில் இருந்த யானைகள் சில பத்மவியூகத்தின் முகப்பை நோக்கி விரட்டப்பட்டன. அவை பத்மவியூகத்தின் வாயிலை நோக்கி ஓடும்படி பாண்டிய வீரர்களே யானைகளின் பின்புறங்களில் அம்பு எய்தார்களாதலால் அவை பெரும் முழக்கத்துடன் பத்மவியூகத்தின் முகப்பை அடைந்து தாறு மாறாக மோதின. அவைகளுக்குப் பின்னால் நான்கு கரிய மலைகளைப் போன்ற யானைகள் மெல்ல மெல்லச் சென்று பத்மவியூகத்தின் வாயிலில் போய் நின்றன. அதன் வயிற்றுப்பகுதிகள் திடீரென வெடித்தன. அப்பகுதியிலிருந்து கரடிகள் வெளிப்பட்டு முகப்பில் இருந்த சேரவீரர்கள் மீது பாய்ந்தன. புலிகள் சில வெளிபட்டு பெரும் கற்களை தூக்கி வியூகமுகப்பில் இருந்த தேர்ப்படையின்மீது எறிந்தன. குரங்குகள் சில தத்தித்தத்திச் சென்று கண்ணில் பட்டோரைக் கடித்துக் கொன்றன. பிறகு ஒவ்வொரு யானைகளிலிருந்தும் குறைந்தது நூறு மிருகங்கள் இவ்வாறு வெளிப்பட, நான்காவது யானையின் வயிற்றிலிருந்து பாண்டிய வீரர்கள் பூரண கவசமணிந்தவர்களாய் உலக்கைகளை

எடுத்து வீசிய வண்ணம் தேர்ப்படைகளை நெருங்கி ஓங்கி அடித்தார்கள். அதுமட்டுமல்ல. யானைகளின் வயிறுகள் மீண்டும் மூடிக்கொண்டன. பிறகு நான்குமே முன்னால் நகர்ந்து தேர்ப்படைகளை மூர்க்கமாக இடித்து முன்னேறின. உலக்கை வீரர்கள் அவற்றுடன் சென்று இடையிடையே வாணங்களை கொளுத்தி வீசினார் களாதலால் சில தேர்கள் தீப்பற்றி எரிந்தன.

இந்த நிகழ்ச்சிகளெல்லாம் ஒரு சில நிமிடங்களில் நடந்ததுதான் விசேஷமானது. அவ்வாறின்றி மெல்ல நடந்திருந்தால் அனைத்துமே அர்த்தமற்றதாகப் போய் இருக்கும். பழையனின் திட்டமும் தீர்மானமும் திட்சண்யமாய் இருந்ததால் நிகழ்ச்சிகள் அனைத்துமே அவனுக்குச் சாதகமாய் அமைந்து பத்மவியூகத்தினரை பெரும் குழப்பத்தில் ஆழ்த்தின.

இங்கே குழப்பம் பத்மவியூகத்தில் இருந்தவர்களுக்கு மட்டுமல்ல இக்கதை நிகழ்ச்சிகளைப் படிப்பவர் களுக்கும் எழக்கூடும்.

முதலில் கூறப்பட்ட கல்லுமிழ் கவண், கல்லிடு கூடை, கருவிரல் ஊகம் (கரிய குரங்கு) போன்ற பொறிகள் எல்லாம் சங்ககாலத்தில் இருந்த பொறிகள்தாம். இவைகள் மதுரைக் கோட்டையில் இருந்தன என்றும் யவனர்களால் பராமரிக்கப்பட்டு வந்தன என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது.*

அதேபோல் யானைகள் நான்கின் வயிறு வெடித்த விஷயத்திலிருந்து அவை யந்திர யானைகள் என்பது

* சிலப்பதிகாரம் அடைக்கலக்காதை வரி 207-216



வாசகர்களுக்குப் புரிந்திருக்கக்கூடும். தானே இயங்கும் யந்திரயானைகளைப் பற்றியும், அதில் வீரர்கள் பதுங்கி இருந்து வெளிப்பட்டுப் போரிட்டார்கள் என்று பெருங்கதை சொல்கிறது. அது மட்டுமல்ல. யந்திரத்தால் ஆகாய விமானங்கள் இயங்கியதையும் பெருங்கதையில் காணலாம்.

சீவகசிந்தாமணியில் கூட நாமகள் இலம்பகத்தில் யந்திரமயில் இருந்ததாகத் தெரிகிறது!** இது மட்டுமல்ல யந்திரத்தில் இயங்கும் புரவிகள் இருந்ததாகவும் வேறுபல பொறிகள் பயன்படுத்தப் பட்டதாகவும்*** அந்நூல் தெரிவிக்கிறது.

அதே போல் யந்திர யானைகளிலிருந்து வெளிப்பட்ட கரடிகளும் புலிகளும் உண்மையானவையல்ல. கரடிகள் போலவும் புலிகள் போலவும் வேடமிட்டு வெளிப்பட்ட பாண்டிய வீரர்கள் தாம். முற்காலத்தில் ராமாயணப் போர் நடந்தபோது போருக்குச் சென்ற ராவணனுடன் புலிகளைப் போலவும், குதிரைகளைப் போலவும், ஒட்டகங்களைப் போலவும், மான்களைப் போலவும், வேடமிட்டுக் கொண்டு சென்றார்களாம். அவ்வாறு சென்றது சுற்றுப்புறத்தில் வாழ்ந்தவர்களை

** சீவக சிந்தாமணி நாமகள் இலம்பகம்
'செல்வதோர் மாமயில் செய்தனன்'

*** சீவக சிந்தாமணி... (வரி 101-104)
'நூற்றுவரைக் கொல்லியொடு
............கூர்ந்தரிவ துன்னூல்'

அச்சுறுத்துவதாக அமைந்தன என்கிறார் சரித்திர ஆராய்ச்சியாளரான பி.டி. சீனிவாச ஐயங்கார் அவர்கள்.*

யந்திர யானைகளிலிருந்து இறங்கிய வீரர்கள் உலக்கையைப் போர் ஆயுதமாகப் பயன்படுத்தியதாக காட்டப்பட்டதற்குக் கூட சரித்திர ஆதாரம் இருக்கிறது. பதிற்றுப்பத்தில் செங்குட்டுவனைப் பற்றி பரணர் பாடிய பாடலில் செங்குட்டுவன் வீரர்கள் மிளகு அரைக்கும் உலக்கையை போர்க்கருவியாகப் பயன்படுத்தியதாகப் பாடியுள்ளார்.**

யந்திர யானைகளிலிருந்து வெளிப்பட்ட குரங்கு கருவிரல் ஊகம் எனப்படும் பொறி. இது குரங்கு போல் இயங்கி கையில் பட்டவரை அழிக்கும் என்று சிலப்பதிகார வரிகள் தெரிவிக்கின்றன.

இவற்றையெல்லாம் பழையன் பயன்படுத்தினான் என்றால் அவனுக்கு வேறு வழியில்லாதிருந்தது. இருங்கோவேள் போருக்குத் தேர்ந்தெடுத்த இடமும் அங்கே அவன் வகுத்த பத்ம வியூகமும் வெறும் படை வீரர்களால் மட்டும் வெல்லக் கூடியதல்ல என்றும் அதற்கு கணிசமான யந்திர வசதிகள் தேவை என்றும் கருதினான். அதிஷ்டவசமாக அவன் விரும்பிய பொறிகளைச் சமைப்பதில் வல்லவர்களான யவன பொறியியல் நிபுணர்கள் மதுரையில் தனியாக இருந்ததாகவே கூறுகிறது சிலப்பதிகாரம். எனவே அந்த யவனர்களின் தலைவனான ஹீரோகிளீஸின் துணையோடும் அந்த

* Page 59-60 History of the Tamils (1983)

**Page 104 சேரன் வஞ்சி (1956)

By S. கிருஷ்ணசாமி ஐயங்கார்



யவனர்களின் கலையைக் கற்றவனான உதயணனின் துணையோடும் மிகவும் குறுகிய காலத்தில் யந்திரயானைகளையும் இதர பொறிகளையும் தயாரித்தான் பழையன்.

இவற்றையெல்லாம் தயாரித்த பழையனுக்கு பத்ம வியூகத்தை முறியடிப்பதில் ஒரு விஷயம் மட்டும் தீர்மானமாக இருந்தது. அதாவது அந்த வியூகக் கோட்டைக்குள் ஊடுருவி போர் செய்வதென்பது முடியாத ஒன்று என்பதுதான் அது. மன்னனிடம் விளக்கியபடி அதிலிருந்த ஆபத்துகளை அவன் நன்கு உணர்ந்திருந்தான். அதுமட்டுமல்ல. பத்மவியூகம் பற்றி மகாபாரத நிகழ்ச்சியும் அவனுக்குத் தெரிந்திருந்தது. மகா வீரனான அர்ச்சுனனின் மகன் அபிமன்யு கௌரவர்கள் அமைத்த பத்ம வியூகத்திற்குள் நுழைந்ததுமே அதன் வாயில் அடைக்கப்பட்டதையும் அதனால் அவனைத் தொடர்ந்து பாண்டவர்கள் போக முடியாததையும் முடிவில் வியூகத்திற்குள் சிக்கிய அபிமன்யுவை கௌரவர்கள் சூழ்ந்து கொண்டு கொன்றதையும் தெரிந்திருந்ததால் பழையன் அந்த விஷயத்தைப் பொறுத்தவரை தீர்மானமாக இருந்தான். பத்ம வியூகத்தை முடிந்த வரை பயன்படாத வியூகமாக மாற்றுவது என்பதும் அதற்கு ஒரே வழி பொறிகளைக் கொண்டு பல்வேறு கட்டங்களில் குழப்பங்களை உருவாக்குவது என்பதும் அவனது திட்டங்களாக இருந்தன.

அந்த திட்டம் முழுவதுமாய் பலித்து விட்டதை தற்போது அவன் மட்டுமல்ல வியூகச் சக்ரவர்த்தியாய் எண்ணிக் கொண்டிருந்த இருங்கோவேளும் கண்டான். அவனை நம்பியிருந்த சேர சோழர்களும் கண்டார்கள்.

மிகவும் வசதியானதும் பலமானதுமான ஆலங்காடுகள் மிக பயங்கரமாக எரிந்து அங்கிருந்த படைகளை வெகுவாகக் குழப்பி சிதறடித்ததைக்கண்டபோது தன் திட்டம் முழுவதும் சிதறடிப்பது போல் இருந்தது இருங்கோவேளுக்கு. அதே போல் வியூகத்தின் முகப்பு யந்திர யானைகளால் சிதைக்கப்பட்டு அங்கிருந்த தேர்ப்படை உலக்கைப் படையினரால் உடைக்கப்பட்டும் எரிக்கப்பட்டும் நாசமாவதைக் கண்டபோது வியூகக் கோட்டையின் மைய பலமே நாசமாவதாகப் பட்டது அவனுக்கு. முற்றிலும் எதிர்பார்க்க முடியாத போர்த் தந்திரத்தைப் படைத்துவிட்ட பழையனை வேண்டிய மட்டும் மனதார சபித்துக் கொண்ட அவன் இதையெல்லாம் தன்னாலும் தன்னைச் சேர்ந்த மன்னர்களாலும் எப்படி ஊகிக்க முடியாமல் போயிற்று என்றும் தன்னைத்தானே கேட்டுக் கொண்டான் அவன். தன் சிந்தனை முழுதும் வியூகம் அமைப்பதிலேயே தேங்கியிருந்து விட்டதாலும், தன் திட்டமெல்லாம் தன் பலத்தை நம்பி மட்டுமே தீட்டப்பட்டதாலுமே எதிரியின் பலம் பற்றியும் உத்தி பற்றியும் தெரிந்து கொள்ளவோ எடை போடவோ முடியாமல் போய்விட்டது என்பதை உணர்ந்தான். பத்ம வியூகம் இனி பயன்படாது என்பது சந்தேகம் இல்லாமல் புரிந்தது அவனுக்கு. எனவே அதை நம்பி போரிட முடியாதென்ற நிலையிலும், வியூக வளையங்களில் சிதையாமல் இருப்பது சேர சோழரின் தலைமையில் உள்ள புரவிப்படை மட்டுமே என்ற நிலையிலும் இருந்த அவன் அப்படையைப் புது வியூகமாகப் பிரித்துப் பாண்டியப் படைகளைத் தாக்குவதென முடிவு செய்து அப்படை பிரிய



வேண்டியதற்கு அடையாளமாக முரசொன்றையும் கொம்பொன்றையும் மாறி மாறி ஒலித்து சங்கொலியையும் இருமுறை எழுப்பினான்.

இந்தச் சங்கேத ஒலிகள் சேரமன்னனுக்கும் சோழ மன்னனுக்கும் கேட்டன. இருங்கோவேளைப் போல் பெரும் கவலையில் ஆழ்ந்திருந்த அவர்களுக்கு இந்த ஒலிகள் புதுத்தெம்பை அளித்தன. இருங்கோவேள் இன்னும் நம்பிக்கையில்தான் இருக்கிறான் என்பதை அறிந்த அவர்கள் சங்கேத ஒலிகளின்படி நகர முற்பட்டபோது வானில் பேரிடி ஒன்று எழுந்தது. அந்த இடி எழுந்தது வானில் அல்ல தங்கள் வாழ்வில் என்பதை அவர்கள் உணர்ந்துகொள்ளும் விதத்தில் புதிய நெருக்கடியொன்று பிரளயம் போல் நெருங்கியது அவர்களை.

முரசு ஐம்பத்தாறு

## திருமணம்

யந்திரக் குழப்பங்களை விளைவித்து எதிரியின் வியூகத்தைக் கலக்கிக் கொண்டிருந்த நேரத்தில் பாண்டியர் படை அர்த்தசந்திர வடிவத்தில் பாம்பு போல் அணிவகுத்து தலைப்பகுதிகளுக்கு பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனும் வால்பகுதிக்குப் படைத்தலைவன் பழையனும் தலைமை வகித்து அர்த்த சந்திர அணியாகவே எதிரிப்படைகளை நோக்கி நிதானமாக முன்னேறியது. இந்த நிலையில் சேரனின் புரவிப் படையும் பிரிந்து வர முற்பட்டன. அதைக் கவனித்தான் பழையன். கொம்பொன்றை ஊதினான். அதையடுத்து பாம்பு மத்தியில் பிளந்தது. தலைப்பகுதி ஒருபுறமும் வால்பகுதி மறுபுறமுமாய் விலகின. அந்த

இடைவெளியில் வெளிப்பட்டது விற்படை. வில்லவனும் நாலைக்கிழவனும் தலைமை வகித்து தயாராக இருந்தார்கள் ஆதலால் சேர சோழ புரவிப்படை பிரிந்து முன்னேறியதும் சரமாரியாக அம்புகளைப் பொழியவே முன்னேறி வந்த புரவிகள் தடால் தடாலென விழுந்தன. தங்களுக்கு மேலிருந்தவர்களைக் கீழே தள்ளின. புரவியை இழந்து நின்று போரிட முற்பட்டவர்களை காலாட்படை வீரர்கள் எதிர்த்தார்கள். விற்படையிடமும் காலாட் படையிடமும் சிக்கிய சேரசோழ புரவிப் படைகளை நெடுஞ்செழியனின் புரவிப்படையும் பழையனின் புரவிப்படையும் பக்கங்களில் வந்து மிக வேகமாக மோதின. போர் மும்முரப்பட்டது. இம்மூன்றுப் படைகளிடம் சேர சோழப் படைகள் சிக்கிக் கிடந்த வேளையில் படையினர் திரண்டபோது பாண்டிய மன்னனின் படையிலிருந்தும் பழையனின் படையிலிருந்தும் பின்பகுதி பிரிந்து அவர்களைத் தாக்கினர். சேர சோழ மன்னர்கள் நெடுஞ்செழியனிடமும் பழையனிடமும் போரிட்டுக் கொண்டிருந்த நேரத்தில் இருங்கோவேள், எருமையூரன், திதியன், பொருநன் ஆகியோர் சிதறிய படைகளைத் திரட்டுவதிலும் போரிடுவதிலும் ஈடுபட்டார்கள். சிதறிவிட்ட படைகளைத் திரட்டிப் போரிடுவதென்பது எவ்வளவு கஷ்டமான காரியம் என்பது அவர்களுக்கே புரிந்தது. இந்த நிலையில் வியூகத்தின் பின்னாலிருந்த எழினியின் யானைப் படையில் பெரும் பூகம்பம் விளைந்தது.

எழினியின் யானைப்படை டைரியஸால் பின்புறம் மிகவும் எதிர்பாராத விதத்தில் தாக்கப்பட்டது.



டைரியஸின் படை கொள்ளை படையாய் இருந்ததால் கொள்ளையரைப் போலவே செயல்பட்டது. கண்ணில் பட்டவர்கள் தயவுதாட்சண்யமின்றி வெட்டி சாய்க்கப் பட்டார்கள். எதைப்பற்றியும் கவலைப்படாத டைரியஸின் கொள்ளைப்படை எழினியின் யானைகளை அடித்துத் துரத்தவே அவை பெரும் இம்சைக்கு ஆளாகி முன் நோக்கி பெரும் மலைகள் புரள்வது போல் ஓடிவந்து இருங்கோவேளும் அவனது சகாக்களும் போரிட்டுக் கொண்டிருந்த பகுதியில் பிரவேசித்து சேரரென்றோ சோழரென்றோ பாண்டியரென்றோ வித்தியாசமின்றி கண்டபடி மிதித்தும் துவைத்தும் தூர வீசியும் சர்வ நாசம் செய்யலாயின. சில யானைகள் புரவிகளை உதைக்கவும் முற்பட்டதால் புரவிகளில் பல அஞ்சிச் சிதறின. யானைகளோடு யானையாய் எழினியும் ஓடி மறைந்தான்.

எழினியின் யானைப்படை கலக்கமெய்திக் கொண்டு இருந்த காட்சியைப் பார்க்கத் தலையைத் திருப்பினான் விற்படை வீரனும் வேளிர் குலமன்னனுமான பொருநன். ஆனால் அவனால் அக்காட்சியைப் பார்க்க முடியவில்லை. ஏனெனில் அவன் தன் கவனத்தைத் திருப்பிய மயிரிழைப் பொழுதில் அவனது மார்பில் வந்து தாக்கியது ஒரு வேல். வேலுக்கும் வில்லுக்கும் அதிபதியான தன்னை அத்தனை கச்சிதமாகத் தாக்கியது யாரென்று அவன் நோக்கியபோது அவனால் நம்பவே முடியவில்லை. அவனுக்கு முன்னால் இருந்த ரதத்தில் வேலெறிந்து விட்டு மற்றொரு வேலைத் தாங்கிக் கொண்டு நின்றாள் மேகலை. அவளை யாரென்று பொருநனுக்குத் தெரியாது. ஆனால் தன்னை வீழ்த்தியது பெண்ணா என்ற வியப்பில் கண்களை விரித்தான். மயங்கிப் போய் மண்ணிலே சாய்ந்தான்.

அவன் சாய்ந்ததுமே மேகலையின் தேர் அவ்விடத்தை விட்டு நகர்ந்தது. இப்படி மன்னர்கள் இருவர் சாய, வியூகமும் அணி வகுப்பும் குலைய நிச்சயமில்லாத நிலையில் போர் மும்முரப்பட்டது. இந்த நிலையில் பாண்டிய மன்னன் சோழன் பெருநற்கிள்ளியோடு பெரும் போர் புரிந்தான். இரு மன்னர்களும் தத்தம் புரவிகளில் ரோஷமாகப் போரிட்டார்கள். அப்போரின் நேர்த்தியைக் காண வந்தது போல் கீழ் வானம் நன்றாய் வெளுத்து பாண்டிய மன்னனின் முகத்திலே பிரதிபலித்தது. கதிரவனே புரவியில் ஆரோகணித்து வந்தாற்போல் தோன்றினான் அவன். அவ்வப்போது போர்க்கள நிலைமையும் அவனுக்குத் தெரிந்தது. எனவே போரை வளர்த்த விரும்பாதவனாய் இயல்பைவிட அதிகம் துணிந்து சோழ மன்னனை நெருங்கியது மட்டுமின்றி அவனது புரவியை உதைக்கவும் செய்தான். அந்த உதைப்பில் சோழன் இடரவும் அதே சமயம் பாண்டிய மன்னனின் வாள் சோழ மன்னனின் வாளில் பலமாக இறங்கி அகற்றவும் சரியாக இருந்தது. கீழே சாய்ந்த பெருநற்கிள்ளியை வெட்ட முனைந்தான் பாண்டியன். அப்போது குருநாதர் மாங்குடி மருதனார் கூறிய சொற்கள் நினைவுக்கு வரவே வெறுப்புடன் வாளை விலக்கிக் கொண்டான். அதே நேரத்தில் அங்கு வந்து சேர்ந்த வில்லவனும் பாண்டிய வீரர்களும் சோழ மன்னரை வளைத்துக் கொண்டார்கள். பாண்டிய கோஷம் எழுந்தது. நெடுஞ்செழியன் தன் புரவியை எருமையூரன் இருக்குமிடத்திற்குச் செலுத்தினான்.

இப்போர் நடந்து கொண்டிருந்த வேளையில் திதியனை புறமுதுகிட்டு ஓடச் செய்த பாண்டிய



படைத்தலைவன் கோபாவேசத்துடன் எதிரி வீரர்களைச் சாய்த்துவிட்டு சேர மன்னனை நெருங்கினான். இருவரது கண்களும் அடங்காத சினத்தினை வெளிப்படுத்தின. சேரனது தந்திரமும், மேகலைக்கும் தனக்கும் இழைத்த இன்னல்களும் பழையனைக் கோபப்படுத்தியதென்றால் தன் கனவுகளை எல்லாம் இந்த பழையன் தகர்த்து விட்டானே என்ற ஆத்திரம் இரும்பொறையை ஆவேசப்படுத்தியது. இருபெரும் வீரர்களும் ஆவேசமாக மோதினார்கள். அவர்களின் மும்முரமான வாட்கள் உரசலில் உண்டான தீ ஆலங்காட்டுத் தீயைப் பார்த்து நகைப்பது போல் இருந்தது. வாளால் போரிட்டபடியே தன் கோடாரியை எடுத்து இரும்பொறையின் புரவியின் மீது வீசினான் பழையன். சேரனின் புரவி மன்னனைத் தள்ளியபடி விழுந்தது. ஆனால் அவன் இமைக்கும் நேரத்தில் அருகே இருந்த தேரில் ஏறி வேலை எடுத்தான் பழையனைத் தாக்க. வேல் வருவதற்குள் வினை வந்தாற்போல் பழையன் ஒரே பாய்ச்சலில் சேரனின் தேரிலேயே பாய்ந்தது மட்டுமின்றி முஷ்டியால் அவனைத் தாக்கி வீழ்த்தவும் செய்தான். அவனது மகுடத்தை வாளால் அடித்து வீழ்த்திவிட்டு சங்கொன்றை ஊதவும் பாண்டிய வீரர்கள் வந்து அவனைச் சிறை செய்தார்கள்.

சேரமான் யானைக்கண்சேய் இரும்பொறை சிறைப்பட்ட பின் போர் நீடிக்கவில்லை. பாண்டியனை பழையனையும் வாழ்த்தும் கோஷங்கள் விண்ணை அதிர வைத்தன. அதுகை எருமையூரனையும் உதயனன் இருங்கோவேளையும் போர் அரங்கிலிருந்து நீக்கி விடவே உயிர் பிழைத்த வீரர்கள் அல்லோலகல்லோலப்

பட்டு ஓடினார்கள். நின்று போராட முடியாமலும் வென்று வாகை சூடாமல் போனவர்களும் போர்க்களத்தை விட்டு ஓடிமறைவதில் காட்டிய வேகத்தைக் கண்டு சிரிப்பது போல் கதிரவன் பளிச்சென்று தன் கிரணங்களை வீசினான்.

பகல் நேரம் குறைவானதால் பகைவரின் சேதம் குறைவாக இருந்தது என்று பாண்டியரின் துரித நே வெற்றியை 79வது புறநானூற்றுப் பாடலில் இடைக்குன்றூர் கிழார் பின்னால் பாடுவதற்கு அத்தாட்சியாய் அரை 'நாள் பொழுதிலேயே போர் முடிந்தது. பல மன்னர்கள் ஆலோசித்து பல நாட்களாய் வியூகங்களை வகுத்ததெல்லாம் அரை நாளில் அர்த்தமில்லாமல் ஆக்கப்பட்டிருந்தது. எந்த சேர சோழர்களுக்காக உதவ வந்தார்களோ அந்த வேளிர் குல மன்னர்களை போர்க்களத்தில் காணவில்லை. எவனைச் சிறுவன் என்று இகழ்ந்து ^ மகந்தை மிகுந்து வீண் போருக்கு வித்திட்டானோ அந்த யானைக்கண்சேய் மாந்தரன் சேரல் இரும்பொறையும், எந்த ராச சூய வேள்வியை முன்னிட்டு தீர்க்காலோசனை இன்றி போரைத் துவக்கினானோ அந்தச் சோழமன்னன் பெருநற்கிள்ளியும் சிறைப்பட்டு நிற்க அவர்களது இல்லத்தரசிகள் நாணுற்று போர் விளைவுகளைக் காணச் சகியாமல் போர்க்களத்திலேயே தீயிட்டு மாண்டனர். வீண் பொறாமையும் பேராசையும் எத்தகைய விளைவுகளை விளைவிக்கும் என்பதற்கு கோர அடையாளமாக விளங்கியது ஆலங்காட்டிற்கெல்லாம் தலையாயதாய் இருந்த அத்தலையாலங்கானம்.



மனிதர்களால் சகிக்க முடியாத கோரங்களை விரும்பி வரவேற்கும் பறவையினங்களும் காட்டு நரிகளும் ஆலங்கான போர்க்களத்தில் இரண்டாவது போரைத் துவக்கியிருந்தன. பதவிகளுக்காக போட்டியிட்டு மாண்ட மனிதர்களின் மாமிசங்களுக்காக போட்டியிட்டு அவைகள் போரிட்டுக் கொண்டன. பற்பல கழுகுகள் அவசரம் அவசரமாக தங்கள் அலகால் பற்றி இழுத்தெடுத்த வீரர்களின் குடல்களை உண்ணவும் நேரமின்றி ஆலங்காட்டு மரக்கிளைகளில் ஆங்காங்கே தொங்கவிட்டிருந்தது விழுதுகளைப்போல். அப்படிக் கிளைகளில் தொங்கிய குடல்கள் எப்போது விழும் என்றும் அது கிடைத்தால் போதும் என்று திருப்தியடைந்தும் அவற்றுக்குக் கீழே கிழ நரிகள் காத்துக் கிடந்த விதமானது வேடிக்கையாகவும் வேதனையாகவும் இருந்தது. ஆனால் பருவமடைந்த கொழுத்த நரிகள் அவ்வாறு காத்துக் கிடப்பதை கௌரவக் குறைவாக எண்ணியது போல் போர்க்களத்தில் புகுந்து கழுகுகளை விரட்டி பிணங்களைக் கடிக்க முற்பட்டன. அப்படிக் கடிக்க முற்பட்ட சடலங்கள் சிலவற்றில் உயிர் இருந்ததாலும் அப்படி உயிர் இருந்த பட்சத்தில் அவை முனகியதாலும் திடுக்கிட்டுப் போன நரிகள் சில உயிர் எப்போது போகும் என்பதை அறிவதற்காக அவ்வப்போது அச்சடலங்களுக்கு உரிய முகங்களுக்கு அருகில் சென்று பார்ப்பதும் விலகுவதுமாக இருந்தன. சில இடங்களில் மாண்டு விழுந்த யானைகளுக்கு கீழே சிக்கி உயிருக்குத் திண்டாடிக் கொண்டிருந்த சடலங்களைக் கண்டுவிட்ட கழுகுகள் சில அந்தச் சடலங்களால் தங்களுக்கு அபாயமில்லை என்று கருதி துணிந்து சென்று அச்சடலங்களின் கண்களைக் கொத்திப்

பிடுங்கி கௌவி வரும் வேளையில் நரிகள் சில பாய்ந்ததால் பிடுங்கப்பட்ட அக்கண்களை யானைகளின் மீதே போட்டுவிட அக்காட்சியானது யானைகளுக்கு வயிற்றில் கூட கண்கள் உண்டோ என்று எண்ண வைப்பதாய் இருந்தது. வெண்ணிற புரவிகள் சில மாண்டு போய் குருதி வெள்ளத்தால் சிவப்பாகி செந்நிறப் புரவிகளாய் காட்சியளித்தன. அப்படி நிறம் மாறியது பொய்யானது என்பதை உலகிற்கு நிரூபணம் செய்வது போல் நரிகள் சில அப்புரவிகளின் மேல் படிந்த செங்குருதியை நாக்கால் நக்க முற்படவே சில புரவிகள் சிவப்பும் வெளுப்புமாய் காட்சியளித்தன. பேராசை பிடித்த வேறு நரிகள் சக்திக்கு மீறி தின்றுவிட்டு நடக்கவே தள்ளாடின. அவைகளால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை நன்றாக உணர்ந்த கழுகுகள் அவற்றை தைரியத்தோடு குத்த முற்பட்டதால் அஞ்சி நடுங்கிய நரிகள் பிணக் குவியல்களுக்குள் புகுந்து கொள்ளவும் முற்பட்டன. அவ்வாறு ஆங்காங்கே காணப்பட்ட பிணக்குவியல்கள் நிலமகள் பெற்ற குட்டிகளைப் போல் தோற்றமளித்தன. ஓரிடத்தில் வெட்டுப்பட்ட வீரனின் காலொன்று குருதி வெள்ளத்தில் குத்திட்டு நின்றிருக்க அதை இன்னதென அறியாமல் அதன் மீது கழுகொன்று அமர்ந்திருந்த விதமானது பயங்கர அழகாய்த் திகழ்ந்தது.

சேதம் பாண்டியர் தரப்பைவிட எதிரியின் தரப்பில் அதிகமாய் இருந்தது. அந்தச் சேதம் எதிர்பாராத அளவாய் இருந்தது மட்டுமின்றி போரினால் உண்டான வெற்றி மகோன்னதமானதாய் இருந்ததால் வெற்றிபெற்ற பாண்டிய வீரர்கள் வெறிக் கூத்து ஆட வேண்டியது இயல்புதான் என்றாலும் பாண்டியன் வீரர்களிடம்



அடக்கத்தை யாசித்தான். வெற்றிக்குப் பிறகு காட்டப்படும் அடக்கமும் நிதானமும்தான் வெற்றியை தக்க வைத்திருக்கும் என்றும் பாண்டியர் பண்பை தேவையற்ற வெறிக் கூச்சல்களால் அழித்துவிட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டதின் பேரில் வீரர்கள் கூத்தை விடுத்துப் போர்க்களத்தைச் சுத்தமாக்கும் தலையாய பணியில் ஈடுபட்டார்கள். உயிரற்ற சடலங்கள் புதைக்கப்பட்டும் எரிக்கப்பட்டும் அகற்றப்பட்டன. உயிருக்குப் போராடியவர்கள் வைத்தியத்திற்காக அண்டை கிராமங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள். மாபெரும் வெற்றிபெற்ற தலையாலங்கானப் போர் வெளியில் வெற்றித் தூண் ஒன்று நடப்பட்டு அதைச்சுற்றி பகைவர்கள் இடமிருந்து கைப்பற்றப்பட்ட போர் முரசுகள் வைக்கப்பட்டன. பின் அங்கேயே அமர்ந்து மறையோர் தீயை வளர்க்க களவேள்வியினைச் செய்து முடித்தான் பாண்டியன் நெடுஞ்செழியன்.

பிறகு அவனும் அவனது வெற்றிப்படையும் மதுரைக்குத் திரும்பின. சேர சோழ மன்னர்கள் தனி ரதம் ஒன்றில் பாதுகாப்பாக அழைத்துச் செல்லப்பட்டார்கள். அன்றிலிருந்து நான்காம்நாள் மதுரைக்கோட்டை வாயிலை அவ்வெற்றிப்படை அடைந்தபோது அங்கே வெற்றி மாலையைக் கையிலும் மாலையில் உள்ள மலர்களின் மலர்ச்சியை முகத்திலும் காட்டி நின்றிருந்த கோப்பெருந்தேவி அந்த மாலையை பாண்டியன் நெடுஞ்செழியனின் கழுத்தில் அணிவித்தாள்.

'தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியர் வாழ்க' என்னும் வாழ்த்தொலி விண்முட்ட எழுந்து நகர்

எல்லாம் ஊடுருவி கோட்டைச் சுவற்றில் எதிரொலித்து வையையில் பாய்ந்தது.

மதுரைக்கு வந்து சேர்ந்தபின் பழையனின் விருப்பப்படி சேரன் பிரத்தியேகமான சிறையில் அடைக்கப்பட்டான். ஆனால் சோழன் அவ்வாறு சிறை வைக்கப்படாமல் பிரத்தியேக மாளிகையில் பெருவிருந்தாளி போல் வைக்கப்பட்டான். இது பலருக்கும் வியப்பாய் இருந்தது. சோழ மன்னனே புரியாமல் குழம்பினான். அவனது குழப்பத்தைத் தீர்க்கும் பொருட்டு அன்றிரவு அவனிடம் வந்தார் தலைமைப் புலவர் மாங்குடி மருதனார்.

'சோழ மன்னா, பாண்டியன் நெடுஞ்செழியனுக்கும் கோப்பெருந்தேவிக்கும் ஏற்கெனவே திருமணம் நடந்து விட்டது' என்றார்.

இதென்ன அர்த்தமில்லாத பேச்சு என்பதுபோல் அவரைப் பார்த்தான் பெருநற்கிள்ளி!

அதை விளக்க முற்பட்ட புலவர் திருமணம் நடந்ததே தவிர ஊரறிய உலகறிய நடக்கவில்லை போர் குறுக்கிட்டு விட்டதால். ஆகவே நாளைக்கு மிகச் சிறப்பாக நடைபெறப்போகிறது.' என்றார்.

'அதைப் பற்றி எனக்கென்ன?' என்று வெறுப்புடன் கேட்டான் சோழ மன்னன். போரின் தோல்வி அவனை வெகுவாகப் பாதித்திருந்தது.

'இது மிகவும் அசந்தர்ப்பமான கேள்வி' என்றார் புலவர்.

சோழனுக்குக் கோபம் மூண்டது.



'புலவரே, அடிபட்ட வேங்கையுடன் விளையாட வேண்டாம்' என்று எச்சரித்தான்.

'தோற்றாலும் உன் வீரம் அப்படியே தான் இருக்கிறது. மிக்க மகிழ்ச்சி சோழ மன்னா. ஆனால் விளையாட்டு என்று ஏதோ சொன்னாயே அது எனக்குப் பொருத்தமானதல்ல'...

'அப்படியென்றால் எனக்குப் பொருத்தமானது என்கிறீர்களா?'...

'நான் வேறு சொல்ல வேண்டுமா? உன் விளையாட்டுக்குத்தான் வினை வந்திருக்கிறதே?'- என்று கூறிய புலவர் சற்று நிறுத்திவிட்டுத் தொடர்ந்தார்.

'பதினெட்டு ஆண்டுகள் பின்னோக்கிப்பார் சோழ மன்னா. ஏதோ ஒரு விழாவிற்காக மதுரைக்கு வந்த நீ இங்கே இருந்த ஆடலரங்கில் உத்தமச்செல்வி என்ற பெண்ணைக் கண்டாய். காதலித்தாய். கடிமணம் புரிந்தாய். கைவிட்டு விட்டு ஓடி விட்டாய். உண்மையா?'-

'புலவரே, நீங்கள் சொல்வது-'

கதையல்ல. உண்மை. அவளை விட்டு விட்டு ஓடிய நீ சில தினங்களில் உறையூரில் மன்னனாய் முடி சூடினாய். வேறொருத்தியை மணந்தாய். உத்தமச் செல்வியை மறந்தாய். உண்மையா?'

'அவள்...'

'உன்னைப் போல் உன்னை மறந்துவிடவில்லை. உன் உறவைப் போற்றினாள். உன் நினைவைப் போற்றினாள். ஆனால் உன்னைப் போல் அரசு சுகம் கிடைக்குமோ என்று எதிர்பார்க்கவில்லை. அதுமட்டும் அல்ல சோழ மன்னா!

எப்போது நீ முடிசூடி வேறு ஒருத்தியை மணந்தாயோ உன் வாழ்க்கையில் குறுக்கிட்டு உனக்குப் பெருந் தொல்லையைத் தர விரும்பவில்லை. நீ தந்த அன்பையே தனக்குக் கிடைத்த பாக்கியமாய்க் கருதினாள். தியாகியாய் வாழ்ந்தாள்...'

'புலவரே, அவள் இருக்கிறாளா?'...

'ஏன் கேட்கிறாய்?'

'அவள் உயிரோடு இருக்கிறாளா என்று கேட்பது தவறா?'...

'அவளைப் பற்றி உனக்கென்ன வந்தது'...

'அவள் தியாகி தான் புலவரே. அவளைப் பற்றி அறிய விரும்புகிறேன்'

'இத்தனை நாட்களாக ஏன் அறிய முற்படவில்லை?'

சோழன் பதில் கூற முடியாமல் தவித்ததும் 'பதவி உன் அகக் கண்களைக்கூட மூடிவிட்டது. ராஜ்ய வெறி உன்னை மிருகமாக வைத்திருந்தது. இன்று தோற்றுப் போனதும் அகக் கண்கள் திறந்து மனிதனாகியிருக்கிறாய். எனவே கேட்கிறாய்' என்றுச் சாடிய புலவர் 'உன்னை மணந்தவர்களுக்குப் பூரண ஆயுள் பலமில்லை சோழ மன்னா. உன் பட்டத்தரசி ஆலங்கானத்துப் போரில் தீக்குளித்தாள். உன் உத்தமச் செல்வியோ மகள் ஒருத்தியைப் பெற்றெடுத்து விட்டு மாண்டு போனாள். அப்பெண்ணுக்குத்தான் நாளை உலகறிய திருமணம் நடக்கப்போகிறது' என்றார்.

'கோப்பெருந்தேவி என் மகளா?'- பரவசத்துடன் கேட்டான் சோழ மன்னன்.



'ஆம். அவளது திருமணத்திற்குத் தந்தையாகிய நீ இருக்க வேண்டாமா? ஆகவேதான் அழைத்தேன். ஆகவே தான் போரில் உன்னைக் கொல்லக்கூடாது என்று என் சீடனிடம் யாசித்தேன்'-

சோழ மன்னன் சிறிது நேரம் வரை எதுவும் பேசவில்லை. அவனது மனம் பலவாறு தத்தளித்தது.

'புலவரே, யாருமே அறியாத என் வாழ்க்கை ரகசியத்தைத் தாங்கள் எப்படி அறிந்தீர்கள்?'- என்று கேட்டான்.

'அரசனுக்கு இருக்க வேண்டிய அறிவு உனக்கின்னும் மங்கிவிடாமல் இருப்பதில் மகிழ்ச்சியடைகிறேன் சோழ மன்னா. உத்தமச்செல்வி என் வளர்ப்பு மகள். அவளது மகளையும் நான்தான் வளர்த்தேன்' என்றார் புலவர்.

'இந்த ரகசியத்தைப் போருக்கு முன்னால் சொல்லி இருக்கக் கூடாதா புலவரே?'

'இப்போது மட்டும் ஏன் சொல்ல வேண்டும் சோழ மன்னா? நீ மட்டும் இப்போரில் வென்றிருந்தால் இந்த ரகசியத்தை வெளியிட்டிருக்க மாட்டேன். இப்போது வெளியிட்டதற்குக் காரணம் உன் மகள் வீரனை மணந்திருக்கிறாள் என்பதைக் காட்டவும், உன் மருமகன் சிறுவனல்ல மாவீரன் என்பதை உணர்த்தவும்தான்'-

'மகிழ்ச்சி புலவரே. உங்களுக்கு எனது நன்றி என்றும் இருக்கும். தாங்கள் முன்னிருந்து என் மகளின் திருமணத்தைச் சிறப்பாக நடத்தி வையுங்கள். மகள் பிறந்ததுகூட அறியாத எனக்கு மரியாதை என்ன வேண்டியிருக்கிறது? நான் வரவில்லை'-

'நீ வராததற்கு இது மட்டும்தான் காரணமா?'...

'புலவர் பெருமானே! மன்னர்களின் உள்ளத்தைப் புலவர்களாலன்றி வேறு யாரால் அறிந்து கொள்ள முடியும்? உங்களுக்கு நான் சொல்ல வேண்டுமா?'

'வேண்டியதில்லை. உன் வேதனை எனக்குப் புரிகிறது. போரில் தோற்ற நீ எந்த முகத்துடன் விழிப்பது என்றுதானே கவலைப்படுகிறாய்? போரில் ஏற்படும் வெற்றி தோல்விகள் நிரந்தரமானவையல்ல. அதை வைத்துக் கொண்டு நொந்து போக வேண்டியது அவசியமில்லை. அதோடு என் சீடனைப் பற்றி நீ சரியாக அறிந்து கொள்ளவில்லை. உன்னைப் போரில் வென்றானே தவிர உன்னை அவமரியாதையாக நடத்தினானா? சொல்.'

'இருந்தாலும்...'

'சோழமன்னா, பாண்டியன் இனி உன் பகைவனல்ல. மருமகன். சண்டைபோட்டுக் கொள்ள வேண்டியவர்கள் அல்ல. உன் ராசசூய வேள்வியினை இனி நீ இவனது உதவி கொண்டே செய்யமுடியும். செய்யத்தான் போகிறாய்.* புலவர்கள் வாக்கு என்றும் பொய்ப்பதில்லை. வீண் தயக்கங்களை விட்டுவிடு.'

மறுநாள் திருமண ஏற்பாடுகள் பலமாக நடந்தன. பாண்டிய மண்டலமே மதுரையில் திரண்டது.

ஆனால் முகூர்த்த நேரம் நெருங்கும்போது மணமேடைக்கு வரமறுத்தான் பாண்டிய மன்னன். அவனது நிலை அனைவரையுமே திகைக்க வைத்தது.

---

* பின்னால் இச்சோழ மன்னன் ராசசூயம் செய்தான். ராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று சரித்திரத்தில் தனிப் புகழ்பெற்றான்.



'நெடுஞ்செழியா, இதென்ன அர்த்தமற்ற மறுப்பு? இது உனக்கு நன்றாக இருக்கிறதா? இதுதான் பாண்டியர் பண்பா? நீ எனது சீடன் என்பது உண்மையானால் மறுப்பு சொல்லாமல் மணமேடைக்குப் போ. வெற்றி வீரனுக்கு இது அழகல்ல' என்று சீறினார் தலைமைப் புலவரும் குருநாதருமான மாங்குடி மருதனார்.

'சரியாகச் சொன்னீர்கள். வெற்றி வீரருக்கு இது எப்படி அழகாகும்?' என்று கூறிச் சிரித்த நெடுஞ்செழியன் தனது வலப்புறமாகத் திரும்பி, 'இதென்ன பெண்ணை போல் மறைந்து நிற்கிறீர்கள்? வாருங்கள் படைத் தலைவரே' என்று பழையனை அழைத்து முன்னிறுத்தி, 'குருநாதரே, போரின் வெற்றியை ஈட்டியது நானல்ல. இதோ வீரத்தோடு சம்பந்தமில்லாதவர் போல் நிற்கிறாரே படைத்தலைவர்-இவர்தான் என்பது தங்களுக்குத் தெரியாதா? இவரை மணக்கப் பல்வேறு தொல்லைகளைத் தாங்கிக் கொண்டு மேகலை காத்திருக்கிறாளே, தங்களுக்குத் தெரியாதா? இவ்விருவரது திருமணத்தை முடித்து வைக்காமல் ஏற்கெனவே திருமணம் செய்துகொண்ட நான் இரண்டாவது முறை இங்கே அமர்க்களப்பட வேண்டுமா?' என்று கேட்டுவிட்டு 'எங்கே என் சகோதரி மேகலை?' என்று ராஜகம்பீரமான தோரணையில் கேட்கவும் மறுகணம் மயில் போல் வந்து நின்றாள் மேகலை தன் தந்தையுடன்.

'போய் உட்கார் சகோதரி. படைத்தலைவரே இன்னுமென்ன தயக்கம்? முகூர்த்த வேளை வந்து விட்டது. போய் உட்காரும் மணவறையில்' என்று கட்டளையிட்டான் மன்னன்.

மறையொலிகள் முழங்க திருமணம் முடிந்தது. முடிந்ததும் 'அவையோர்களே, என் அருமை குடிமக்களே, வீரத்திற்குச் சிகரமாய் விளங்கி போரில் பெரு வெற்றி பெற்ற நம் படைத்தலைவருக்கு பாண்டிய அரச மரபில் வழங்கப்பெறும் மிகச் சிறந்த பட்டமான 'மாறன்' என்னும் பட்டத்தை இந்நந்நாளில் என் அன்புப் பரிசாக அளிக்கிறேன். இன்று முதல் இப்பட்டம் அவரது பெயருடன் சேர்ந்து விளங்கட்டும்' என்றான்.

'பழையன் மாறன்'

'வாழ்க வாழ்க'

- என வாழ்த்தொலிகள் எழுந்து அடங்கியபோது புலவரைப் பார்த்துக் கேட்டான் பாண்டியன்.

'குருநாதரே, நான் தங்கள் சீடன்தானா?'-

'இல்லை நெடுஞ்செழியா. நான் தான் உன் சீடன்' என்றார் புலவர் கண்கள் பனிக்க.

⁂ ⁂ ⁂

அரண்மனை அந்தப்புரத்தின் மேல் மாடியில் இருந்த பேரழகு வாய்ந்த பள்ளியறையின் பட்டு மஞ்சத்தில் அமர்ந்திருந்த கோப்பெருந்தேவியைப் பார்த்துக் கேட்டான் பாண்டியமன்னன்.

'கடைசியில் நீ அரச மகள் தானா?'-

அவனை வியப்புடன் பார்த்தாள் அரசி. 'ஏன், நான் அரசமகளாய் இருப்பது பெருமைக்குரியது தானே?'- என்று கேட்டாள்.

'பெருமைக்குரியதுதான். ஆனால்...'

'ஆனாலென்ன?'-

'நீ அந்தத் துடுக்குக்காரப் பெண்ணாகவே இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்'



'ஏன்?'-

'அப்போதுதான் வேறு எந்த அரசமகளையாவது மணக்கலாம்'

'நான் தான் அரச மகளாகி விட்டேனே! வேறென்ன?'

'இல்லை. வடநாட்டில் அரச மகள் பலர் பேரழகிகளாம்'

'அப்படியா விஷயம்? அந்த ஆசை வேறு இருக்கிறதா? அதெப்படி வருகிறதென்று பார்த்து விடுகிறேன்' என்று சொல்லி அவன் மீது முரட்டுத்தனமாக விழுந்து அணைத்தாள் அரசி.

'ஐயோ, விடு தேவி. விடு. இதென்ன இப்படி' என்று திணறினான் மன்னன். அந்த முரடு அதையெல்லாம் காதில் வாங்குவதாயில்லை.

⁂ ⁂ ⁂

இதே நேரத்தில் மோகூரில் அரண்மனைக்கு அடுத்த பாறையொன்றில் கிடந்த மேகலையை நெருங்கி, 'சரி சரி, ஆடைகளையெல்லாம் எடு' என்றான் பழையன்.

'என்னது?'- சீறினாள் மேகலை.

'கோபமெதற்கு மேகலை? தவறாக என்ன கேட்டு விட்டேன்? போரில் பங்கு கொண்டவளாயிற்றே - உடலில் காயங்கள் ஏதாவது பட்டிருக்குமே-பார்த்து மருந்திடலாம் என்பதற்குத்தான்...'

'அழகாக இருக்கிறது. போர் முடிந்து ஒரு வாரமாகி விட்டது. இப்போதுதான் அக்கறை வருகிறதா?'-

'கொஞ்சம் தாமதமாகி விட்டது'...-

'அப்படியென்ன தாமதம் என்னைக் கவனிப்பதை விட?'-

'அதென்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? உன்னைச் சிறையெடுத்த சேரனை தண்டிக்க வேண்டாமா பேதை! பாண்டியர்கள் யானைகளைக் களவாடியதாகப் பொய்க் குற்றச்சாட்டைச் சுமத்தினானே அதற்குப் பரிகாரம் செய்ய வேண்டாமா? அதற்காக மூங்கில் கோட்டை ஒன்றை அமைத்தேன். யானைகளைப் பிடிக்க எப்படி மூங்கில் களை பரப்பி மறைத்து வைப்பார்களோ அப்படியே யானை நாட்டு மன்னன் சேரனை வைத்திருக்கும் சிறையை மூங்கில்களால் அமைத்து மறைத்து அவனது குற்றச்சாட்டுகளுக்கு பதில் சொல்லியிருக்கிறேன். சந்தனக்கோட்டையில் உன்னைச் சிறை வைத்தவனை மூங்கில் கோட்டையில் சிறைவைத்திருக்கிறேன். இதனால் நான் தாமதம்.' 75695/6155376

'ரொம்பக் களைத்திருப்பீர்கள்'-

'அப்படி 'லாம் ஒன்றுமில்லை மேகலை'

'பொய் சொல்லாதீர்கள். உங்கள் உடம்பு களைத்திருக்கிறது'

'என் உடலின் சக்தி உனக்குத் தெரியாது'

'பெருமையடித்துக் கொள்கிறீர்களாக்கும்'

'என்னை இகழாதே. நான் பொல்லாதவன்'

'வெறும் பேச்சு'

'மேகலை, பின்னால் கஷ்டப்படுவாய்'

'வேறெங்காவது போய்ச் சொல்லுங்கள்'

விழுந்து சோதனையைத் துவங்கினான்.

'ஐயோ விடுங்கள் என்னை. இதென்ன இப்படி?' என்று சிணுங்கினாள் மேகலை.

அந்த முரடன் அதையெல்லாம் காதில் வாங்குவதாய் இல்லை.

◈◈◈